யந்தாமரைமே லயன்.

இ-ள். அதிகாரம் - அதிகாரம் — நூற்றுமுப்பத்துமூன்றாம் - நூற்றுமு ப்பத்துமூன்றாம — மெய்யாய் - உண்மையான — வேதப்பொருள - வேத ப்பொருள் — பொய்யாது விளங்க - மெய்யாய்விளங்க — அந்தாமரைமேலய ன் - அழகியதாமரைமலர்மேல்வீற்றிருக்கிற நான்முகக்கடவுள் — தான்வ ள்ளுவராகி - தான்வள்ளுவராகி உலகிற்குத்தந்தான் — எ-று. * உலகு - க்கேமங்களை யுணர்த்துகின்ற மெய்யாய்வேதப்பொருள் பொய்யாது விளங்கவென்னவே இதற்குமுன்மெய்யாய்பொருள் பொய்யாய்மறைந்து ம்பொய்யாய்ப்பொருள் மெய்யாய்விளங்கியும் கிடந்தமைசொல்லப்பட்ட தாயிற்று அதிகாரத்தொகையோடு நூற்பொருளியல்பு சொல்லியபடி. ()

மதுரைத்தமிழ் நாகனார்.

எல்லாப்பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாதவெப்பொருளு மில்லையாற்-சொல்லாற்
பரந்தபாவாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

இ-ள். எல்லாப்பொருளும் - (பல்வகைநூல்களாலுஞ் சொல்லப்ப ட்ட) எல்லாப்பொருள்களும் — இதன்பாலுள - இந்நூலகத்துட்கிடக்கி ன்றன — இதன்பாலில்லாத வெப்பொருளும் - இதனிடத்தில்லாதயா தொருபொருளும் — இல்லை - (எந்நூலகத்துமே) இல்லை — (ஆதலால்) சொ ல்லாற்பரந்தபாவால் - சொல்லளவிற்றோல்விரித்த நூல்களால் — பயனெ ன் - பயனென்ன — வள்ளுவனார்சுரந்தபா - திருவள்ளுவராலே தரப்பட்ட இ ந்நூலொன்றே — வையத்துணை - மண்ணுலகத்தாருக்குத் துணையாதல மையும் — எ-று. * எல்லாப்பொருள்களுமாவன முதல்வழிசார்பெனமூ வகைப்பட்ட அறநூல் பொருணூல் இன்பநூல்வீட்டுநூலென்பவற்றி ன்செப்பொருள் ஆக்கப்பொருள் குறிப்புப்பொருளென இம்மூவகைவ ழிக்கொள்ளக்கிடந்த காட்சிப்பொருள்களும் கருத்துப்பொருள்களுமாம் தொழிலும்பண்பும் ஒரோவழிப்பொருளெனக்கேற்புடைமையின் அவை யும்இவற்றுள் அடங்குமாறறிகபின் னும் அவ்வைவழியுருக்கு - இதன்

பாலில்லாத வெப்பொருளுமில்லையென்றார். சொல்லாதொழிந்தவெனவே
அவை பொருளாதற்பாடின்மை பெறப்பட்டது. பாத்தல்-பகுத்தல். பிரு
நாறுமிராமுதலியவிலக்கியங்களையால்விரித்தல் சொல்லாதொழிந்த நூல்க
ளை ஆய்வோர் மலையகழ்ந்து எலிபிடித்தல்போல் மிகவருந்திச் சிறுபயன்
கொள்ளுதலால் என்பயனென்றார். ஆல்-அசை. படை-கைவயம். ஆறுபெட
ர்கள்—சின்னூட்பல்பிணிச் சிற்றறிவுடையோர்க்கு விதி விலக்குகளுமு
ற்றும் உள்ளாக்கை செல்விக்கவிபோல் கலைதெரிதலையுடைத்தாறு உணர்த்
தித்தமொற்றந்தீர்த்தலின் வையகத்துணையென்றார். முற்செருக்குணர
விழைவார்க்கு இஃது இரியமையாச் சிறப்பிற்றென்றபடி, (௨௬)

பாரதம்பாடியபெருந்தேவனார்.

எப்பொருளும்யாரு மியல்பி னறிவுறச்
செப்பியவள்ளுவர்தாஞ் செப்பவரு-முப்பாற்குப்
பாரதஞ்சீராம கதைமனுப்பண்டை மறை
நேர்வனமற்றில்லை பிற.

இ-ள், பாரதஞ்சீராமகதைமனுப் பண்டை மறைநேர்வன-பாரத
மும்மழையசிராமகதையும்மனுஸ்மிருதியும் பழையவேதத்தையும் ஒப்பன வா
கும்—எப்பொருளும்-எவ்வகைப்பட்ட பொருள்களையும்—யாரும்-எவ்
வகையோரும்—இயல்பின்-(அவற்றின்) தன்மையோடு— அறிவுற-அ
றிய—செப்பிய- (அவற்றைச்)சொல்லும்படிக்கு—வள்ளுவர்செப்பவரு-
திருவள்ளுவர்சொல்லால்வந்த—முப்பாற்கு—திருக்குறளுக்கு—பிற-உ
பமானமாகத்தக்கது, இல்லை-ஒன்றில்லை—எ-று. மற்று-அசை அறித
ற்கரிய வேதாந்தப்பொருளையென்றற்கு-எப்பொருளு மென்றும்உயர்கு
லத்தாரேயன்றி எனையோருமென்றற்கு - யாருமென் றும்ஐயந்திரிபின்றி
யறியவென்றற்கு - இயல்பினறிவுறவென் றும்இதுவேதருந்திருவிள
க்கமென்றற்கு-செப்பியசவென் றுங்கூறினர், பண்டையென்பது- சிரா
மகதைக்குங்கூட்டுக. கதாருபமாயிருத்தலின் பாரதமாமாயணமெனவும் விதி
ருபமாயிருந்து சுருஸ்மிருதியெனவும். கூட்டிச்சொல்லப்படுதலால்-
உபமானஉபமேயங்களாதலறிக, எப்பொருளும்யாருமியல்பின் அறிவுறச்
செப்புதல்வேதத்திற்கின்மையால் - முன் முப்பாலின் மிக்கமொழிவெ
ன்றதனாற்பெறப்பட்ட வேதத்திற்கொப்புமையமைத்தபடி. (௨௭)

உருத்திரசன்மகண்ணர்.

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந்தாய்முலை யொண்பால்-பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்
காய்தொறு மூறு மறிவு.

இ-ள். மணற்கிளைக்க-மணலைத்தோண்டுந்தோறும்—நீரூறும் - நீர்
பெருகும், மைந்தர்கள் வாய்வைத்துண-புதல்வர்கள் வாய்வைத்து உண்
ணுந்தோறும், தாய்முலை-தாயினதுமுலைக்கண், ஒண்பால்சுரக்கும் - நல்ல
பால்பெருகும்—(அவைபோல்) பிணக்கிலாவாய்மொழி - பிணங்குதற்கு
இடமில்லாதவாய்மைச்சொல்லையுடைய, வள்ளுவர்முப்பால் - திருவள்
ளுவரதுதிருக்குறளை, ஆய்தொறும், ஆராயுந்தோறும், மதிப்புலவோர்க்
கு- அறிவுடையபுலவர்க்கு,அறிவுதும்- அறிவுவளரும்—எ-று. கற்பித
மாகிய சாதிசமயங்களின் மானம்பற்றி உள்ளதை இல்லதாகவும் இல்ல

தைஉள்ளதாகவும்சிறிதைப்பெரிதாகவும் பெரிதைச்சிறிதாகவும்நிலைதை
நல்லதாகவும்நல்லதைத்தீயதாகவும், புனைந்துபிறர்பிணக்கும்படிசொ
ல்லப்பட்டதல்லாமையால், பிணக்கிலாவாய்மொழி யென்றார், மதிப்பு
லவோர்க்கறிவுறுமனவே அவர் அவ்வறிவைக்கொண்டுபிறர்க்கெல்லா
ம்சிறிதிலக்குகளைக்கற்பித்தல் வேண்டுமென்றதாயிற்று. இதனைச்சிலகா
ற்பயிற்றுமாறுமையாறு பலகாலும்பயிற்சிசெய்யல் வேண்டுமென்றபடி. ()

பெருஞ்சித்தனார்.

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண்பாவி
னோதிய வொண்பொரு ளெல்லா - முதலியற்
றாதவிழ்தார்மாற தாமேதமைப்பயந்த
வேதமே மேதக் கன.

இ-ள். தாதவிழ்தார்மாற— போதுவிரிந்த பூமாலையையுடைய
பாண்டியராசனே—ஏதமில்வள்ளுவர் - குற்றமில்லாததிருவள்ளுவர், இ
ன்குறள்வெண்பாவினால் - இனியகுறள்வெண்பாக்களாலே—ஓதிய-நா
ன்குவேதங்களாலுஞ்சொல்லப்பட்ட, ஒண்பொருளெல்லாம் - ஒள்ளிய
பொருள்களையெல்லாம், உரைத்ததனால் - சொல்லினமையால், மேன்மக்க
ளால்மெய்ப்பாட்டுக்குத்தக்கவை—தாமே - அக்குறள்வெண்பாக்களே, த
மைப்பயந்தவேதமே - (முதனூலாயவின்று) அவற்றைப்பயந்தவேதங்க
ளோடொக்கவல்லுவனவாயின-எ-று. தாம்தம்மையெனப்பட்டவை அவையவற்
றையென்னும்பொருளைத்தந்துநின்றன-ஏகாரம் இரண்டுமீன்றுபிற்றுாவா
சிரியர்க்கெல்லாம் அவவெறிகளாலேமதுக்கப்பட்டு வருகின்றதுபோல்
வதுஇவர்க்கு இல்லையென்றதற்கு -ஏதமில்வள்ளுவரென்றும் தாங்கூறிய
வாய்மையினாற்போர்க்குவருத்தம் விளையாமைபற்றி இன்குறளென்றும்
உணர்வுடையோராலே விரும்பப்பட்டதற்குணமுடைமைபற்றி - ஒண்
பொருளென்றும்-கூறினர் - நாலாசிரியர்க்கும நாலுக்கும் நாலுசலிய
பொருளுக்கும்தகுதிதோன்றச் சொல்லப்பட்டவிசேடண குணங்களா
லேஇவ்வேதம்அவ்வேதத்தினுஞ்சிறப்புடைமைகுறிப்பித்தபடி. (௩௨)

நரிவெரூஉத்தலையார்.

இன்பம் பொருளறம் வீடென்னுமிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூல்-மன்பதைகட்
குள்ளவரிதென் றவைவள்ளுவருலகங்
கொள்ளமொழிந்தார் குறள்.

இ-ள். இன்பம்பொருளறம் வீடென்னுமிந்நான்கும்- இன்பமுதலி
ய நாற்பொருளியல்புகளையும்,மன்பதைகட்கு-மக்கட்பரப்புக்கு, முன்
புஅக்காலத்தில், அறியச்சொன்ன-அறியும்வண்ணஞ்சொல்லப்பட்ட -மு
துமொழிநூல் - பழமொழிவேதமானது, உள்ளவரிதென்று-நினைவுறப்
படுதற்கரிதென்று வள்ளுவர் - திருவள்ளுவர், அவை- அவற்றை, உலக
ங்கொள்ள-உலகத்தார் எளிதிலுணரும்படி, குறள் - திருக்குறளை, மொ
ழிந்தார்-சொல்லினர்-எ-று. ஆமுன்பறியவெனவே உற்சர்ப்பிணியாதலி
ன் அக்காலத்தோர்க்கு உணர்தற்கேற்ற ஆயுணீட்சியும் உணர்வுவலியும்
இருந்தனவென்பதூஉம் அவசர்ப்பிணியாதலின் இக்காலத்தோர்க்கும்
அவையிலவென்பதூஉம் பெறப்பட்டன - இவ்விரண்டும், அவாவறுதி
ன்மூன்றும் பாட்டினாயிற் காண்க-தெய்வமொழிக்கிற்பட்டாததும் வருக்கின்



கற்போர்க்குமாத்திரம் புலப்படுவதுமாய் எல்லாமொழிகட்டு முற்பட்டு
க்கடவுண்மொழியாய்நிற்றலின் முதுமொழியென்றார் அறமுதலியநான்
கும்பிறிவுபட்டுத் தோன்றுமையுடைத்தாதலின் உள்ளவரிதாயிற்றுப்பழ
ம்வேதம்.அதாவதுமலெழிதுசொல்லுதற்குக்காரணமுணர்த்தியபடி.(௩௩)

மதுரைத்தமிழாசிரியர்செங்குன்றூர்கிழார்.

புலவர்திருவள் ளுவரன்றிப்பூமேற்
சிலவர்புலவரெனச்செப்பல் - நிலவு

பிறங்கொளிமாலைக்கும் பெயர்மாலைமற்றுங்
கறங்கிருண்மாலைக்கும் பெயர்.

இ-ள். பூமேல் - பூவுலகின்கண்ணே — புலவர்திருவள்ளுவரன்றி - புலவரெனத்திருவள்ளுவரையன்றி, சிலர்புலவரெனச்செப்பல் - வேறுசிலரையும் புலவரென்றுசொல்லுதல், மாலை - மாலையென்பது, நிலவுபிறங்கொளிமாலைக்கும்பெயர் - நிலவாய்விளங்குகின்ற அந்திக்கும்பெயராக — மற்றும் - இவையன்றியும் — கறங்கிருண்மாலைக்கும்பெயர் - சூழ்கின்றவிருளையுடைய அந்திக்கும்பெயராக — செப்பல் - சொல்லுதல்போலும் — எ-று. செப்பலென்றது மேனூல் கூடப்பட்டது புலமையாவது - பலவேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாம ஒருங்கேகொண்ட பேரறிவுடைமையாம். உயர் வொப்பற்ற இவரது புலமையைக்குறித்து நோக்குங்கால் ஏனையோர் புலமையன்றாய் முடிதலின் இவ்வாறு கூறினார், புலவரென்பது நாயனுக்காரணப் பெயராமென்றபடி. ([illegible])

மதுரையறுவைவாணிகன் இளவேட்டனார்.

இன்பமுந்துன்பமு மென்னுமிவையிரண்டு
மன்பதைக்கெல்லா மனமகிழ - வன்பொழியா
துள்ளியுரை யுரைத்தாரேயோதுசீர்
வள்ளுவர்வாயுறை வாழ்த்து.

இ-ள். இன்பமுந்துன்பமுமென்னுமிவை - (பின்வரக்கடவனவாய்) நுகர்தற்கு முரியனவென்னப்பட்ட பயத்திறனுடைய இன்பமும் இருவகைக் காரணங்களையும் — உள்ளியுரை - ஆராய்ந்தறிவதும், அன்பொழியாது - (தம்மே) லன்புநீங்காமல், மனமகிழ - உள்ளங்களிகூரவும், மன்பதைக்கெல்லாம் - மக்கட்பரப்புக்கெல்லாம், ஓதுசீர்வள்ளுவர் - புகழப்படுஞ்சீரையுடைய, திருவள்ளுவர்வாயுறைவாழ்த்து - வாயுறைவாழ்த்தாகவுரைத்தார் (திருக்குறளைச்) சொல்லினார் — எ-று. * இன்பத்திற்காரணம்விதித்தலும் துன்பத்தின்காரணம் விலக்குதலும் சொல்லப்பட்டனவ் முன்பதிற்குப்பயன் அவற்றைச்செய்தலும் தவிர்தலுமாம்வேண்டுவ னவெல்லாந் தொகுத்துணர்தலின் மனமகிழ்தல்சொல்லப்பட்டது, அவ்வேதம்போலாது பலர்க்கும் உபயோகமாகச்செய்தலின் மன்பதைக் கெல்லாமென்றார். வாயுறைவாழ்த்தினியல்பு வாயுறைவாழ்த்தேவயங்க் காடினவேம்புங்கடுவும்போலவெஞ் சொற்றாங்கேவினரிவழிப்பவினி பயக்கு மென்றோம்படைக்கிளவியினை வாயுறுத்தற்றே என்னுந் தொல்காப்பிய ச்சூத்திரத்தாலறிக எதிர்காலவினைவுணர்ச்சி பயத்தல்சொல்லியபடி.

கவிசாகரப்பெருந்தேவனார்

பூவிற்குத்தாமரையே பொன்னுக்குச்சாம்புனத
மாவிற்கருமுனியா யானைக் - கமரும்ப

தேவிற்றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர் வெண்பா.

இ-ள். பூவிற்குத்தாமரை - மலர்களுக்குள்ளே தாமரைமலரும்— பொன்னுக்குச்சாம்புனதம் - பொன்களுக்குள்ளே சாம்புநதப்பொன்னும்— ஆவிற்கருமுனிவா - பசுக்களுக்குள்ளே காமதேனுவும்— யானைக்கமரும்பல்- யானைகளுக்குள்ளே ஐராவதமும், தேவிற்றிருமாலென - தேவர்களுக்குள்ளே திருமாலும்போல்— பாவிற்கு வள்ளுவர்வெண்பா- நூல்களுக்குள்ளே திருவள்ளுவரது குறள்வெண்பா— சிறந்தது - சிறப்புடையது— என்பர்-என்று (அறிவுடையோர்) சொல்லுவர்— எ-று. ஆ- பசு. பா-ஆகுபெயர். பொன் ஆடகம்-கிளிச்சிறை-சாதரூபம்- சாம்புநதம் என நால்வகைப்படும். காமதேனு வசிட்டமுனிவரிடத்துள்ளதாகலின் அருமுனியாவென்றார். அமரரும்பலென்பது விகாரப்பட்டு நின்றது. உபமானமுகத்தால் இஃது பலநூல்களினும் சிறந்ததாகின்ற மாட்சிமை சொல்லியபடி. (கஅ)

மதுரைப்பெருமருதனார்.

அறமுப்பத்தெட்டேப் பொருளெழுபதின்பத்
திறமிருபத்தைந்தாற் றெளிய - முறைமையால்
வேதவிழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்
ஓதவழுக்கற்ற துலகு.

இ-ள். அறத்திறம்-அறத்தின்கூறுபாடு— முப்பத்தெட்டால்-ஙஅ அதிகாரங்களாலும்— பொருட்டிறம் - பொருட்கூறுபாடு— எழுபதால் - எ௰ - அதிகாரங்களாலும்— இன்பத்திறம்-காமத்தின்கூறுபாடு— இருபத்தைந்தால்-உரு - அதிகாரங்களாலும்— தெளியமுறைமையால் - (கற்றவர்களறிய) ஒழுங்கால்— வேதவிழுப்பொருளை - வேதத்திலுயர்வாகிய பொருளை— வெண்குறளால்- குறள்வெண்பாக்களால்— வள்ளுவனார்-திருவள்ளுவர், ஓத-ஓதலால்— உலகு-உலகமானது— வழுக்கற்றது- வழுதலினின்றும்நீங்கிற்று— எ-று. திறமும் ஆறும் மூன்றும் கூட்டப்பட்டன உயர்வாகிய பொருள் - கருமகாண்டம்- பிரமகாண்டமிரண்டிலுள்ளும் சிறந்தபொருள், வழுக்குதல்-விதியைவிலக்கென்றுங்கோடல். உலகு - மக்களையுணர்த்தி நின்றது, துணிவுபற்றி அற்றதென இறந்தகாலத்தாற் கூறினார்; முன்னதின் வேறுபட்ட - முப்பால்களி னதிகாரத்தொகைகளோடு உலகிற்கு விளையும் நன்மைசொல்லியபடி. (கக)

கோவூர்க்கிழார்.

அறமுதனான்கு மகலிடத்தோரெல்லாந்
திறமுறத்தேர்ந்து தெளியக்- குறள்வெண்பாப்
பன்னியவள்ளுவனார் பான்முறைநேரொவ்வாதே
முன்னைமுதுவோர் மொழி.

இ-ள். அறமுதனான்கும்- அறம்பொருளின்பம்வீடெனநான்கும் அகலிடத்தோரெல்லாம் - மண்ணுலகத்திலுள்ளோரெல்லாம்— திறமுறத்தேர்ந்து-வகைப்படஅறிந்து— தெளிய - கலக்கந்தீர— குறள்வெண்பாப்பன்னிய - குறள்வெண்பாக்களாலே சொல்லப்பட்ட— வள்ளுவனார்-வள்ளுவனாரது— பான்முறை - முப்பால்களையுடைய புத்தகத்திலுள்ளனவே— முன்னைமுதுவோர்மொழி - முற்காலத்துள்ள பெரியோரது நூல்களுக்கு

னவரால் எவைசெப்பப் பட்டன எல்லாம் (அவை)யெல்லாம், இன்றிவரின் குறள்வெண்பா - இக்காலத்து இத்திருவள்ளுவராலே செய்யப்பட்ட இவ் வினியகுறள் வெண்பாக்களில், இயம்பின-சொல்லப்பட்டன-எ-று. * னைப்பு-அம்மை-அழகு-தொன்மை-தோல்-விருந்து-இயைபு-புலன்-இழைபு-அணி-சொல்லணி-பொருளணி-ஒசையணி-வண்ணம்- குறிப்பு முதலியன முதலியன, ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொருபாவலர் ஒவ்வொருகுணத்திலே சிறந்து விளங்க நூல்செய்தனர் இவரோவெ னில் எல்லாக் குணங்களாலும் நிறைந்து சிறந்துவிளங்கச் செய்தமை யின்இவ்வாறுகூறினர், இதன்பாக்களின் சிறப்புச்சொல்லியபடி. (௪௦)

அக்காரக்கனி நச்சுமனார்.

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணி
னிலைநிரம்பி நீர்மைத் தெனினுந் - தொலைவிலா
வானூர் மதியந் தனக்குண்டோ வள்ளுவர் முப்
பானூன் மதியின் பயன்.

இ-ள். மதியமும்-முப்பானூலும், கலை-பதினாறுகலைகளாலும் அறுப த்து நாலுகலைகளாலும்—நிரம்பி-நிறைந்து, காண்டற்கு - சேர்க்குதற்கு, ஆராய்ச்சிசெய்தற்கு, இனிதாகி-இனியதாகி, கண்ணினிலை - முகக்கண் ணிலையில் அகக்கண்ணிலையில், நீர்மைத்தெனினும்-நீர்மைத்தெனினும்-தன்மையுடைத்தாயினும் குணமுடைத்தாயினும், வள்ளுவர் முப்பானூ ல்-திருவள்ளுவரது முப்பாலினது, மதியின் பயன்-மதியந்தரும் பயனாகிய இன்பயன் - இனியபயனானது, தொலைவிலா வானூர் மதியந்தனக்கு- ஒழிவின்றி ஆகாயத்தில்கண்ணேதிரிகின்ற மதியினிடத்து, உண்டோ- உண்டோ-எ-று. * மதியந்தனக்கென்றது-வேற்றுமைமயக்கம் ஒகாரம்- எதிர்மறை ஆதாரமாகக்கொள்ளுதற்கு ஏற்புடைத்தல்லாதவழி ஆதா ரமாகக்கோடலின் விழிதிகெனின், தொலைவிலாவானூர் மதியமென்றார்-ந யம் மதுப்பிடாமைமுதலியனவும்குன்றவுமுறைமை முதலியனபயக்கும் இம்மை ம றுமையைவிட்டிடன்பங்கன். ஒப்புமைசொல்லுதற்கு ஓர் அம்சங்களில் ஒன்றும் இன்மையால் எனைப்பொருட் பலவற்றினுஞ்சிறந்த மதியை யாயினும் சொல்லுதுமெனப்புகின் அதுவும் இதனுக்குகுவ்வதன்றென்படி. (௪௧)

கப்பாலத்தனார்.

அறந்தகளியான்ற பொருடிரியின் புந்
சிறந்தநெய்செஞ்சொற் றீத்தண்டு-குறும்பாவா
வள்ளுவனேற்றினர் வையத்துவாழ்வார்க
ளுள்ளிருணீக்கும் விளக்கு.

இ-ள். அறம்-கருமம்—களி-அகலும்—பொருள்-பொருள்—திரி- திரியும்—இன்பு-இன்பம்—நெய்-நெய்யும்—செஞ்சொல்-செவ்விய சொ ல்—தீ-நெருப்பும்—குறும்பா-குறட்பா, தண்டு-தண்டும்—ஆ - ஆக, வ ள்ளுவனர்-திருவள்ளுவர், வையத்துவாழ்வார்கள்-பூமியின்கண்ணேவா ழ்வோரது, உள்ளிருள்-அகத்திருளை, நீக்கும்-ஒழிப்பதாகிய, விளக்கு- விளக்கு, ஏற்றினர் - ஏற்றினர்—எ-று. * ஆன்றல்-மேம்படுதல்.—அக த்திருள-அஞ்ஞானம்-தீச்சுடர்-தகளிமுதலியவற்றோடுகூடிப் புறத்திரு ளைப்படியோ அப்படி காயனாது திருவதாற்பிறந்த செஞ்சொல் அற

கேளாதனவெல்லாங் கேட்டு.

இ-ள். மறமொழித்தவாளாற்செமோற - பகைவரையெறிந்த வாட்ப டைக்கிய விசிறுக்கும் பாண்டியனே—வள்ளுவனார்தம்வாயால் - திரு வள்ளுவர்வாயால்—கேளாதனவெல்லாம் - (இதற்குமுன) கேட்கப்பட் டிப்பாதனவையெல்லாம்—கேட்டு- (இப்போது) கேட்டு—அறனறிந்தே ம் - தருமமறிந்தேம்—பொருட்டிறமறிந்தேம்- பொருளறிந்தேம்— இம்பன்றிறனறிந்தேம் - இன்பமறிந்தோம்—வீட்டெதிறங் தெளிந் தேம்-வீடுதெளிந்தோம்—எ-று. * திறன் - கூறுபாடு அறமுதலியவ ற்றோடுங் கூட்டப்பட்டது, மறம் - ஆகுபெயர், கேளாதன-பிறநூலாசி ரியர்க்கெல்லாம் அறிந்து சொல்லுதற்கெட்டாதிருந்த அறமுதலியவற் றி னுட்பங்கள், இம்மை மறுமை வீடுகளைக் குறித்துணர்தற்குரிய உறு திப்பொருளுக்கு முணர்தலினிலி யதொன்றுனுங் குறைவில்லை யென்றபடி. (௩௰)

கவுணியனார்.

சிந்தைக்கினிய செவிக்கினியவாய்க்கினிய
வந்தவிருவினைக்கு மாமருந்து - முந்திய
நன்னெறிநாமறிய நாப்புலமைவள்ளுவனார்
பன்னியவின்குறள் வெண்பா.

இ-ள். முந்திய-நன்னெறிநாமறிய-முறப்பட்டதாகிய நல்வழியினைநா மறிய—நாப்புலமைவள்ளுவனார் - நாவால்விளங்குகின்ற புலமையையு டைய திருவள்ளுவனாரால் பண்ணிச்சொல்லப்பட்ட—இன்குறள் வெ ண்பா - இனியகுறள் வெண்பாக்கள்—சிந்தைக்கினிய - (நினைத்தால்) ம னத்திற்கின்பஞ்செய்வன—செவிக்கினிய - (கேட்டால்) காதுக்கின்பஞ் செய்வன, வாய்க்கினிய-(ஓதினால்) வாய்க்கின்பஞ்செய்வன, வந்தவிருவி னைக்கு- தொடர்ந்துவருகின்ற இருவினைகளாகிய நோய்களுக்கு, மாமருந் து -பெரியமருந்துகளாவன—எ-று. * குறட்பாவைமருந்தென்றமைக்கு ஏற்கவினையைநோயென்றமையால் - ஏகதேசரூபகம்-நல்வினையும்பிறவி க்குக்காரணமாதலால் இருவினையென்றார்-முறப்பட்டநல்வழி-நன் மக்களுக்கு உறுதியாயமைந்துள்ளது அறுசமயத்தாராதுபலவகைப்பட்டகற்பனையி லேமறைப்பட்டு நின்றமையின்நாமறியவென்றார்இந்நூலின்பாக்களை ச்சிந்தித்தன்முதலியனசெய்யுங்காலும் சொற்பொருணயங்களாலே இன் பம்விளைத்தலாற்தெய்வத்தன்மையால் வினைத்துயாருமொழிக்குமென்றபடி.

மதுரைப்பாலாசிரியனார்.

வெள்ளிவியாழம் விளக்கிவிலெண்டிக்கள்
பொள்ளெனநீக்கும் புறவிருளைத் - தெள்ளிய

நூதலாவது கவி தான்வழிபடு கடவுளையாயினும் எடுத்துக் கொள்ளப்பட்ட பொருளுக்கு ஏற்புடைக் கடவுளையாயினும் வாழ்த்துதலாம் அவைகளுள் இவ்வாழ்த்து ஏற்புடைக்கடவுளையென்றறிக; எப்படியென்றால் தத்துவமுதலாகிய முக்குணங்களாலே அறமுதல் மூன்றாகிய உறுதிப்பொருளுக்கு அக்குணங்களாலே மூவராகிய முதற்கடவுளோடு சம்பந்தமுண்டாயிருக்கையால் அம்மூன்றுபொருள்களையும் சொல்லத்தொடங்கிய இவர்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாதலின் இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படச்சொல்லியதென்று அறிக.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(இதன் பதப்பொருள்) எழுத்தெல்லாம் - எழுத்துகளெல்லாம் — அகரமுதல - அகரமாகிய முதலையுடையன — (அதுபோல) உலகு - உலகம்; ஆதிபகவன் முதற்று - ஆதிபகவனாகிய முதலையுடைத்து - எ-று.
(கருத்துரை.) எழுத்துக்களெல்லாம் அகரத்தைமுதலாகவுடையன, அதுபோல உலகங்கடவுளைமுதலாகவுடையது - என்பதாம்; அகாரம் நேரத்தில் வந்தது — தமிழெழுத்துக்களுக்குமாத்திரமல்லாமல் வடவெழுத்துகளுக்கும் முதலாதலை நோக்கி எழுத்தெல்லா மென்றார்; ஆதிபகவனென்னும் இருபெயரொட்டுப்பண்புத்தொகை - விட்டான்முடிபதன் இயல்பாயிற்று — உலகென்றது - இங்கே உயிர்களின்மேலென்றது, காணப்பட்ட உலகத்தைக்கொண்டு காணப்படாதகடவுளுக்கு இருப்பைச்சொல்லவேண்டுதலின் ஆதிபகவன் முதற்றேயென்று உலகின்மேல் வைத்துச்சொல்லினராயினும் உலகிற்குமுதல் ஆதிபகவனென்பது கருத்தாகக்கொள்க — * நாதமாத்திரையான் இயல்பாதற்பிறத்தலால் அகரத்திற்குத்தலைமையும், செயற்கையறிவாலன்றி இயற்கையறிவால்முழுதும் அறிதலால் ஆதிபகவனுக்குத் தலைமையும் கொள்க — தலைமைபற்றிவந்த அகரத்திற்கும், ஆதிபகவனுக்கும் ※ (பிம்பப்பிரதி பிம்பபாவம் சொல்லுதலால் எடுத்துக்காட்டுவமையணி. [இப்பாட்டால் முதற்கடவுள்விருப்புச்சொல்லப்பட்டது.]

---

* நாதம் உயிர்முயற்சியால் எழுகிற உதானவாயுவால் ஆவது
※ பிம்பப்பிரதிபிம்பபாவம் ஒப்புமையால் பிம்பமும் பிரதிபிம்பமுமென த்தோன்றல்.

முதல் - அதி — கடவுள்வாழ்த்து.

பிறவாழி நீந்தலரிது.

இ-ள் அறவாழியந்தணன் - தருமக்கடலாகிய கடவுளது—தாள் அடியாகிய - (மரக்கலத்தை) சேர்ந்தார்க்கல்லால்- சேர்ந்தவர்க்கல்லாமல், பிறவாழி - (அதனின்) வேறாகிய கடல்களை, நீந்தல்- கடத்தல் அரிது - கூடாது—எ-று (கருத்துரை.) கடவுளடிகளைச் சேராதார்க்குப் பொருளும் இன்பமுமாகிய கடல்களைக்கடத்தல் கூடாது - என்பதாம். ※ அறம்பொருளின்பமெனவுடனெண்ணப்பட்ட மூன்றுள் அறத்தை முன் பிரித்ததனால் மற்றைப்பொருளும் இன்பமும்பிறவெனப்பட்டன பலவேறுவகைப்பட்ட அறங்களெல்லாம் கடவுளுக்கு உருவாதலின் அறவாழி யந்தணனென்றார், அம்மரக்கலத்தைச் சேராதவர்களைகாணாது அவற்றுள்ளே அழுந்துவாராகலின் நீந்தலரிதென்றார், தாட்புணை யென்னாமையால் ஏகதேசவுருவகம். (அ)

கோளில் பொறியிற் குணமிலவே யெண் குணத்தான்
றாளை வணங்காத் தலை.

(இ-ள்.) கோளில் (தந்தமக்கேற்றபுலன்களைக் கொள்ளுகையில்லாத—பொறியின் - பொறிகள்போல்—எண்குணத்தான் - எண்வகைப்பட்ட குணங்களை யுடையவனது— தாளை அடிகளை—வணங்காத்தலை - தொழாததலைகள் — குணமிலவே - பயன்படுதலுடையனவல்லவையாம்—எ-று. (கருத்துரை.) கடவுள்பாதங்களை வணங்காததலைகள்பயன்படாவாம் - என்பதாம். ※ எண்குணங்களாவன - தன்வயத்தனாதல்-தூயவுடம்பினனாதல்-இயற்கையுணர்வினனாதல்முற்றுமுணர்தல்- இயல்பாகவே பாசங்களினீங்குதல் - பேரருளுடைமை - முடிவிலாற்றலுடைமை-வரம்பிலின்பமுடைமை - என்பனவாம், இவை சைவாகமத்திற் சொல்லப்பட்டன, காணாத கண்முதலானவைபோல் வணங்காத்தலைகள் பயனில வெனத்தலைமேல் வைத்துச்சொல்லினும் இதம்பற்றிவாழ்த்தாத வாக்களும் அப்படியேபயனிலவாமெனவதுக்கொள்க. [இவை மூன்றுபாட்டாலும் அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலும்செய்யாவிடத்தே உண்டாகிற குற்றஞ்சொல்லப்பட்டது.] (கு)

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
றைவ னடிசேரா தார்.

(இ-ள்.) இறைவன் - தலைவனது—அடி - பாதமாகிய - மரக்கலத்தை—(சேர்ந்தவர்) பிறவிப்பெருங்கடல் - பிறவியாகியபெரியகடலை— நீந்துவர்- கடப்பார், சேராதார் (அதனைச்) சேராதவர்—நீந்தார் - கடக்



மாட்டார்—எ-று. (கருத்துரை.) கடவுள்பாதங்களைச் சேர்ந்தவர்கள் பிறவிக்கடலைக்கடப்பார்கள், சேராதவர்கள் பிறவிக்கடலைக் கடக்கமாட்டார்கள் - என்பதாம். ※ சேர்ந்தவரென்பது வருவிக்கப்படுதலாற்சொல்லெச்சம் பிறவி ஒன்றுக்கொன்று காரணகாரியசம்பந்தப்பட்டுக் கரையில்லாமல் வருதலால் - பிறவிப்பெருங்கடலென்றார், [கடவுளடிகளையேநினைப்பவர்க்குப் பிறவி நீங்குதலும், உலகியல்பை நினைப்பார்வக்கு அது நீங்காமையும் ஆகிய விரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன.]

# உ - ஆம் - அதி - வான்சிறப்பு.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

இ-ள். பனுவல் - நூல்களது—துணிவு - நிச்சயமானது—ஒழுக்கத்து (தமக்குரிய) வொழுக்கத்திலேநின்று—நீத்தார் - துறந்தவரது—பெருமை - மகிமையை விழுப்பத்து - மேலான பலபொருள்களுள்ளும் வேண்டும் (இதுவேமேலானதென்று) விரும்பும் —எ-று.(கருத்து.)



நூல்களது நிச்சயமானது துறந்தவர்மகிமையைமேலானதென்றுவிரும்பும் - என்பதாம்.* தமக்குரிய வொழுக்கத்திலே நின்று துறத்தலாவது தங்கள் தங்கள் வருணாசிரமங்களுக்கு உரியவொழுக்கங்கள் தப்பாமல் நடக்கப்புண்ணியம்வரும்; அதுவளரப்பாவம்தேயும் அதுதேய அறியாமைநீங்கும், அதுநீங்க இது நித்தியம் இது அநித்தியமென்கிற பகுத்தறிவும்-நிலையில்லாத இம்மைமறுமையின்பங்களில் வெறுப்பும் பிறவித்துன்பங்களும்தோன்றும், அவைதோன்ற மோட்சத்தில் ஆசையுண்டாம் அது உண்டாகப்பிறவிக்குக்காரணமாகிய வீண்முயற்சிகளொழியும் நீங்கி மோட்சத்துக்குக் காரணமாகிய யோகமுயற்சி யுண்டாம். அது உண்டாகத் தத்துவஞானம்பிறந்து எனதென்பதாகிய மமகாரமும் யானென்பதாகிய அகங்காரமும் - விடும், ஆகலின்-இவ்விரண்டு பற்றுக்களையும் இம்முறையேவெறுத்து விடுதலாம் நூல்செய்தவரது துணிவு அதனின்மேல் ஏற்றப்பட்டது. (௧)

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

இ-ள். துறந்தார் (அகங்காரமமகாரங்களை) விட்டவர்களது—பெருமை - மகிமையை - துணைகூறின் - எண்ணிக்கையினாலேசொல்லி அறியப்புகுந்தால் (அளவுபடாமையால்) வையத்து - இவ்வுலகத்திலே—இறந்தாரை (பிறந்து) இறந்தவரை, எண்ணிக்கொண்டற்று-எண்ணி (இத்தனைபேர்களென்று) அறியப்புகுந்தாற் போலும்—எ-று. (கருத்து.) துறந்தவர் பெருமையைச்சொல்லில் இறந்தவர்களை எண்ணிக்கொண்டாற்போலும் - என்பதாம்.* கொண்டாலென்பது கொண்டெனத் திரிந்துநின்றது. (௨)

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

இ-ள். (ஒத்தபிறப்பினராகியமனிதர்களிலே)—பெரியர்-பெரியோர்—செயற்கரிய - செய்தற்கரியவைகளை—செய்வார் - செய்வார்கள்—சிறியர் - சிறியோர்—செயற்கரிய- அச்செய்தற்கரியவைகளை—செய்கலாதார் - செய்யமாட்டாதார் — எ-று. (கருத்து.) பெரியோர்செய்தற்கரியவைகளைச் செய்வார்கள் சிறியோர் செய்தற்கரியவைகளைச் செய்யார்கள் - என்பதாம். ஆ எனவே பெரியோர்செய்தற் கெளியவைகளைச் செய்யாரென்பதும், சிறியோர் அவைகளைச் செய்வாரென்பதும் தோன்றநின்றது. செய்தற்கெளியவை - மனத்தை வேண்டியபடியே போகவிடுதல் - ஆசைகொள்ளுதல் - கோபித்தல் - இவைமுதலானவை. செய்தற்கரியவை - இயமம்-நியமம்-ஆசனம்-பிராணாயாமம் - பிரத்தியாகாரம்- தாரணை-தியானம்-சமாதி-என எண்வகையோகங்களாம். ()

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. ௨௭



இ-ள். உலகு - உலகமானது, சுவையொளியூறோசைநாற்றம், இரதமும் - உருவமும்— ஸ்பரிசமும் - சத்தமும்—கந்தமும் - என்று-என்றுசொல்லப்பட்ட, ஐந்தின் - பஞ்சதன்மாத்திரைகளது—வகை- கூறுபட்டை—தெரிவான்கட்டே - ஆராய்பவனிடத்தே—எ-று. (கருத்து). உலகமானது பஞ்சதன்மாத்திரைகளை யறிபவனிடத்தே - என்பதாம். ஐந்தின்வகையாவன- அவைகளும், அவற்றிலேதோன்றிய பூதங்களும் அவற்றின்கூறாகிய ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களும் ஆகஇருபதுமாம். வகைதெரிவானென்றதனால் தெரிதற்புருடனும், அவன் தெரிதற்குக்காரணமாகிய மான் - அகங்காரம் - மனம் - எனப்பட்டவையும் அவற்றுக்கு முதலாகிய மூலப்பகுதியும் கொள்ளப்படும்—இவ்விருபத்தைந்து தத்துவக்கூட்டமல்லது உலகுவேறில்லையென்று உலகினது இருப்பையறிதலால் அவ்வறிவினிடத்ததாயிற்று - பூதமைந்து, நிலம்-நீர்-தீ-காற்று-வான். ஞானேந்திரியமைந்து, மெய்-வாய்-கண்-மூக்கு-செவி. கன்மேந்திரியமைந்து, வாக்கு-பாதம்-பாணி-பாயு- உபஸ்தம். மூலப்பகுதி- மாயை, இவை நான்குபட்டாலும் பெருமைக்குக்காரணங்களூர், ஐம்பொறியடக்கலும், யோகப்பயிற்சியும், தத்துவஞானமும், ஆமென்பது சொல்லப்பட்டது. (௭)

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

இ-ள். நிறைமொழி (பய) னிறைந்தசொல்லையுடைய—மாந்தர்- முனிவரது - பெருமை - மகிமையை— நிலத்து - நிலவுலகத்தில்—மறைமொழி - அவர்களையாகச்சொல்லிய மந்திரங்களே — காட்டிவிடும் (பிரத்தியட்சமாகக்) காட்டிவிடும்—எ-று. (கருத்து.) முனிவரது மகிமையை - அவர்கள் - மந்திரங்களே காட்டும்- என்பதாம். ஆ பயனிறைந்தமொழியாவது அவர் அருளினாலே சொன்னாலும், கோபத்தினாலே சொன்னாலும், அதனதன் பிரயோசனத்தைக்கொடுத்தேவிடுகிறசொல். காட்டுதல் பிரயோசனப்பட்டு அம்மகிமையை அறிவித்தல். (௮)

இ-ள். ஒருவர்க்கும் ஒருவனுக்கு—செயற்பாலது- செய்தற்றன்மைத்து—அறனே - நல்வினையே—உயற்பாலது-ஒழிதற்றன்மையது—பழியே-தீவினையே—எ-று. (கருத்து) ஒருவனுக்குச் செய்யத்தக்கது நல்வினை-செய்யத்தகாதது தீவினை-என்பதாம். ஏ தேற்றேகாரம். பின்னுங் கூறப்பட்டது, ஒருபிரயோஜனம்- அதாவது [பழிக்கப்படுவதாகிய தீவினையைப்பழியென்றார் [இவற்றைச் செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன. (௰)

பாயிரம் முற்றிற்று.

# இல்லறம்.



இல்லறமாவது - இல்வாழ்க்கைநிலைக்குச் சொல்லப்படுகிற வழியேநின்று அதற்குத்துணையாகிய கற்புடைய மனைவியோடு கூடிச்செய்யப்படுவதாம் ஆகலின் அதனை முதலிலேசொல்லத்தொடங்கினர்.

## ௫-ஆம் அதி - இல்வாழ்க்கை.



அஃதாவது - மனையாளோடுகூடி வாழ்தலினது சிறப்பாம். இல்வாழ்க்கை நிலையானது அறஞ்செய்தற்குரிய இருவகை நிலைகளுள்ளே முதலாதலின் இது அறன்வலியுறுத்தலின் பின்வைக்கப்பட்டது.

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை.

இ-ள். இல்வாழ்வானென்பான் - இல்லறத்தோடுகூடி வாழ்பவனென்றுசொல்லப்படுவோன்—இயல்புடைய (அறவறத்) தன்மையையுடைய- மூவர்க்கும்—(மற்றை) மூவர்க்கும்—நல்லாற்றில் (அவரது) நல் (லொழுக்க) வழிகளில்—நின்ற-நிலைபெற்ற—துணை - துணையாவன்—எ-று. (கருத்து.) இல்லறத்தில்வாழ்பவன் பிரமசாரி, வானப்பிரஸ்தன், சன்னியாசி, இம்மூவர்க்குந் துணையாவன்-என்பதாம். இல்லென்பது அதனைச்சார்ந்த உணர்த்தலால் ஆகுபெயர், மற்றைமூவராவார் ஆசாரியனிடத்தே ஓதுகின்றவனும் விரதங்காக்கின்றவனும் ஆகிய பிரமசாரியும். காட்டிடத்தேபோய் மனைவியோடு தவஞ்செய்கிறவனாகிய வானப்பிரஸ்தனும். எல்லாப்பற்றுக்களையும் விட்டவனாகிய சந்நியாசியும். என்றறிக. இல்வாழ்வான்-பசி- நோய்-குளிர்முதலானவைகளால் அவ்வொழுக்கங்களுக்கு-இடையூறுவாராமல் உண்டிமருந்து முதலானவைகொடுத்து அவரவரொழுக்க வழிகளிலே தப்பாமல் நடத்துகையிலே நல்லாற்றினின்றதுணையென்றார். (௧)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை.

இ-ள். துறந்தார்க்கும் (ஆதாரமானவராலே)-விடப்பட்டோர்க்கு
ம்—துவ்வாதவர்க்கும் - வறுமைப்பட்டவர்க்கும்—இறந்தார்க்கும் (ஒரு
வருமில்லாமலவர்து) இறந்தவர்க்கும்—இல்வாழ்வானென்பான் - இல்
வாழ்வானென்று சொல்லப்படுவோனே-துணை—துணையாவான்-எ-று.
(கருத்து.) துறந்தவர்க்கும்-வறியவர்க்கும - இறந்தவர்க்கும்- இல்வாழ்
வான் துணையாம்- என்பதாம்.உ. ஆதாரமானவராலேவிடப்பட்டவர்க்குப்



யவமொழிய அவர்க்கு ஆதாரமாய் நின்று வேண்டுவனசெய்தலாலு
ம் வறுமைப்பட்டவர்க்கு உணவுமுதலானவை கொடுத்தலாலும், இற
ந்தவர்க்கு நீர்க்கடன் முதலானவைசெய்து நல்லகதியை அடைவித்த
லாலும்; துணையென்றார். [இவையிரண்டுபாட்டாலும் இல்வாழ்க்கை
எல்லாவுபகாரங்களுக்கும் உரித்தாதல்சொல்லப்பட்டது.] (உ)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

இ-ள். தென்புலத்தார்-பிதிரரும்—தெய்வம்-தேவரும்—விருந்து-
அதிதியரும்—ஒக்கல் - சுற்றத்தாரும்—தான்-தானும்—என்று-என்று
சொல்லப்பட்ட—ஐம்புலத்து - ஐந்திடத்துஞ்செயப்படுகின்ற—ஆறு
(அற) வழியை—ஓம்பல் - வழுவாமற்செய்தல்—தலை (இல்வாழ்வானு
க்குச்) சிறப்புடையவறமாம்—எ-று. (கருத்து.) பிதிர்க்குந் தெய்வத்
திற்கும்-விருந்திற்கும் வினைத்திற்கும் தனக்குந்தருமஞ்செய்தல்தலைமை
யானதருமமாம் - என்பதாம். * ஆங்கு-அசைநிலை-பிதிரர் ஓர் தேவசா
தியார், அவர்க்கு இடம்தெற்காதலின்-தென்புலத்தாரென்றார், தெய்வ
மாதியொருமை- விருந்து- புதுமை- அதுஇங்கே புதியவராய்வந்தவ
ரை உணர்த்தநின்றலே ஆகுபெயர். தான்செல்வவிய விருந்துகொண்
டு எல்லாஅறங்களையும் செய்யவேண்டுதலின் தன்னைக் காப்பாற்றுத
லும் அறமாயிற்று, இவ்வைந்துவகையும் தருமஞ்செய்தற்குஇடங்களா
கையால் ஐம்புலமென்றார், இவ்வைந் திடங்களும் ஐந்துபங்கு வே
ண்டுதலால் அரசனுக்கு ஆறில் ஒருபங்காயிற்று. (௩)

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

இ-ள். பொருள்சம்பாதிக்கும்போது பழி- பாவத்துக்கு—அஞ்சி
(பயப்பட்டுச்சம்பாதித்து)—பாத்து (அப்பொருளை முன் சொல்லப்பட்
டவர்களுக்கும்) பங்கிட்டு—ஊண் (தான்) உண்ணுதலை—வாழ்க்
கை (ஒருவனது) இல்வாழ்க்கையானது—உடைத்தாயின்- உடையதா
னால்—வழி (அவனது)சந்ததியானது—எஞ்சல் - குறைதல்—எஞ்ஞா
ன்றும்-எக்காலும்—இல்-இல்லை—எ-று. (கருத்து.)பாவத்திற்குப்பயந்
து பொருளைத்தேடிப் பங்கிட்டுண்ணு மொருவன் சந்ததியானது கு
றைதலில்லை- என்பதாம். * பாவத்தால்வந்த பிறன்பொருளைப் பங்கி
ட்டுண்டால் அறமானது,பொருளுடையானையும், பாவமானது தன்னை
யும் அடைந்து சந்ததி அழியுமாதலால் பழியஞ்சியென்றார். வாழ்பவ
னது உடைமைவாழ்க்கையேல் ஏற்றப்பட்டது. (௪)

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

அஃதாவது - அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மையாம், இதனாலேயே அதிகாரமுறைமையும் விளங்கும்.

> மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
> வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

இ-ள். மனைத்தக்க- இல்லறத்துக்குத்தக்க — மாண்புடையளாகி- நற்குண நற்செய்கைகளை யுடையவளாகி, தற்கொண்டான் - தன்னைக் கொண்டகணவனது—வளத்தக்காள்- வரவுக்குத் தகுந்த வாழ்க்கையையுடையவள்— துணை - (அவ்வில்லறத்துக்குத்) துணையாவாள்—எ-று. (கருத்து.) இல்லறத்திற்குத்தக்க நற்குண-நற்செய்கையுடையவளாகித்தன்னைக்கொண்டகணவன் வரவுக்குத்தக்க செலவுசெய்பவள் இல்வாழ்க்கைக்குத்துணையாவாள் என்பதாம். நற்குணங்களாவன-துறந்தாரையுபசரித்தலும்விருந்தோம்பலும்வறியவரிடத்தேயருளுடைமையும், முதலானவையாம. நற்செய்கைகளாவன - வாழ்க்கைக்குவேண்டிய பொருள்களைச் சேர்த்து காப்பாற்றிவைத்தலும், உண்டிசமைத்தல் வல்லமையும், உபகாரஞ்செய்தலும், முதலானவையாம். வருவாய்க்குத்தக்கவாழ்க்கையாவது-முதலுக்குத்தக்கபடி செலவுசெய்தல். [இதனால் இவ்விரண்டென்மைகளும் சிறந்தனவென்பது சொல்லப்பட்டது] (௧)

> மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
> யெனைமாட்சித் தாயினு மில்.

இ-ள். மனைமாட்சி- இல்லறத்துக்குத்தகுந்த நற்குணநற்செய்கைகள்—இல்லாள்கண்- (ஒருவனது) மனையாளிடத்தே—இல்லையின்- இல்லையாயின்— வாழ்க்கை- அவ்வில்வாழ்க்கையானது—எனைமாட்சித்தாயினும் (செல்வத்தால்) எவ்வளவுபெருமையை உடையதாயினும்- இல்- அப்பெருமையை உடையதன்று—எ-று. (கருத்து) இல்லறத்திற்குத் தகுந்த நற்குண நற்செய்கை மனையவளிடத் தில்லாதாயின் அவ்வில்



வாழ்க்கை எவ்வளவுசிறப்புடைத்தாயினும் பயனில்லை - என்பதாம். அது பயன்படாமையால் இல்லையென்றார். (௨)

> இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ
> னில்லவள் மாணாக் கடை.

இ-ள். (ஒருவனுக்கு) இல்லவள்-மனையாள்— மாண்பானால் - நற்குணநற்செய்கைகளாயிருந்தால்—இல்லது - இல்லாதது— என்-யாது.— இல்லவள், அம்மனையாள்— மாணாக்கடை- அப்படிப்பட்டவளாகாதிருந்தால்—உள்ளது - உள்ளது—என்-யாது—எ-று. (கருத்து.) மனையாள் நற்குணநற்செய்கையுடையவளாகில் அவ்வில்வாழ்க்கை எல்லாமுடைத்து - என்பதாம். மாண்பென்பதன்று அப்பெயர் இங்கே அதனை உடையவளுக்கு ஆயிற்று. [இவ்விரண்டுபாட்டாலும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது-மனையாளது நற்குண நற்செய்கையே மற்றவையல்லவென்பது சொல்லப்பட்டது.] (௩)

> பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
> திண்மையுண் டாகப் பெறின்.

இ-ள். தன்மகனை - தன்புத்திரனை — சான்றோனென (கல்விகேள்விகளினாலே) நிறைந்தோனென்று (அறிவுடையோர்) சொல்ல — கேட்டதாய் - கேட்டதாயானவள் — ஈன்றபொழுதின் - பெற்றகாலத்திலும் — பெரிதுவக்கும் - மிகமகிழ்வாள் — எ-று. (கருத்து.) தன்மகனைக் கல்வியில் வல்லவனெனக் கேட்ட தாயானவள் பெற்றகாலத்திலும் பெருமகிழ்ச்சியடைவாள் - என்பதாம். மகவின்மேலே கண்டதனால் உண்டாகிய அப்பொழுதை மகிழ்ச்சியிலும் நிறைந்தகல்விகேள்விகளையுடையவனெனக் கேட்டதனால் உண்டாகிற சிறப்பான மகிழ்ச்சி பெரிதாகலின் பெரிதுவக்குமென்றும், பெண்மைக்குணத்தினால் தானாக அறியமாட்டாமையால் கேட்டதாயெனவும் சொல்லினார். அறிவுடையோரென்பது வருவிக்கப்பட்டது சான்றோனென்று அறிந்துசொல்லுதற்குஉரியவர் அவர்களையால். [தாய்மகிழ்ச்சிக்கு அளவில்லாமையால் அது இதனால் வெளிப்படுத்திச்சொல்லப்பட்டது.] (௯)

மகன்றந்தைக் காற்று முதவியிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

இ-ள். தந்தைக்கு (தன்னைக்கல்வியுடையவனாக்கிய) தகப்பனுக்கு — மகன் - புத்திரன் — ஆற்றும் - செய்யும் — உதவி - எதிருபகாரமாவது (தன்னறிவையும் ஒழுக்கத்தையும் கண்டவர்) இவன் - இவனது — தந்தை - தகப்பன் (இவனைப் பெறுதற்கு) — என் - என்ன தவத்தை — நோற்றான்கொல் - செய்தானோ — என்னும் - என்கிற — சொல் - சொல்லை (உண்டாக்குதலாம்) — எ-று. (கருத்து.) பிள்ளை பிதாவுக்குச் செய்யும் உதவியாவது இவன்பிதா இவனைப்பெறுதற் கென்னதவஞ்செய்தானோ வென்று பிறர்சொல்லுஞ் சொல்லையுண்டாக்கல் - என்பதாம். ஈ சொல்லென்பது உண்டாக்குதலாகிய தன்காரணத்தைக் குறிப்பித்து நின்றது. உண்டாக்குதல் - அப்படிச்சொல்லவைத்தல். [இதனால் புதல்வனது கடன் சொல்லப்பட்டது.] (௰)

## ௮ - ஆம் - அதி - அன்புடைமை.

அஃதாவது - அம்மனைவி புதல்வர் முதலாகிய சம்பந்த முடையவரிடத்து ஆசையுடையவனாயிருக்கை, அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும், இல்லறமினிது நடத்தலும் பிறவுயிர்களின்மேல் அருள்பிறத்தலும் அன்பின்பயனாதலால் இதுவேண்டப்பட்டது.

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தாழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

இ-ள். அன்பு - (சம்பந்தமுடையவரிடத்தே செய்யப்பட்ட) அன்பானது— (அத்தன்மையினாலே) ஆர்வமுடைமை (பிறரிடத்தே; அசையையுடையவனாயிருக்கையை — ஈனும் (ஒருவனுக்குத்) தரும்— அது - அவ்விருக்கையானது நண்பென்னும் (இவனுக்குயாவரும்) நட்பினரென்று சொல்லப்படுகிற — நாடாச்சிறப்பு - அளவிறந்தசிறப்பை ஈனும் - தரும்—எ-று. (கருத்து.) அன்பானது - ஆசையைத்தரும், அது சினேகத்தையும் தரும்-என்பதாம். * [எல்லாரும் நட்பினராதல் - எல்லாப்பொருளையும் - அடைதற்குக் காரணமாதலின் அதனைநாடாச்சிறப்பென்றார்.]

(ச)

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

இ-ள். வையகத்து - இவ்வுலகத்தில்— இன்புற்றார் (இல்வாழ்க்கையிலே நின்று.) இன்பத்தையநுபவித்தவராகி— எய்தும் (அதன்பின்னே விண்ணுலகத்திற்சென்று) அடையும்—சிறப்பு - பேரின்பத்தினை—அன்பு - அன்பை—உற்று உடையவராகி—அமர்ந்த(இல்லறத்தோடு)பொருந்திய—வழக்கு - வழியின்பயனாகும்—என்ப - என்று (அறிந்தோர்) சொல்லுவர்—எ-று.(கருத்து.) விண்ணுலகிலடையும் பேரின்பத்தைமண்ணுலகில் இல்வாழ்க்கையில் பொருந்தியவன்பின் பயனென்பர் - என்பதாம். * இல்வாழ்க்கையிலேநின்று மனைவியோடும்; மக்களோடும், சுற்றத்தோடும், கூடி இன்புற்றவர் தம்மாலேசெய்யப்பட்டவேள்வித் தொழிலினாலே தேவராய்ப்பிறந்து - அங்கேயும் இன்பத்தை அநுபவிப்பாராகலின் இன்புற்றாரெய்துஞ் சிறப்பென்றார். தவத்தினாலே - அல்லாமலும்— அடையப்படுவதாகிய - விண்ணுலகவின்பத்தை இங்கேயும் இன்பமுற்று அடைதல் அன்பாலன்றி இல்லையென்பதாம். (ரு)

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

இ-ள். அறியார் - அறியாதவர் (சிலர்)—அன்பு- அன்பானது—சார்பு - துணையாவது—அறத்திற்கே - தருமத்துக்கே—என்ப - என்று சொல்லுவர் — மறத்திற்கும் மறத்தைநீக்குதற்கும் —அஃதே - அவ்வன்பே—துணை- துணையாவது—எ-று. (கருத்து.) அறியாதவர்கள் அறத்திற்கேயன்புதுணையென்பர் மறத்தைநீக்குதற்கும் அவ்வன்பே துணையாம் - என்பதாம். * ஒருவனாலே செய்யப்பட்ட பகைமைபற்றி உள்ளத்திலே மறந்தோன்றியவிடத்தே அவனைநட்பாக நினைத்து அவன்மேல் அன்புசெய்ய அறநீக்குமாதலின் மறத்தை நீக்குதற்குந் துணையாமென்றற்கு மறத்திற்கு மஃதேதுணையென்றார் மறத்திற்கு மஃதேதுணையென்றதற்குப் பெண்டிர் புதல்வர் முதலாயினோரை நல்வழிப்படுத்தும் பொருட்டு அவரைக் குறித்துச்செய்யப்படும் கோபத்துக்கும் அன்பே



துணையாமெனப் பொருளுரைப்பினும் ஆம் [இவை ஐந்து பாட்டாலும் அன்பினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (சு)

என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்.

இ-ள். என்பிலதனை - எலும்பில்லாத உடம்பை—வெயிற்போல வெயிலானது சுடுதல்போல—அன்பிலதனை - அன்பில்லாதவுயிரை—

றம் - அறக்கடவுள்—காயும் - சுடுவான்—எ-று. (கருத்து.) என்பில்லாப் புழுக்களைச் சூரியன் சுடுதல்போல அன்பில்லாவுயிர்களை யறக்கடவுள் சுடும் - என்பதாம். * ஏ - அசைநிலை என்பிலதென்றதனுல் உடம்பென்றும், அன்பிலதென்றதனுல் உயிரென்றும், கொள்ளப்பட்டன. வெறுப்பில்லாமல் எங்கும் ஒருதன்மைத்தாகிய வெயிலின்முன்னே புழுமுதலானவை கெடுதல்போல, அப்படிப்பட்ட அறத்தின் முன்னே அன்பில்லாதவுயிர் தன்னியல் பாறசென்று கெடுமென்பதாம்.

அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

இ-ள். அன்பகத்தில்லாவுயிர் - மனதிலன்பில்லாத வுயிரானது—வாழ்க்கை (இல்லறத்தொடுகூடி) வாழ்தலானது—வன்பாற்கண்- வன்பாலென்று நிலத்திலே—வற்றன்மரம்- உலர்ந்தமரமானது—தளிர்த்தற்று- தளிர்த்தாற்போலும்—எ-று. (கருத்து.) அன்பில்லா வுயிர்வாழ்க்கையானது வன்னிலத்திற் பட்டமரந் தளிர்த்தாற்போலும் - என்பதாம். * கூடாதென்பதாம். வன்பால், கடினநிலம். (அ)

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

இ-ள். யாக்கையகத்து- உடம்பினகத்திலே நின்று—உறுப்பு (இல்லறத்துக்கு) அங்கமாகிய—அன்பிலவர்க்கு - அன்பில்லாதவர்க்கு— புறத்து மற்றைப்புறத்திலேநின்று— உறுப்பெல்லாம் - அங்கமானவையெல்லாம்—எவன் (அவ்வறஞ் செய்தலிலே) என்னவுதவியை— செய்யும்-செய்யும்—எ-று. (கருத்து.) உள்ளன்பில்லாதார்க்குப்பிறவுறுப்புகளிருந்து பயனில்லை - என்பதாம். * புறத்துறுப்பாவன- இடம்பொருளேவலாதிகளாம் அன்பாகிய துணையோடு கூடாத விடத்தே அவைகளாற் பயனில்லாமையால் எவன் செய்யுமென்றார் உறுப்புப்போறலால் உறுப்பெனப்பட்டது. (கூ)

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

இ-ள். அன்பின்வழியது- அன்புமுதலாக அதன்வழிநின்ற உடம்பே—உயிர்நிலை- உயிர்நின்ற உடம்பாகும்—அஃதிலார்க்கு - அவ்வன்பில்லாதவர்க்குள்ள—உடம்பு - உடம்புகளானவை—என்பு - எலும்



பை—தோல்-தோலினலே, போர்த்த-போர்க்கப்பட்டனவாம் (உயிர்நீங்கினவுடம்பாகா)—எ-று. (கருத்து.) அன்போடுபொருந்தியவுடலேயுயிருள்ளவுடலாகும், அவ்வன்பில்லாதவுடலே யுயிரற்றவுடலாகும், என்பதாம். * இல்லறம் பயன்படாமையால் அப்படிப்பட்ட வுடம்புகளாயின. [இவை நான்குபாட்டாலும் அன்பில்லாதவிடத்தே உண்டாகுங் குற்றஞ்சொல்லப்பட்டது.] (ய)

## கூ-ஆம்-அதி- விருந்தோம்பல்.

வேள்வி தலைப்படாதார்.

இ-ள், விருந்து-விருந்தினரை—ஓம்பி- (நிலையாப்பொருளைக்கொண்டு) உபசரித்து—வேள்வி - அவ்வேள்விப்பயனை — தலைப்படாதார்- அடையும் அறிவிலாதவர்—பரிந்தோம்பி (அப்பொருளை) வருந்திக்காத்து (பின்பு அதனையிழந்து—பற்றற்றேம்-(இப்போது) பற்றுக்கோடிலமாயினேம்—என்பர் - என்றிரங்குவார்—எ-று. (கருத்து.) விருந்தாளிகளைக் காப்பாற்றாதார்பொருளைக் காப்பாற்றியிழந்தோமென்பார்- என்பதாம். * சம்பாதிக்கப்பட்ட பொருளைக் காத்தலும் கடுந்துன்பமாதலால் பரிந்தோம்பியென்றார் வேள்வி அதன்பயனை உணர்த்தலால் ஆகுபெயர். (அ)

உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

இ-ள். உடைமையுள்-(பொரு)ளுடையராயிருக்குங்காலத்து—இன்மை-வறுமையாவது—விருந்தோம்பல் - விருந்தினரையுபசரித்தலை—ஓம்பா-இகழும் — மடமை - பேதமையாகும் — அது அறிந்தோரிடத்திராது)மடவார்கண்- அறிவில்லாதவரிடத்து—உண்டு-உண்டு—எ-று.(கருத்து.) செல்வத்துள் வறுமையாவது விருந்தினரை யுபசரியாமை அது அறிவில்லாரிடத்துண்டு- என்பதாம்.* மடமையானது பொருளாலே கொள்ளும் பயனை இழப்பித்து உடைமையை இல்லாமையாக்கலால் அதைவறுமையாகஉபசரித்தார். பேதைமையால் விருந்தோம்பலை



யிகழ்ந்தால் - பொருளிருந்தவிடத்தும் அதனால் பயனில்லையென்பதாம். [இவையிரண்டு பாட்டாலும் விருந்தோம்பாவிடத்து உண்டாகுங்குற்றஞ் சொல்லப்பட்டது ] (௯)

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

இ-ள். அனிச்சம் - அனிச்சப்பூவானது—மோப்ப - மோந்தவிடத்தே—குழையும்-வாடும்—விருந்து- விருந்தினர்—முகந்திரிந்து - முகம் வேறுபட்டு—நோக்க- பார்க்க—குழையும்- வாடுவர்—எ-று. (கருத்து.) அனிச்சப்பூமோந்தவிடத்துவாடும், விருந்துமுகம் வேறுபட்டுப் பார்க்க வாடும் - என்பதாம். * தூரத்திலே கண்டவிடத்து முகமலர்ச்சி காட்டலும், அதுகண்டு சமீபத்து வந்தவிடத்து இன்சொற்சொல்லுதலும், அதுகேட்டு உடன்பட்டபோது உபசாரஞ் செய்தலும், ஆகிய- விருந்தோம்புவார்க்கு அவசியமிருக்கவேண்டிய மூன்றனுள் - முதலாகியமுகமலர்ச்சியில்லாதபோது தூரத்திலிருந்தேவாடி நீங்குதலால் நீண்டியவிடத்தல்லது வாடாத அனிச்சப் பூவினும் விருந்தினர் மெல்லியராயிருப்பரென்பதாம். [இதனால் விருந்தோம்புவார்க்கு முதலிலே முகமலர்ச்சிவேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (௰)

## ௰-ஆம் - அதி - இனியவைகூறல்.

அஃதாவது - மனதிலுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிற இனிய சொல்லுகளைச் சொல்லுதலாம். இதுவும் விருந்தோம்புவார்க்கு அவசியம்வேண்டியதாகலின் அதன்பின்வைக்கப்பட்டது.

(கட்பினையென்னும்) பிரிவுதோறும்—பாற்பட்டு- (தன்) முறைமையோ டொழுகப்பெறின் - நடக்கப்பெறின்—எ-று. (கருத்து.) நடுவுநிலைமையென்று சொல்லும் அறமேயல்லதாம் - என்பதாம். ஏகாரம் ஒன்று என்பதனோடுகூட்டப்பட்டது பெறினென்பது அவ்வொழுக்கத்தினருமை தோன்றநின்றது. [இதனால் நடுவுநிலைமையது சிறப்புச் சொல்லப்பட்டது.]
(௧)

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து.

இ-ள். செப்பமுடையவன்- நடுவுநிலைமையையுடையவனது—ஆக்கம் - செல்வமானது—சிதைவின்றி(பிறர்செல்வம்போல்) அழிதலின்றி எச்சத்திற் (கும்) அவன்சந்ததியார்க்கும் —ஏமாப்பு - உறுதியாதலை உடைத்து-உடையதாம்—எ-று. (கருத்து.) நடுவுநிலைமையுடையவன்செல்வமானது அவன்சந்ததிக்கு முறுதியுடைத்து - என்பதாம். உம்மை விகாரத்தினாலேதொக்கு நின்று வருவிக்கப்பட்ட லெச்சவும்மையால் சாமளவும் அவனுக்கும் உறுதியாதல்பெறப்படும் அறத்தோடுவருதலால் அப்படிப்பட்டதாயிற்று.
(௨)

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

இ-ள். நன்றேதரினும்-(தீங்கன்றி)நன்மையேதரினும்—நடுவிகந்த நடுவுநிலைநீங்கலான்—ஆம்-உண்டாகின்ற, ஆக்கத்தை - செல்வத்தை—அன்றே - அப்போதே—ஒழிய - நீங்க—விடல்- விடத்தக்கவன்—எ-று. (கருத்து.) நடுவுநிலைமையில்லாதவருஞ் செல்வநன்மையைத்தரினு மப்பொழுதே விடக்கடவர் - என்பதாம். நன்மைதாராமையால் நன்றே தரினுமென்றார் [இவை யிரண்டுபாட்டானும் முறையே நடுவுநிலைமையால் வந்தசெல்வம - நன்மையைத்தருதலும் - மற்றைச்செல்வம் - தீமையைத் தருதலும் - சொல்லப்பட்டன.
(௩)

தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.

இ-ள். தக்கார் -(இவர்) நடுவுநிலைமையையுடையவர்—தகவிலர்-(இவர்) நடுவுநிலைமையையில்லாதவர்—என்பது - என்னும் விசேஷம்—அவரவர் - அவரவருடைய—எச்சத்தால் - நல்லபுதல்வரது—இருப்பினாலும்-இல்லாமையாலும்—காணப்படும் அறியப்படும்—எ-று. (கருத்து) நடுவுநிலைமையையுடையவர், நடுவுநிலைமையில்லாதவர் என்பதைச் சந்ததியாற்காணலாம் - என்பதாம். நடுவுநிலைமையை யுடையவருக்குச் சந்ததி உண்டாதலும், இல்லாதவர்க்கு அது இல்லாமற்போதலும், நிச்சயமாதலின் அவ்விருவகையோர்களையும் அறிதற்கு அவை அடையாளங்களாயின. [இதனால் நடுவுநிலையோரையும் - அல்லாதோரையும்—அறியுமாறுசொல்லப்பட்டது.
(௪



கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

இ-ள். கேடும்-(தீவினையினாலே) கேடும், பெருக்கமும் - (நல்வினையினாலே) பெருக்கமும், இல்லல்ல - (யாவருக்கும்) - இல்லாதவைய

ஈ, [முன்னமே அமைந்து கிடந்தன வென்றபடி] (அவ்வழியை) அ
ந்து, நெஞ்சத்து - மனதிலே, கோடாமை - (அவைகாரணமாகச்)

சாய்தலில்லாமையே, சான்றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோர்க்கு, அ
ணி - அழகாம்—எ-று. (கருத்து.) பெரியோர்க்கு நடுவுநிலைமையே ய
ழகாம் என்பதாம். ஈ அவைகாரணமாகச் சாய்தலாவது கேடும் பெரு
க்கமும் பழவினையினாலே வந்துகொண்டிருக்க இப்போதை முயற்சியால்
ஆமவையாக நினைத்தும் கேடுவாராமையைக் குறித்தும் பெருக்கம்வருத
லைக் குறித்தும் ஒருபக்கத்திலே சாய்தலாம் அவற்றுக்குக்காரணம் பழவி
னையே இச்சாய்தலல்ல என உண்மையுணர்ந்து நடுவுநிலையாயிருக்கை அ
வுடைமைக்கு அழகுசெய்தலாலே சான்றோர்க் கணியென்றார். (௫)

கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின்.

இ-ள். (ஒருவன்) தன்னெஞ்சம் - தனதுமனம், நடுவு - நடுவுநிலை
மையிலிருந்து, ஒரீஇ - நீங்கி, அல்ல - பட்சபாதங்களை, செயின் - செ
ய்நினைக்குமாயின், (அந்நினைவை) யான் - நான், கெடுவல் - கெடக்கட
வன், என்பது - என்றுணருமுற்பாதமாக, அறிக - அறியக்கடவன் —
எ-று. (கருத்து.) நடுவுநிலைமை நீங்குவானாயின் கெடக்கடவனென்
றறியக்கடவன் - என்பதாம். ஈ உற்பாதம் - பின்வரும் நன்மை தீமைகளை
முன்னறிவிக்கும் குறி. நினைத்தலும் - செய்தலோடொக்குமாதலின்
செயினென்றார். (௬)

கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

இ-ள். உலகம் - உயர்ந்தோர், நடுவாக - நடுவாக (நின்று) நன்றி
ன்கண் - அறத்தின்கண்ணே, தங்கியான் - தங்கினவனது, தாழ்வு - வறு
மையை, கெடுவாக - வறுமையாக, வையாது - வையார் (நினையாரென்
பது) — எ-று. (கருத்து.) நடுவுநிலைமையாகத் தருமத்தினின்றவனுமை
யப் பெரியோர் தாழ்வாக நினையார் - என்பதாம். ஈ கெடுதலென்பது
குறிகெட்டு வந்தது. செல்வமென்று கொள்ளுவாரென்பதாம். [இ
ம் மூன்றுபாட்டாலும் முறையே கேடும் பெருக்கமும் பட்சபாதத்
தால் வருவனவல்ல வென்பதும், இதனாலே கேடுண்டாமென்பதும், இ
தைச்செய்யாதவனது தாழ்வுகேடாகாதென்பதும், சொல்லப்பட்டன.] ()

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

இ-ள். சமன்செய்து - (முன்னேதான் நேர்) சமனாகச்செய்து, சீர்தூக்கும் - (பின்னேதன் னிடத்து வைக்கப்பட்ட பாரத்தை) அளவிடுவதாகிய, கோல்போல் - துலாம்போல், அமைந்து - (இலக்கணங்களாலே) நிறைந்து, ஒருபால் - ஒருபக்கத்திலே, கோடாமை - சாயாமையானது, சான்றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோருக்கு, அணி - அழகாம்—எ-று. (கருத்து.) ஒருவர்பக்கமுஞ் சாயாமையே பெரியோர்க் கழகாம் - என்பதாம். * கோலுக்குச் சொல்லப்பட்ட சமன்செய்தலும் சீர்தூக்கலும் சான்றோருக்கும் சான்றோருக்குச் சொல்லப்பட்ட அமைதலும் ஒருபாற் கோடாமையும் கோலுக்கும் கூட்டுக. சான்றோர் சீர்தூக்கலாவது - வாதி பிரதிவாதிகளாலே அறிவிக்கப்பட்டவற்றை முறைபா லுள்ளபடி யறிதல், ஒருபாற் கோடாமையாவது - அவ்வுள்ளவற்றை மறைக்காமல் பகைவர் - அயலோர் - நட்பினர் - இம்மூவகையோருக்கும், ஒப்பச்சொல்லுதல். (௮)

சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

இ-ள். செப்பம் - நடுவு நிலைமையாவது, சொல் - சொல்லினிடத்தே, கோட்ட மில்லது - கோணுத லில்லாததாகும், (அது அறமாவது) உள் - மனத்தினிடத்தே, கோட்டமின்மை - கோணுதலில்லாமையை, ஒருதலையா உறுதியாக, பெறின் - பெற்றால்—எ-று. (கருத்து.) சொல்லினிடத்தே கோணுத லில்லாமையையே நடுவு நிலைமையாம் - என்பதாம். * [சபையாரைநோக்கி இவை யிரண்டுபட்டாலும் வாயினாலே தருமத்தின்படியே சொல்லினும் மனது ஒருபக்கத்திலே சாய்ந்திருக்குமாயின் அச்சொல் நடுவுநிலைமை யாகாதென்பது சொல்லப்பட்டது.](௯)

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தம்போற் செயின்.

இ-ள். பிறவும் - பிறர்பொருள்களையும், தம்போல் - தம்பொருள்களைப்போல், பேணி - காத்து, செயின் - செய்தால், (அச்செய்கையானது) வாணிகஞ்செய்வார்க்கு - வியாபாரஞ் செய்பவருக்கு, வாணிகம் - நல்லவியாபாரமாம்—எ-று. (கருத்து.) பிறர்பொருளையுந் தமது பொருளைப்போலக் காத்து வியாபாரஞ்செய்வதுதான் நல்ல வியாபாரமாம் - என்பதாம். * பிறவுந் தம்போற்செய்தலாவது கொள்வது அதிகமும், கொடுப்பது குறைவும், ஆகாமல் ஒப்பநாடிச்செய்தல். [வணிகரைநோக்கி இதனால் பிறர்பொருள்களையும் தம்பொருள்களைப்போற்செய்யும் நடுவுநிலைமையை யுடையவர்க்கு வாணிகம் நன்றாமென்பது சொல்லப்பட்டது.]

## ௧௩-ஆம்- அதி- அடக்கமுடைமை.

அஃதாவது - காயமும், வாக்கும், மனமும், தீயவழியிலே செல்லாமல் அடங்குதலுடையனா யிருத்தலாம். இது - பிறர்குற்றம்போலத் தங்குற்றம் காணும் நடுவுநிலைமை யுடையவனுக்கு உரித்தாதலால் நடுவு நிலைமையின் பின்வைக்கப்பட்டது.

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

இ-ள். (ஒருவனை) அடக்கம்-அடக்கமாகிய அறமானது—அமரருள்-தேவருலகத்தில்—உய்க்கும்-கொண்டுபோய்விடும்—அடங்காமை-அடங்காமையாகிய பாவமானது—ஆரிருள்-பொறுத்தற்கரிய நரகத்தில்—உய்த்துவிடும்-செலுத்திவிடும்—எ-று. (கருத்து.) அடக்கமானது ஒருவனைத் தேவருலகத்திற் செலுத்தும் அடங்காமையானது நரகத்திற்செலுத்தும்-என்பதாம். * இருளென்பது நரகவகையிலொன்று. (௧)

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

இ-ள். அடக்கத்தை-அடக்கத்தை, பொருளா-(உறுதிப்)பொருளாக, காக்க-காக்கக்கடவன், உயிர்க்கு-மக்களுயிர்க்கு, அதனினூஉங்கு-அதனின்மேற்பட்ட, ஆக்கம்-செல்வமானது, இல்லை-இல்லை(ஆதலால்)

—எ-று. (கருத்து.)அடக்கத்தைக் காக்கக்கடவன்-மக்களுயிர்க்கதனின் செல்வமில்லை-என்பதாம். * உயிர் இங்கே மனிதருயிரைக் காட்டுகின்றது, அறிந்து அடங்கிப்பயன் கொள்வது அதுவேயாகலின். (௨)

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

இ-ள். அறிவறிந்து (அடங்குதலே நமக்கு) அறிவாவதென்று அறிந்து, ஆற்றின்-நல்வழியால், (ஒருவன்) அடங்கப்பெறின்-அடங்கப்பெறுவனாகில், செறிவு-அவ்வடக்கமானது, அறிந்து-(நல்லோரால்) அறியப்பட்டு, சீர்மை-மேம்பாட்டை—பயக்கும்-(அவனுக்குத்) தரும்—எ-று. (கருத்து.) ஒருவனடங்கி நடப்பானாகில் அவ்வடக்க மேன்மையைத்தரும்-என்பதாம். * இல்வாழ்வானுக்கு அடங்கும்வழியாவது - காயமும்-வாக்கும் - மனமும்-அவன் வசப்படுதல். (௩)

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

இ-ள். நிலையின்-(இல்வாழ்க்கையாகியதன்) வழியில், திரியாது-வேறுபடாது, (நின்று) அடங்கியான்-அடங்கினவனது, தோற்றம்-உயர்ச்சியானது, மலையினும்-மலையுயர்ச்சியினும், மாணப்பெரிது-மிகப்



பெரிதாம்—எ-று. (கருத்து.) அடங்கிநடப்பவனடக்கமலையைப்பார்க்கிலுமிகப்பெரிது-என்பதாம். * வேறுபடாதுநின்று அடங்குதல் - இந்திரியங்களையும், ஐம்புலன்களையும் அநுபவித்துக்கொண்டிருந்தே அடங்குதல். மலை அதனுயர்ச்சியை உணர்த்தலால் ஆகுபெயர். (௪)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

இ-ள். பணிதல் - (பெருமைப்பாடில்லா) தடங்குதல், எல்லார்க்கும்-யாவருக்கும், நன்றாம் - ஒப்ப நன்றாகும்— (ஆயினும்) அவருள்ளும் - அவருள்ளும், செல்வர்க்கே - செல்வர்க்கே, செல்வந்தகைத்து - வேறொரு செல்வமாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம்—எ-று. (கருத்து.) அடக்கம் யாவர்க்கு மல்லதாகும் அதுசெல்வர்க்கு வேறுசெல்வம்போலிருக்கும் - என்பதாம். ஃ பெருமைப்பாட்டையுண்டாக்கும்-கல்வியும் - குடிப்பிறப்பும் - உடையவர்- அதுவில்லாமல் அவைகளாலே அடங்கியவிடத்து- அவ்வடக்கம் சிறந்து தோன்றுதாதலின் செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வந்தகைத் தென்றது - விகாரப்பட்டு நின்றது.[இவையைந்துபாட்டாலும் பொதுவாகையால் அடக்கத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (ரு)

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து.

இ-ள். (ஒருவன்) ஒருமையுள்-ஒருபிறப்பினிகண்ணே, ஆமைபோல்-ஆமையைப்போல், ஐந்து - ஐந்தை, அடக்கலாற்றின் - அடக்கவல்லனாகில், (அவ்வல்லமை அவனுக்கு) எழுமையும் - எழுபிறப்பின் கண்ணும், ஏமாப்புடைத்து - காவலாதலையுடையதாம்—எ-று. (கருத்து:) ஒருவனைம்பொறியடக்க வல்லனாகில் எழுபிறப்பிற்கு முறுதியுடைத்தாம்—என்பதாம். ஃ ஆமை அடக்குமைந்து-கால்கள்நான்கும் - தலையொன்றும், ஆகியவுறுப்புகள் - அவ்வடக்கம் - துன்பஞ்சேராதிருந்தற்கு-ஒருவன் அடக்கவேண்டுமைந்து-மெய்-வாய்-கண்-மூக்குச் செவி யென்னும் பொறிகள். இவ்வடக்கம்- பாவம்சேராதிருத்தற்கு ஒருபிறப்பிலே செய்யப்பட்டவினைப்பயன் - எழுபிறப்புந் தொடருமென்பது - இதனாலறிக. [இதனாலே காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.] (சு)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

இ-ள். யா-(காக்கவேண்டுமவை) யாவையும், காவாராயினும்-காக்கமாட்டாராயினும், நா-நாவொன்றையும், காக்க - காக்கக்கடவர், காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டாராயின், சொல்லிழுக்குப்பட்டு- சொற்குற்றத்திலே அகப்பட்டு, சோகாப்பர்-(தாமே)துன்பப்படுவார்—எ-று.



(கருத்து.) காவொன்றேகாக்கக்கடவர் காவாதவிட்டால் சொற்குற்றம்பெற்றுத் துன்பப்படுவர்- என்பதாம். ஃ யாவென்பது - எவையென்னும்

[illegible]
பொருளைத்தருகிற அஃறிணைப்பன்மை வினாப்பெயர் - சொற்குற்றம் - சொல்லிற்றோன்றுங்குற்றம் - சோகாப்பவென்பது - ஒருசொல், ()

இ-ள். ஒழுக்கம் - ஆசாரமானது, விழுப்பம் - சிறப்பை, தரலான் - (எல்லாருக்கும்) கொடுத்தலால், ஒழுக்கம் - அவ்வாசாரமானது, உயிரினும் - உயிரைப்பார்க்கிலும், ஓம்பப்படும் - காப்பாற்றப்படும் — எ-று. (கருத்து.) ஆசாரமானது சிறப்பைத்தருதலாலவ்வாசாரமுயிரினுமேலானது என்பதாம். உயர்ந்தோர்க்கும், இழிந்தோர்க்கும், சமமாகச் சிறப்பினைத்தருதலால் - விழுப்பந்தரலானெனப் பொதுப்படச்சொல்லினர், கட்டுப்போர் வருவிக்கப்பட்டது. உயிர் - எல்லாப்பொருளினுஞ்சிறந்ததாயினும் - ஒழுக்கம்போற் சிறப்பைத்தாராமையால் உயிரினுமோம்பப்படுமென்றார். (க)

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

இ-ள். ஒழுக்கம் - ஆசாரத்தை, ஓம்பி - ஒன்றாலும் அழிவுபடாமற் பேணி, பரிந்து - வருந்தியும், காக்க - காக்கக்கடவன், தெரிந்து - (பலவறங்களையும்) ஆராய்ந்து (இவற்றுள் இருமைக்குந் துணையாவது எதுவென்று) ஓம்பி - (மனத்தை) அடக்கி — தேரினும் - அறிந்தாலும் — துணை - துணையாய்முடிவது, அஃதே - அவ்வாசாரமே (ஆதலால்) — எ-று. (கருத்து.) ஆசாரத்தைக் காக்கக்கடவன் அவ்வாசாரமே துணை - என்பதாம். பரிந்து மென்னும்மை - விகாரத்தால் தொக்கது. [இவைஇரண்டுபாட்டானும் ஒழுக்கத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (உ)

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

இ-ள். (எல்லார்க்கும்) ஒழுக்கமுடைமை - (தந்தம்வருணத்துக்குரிய) ஆசாரமுடைமையானது, குடிமை - குலமுடைமையாம், இழுக்கம் - (அவ்வாசாரத்தினின்றும்) தவறுதலானது, இழிந்தபிறப்பாய்விடும் - தாழ்ந்தவருணமாய் விடும் — எ-று. (கருத்து.) ஆசாரமேகுலமாம், அவ்வாசாரமில்லாமையே குலவீனமாம் - என்பதாம். ஒழுக்கத்தினின்று தவறுதல் இழிந்தபிறப்பாய்விடுமெனவே ஒழுக்கத்தினுயர்தல் உயர்ந்தபிறப்பாய்விடுமென்பதும் கொள்ளப்படும். குலம் - குடிச்சிறப்பு. (ங)

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

இ-ள். ஓத்து - (கற்ற) வேதத்தை, மறப்பினும் - மறந்தானாயினும், கொளலாகும் - (வருணங்கெடாமையினாலே பின்னும்) ஓதிக்கொள்ளலாம், பார்ப்பான் - பிராமணனது, பிறப்பு - உயர்ந்த வருணமானது, ஒழுக்கங்குன்ற - ஆசாரங்குறைய, கெடும் - அழியும் — எ-று. (கருத்து.) பார்ப்பான் வேதத்தை மறந்தாற் கற்றுக்கொள்ளலாம், ஆசாரங்குறைந்தானாகில் குலங்கெடும் - என்பதாம். * மறந்தவிடத்தே இழிகுலத்தானும், ஓதலால் மறக்கலாகாதென்னும் கருத்தால் மறப்பினு மென்றார். சிறப்புடைய முதல்வருணத்துக்குச் சொல்லுதலினாலே இது மற்றைவருணங்களுக்கும் கொள்ளப்படும். (௪)

அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

இ-ள். அழுக்காறுடையான்கண் - பொறாமையுடையவனிடத்தே, ஆக்கம்போன்று - செல்வமானதுபோல, ஒழுக்கமில்லான்கண் - ஆசாரமில்லாதவனிடத்தே, உயர்வு - உயர்ச்சியானது, இல்லை - இல்லை — எ-று. (கருத்து.) பொறாமையுள்ளவனிடத்துச் செல்வமில்லாமைபோல ஆசாரமில்லாதவனிடத்து மேன்மையில்லை - என்பதாம். * கொடுப்ப தழுக்கறுப்பானென்னும் குறளிற் சொன்னபடியே இவ்வுபமானத்தினால் ஒழுக்கமில்லாதவனது சுற்றத்தாருக்கும் உயர்ச்சியில்லையென்பது கொள்ளப்படும், உயர்வு உயர்குலமாதல். (௫)

ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

இ-ள். உரவோர் - மனவலிமையுடையோர், (செய்தற்கருமைநோக்கி) ஒழுக்கத்தின் - ஆசாரத்தில், ஒல்கார் - சுருங்கார், இழுக்கத்தின் - அதுதவறுதலால், ஏதம் - (இழிகுலமாதலாகிய) குற்றம், படுபாக்கு - உண்டாதலை, அறிந்து - தெரிந்து — எ-று. (கருத்து.) ஆசாரமில்லாமையால் வருங்குற்றத்தையறிந்து பெரியோர் அவ்வாசாரத்திற் குறையார் - என்பதாம். * ஒழுக்கத்தின் சுருக்கம் அதனை உடையார்மேலேற்றப்பட்டது, கொண்டவிரதம் விடாமைபற்றி உரவோரென்றார். (௬)

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

இ-ள். (எல்லாரும்) ஒழுக்கத்தின் - ஆசாரத்தினாலே, மேன்மை - மேம்பாட்டை, எய்துவர் - அடைவர், இழுக்கத்தின் - (அதிலிருந்து) தவறுதலாலே, எய்தாப்பழி - (தாம்) அடைதற்கு உரித்தல்லாதபழியை, எய்துவர் - அடைவர் — எ-று. (கருத்து.) ஆசாரத்தான்மேன்மையடைவர், அவ்வாசாரமில்லாமையால் இழிவடைவர்-என்பதாம். * [illegible] [illegible]கமையால் அடாதபழியைச் சொல்லேயிடத்து ஆக்கினையும் அத்தவறு



பற்றி அடுக்குமென்று உலகம் சொல்லுமாகையின் எய்தாப்பழி எய்துவரென்றார். [இவையிரண்டுபாட்டாலும் ஒழுக்கமுள்ளவிடத்து உண்டாகும் குணமும் இல்லாதவிடத்து உண்டாகும் குற்றமும் சொல்லப்பட்டன.] (௭)

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.

இ-ள். பிறன் - பிறனுக்கு, பொருளால் - உடைமையாந் தன்மை யளை, பெட்டு - இச்சித்து, ஒழுகும் - நடக்கின்ற, பேதைமை - அறியாமையானது, ஞாலத்து - பூமியின்கண், அறம் - அறத்தையும், பொருள் - பொருளையும், கண்டார்கண் - ஆராய்ந்தறிந்தவரிடத்தே, இல் - இல்லை—எ-று. (கருத்து.) பிறன்மனைவியை யிச்சிக்குந்தன்மைபெரியோரிடத்தில்லை - என்பதாம். ★ அறமும்பொருளும் அவற்றினூல்களைக் காட்டால் ஆகுபெயர்கள். இங்ஙப் மொள்ளைறையேனோக்கும் காமநூலுடையார் இப்பொல்லாத வொழுக்கத்தையும் சொல்லுவா ராதலின் அறம் பொருள் கண்டார்க ணில்லென்றார். எனவே இப்பேதைமையுடைய ரிடத்தே அறமும்பொருளும் இல்லையென்பது பெறப்பட்டது. (௧)

அறன்கடை நின்றா ரெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

இ-ள். (காமங்காரணமாக) அறன்கடை - பாவத்திலே, நின்றாரெல்லாம் - நின்றவரெல்லாருள்ளும், பிறன்கடை - பிறனுடைய வாயிலினிடத்தே, நின்றாரின் (அவன்மனையாளை யிச்சித்து) நின்றவர்போல், பேதையார் - மூடர், இல் - இல்லை—எ-று. (கருத்து.) பிறன்மனைவியை யிச்சிக்கும் மூடனைப்போல்பவரில்லை - என்பதாம். ★ பாவச்செயலிலே நின்ற பெண்பழி கடப்பவரும், பரத்தையரையும் இழிகுல மகளிரையும் அநுபவிப்பவரும்போல் அறம் பொருள்களைமாத்திரம் இழத்தல் அல்லாமல் பிறன்மனையாளிடத்துச் செல்வோர் அச்சத்தினாலே இன்பத்தையு மிழப்பாராதலின் பேதையாரில்லென்றார். எனவே யின்பமுமில்லையென்பது பெறப்பட்டது. (௨)

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
தீமை புரிந்தொழுகு வார்.

இ-ள். மன்ற - ஐயமில்லாமல், தெளிந்தார் (தம்மையாதல்லவரென்று) தெளிந்தவருடைய, இல் - மனையாளிடத்தே, தீமை - பாவஞ்செய்தலை, புரிந்து - விரும்பி, ஒழுகுவார் - நடப்பவர், (உயிருடையவரா யிருந்தாலும்) விளிந்தாரின் - செத்தவரின், வேறல்லார் - வேறல்லர்—எ-று.

௭

௯௰ ௧௫ ஆம்-அதி—பிறனில்விழையாமை.

(கருத்து.) ஒருவரிடத்திற்சந்தேகமற்றவருடைய மனைவியைவிரும்பி நடப்பவருயிரோடிருந்தும் இறந்தவரே - என்பதாம். ★ உயிரிருப்பினும் அவ்வுயிர் அறம்பொருளின்பங்களாகிய பயன்களை அடையாமையால் விளிந்தாரின் வேறல்லரென்றும், அவர் அப்பாவஞ்செய்வது மனையாளையுடையவரது தெளிவுபற்றியாதலின் தெளிந்தாரில்லென்றும் சொல்லினார். (௩)

எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

இ-ள். (காமமயக்கத்தினாலே) தினைத்துணையும் - தினையளவும் (சிறிதாயினுமென்றபடி) தேரான் - (தம்பிழையை) நினையாமல், பிறனில் - பிறனுடைய மனையாளிடத்தே, புகல் - செல்லுதல், எனைத்துணையராயினும் - எவ்வளவு பெருமையுடையவராயிருக்கினும், என்னாம் - (அவருக்கு) யாதாய்முடியும் — எ-று. (கருத்து.) மிகச்சிறப்புடையோர் தினையளவு மெண்ணாது பிறன்மனைவியை விரும்பின் அச்சிறப்பழியும் - என்பதாம். * இந்திரன்போல் எல்லாப்பெருமைகளையும் இழந்து சிறுமையை அடைவாரென்பது குறித்து என்னாமென்றார். இழிவுசெய்தலின் எனைத் துணையரென்னும் பன்மைதேரானென்னும் ஒருமையோடு மயக்கிற்று. (௪)

எளிதென இல்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

இ-ள். எளிதென (இவளைச்சேர்தல்) எளிதென்று நினைத்து, (பின் விளைவை நினையாமல்) இல் - (பிறன்) மனைவியிடத்தே, இறப்பான் - செல்லுகிறவன், விளியாது - அழியாமல், எஞ்ஞான்றும் - எக்காலமும், நிற்கும் - நிலைநிற்பதாகிய, பழி - (குடிப்) பழியை, எய்தும், அடைவான் - எ-று. (கருத்து.) பிறன்மனைவி எளியளாயிருந்தாலும் விரும்பலாகாது - என்பதாம். * இல்லிறத்தல் - இல்லாளிடத்து வரம்புகடந்து செல்லுதல். (௫)

பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

இ-ள். இல் (பிறன்) மனைவியினிடத்தே, இறப்பான்கண், செல்லுவோனிடத்து, பகை பாவ மச்சம் பழியென நான்கும் - பகையும், பாவமும், அச்சமும், குடிப்பழியும், என்னுமிந்நான்கு குற்றங்களும், இகவாவாம் - (ஒருபோதும்) நீங்காவாம் — எ-று. (கருத்து.) பிறன் மனைவியைச் சேர்பவனிடத்தில் பகைபாவமச்சம்பழியிந்நான்கு குற்றங்களும் விட்டு நீங்காது - என்பதாம். * எனவே இருமைப்பயன்களையும் இழப்பானென்றதாயிற்று. [இவை ஆறுபாட்டாலும் பிறன்மனையாளை விரும்புவோனிடத்துக் குற்றம்சொல்லப்பட்டது.] (௬)



அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

இ-ள். பிறனியலாள் - பிறனுடைய இயல்பிலே (அவனுக்கு உரிமை பூண்டு நிற்பவளது) பெண்மை - பெண்தன்மையை, நயவாதவன் - விரும்பாதவன், அறனியலான் - அறமாகிய இயல்போடுகூடி, இல்வாழ்வானென்பான் - இல்வாழ்வானென்று சொல்லப்படுவான் — எ-று. (கருத்து.) பிறன்மனைவியைவிரும்பாதவனே இல்வாழ்வானெனப்படுவான் - என்பதாம். * இல்லறம் செய்வானெனப் படுவோன் அவனேயாவன் - என்பதாம். (௭)

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

இ-ள். பிறன்மனை - பிறனது மனைவியை, நோக்காத-உட்கொள்ளாத, பேராண்மை-பெரிய ஆண்தன்மையானது, சான்றோர்க்கு (அறிவா ல்) நிறைந்தோர்க்கு, அறனொன்றோ - தருமமாவ தொன்றோ, ஆன்ற வொழுக்கு-நிறைந்த வொழுக்கமுமாம்—எ-று. (கருத்து.) பிறன்மனைவி யை விரும்பாமையே பெரியோர்க்குத் தருமம் - என்பதாம். ஃ புறப்ப கைகளை அடக்கும் ஆண்மையுடையோர்க்கும் உட்பகையாகிய காமத் தை அடக்குதல் அருமையாதலால் அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண்மையென்றார். செய்தற்கரிய - அறமும் ஒழுக்கமும்-இதனைச் செய்தமையினாலேயே உண்டாகுமென்பதாம். (௮)

நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியாள் தோடோயா தார்.

இ-ள். நாமநீர் - அச்சந்தருங்கடலாற்சூழப்பட்ட, வைப்பில் - பூமி யிலிருந்தே, நலக்கு (எல்லா) நன்மைகளையும் பெறுதற்கு, உரியார்-உ ரியவர், யாரெனின்-யாரென்றால், பிறர்க்கு-பிறனுக்கு, உரியாள் - உரி யவளானவளது, தோள்-தோள்களை, தோயாதார் - சேராதவர்—எ-று. (கருத்து.) பிறன்மனைவியைச்சேராதவர்களே நன்மைக்குரியவர் - என் பதாம். ஃ நலத்துக்கென்பது - நலக்கென விகாரப்பட்டது. இம்மையி லும் நன்மை அடைவாரென்பதாம். (௯)

அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

இ-ள். (ஒருவன்) அறம்-அறத்தை, வரையான் (தனக்குஉரியதாகக்) கொள்ளாதவனாகி, அல்ல-பாவங்களை, செயினும் - செய்வானாயினும் (அ வனுக்கு) பிறன்வரையாள் - பிறனெல்லையிலே நிற்பவளது, பெண்மை - பெண்தன்மையை, நயவாமை-விரும்பாமை (உண்டாயின்) நன்று (அக த்)து—எ-று. (கருத்து.) ஒருவன் அறஞ்செய்யாது பாவமே செய்யினும்



பிறன்மனைவியை விரும்பாமையே நன்மை-என்பதாம். ஃ அக்குற்றங் களினும் இக்குணமே மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். [இவ்வைந் துபாட்டாலும் பிறன்மனையாளை விரும்பாதவனிடத்துக் குணஞ்சொ ல்லப்பட்டது. (௰)

# ௰௬-ஆம்-அதி-பொறையுடைமை.

அஃதாவது - காரணம் பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தம்மிடத்துத் தீங்குசெய்தவிடத்துத் தாமும் அதனை அவனிடத்துச் செய்யாது பொறுத்தலுடையராதல் இது பிறனில்விழையாமைபோல் அவசியம் வேண்டுவதாயிருக்கையால் அதன்பின் வைக்கப்பட்டது.

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.

இ-ள். அகழ்வாரை (தன்னை)வெட்டுவோரை, தாங்கும்-(விழாமற்) சுமப்பதாகிய, நிலம்போல - நிலத்தைப்போல, தம்மை - தம்மை—இ-ழ்வார் - இகழ்பவரை, பொறுத்தல்-பொறுத்தல், தலை- முதலான அறமாம்—எ-று. (கருத்து.) வெட்டுவோரைத் தாங்குநிலம்போல இகழ்வாரைப்பொறுத்தலே தலையாய் அறம்-என்பதாம். * இகழ்தல்தீங்குசெய்தலும் சொல்லலுமாம். (௧)

பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

இ-ள். இறப்பினை (ஒருவன்செய்த) மிகையை, என்றும் - தன்னுலொறுத்தற்குக்கூடிய காலத்திலேயும், பொறுத்தல் - பொறுக்கக்கடவன், மறத்தல்- (அதனைநினையாமல் அப்பொழுதே) மறத்தல் (பெறின்) அதனினும் - அப்பொறுமையினும், நன்று - மிகநல்லது—எ-று. (கருத்து.) பிறர்குற்றத்தைப் பொறுத்தலினும் மறத்தல் நன்மை - என்பதாம். * மிகையான் சொல்லப்பட்ட இரண்டு குற்றங்களும், பொறுக்கும் போதும் அக்குற்றம் உட்கொள்ளப் படுதலால் மறத்தலை அதனினும் நன்றென்றார். (௨)

இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

இ-ள். (ஒருவனுக்கு) இன்மையு ளின்மை,வறுமையுள் - வறுமையாவது, விருந்தொரால்- விருந்தினரை (ஏற்றுக்கொள்ளாமல்) நீக்ுதலாம், (அதுபோல்) வன்மையுள்வன்மை-வல்லமையுள் வல்லமையாவது, மடவார். அறியாமையினாலே தீங்குசெய்தவரை, பொறை பொறுத்

[ ௧௬-ஆம்-அதி—பொறையுடைமை. ௫௩

த்—எ- று. (கருத்து.) ஒருவனுக்கு வல்லமையில்வல்லமை மூடர் செய்தகுற்றத்தைப்பொறுத்தல் - என்பதாம். * உடைமையு ளின்மை யென்றுங்குறளின்படி. எப்படிவிருந்தினரை யுபசரியாமை பொருளுடைமை ஆகாதோ அப்படியே அறிவிலாரைப்பொறுத்தல் இல்லாதவனென்பதுகருத்து [எடுத்துக்காட்டுவமையணி.] (௩)

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

இ-ள். (ஒருவன்) நிறையுடைமை - நிறைவையுடையவனாயிருக்கை, நீங்காமை - தன்னைவிட்டு, நீங்காமையை,வேண்டின் - வேண்டுவானாகில், (அவனால்) பொறையுடைமை - பொறுமை யுடையவனாயிருக்கை, போற்றி. (அழியாமற்)காத்து, ஒழுகப்படும்-நடக்கப்படும்- எ-று. (கருத்து.) நிறைவைவேண்டுவோனுகிற் பொறுமையைக்காக்கக்கடவன் என்பதாம். * பொறுமையில்லார்க்கு நிறையில்லையென்பதாயிற்று [இவைகள் குபாட்டாலும் பொறையுடைமையின் சிறப்புச்சொல்லப்பட்டது.] (௪)

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

இ-ள். (பிறன் தமக்குத்தீங்குசெய்தவிடத்து) ஒறுத்தாரை (பொறாமல் அவனை) வருத்தினவரை, (அறிவுடையோர்) ஒன்றாக - ஒருபொருளாக, வையார்-மனத்துட்கொள்ளார், பொறுத்தாரை (அதனைப்) பொறுத்தவரை, பொன்போல் - பொன்னைப்போல், பொதிந்து-இடைவிடாது, வைப்பார் -மனத்துட்கொள்வார்—எ-று. (கருத்து.) பெரியோர்கள் பொறுமையுள்ளோரைப் பொருளாகநினைப்பர் - என்பதாம். [ஒறுத்தவர் அத்தீங்குசெய்தவர்க்குச் சமானமாதலின் ஒன்றாகவையாரென்றார்]

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

இ-ள். ஒறுத்தார்க்கு (தமக்குத்தீங்குசெய்தவனை) ஒறுத்தவர்க்கு (உண்டாவது) ஒருநாளையின்பம் - அவ்வொரு நாளையின்பமே, பொறுத்தார்க்கு - (அதனைப்) பொறுத்தவர்க்கு, பொன்றுந்துணையும்- (உலக)மழியுமளவும், புகழ்-கீர்த்தி, உண்டாம்-உண்டாகும்—எ-று. (கருத்து.) பிறர்குற்றங்கண்டு தண்டித்தவர்க்கொருநாளையின்பம்; பொறுத்தவர்க்கு உலகமழியுமளவும் புகழ் - என்பதாம். ஒருநாளையின்பம் அந்நாளொன்றிலும் நினைத்ததுமுடித்தோமேயென்று செருக்கியிருக்கும்பொய்யின்பமாம். தனக்கிடமாகிய உலகம் அழியப்புகழும் அழியுமாதலின் ஒப்புடையுலகமென்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. (௬)



திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

இ-ள். திறனல்ல - செய்யத்தகாத கொடியவைகளை, தன் - தன்னிடத்து, பிறர் - அயலார், செய்யினும் - செய்தாலும், நோ - (அவருக்கு அறனல் வருவதாகிய) துன்பத்துக்காக, நொந்து-வருந்தி, அறனல்ல - அறமல்லாத செயல்களை, செய்யாமை - செய்யாதிருத்தல், நன்று (ஒருவனுக்கு) நல்லதாம்—எ-று. (கருத்து.) பிறர் செய்யத்தகாத கொடியவைகளைச் செய்தாலும் தான் வருந்தி அறமல்லாதவைகளைச் செய்யாமை நன்று - என்பதாம். நோ துன்பத்துக்காக வருந்துதலாவது இப்பாவத்தினாலே இவர்க்கு மறுபிறப்பிலே எரிவாய்நரகத்திலே விழ்வாரேயென்று பரிதல்.

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

இ-ள். மிகுதியால் - மனச்செருக்கினாலே, (தம்மிடத்து) மிக்கவை - தீயவைகளை, செய்தாரை-செய்தவரை, தாம் - தாம், தம்தகுதியால் - தமதுபொறுமையினாலே, வென்றுவிடல் - வென்றுவிடக்கடவர்—எ-று. (கருத்து.) மனச்செருக்கால் பிறர் தீமைசெய்தாலுமவர்க்கு நன்மைசெய்து பொறுமையால் வெல்க - என்பதாம். தாமவர் அவரிடத்தே தீயவைகளைச்செய்து தோற்றுப்போகாமல் - பொறுமையால் அவரின்மேற்பட்டு வெல்லுகவென்பதாம். [இவைநான்குபாட்டாலும்பிறர்செய்த குற்றங்களைப்பொறுத்தல் சொல்லப்பட்டது.] (௮)

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்.

இ-ள். இறந்தார் - (நல்வழியைக்) கடந்தவரது, வாய் - வாயினின்றுண்டாகும், இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ்சொற்களை, நோற்கிற்பவர் - பொறுப்பவர் (இல்வாழ்க்கையிலேயிருந்தும்) துறந்தாரின் - துறந்தார் போல், தூய்மை - பரிசுத்தகுணத்தை, உடையர் - உடையவராவர் — எ-று. (கருத்து.) நெறிதவறியொழுகுபவரது கொடுஞ்சொற்களைப்பொறுப்பவர் துறவிகள்போலப் பரிசுத்த குணமுடையவர் - என்பதாம். * தூய்மை - மனவழுக்கில்லாமை; வசவென்பதை அதிகமாகச்சொல்லினர் அதனிழிவுதோன்றுதற்கு. (௯)

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

இ-ள். உண்ணாது - (விரதக்காலத்திலே) உணவைவிட்டு, நோற்பார் - (தம்மை அடைந்தநோவைப்) பொறுப்பவர், பெரியர் - (எல்லாரினும்) பெரியவராவர், (அவர்பெரியவராவது) பிறர் - அயலார், சொல்லும் - (தம்மைச்) சொல்லும், இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ்சொற்



களை, நோற்பாரின் - பொறுப்பவரின், பின் - பின்னுவார் — எ-று. (கருத்து.) பிறர்கொடுஞ்சொற்களைப் பொறுப்பவரைக்காட்டிலும் தவத்தர் பின்னவர் - என்பதாம். * பிறர் இங்கே அறிவில்லாதவர். பொறுக்கக் கூடாமைக்கு ஏதுவாகிய இன்னாச்சொல் பற்றுகின்றோ டிருந்தே பொறுத்தலால் தவஞ்செய்வாரினும் பெரியராகச்சொல்லலாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் பிறர்சொல்லிய குற்றங்களைப் பொறுத்தல் சொல்லப்பட்டது.] (௰)

## ௧௭ - ஆம் - அதி - அழுக்காறாமை.

அஃதாவது — பிறர்செல்வ முதலானவை கண்டவிடத்தும் பொறாமையடையாமை. இப்பொறாமையும் பொறுமைக்கு எதிரியாதலின் இதனைவிலக்குதற்கு இதுபொறையுடைமையின் பின்னே வைக்கப்பட்டது.

ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

இ-ள். ஒருவன் - ஒருவன், தன்னெஞ்சத்து - தனதுமனதின்கண்ணே, அழுக்காறு - பொறாமையாகியகுற்றம், இலாத - இல்லாத, இயல்பு - தன்மையை, ஒழுக்கு - (தனக்குச்சொல்லப்பட்ட) ஒழுக்கத்தினுடைய, ஆறு - வழியாக, கொள்க - கொள்ளக்கடவன் — எ-று. (கருத்து.) ஒருவன் பொறாமையில்லாமையே நல்வழியாகக்கொள்ளக்கடவன் - என்பதாம். * இயல்பு, அறிவோடுகூடியதன்மை. அத்தன்மையும் நன்மையைத்தருதலால். ஒழுக்கம் விழுப்பமென்றுங் குறளிலே சொல்லப்பட்டபடியே ஒழுக்கவழிபோல உயிரினும் சிறந்ததாகக் காப்பாற்றுக்கவென்பதாம். (௧)

இ-ள். வெஃகி-(பிறர்பொருளை) விரும்பிக்கொண்டு, ஆம்-(அதனா) லுண்டாகின்ற, ஆக்கம்-பெருக்கத்தை, வேண்டற்க - வேண்டாதிருக்கக்கடவன், விளைவயின் - (பின்) அநுபவிக்கப்படும்போது, பயன்-(அப்பெருக்கத்தின்) பயன், மாண்டற்கரிதாம் - நன்றாகுதலில்லை (ஆதலால்)—எ-று. (கருத்து.) பிறர்பொருளை யநுபவிக்கும்போது அதுபயன்படாமையா லப்பொருளை விரும்பாதிருக்கக்கடவன்-என்பதாம். விளைவு-முதனிலைத்தொழிற்பெயர். [இவ்வேழுபாட்டாலும் பிறர்பொருளை விரும்புதலின் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௭)

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

இ-ள். செல்வத்திற்கு-(குறைந்துபோந்தன்மையையுடைய) செல்வத்து, அஃகாமை-குறையாதிருத்தற்காரணம், யாதெனின் - எதுவென் (றொருவ) னாயின்(அது) பிறன்-பிறன், வேண்டும்-விரும்புகின்ற கைப்பொருள்- கைப்பொருளை, வெஃகாமை- தான்வேண்டாமையாம்—எ-று. (கருத்து.) குறையாத செல்வத்திற்குக் காரணமியாதென்றால் பிறன்பொருளை விரும்பாமையாம்-என்பதாம். அஃகாமை அதன்காரணத்தை உணர்த்தலால் ஆகுபெயர். பிறன்பொருளை விரும்பாதவனது செல்வம் குறையாதென்பதாயிற்று. (௮)

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

இ-ள். அறனறிந்து - (இது) அறமென்றறிந்து, வெஃகா- (பிறர்பொருளை) விரும்பாத, அறிவுடையார்- அறிவுடையாரை, திரு-திருவானவள், திறனறிந்து-(தான்சேர்தற்கான) திறத்தையறிந்து, ஆங்கே- அத்தறத்தினால், சேரும்-சேருவாள்—எ-று. (கருத்து.) பிறன்பொருளை விரும்பாத அறிவுடையவனை இலக்குமி சேருவாள்-என்பதாம். அடைந்

தாக்திறம்-காலமும், இடமும், செவ்வியும், முதலாயின [இவையிரண்டு பாட்டாலும் பிறர்பொருளை விரும்பாமையின் குணஞ்சொல்லப்பட்டது.]



இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

இ-ள். புறங்கூறுவோர் அதுசெய்தற்கு - ஏதிலார்குற்றம்போல், அயலாரது குற்றத்தைக் காண்பதுபோல, தங்குற்றம் - அப்புறங்கூறுதலாகிய தமது குற்றத்தையும், காண்கிற்பின் - காணமாட்டுவாராயின், மன்னுமுயிர்க்கு - அவரது வினைபெற்ற உயிர்க்கு, தீது - (வருவது) ஒரு துன்பமும், உண்டோ - உண்டாகுமோ—எ-று. (கருத்து.) அயலார் குற்றத்தைப்போலத் தங்குற்றத்தை யாராய்வாராகிற் குற்றமில்லை - என்பதாம். * தமது நிலையாயிருந்து - ஒப்பக்காணுதலருமையாகலின் காண்கிற்பினென்றும் கண்டவிடத்தே புறங்கூறாமையால் வரும்பிறவிகளினும், துன்பப்படுமென்பதைக்குறித்து உயிர்க்குந் தீதுண்டோவென்றும், சொல்லினர். [இதனால் புறங்கூறுதலை விடுதற்கு உபாயம் சொல்லப்பட்டது.] (௰)

## ௨௰-ஆம் அதி - பயனிலசொல்லாமை.

அஃதாவது, தமக்கும் பிறர்க்கும் அறம்பொரு ளின்பங்களுள் ஒன்றையுந்தராதசொற்களைச்சொல்லாமையாம். பொய்குறளை-கடுஞ்சொல் - பயனில்சொல் - எனவாக்கினிடத்தே உண்டாம் பாவம் நான்கினுள்-பொய்-துறந்தோர்க்கு அல்லதுபற்றறவிடக்கூடாமையால் அதனை ஒழித்துஇல்வாழ்வாரால் விடக்கூடுமவையாகியமற்றை மூன்றினுள் கடுஞ்சொல் - இனியவைகூறலானும்,குறளை புறங்கூறாமையானும் விலக்கின்றமையின் பயனில்சொல்லை இதனால் விலக்குகின்றாராகலால் இது புறங்கூறாமையின் பின்வைக்கப்பட்டது.

பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்.



இ-ள். பல்லார் - அறிவுடையோர்பலரும், முனிய-(கேட்டு) வெறுக்க, பயனில - பயனில்லாதசொற்களை, சொல்லுவான் - சொல்பவன், எல்லாரும் - எல்லாராலும், எள்ளப்படும் - இகழப்படுவான்—எ-று. (கருத்து.) பயனில்லாச் சொற்களைச் சொல்பவன் யாவராலு மிகழப்படுவான் - என்பதாம். * அறிவுடையோர் பலரும்வெறுக்கவே மற்றோரும் இகழ்வாராகலால் எல்லாரு மெள்ளப்படுமென்றார். (௧)

பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

இ-ள். பல்லார்முன் - (அறிவுடையோர்) பலர்முன்னே, பயனில - பயனில்லாதசொற்களை, சொல்லல் - (ஒருவன்) சொல்லுதலானது, நட்டார்கண் - (தன்) நட்பாளரிடத்தே, நயனில - விருப்பமில்லாத செயல்களை, செய்தலின் - செய்தலினும், தீது - குற்றமாம்—எ-று. (கருத்து.) பயனிலாச் சொற்களைச் சொல்லுதல் பொதுவிடத்து நீதியில்லாதவைகளைச் செய்தலினுங் குற்றம் - என்பதாம். * விருப்பமில்லாத செயல்கள் பொறுக்கப்படுசெயலாம், இச்சொல் அச்செயலைக் காட்டிலும் மிகவும் இகழ்ப்படுதலை உண்டாக்குமென்பதாம். (௨)

நயனில னென்பது சொல்லும் பயனில

இ-ள். செறுவார்க்கும்- (தம்மை) வருத்துவோரிடத்தும், தீய வினைகளை- செய்யாவிடல் - செய்யாமல்விடுதலை, அறிவினுளெல்லாம் (தமக்குஉறுதிநாடும்) அறிவுகளெல்லாவற்றிலும், தலை - முதன்மையானதாகும், என்ப. (என்றுநல்லோர்) சொல்லுவார்—எ - று. (கருத்து.) தம்மைவருத்துவோரிடத்துந் துன்பங்களைச் செய்யாமல் விடுதல் எல்லாவறிவினுள்ளும் தலைமை-என்பதாம். ஈ விடுதற்குக் காரணமாகிய நிலைவ்விடவென்றும் செய்யத்தக்கவிடத்தும் செய்யாதிருத்தல் தமக்குத் துன்பம்வாராதென்று ஆலோசித்தறிதலால் அதனை அறிவினுளெல்லாந் தலையென்றும் சொல்லினர். [இவை மூன்றுபாட்டாலும், தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (௩)

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

இ-ள். (ஒருவன்) பிறன்-பிறனுக்கு, கேடு-கேட்டைத்தரும் வினையை, மறந்தும்-மறவியைப்பொருந்தியும், சூழற்க-எண்ணாதிருக்கக்கடவன், சூழின்-எண்ணுவானாயின், சூழ்ந்தவன்-அவ்வெண்ணினவனுக்கு கேடு-கேட்டைத்தரும்வினையை, அறம்-அறக்கடவுள், சூழும் - எண்ணுவாள்—எ-று. (கருத்து.) ஒருவன்மறந்தும் பிறனுக்குக்கேட்டை நினையாதிருக்கக்கடவன் நினைப்பானாகில் அவனுக்குத் தருமக்கடவுள்கேட்டை நினைக்கும்-என்பதாம். ஈ கேடிரண்டும் அவற்றைத் தருமவினைகளை உணர்த்தலால் ஆகுபெயர்கள். எண்ணுமிறபொழுதே தானுங்கடவோமென்னுதலால் இவன் பிற்பாட்டாலும், அறக்கடவுள் முற்படுவளென்பதுகொள்ளப்பட்டது. [அறக்கடவுளெண்ணுதலாவது- அவனிடத் தான்நீக்க நினைத்தல், தீவினையையெண்ணுதலு முதாதென்பதாம்



இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகு மற்றும்பெயர்த்து.

இ-ள். இலனென்று-வறுமையையுடையேனென்று நினைத்து, (அதுதீர்தற்பொருட்டு) தீயவை - தீவினைகளை, செய்யற்க - (ஒருவன்பிறர்க்குச்) செய்யாதிருக்கக்கடவன், செய்யின் - செய்தால், பெயர்த்து-பின்னர், இலனாகும்-வறுமையையுடையனாவான்—எ-று. (கருத்து.) வறுமையால் தீமைசெய்யாதிருக்கக்கடவன் செய்வானாகில் வறுமையுடையவனாவான் - என்பதாம். ஈ மற்றும்-அசைநிலை. அத்தீவினையினாலே பிறவிதோறும் வறியவனாவனென்பதாம். (௫)

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்.

இ-ள். நோய்ப்பால - துன்பஞ்செய்யுங் கூறுடைப்பாவங்கள், தன்னை - தன்னை, அடல்வேண்டாதான் (பின்வந்து)-வருத்துதலைவேண்டாதவன், தீப்பால்-தீமைக்கூறுடைய வினைகளை, தான்-தான், பிறர்கண்-பிறரிடத்தே, செய்யற்க -செய்யாதிருக்கக்கடவன்—எ-று. (கருத்து.) பாவங்கள்பின்பு தன்னைவருத்துதலை யிச்சியாதவன் பாவங்களைப்பிறரிடத்துச்செய்யாதிருக்கக்கடவன் - என்பதாம். ஈ செய்வானாயின் அப்பாவங்கள் அவனைவருத்துவதற்கு ஐயமில்லையென்பதாம். (௬)

எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

இ-ள். எனைப்பகையுற்றாரும் - எவ்வளவு பெரியபகையை யுடையவரும், உய்வர்-(அதனை; ஒருவழியினாலே) தப்புவார், (அப்படியல்லாமல்) வினைப்பகை - தீவினையாகியபகையானது, வீயாது - நீங்காமல்பி

ன்சென்று-போனவிடத்துக்குப்போய், அடும்-கொல்லும்—எ-து. (கருத்து.) எவ்வகைப்பகையை யடைந்தவர்களும் கடைத்தேறுவார். தீவினைப்பகையானது பின்பேதொடர்ந்துகொல்லும்-என்பதாம். (எ)

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று.

இ-ள். தீயவை-தீவினைகளை, செய்தார்-(பிறருக்குச்)செய்தவர்,கெடுதல்-தாம்கெடுதல், (எத்தன்மைத்தென்றால்) நிழல்-(ஒருவனது) நிழலானது (நெடுந்தூரம்போயினும்) தன்னை - அவனை, வீயாது-விடாது வந்து, அடி-அடியினிடத்தே, உறைந்தற்று-தங்கியதன்மைத்து-எ-து. (கருத்து) தன்னிழலானது நெடுந்தூரஞ் சென்றுந்தன்னடியிலேதங்கியதுபோலத்தீவினைகளுந் தன்னேடுதங்கும்-என்பதாம். * மூன்பாட்டில்வினைப்பகைவீயாது பின்சென்றடுமென்று சொல்லப்பட்டதை இங்கே உபமானத்தினால் விளக்கினார். (அ)



தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

இ-ள். (ஒருவன்) தன்னை-தன்னை, தான்-தான், காதலனாயின்-விரும்புதலுடையவனாயிருந்தால், தீவினைப்பால் - தீவினையாகியபிரிவின், எனைத்தொன்றும் - எவ்வளவு சிறியதொன்றையாயினும், துன்னற்க - (பிறரிடத்தே) செய்யாதிருக்கக்கடவன்—எ-து. (கருத்து.) தன்னைக்காக்கவிரும்பினால் பிறனிடத்திலெவ்வளவும் பாபஞ்செய்யாதிருக்கக்கடவன்-என்பதாம். * நல்வினை தீவினை என வினைப்பிரிவு இரண்டாகலின் தீவினைப்பாலென்றார். பிறரிடத்தேசெய்த தீவினைதன்னிடத்தேதுன்பந்தருதலை விளக்கினாராதலால்-தன்னைத்தான் காதலனாயினென்றார். [இவைமூன்றுபாட்டாலும் பிறருக்குத் தீவினைசெய்தால்தாம்கெடுமென்பது சொல்லப்பட்டது.] (௯)

அருங்கேடன் என்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

இ-ள். ஒருவன் (செல்லவேண்டியவழியைவிட்டு) மருங்கோடி - கோணவழியிலேசென்று, தீவினை-தீவினைகளை, செய்யானெனின் - (பிறரிடத்தே) செய்யானாயின், அருங்கேடனென்பது - (அவன்) இல்லாதகேட்டையுடையவனென்பதை, அறிக - அறியக்கடவர்—எ-து. (கருத்து.) ஒருவன்பாவஞ்செய்யாதிருப்பானாயிற் கேடில்லாதவனென்றறியக்கடவன்-என்பதாம். * [இதனாலே தீவினைசெய்யாதவன் கேடில்லாதவனென்பது சொல்லப்பட்டது.] (௰)

## உஉ-ஆம்-அதி-ஒப்புரவறிதல்.

அஃதாவது, உலகநடையை அறிந்துசெய்தல் மனைவாழ்க்கைக் காயங்களா
லே செய்யத்தக்கதல்ல சொல்கின்றார், இவிச்செய்யத்தகுவனவைகளில்
முன்சொல்லப்பட்டவற்றுள் அடங்காதனைகளைச் சொல்லுகின்றமை
யைகயால் இது ஈகையினையச்சத்தின்பின் வைக்கப்பட்டது.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

இ-ள். உலகு - உயிர்களானவை, மாரிமாட்டு-(தமக்குநீருதவுகிற)
மேகங்களிடத்து, என் - என்னபிரதியுபகாரத்தை, ஆற்றும் - செய்தவ
ருகின்றன - [ஒன்றுஞ்செய்கின்றனவில்லையென்றபடி] (ஆதலால்)கடப்
பாடு (அம்மேகங்கள் போல்வார்செய்யும்) உபகாரங்களும், கைம்மாறு



பிரதி யுபகாரங்களை, வேண்டா - வேண்டுவனவல்ல—எ-று. (கருத்து.)
மேகங்களுக் கொப்பானவர்செய்யு முபகாரங்கள் பிரதி யுபகாரங்களை
வேண்டுவனவல்ல-என்பதாம். ஏ கொல்-ஓ - அசைகள் கடப்பாடென்
னும்·பெயரினாலேயே அவசியஞ்செய்ய வேண்டுவதென்பது பெறப்பட்
டது. உபகாரஞ்செய்வாரது வேண்டாமையை உபகாரத்தின்மேல் ஏற்
றினார். (க)

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

இ-ள். தக்கார்க்கு - தகுதியுடையவர்க்காயின், தாளாற்றி-முயற்
சிசெய்து, தந்த - சம்பாதிக்கப்பட்ட, பொருளெல்லாம் - பொருளனை
த்தும், வேளாண்மை - உபகாரத்தை, செய்தற்பொருட்டு - செய்தற்ப
யனுடையனவாம்—எ-று. (கருத்து.) முயற்சிசெய்து சம்பாதித்தபொ
ருளெல்லாம் முபகாரஞ் செய்யும்பொருட்டு - என்பதாம். ஏ தகுதியில்
லாத பிறருக்குப்போல் தாம் அநுபவித்தற் பொருட்டும், வைத்திழ
த்தற்பொருட்டும் அல்லவென்பதாயிற்று. (உ)

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

இ-ள். புத்தே ளுலகத்தும் - தேவருலகத்திலும், ஈண்டும்-இவ்வு
லகத்திலும், ஒப்புரவின் - உபகாரம்போல், நல்ல-நல்லவையாகிய, பி
ற - வேறுசெயல்களை, பெறல்- பெறுதல், அரிது - அரிதாம்—எ-று.
(கருத்து.) விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும் உபகாரத்தைப்போல
வேறொன்றில்லை-என்பதாம். * கொடுப்பாரும், கொள்வாரும், இல்லா
மல் எல்லாரும், ஒருதன்மையராயிருக்கையால் தேவருலகத்தில் அரி
தாயிற்று யாவருக்கும் ஒப்பதிதுபோல் வேறொன்று இல்லாமையால்
இவ்வுலகத்தில் அரிதாயிற்று. [இவை மூன்றுபாட்டாலும் ஒப்புரவின
து சிறப்புச்சொல்லப்பட்டது.] (௩)

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

இ-ள். ஒத்ததறிவான் - உலகநடையை அறிந்துசெய்பவன், உயிர்
வாழ்வான் - உயிரோடுகூடிவாழ்பவனாவான், மற்றையான்-அதனை அறி
ந்துசெய்யாதவன் (உயிருடையவனாயிருந்தாலும்) செத்தாருள் - இறந்த

...ச்ளுன், வைக்கப்படும் - (ஒருவனாக) வைக்கப்படுவான். (நினைக்கப்படுவா னென்றபடி.)—எ-று. (கருத்து.) உலகவியல்பையறிந்து நடப்பவனேயே வாழ்பவன் அவ்வியல்பையறியாதவன் செத்தவன்- என்றவா. உயிருக்குரிய அறிவும், செயலும், அவனிடத்தே காணப்படாமையால் - செத்தாருள் வைக்கப்படுமென்றார். [இதனால் உலகநடை



யிலே தவறுதல் வேதநடையிலே தவறுதல்போல் இழிவுடைய உடையதல்லவென்பது சொல்லப்பட்டது. (௪)

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு. ௫

இ-ள். உலகு-உலகாரடையை, அவாம் - விரும்பிச்செய்யும், பேரறிவாளன் - பெரியவறிவினையுடையவனுடைய, திரு - செல்வந்நேலே (நிறைதல்) ஊருணி - ஊரிலுள்ளார் (நீருண்ணுங்குளமதனிலே) நீர்நிறைந்தற்று நீர்நிறைந்தாற்போலும்—எ-று. (கருத்து.) அறிவாளர் செல்வமானது ஊராருண்ணும் குளத்திலே நீர் நிறைந்தாற்போலும்-என்பதாம். ஈ அச்செல்வம் பாழ்படாமல் எக்காலம் எல்லார்க்கும் வேண்டுமளவில் உதவுமென்பதாம். (௫)

பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்.

இ-ள். செல்வம் - செல்வமானது, நயனுடையான்கண் - உபகாரஞ்செய்பவனிடத்தே, படின் - உண்டானுமானால் (அவ்வுண்டாதல்) உள்ளூர் - ஊர்நடுவே, மரம்-மரத்தினிடத்தே, பயன் - பழமானது, பழுத்தற்று - பழுத்தாற்போலும்—எ-று. (கருத்து.) செல்வம் உபகாரஞ்செய்பவனிடத்திலுண்டானால் நடுவூரிலே மரம்பழுத்தாற்போலும்- என்பதாம். ஈ ஆல்- அசைகள், உலகத்தி பலவகையிலும் ஒப்புரவு சிறந்ததால் அதனையயனென்றார் அவன் அம்மரம்போல் எல்லார்க்கும் எளிதிலே பயன்கொடுப்பா னென்பதாம். (௬)

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

இ-ள். செல்வம் - செல்வமானது, பெருந்தகையான்கண் - (உப காரஞ்செய்யும் பெரியதகைமை) யுடையானிடத்தே, படின் - உண்டா குமானல், (அச்செல்வமானது) மருந்தாகி - எல்லாவுறுப்புக்களும் (பி ணிகளுக்கு) மருந்தாய், தப்பா-தப்பாத, மரத்தற்று-மரத்தை யொக்கும் —எ-று. (கருத்து.) பெரியோரிடத் துண்டாகிய செல்வம் அது மரு தாகி மரத்துக்கொப்பாகும்-என்பதாம். * ஆல்- அசை - எல்லாவுறுப் மென்றது மரத்துக்கு-இலை,பூ, காய்,கனி, முதலானவைகளை செல்வத் க்கு அநுபவித்தற்குரிய பலபொருள்களை தப்பாமையாவது - கொய் தற்கரிய விடங்களிலே நின்றுவாது, மறைந்துநின்றுவாது காலத்தால்வி றுபட்டாவது பயன்படாமை தன்றுறைவை நோக்காமல் எல்லாவரு தமும் தீர்க்குமென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் உபகாரஞ்செ (ய் யப்பவனது பொருள்பயன்படுமாது சொல்லப்பட்டது.]

## உ௨-ஆம்-அதி—ஒப்புரவறிதல். ரீஞ

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

இ-ள். கடனறி - (தாம்) செய்யத்தருமவைகளை அறிந்த, காட்சிய - இயற்கையறிவையுடையவர், இடனில்பருவத்தும் - செல்வஞ்சு ருங்கியகாலத்திலும், ஒப்புரவிற்கு - உபகாரஞ்செய்தற்கு, ஒல்கார்- தள ரார்—எ-று. (கருத்து.) அறிவுடையோர் வறுமையிலு முதவிசெய்தற் குக் குறைவுபடார் - என்பதாம் * மற்றவைகளையெல்லாம் விட்டாலும் இத்தனைவிடாரென்பதாம். (அ)

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

இ-ள். நயனுடையான் - உபகாரஞ்செய்தலையுடையவன், நல்கூர் ந்தானாதல் - வறுமைபட்டவனாகுதலாவது, செய்யும் - (ஒழியாமற்) செ ய்யும், நீர - குணத்தையுடைய அவ்வுபகாரங்களை, செய்யாது - செ ய்யப்பெறாமல், அமைகலாவாறு-வருந்துகின்றவியல்பாம்—எ-று. (கரு த்து) உபகாரி வறியவனாகுதல் செய்யு முதவிசெய்யாமையாலேதான்- என்பதாம். * தான் அநுபவிக்கப்படும்பொருள்களைப் பெறாமை அவ னுக்கு வறுமைஅல்லவென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் வறு மையால் ஒப்புரவுசெய்யாது விடத்தக்கதல்லவென்பது சொல்லப்ப ட்டது.] (கூ)

ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

இ-ள். ஒப்புரவினால்- உபகாரஞ்செய்தலினாலே, வருங்கேடெனி ன் - (ஒருவனுக்குப்பொருட்) கேடுவருமென்பவருண்டாயின், அஃது- அக்கேடானது, ஒருவன் - ஒருவன், விற்று(தன்னை) விற்றாயினும், கோ ட்கத்தகுடைத்து - வாங்குந்தகுதியையுடையதாகும்—எ-று. (கருத் து.) உதவிசெய்தலாற் கேடுவருமெனிலவ்வுதவியைத் தன்னைவிற்றாயி னுஞ்செய்யக்கடவன் - என்பதாம். * தன்னைவிற்றுவாங்கப் படுவதொ த்தபொருள் - இல்லையாயினும் இக்கேடு புகழைஉண்டாக்கலால் அதுவு ம் செய்யப்படுமென்றது. [இதனாலே ஒப்புரவினாலே கேடுவது கேட ல்லவென்பது சொல்லப்பட்டது.] (ω)

## உ௩-ஆம்-அதி-ஈகை.

ழ்ந்தாவது, வறியவராய் இறந்தவர்க்கு இல்லையென்னுமல்கொடுத்தல். இது மறுமையைக்குறித்ததாகலின் இம்மையைக்குறித்த ஒப்புரவறிதலின் பின்வைக்கப்பட்டது.



## உ௩-ஆம் அதி—ஈகை.

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

இ-ள். வறியார்க்கு - ஒருபொருளுமில்லாதவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டிய) தொன்றை, ஈவதே - கொடுத்தலே, ஈகை - (பிறர்க்குக்) கொடுத்தலாகும் - மற்றெல்லாம் - (அதுவல்லாதன) எல்லாக்கொடையும், குறியெதிர்ப்பை - குறிக்கப்பட்டபின்வரும்பயனுடைய, நீரது - குணத்தையுடைத்து-உடையதாகும்—எ-று. (கருத்து.) வறியவருக்குக் கொடுத்தலேகொடையாகும், மற்றவர்களுக்குக் கொடுத்தல் வாங்கிக்கொள்ளும் பயனுகும் - என்பதாம். அது நீக்கலாகிய கொடை - வறியவரல்லாதவர்க்குஒருபயனை நோக்கிக்கொடுத்தல், நீரது என்பதில் அதுபகுதிப்பொருள் விகுதி. பின்னும் தம்மிடத்தே வருதல் குறியெதிர்ப்பைநீர துடைத்தென்றார். [இதனால் ஈகையினது இலக்கணம் அறிவிக்கப்பட்டது.]

நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

இ-ள். கொளல் - இரத்தல், நல்லாறெனினும் - (மேலுலகத்துக்கு) நல்வழியென்பவர் உண்டாயினும் (அது) தீது-குற்றமாம் (கொடுத்தவர்க்கு) மேலுலகம் - அந்தமேலுலகத்தையடைதல், இல்லெனினும் - இல்லையென்பவர் உண்டாயினும், ஈதலே-கொடுத்தலே, நன்று - நன்றாம்—எ-று. (கருத்து.) யாசித்தல் நல்வழி யென்றாலும் வாங்குதல் குற்றமே. கொடுத்தலாலே முத்தியில்லையென்றாலும் கொடுத்தல் நல்லது - என்பதாம். எனினுமென்பன - இரண்டும் அப்படிசொல்வாரில்லாமையைக் காட்டிநின்றது, ஏகாரத்தால் பிறவறங்களில் ஈகை சிறந்ததென்பது பெறப்பட்டதுமல்லது சொல்லவந்தவர் இயதும் என்சொல்லினுர்.

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

இ-ள். இலனென்னும் - வறியேனென்று (இரப்பவன்) சொல்லும், எவ்வம் - இழிவை, உரையாமை - (பிறரிடத்தே) சொல்லாமையும் (தன்னைத்தன்னிடத்தே சொன்னவர்க்கு) ஈதல் - (இல்லையென்னாமற்) கொடுத்தலும் (ஆகியவிரண்டும்) குலனுடையான்கண்ணே - நல்லகுடியிற் பிறந்தவனிடத்தே, உள - உண்டாயிருக்கும்—எ-று. (கருத்து. நற்குடியிற் பிறந்தவனிடத்தில் இல்லையென்னாமையுங்கொடுத்தலுமுண்டு - என்பதாம், நூன்பாட்டிலே விலக்கப்பட்டதைச் செய்யாமைக்கும், விதிக்கப்பட்டதைச் செய்தற்கும் உரியவனை அறிவித்தபடி.

இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

யிர்க்கு-(மக்க) ளுயிர்க்கு, ஊதியம்-வேறுபயன், இல்லை-இல்லை,(ஆதலா ல்)—எ-று. (கருத்து.) கொடுக்கலாற் கீர்த்தியுண்டாகலாமக்கடவர்,அ

க்கீர்த்தியேயல்லாமல் மக்களுயிர்க்கு இலாபமில்லை - என்பதாம். ● இ சைபடவாழுதற்குக்கல்வி ஆண்மைமுதலாகியவேறுகாரணங்களும் இ ருக்கினும் ஈகை சிறந்ததாதலால் எடுத்துச்சொல்லப்பட்டது. (க)

உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்.

இ-ள். உரைப்பார் - (உலகத்திலேஒன்றை.) உரைப்பவரால், உரை ப்பவையெல்லாம் - உரைக்கப்படுமவைகளெல்லாம், இரப்பார்க்கு-(வறு மையால்) இரப்பவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டிய) தொன்றை, ஈவார் மேல் - கொடுப்பவரிடத்தே, நிற்கும்-நிற்கும், புகழ்-கீர்த்திகளாம்-எ-று. (கருத்து.) கொடுப்பவரிடத்தே கீர்த்திநிற்கும் -என்பதாம். ●புகழ்தான் உரையும், பாட்டும், என இருவகைப்படும் அவற்றுள் - உரைப்பாருரை ப்பவையென எல்லார்க்கும் உரியவழக்கத்தையே எடுத்தாராகினும் இ னம்பற்றிப் புலவர்க்கே உரியபாட்டும் கொள்ளப்படும்படவே - பாடு வார்பாடுவவெல்லாமிரப்பார்க்கொன் றீவார்மேனிற்கும்புகழ் என்பது ம்பெற்றும் புகழின் காரணங்களில் ஈதல்சிறந்தமை இதனுள் ஒருங்காண்க.(உ)

ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்ப தொன்றில்.

இ-ள். ஒன்றா - தனக்குஇணையில்லையாக, உயர்ந்த-ஓங்கிய,புகழல் லால் - கீர்த்தியல்லாமல், உலகத்து-உலகத்திலே, பொன்றாது - அழியா மல், நிற்பது-நிலைபெறுவது, ஒன்று-வேறொன்று, இல்-இல்லை—எ-று. (கருத்து.)உலகத்திற்புகழையல்லாது நிற்பதொன்றில்லை-என்பதாம். ● தனக்குஇணையில்லையாக ஓங்குதலாவது கொடுத்தற்கரிய உயிரையு ம், உறுப்பையும் பொருளையும், கொடுத்தமைபற்றி வருதலால் தன் னோடு ஒப்பது இல்லாமல்தானே உயர்தல். அப்படிப்பட்டபுகழையே

௭அ உ௪-ஆம்-அதி—புகழ்.

மனிதனாய்ப்பிறந்தவன் சம்பாதிக்கவேண்டுமென்பதாம். [இவைமூன்று பாட்டாலும் புகழது சிறப்புச்சொல்லப்பட்டது. (௩)

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

இ-ள். (ஒருவன்) நிலவரை-பூமியினெல்லையில், நீள்புகழ் - அழியா து நிற்கும்புகழை, ஆற்றின் - செய்வானாயின், புத்தேளுலகு - தெய்வ லோகமானது, (அவனையல்லாமல்) புலவரை - தன்னையடைந்திருந்தி ற)ஞானிகளை, போற்றாது-பேணாது—எ-று.(கருத்து.)உலகிலழியாது நிற்குமபுகழை யொருவன் செய்வானாகில் தேவலோகம் தேவர்களைத்து தியாது-என்பதாம். ● இவன்போல் அவர் புகழ்வடிவால் இவ்வுலகத் தையும், தேவவடிவால் அவ்வுலகத்தையும், ஒருசேர அடையாமை யால் புலவரைப்போற்றாது புத்தேளுலகென்றார். (௪)

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

இ-ள். வித்தகர்க்கல்லால் - திரமையையுடையவர்க்கு அல்லாமல், மற்றவர்க்கு - நத்த மாகும் (புகழுடம்பிற்கு) பெருக்கமாகும், கேடும் - (வறுமையும், அரிது - இல்லை, உளதாகும் - (அப்புகழுடம்பு) நிலைபெறுவதாகும், சாக்காடும்-மரணமும், அரிது-இல்லை—எ-று. (கருத்து.) அறிவிலவர்க்குப்புகழுடம்பிற்குப் பெருக்கமாகும் வறுமையும் அவ்வுடம்பு நிலைபெறுவதாகு மரணமுமில்லை - என்பதாம். ௪ நந்துஎன்னு முதனிலைதொழிற் பெயர் நத்தெனவிகாரப்பட்டு அம்மிகுதிபெறுவந்தது போல் உளதாகை-ஆகும் -அரிது-இவற்றை மூன்றுங்கூட்டப்பட்டன, பெருக்கமாகுங்கேடாவது - புகழுடம்புசெல்வதை அடைதற்கும் தடைப்படு வறுமைப்பாடல். நிலைபெறுவதாகு மரணமாவது, புகழுடம்பு நிலைபெறுதற்கும் ஊதவுடம்பு இறந்தல்நிலையில்லாதவுடம்பை யாருத்தியுமவிட்டுப் நிலையான புகழை வளர்த்ததுமா கியுத்தலும் பிறர்க்குமுடியாமையால் வித்தகர்க்கல்லாவிதென்றார். [இவைஇரண்டுபாட்டானும் புகழுடையாரது மேன்மைசொல்லப்பட்டது] (௫)

தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
றோன்றலிற் றோன்றாமை நன்று.

இ-ள். தோன்றின் - (மனிதராய்ப்) பிறந்தால், புகழொடு -புகழுக்கு ஏதுவாகியகுணத்தோடு, தோன்றுக - பிறக்கக்கடவர், அஃதிலார் - அக்குணமில்லாதவர், தோன்றலின் - (மனிதராய்) பிறத்தலினும், தோன்றாமை - பிறவாமையானது, (விலங்குகளாய்ப்பிறந்தவென்றபடி) நன்றானல்லது—எ-று. (கருத்து.) பிறந்தாற்புகழோடு பிறக்கக்கடவர் அவ்வாறில்லாதவர்கள் பிறவாமையேயல்லது -என்பதாம். ௪ புகழுக்கு



ஏதுவைப்புகழென்றலால் ஆகுபெயர் இல்லையென்றதனால் மனிதராயென்பதும், மனிதராய்ப்பிறவாமையென்ற அருத்தாபத்தியினாலே விலங்காய்ப்பிறந்த லென்பதும், கொள்ளப்பட்டன இகழ்வாரில்லாமையாக்கன்றென்றார். (௬)

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

இ-ள். புகழ்பட - (தமக்குப்) புகழுண்டாக, வாழாதார்-வாழமாட்டாதவர், (அதுமாற்றிப் பிறரிகழ்ந்தவிடத்தே) தந்நோவார் - (இவ்விகழ்ச்சிமொழமாட்டாமையால்வந்ததென்று) தம்மைநோவாதவராகி, தம்மை-தம்மை, இகழ்வாரை - சிந்திப்பவரை, நோவது - நொந்துகொள்வது எவன் -என்னகினைந்து—எ-று. (கருத்து.) புகழுண்டாக வாழாதவர் தம்மையிகழ்ந்தவரை நொந்து கொள்வதென்ன - என்பதாம். ௪ புகழ்பட வாழவேண்டியதாயிருக்க அப்படி வாழமாட்டாத குற்றம்பற்றிப்பிறர், இகழ்வது ஒருபக்ஷமாகலால் - இகழ்வாரை நோவதெவனென்றார். ()

வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின்.

இ-ள். இசையென்னுமெச்சம் - புகழென்னுமெச்சத்தை - (பெறவேண்டியிருக்க) பெறாவிடின் - (அதனை) பெறாதவிடுவாராயின், வையத்தார்க்கெல்லாம் - பூமியிலுள்ளார்க்கெல்லாம், வசை - (அதுதானே) வசையாகும், என்ப - என்று (நல்லோர்) சொல்லுவர் — எ-று. (கருத்து) ஒருவன் கீர்த்தியென்னும் பிள்ளையைப் பெறாமலிருப்பானாயி லுலகத்திற்குவசையாம் - என்பதாம். * செய்தவர் இறந்தபோகத் தாமிறவாமல் நிற்கையால் புகழை எச்சமென்றார். இகழப்படுதற்கு மற்றொரு குற்றம் வேண்டாமென்பது கருத்து. (௮)

வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

இ-ள் இசையிலா - புகழில்லாத, யாக்கை - உடம்பை, பொறுத்த - சுமந்த, நிலம் - நிலத்தில், வசையிலா - பழிப்பில்லாத, வண்பயன் - வளப்பமுள்ள விளைவு, குன்றும் - குறையும் — எ-று. (கருத்து.) கீர்த்தியில்லாவுடலைச் சுமந்தநிலத்தில் விளைவுகுறையும் - என்பதாம். * உயிருண்டாயினும் அதனாலே பயன் கொள்ளாமையால் - யாக்கையென்றும், அதுநிலத்திற்குப் பாரமாதலின் பொருத்தவென்றும் சொல்லினார். விளைவுகுறைதற்கு ஏதுபாபசரீரத்தைச் சுமக்கின்ற வெறுப்பு. [இவைகளிரண்டாலும் புகழில்லோரது தாழ்வு சொல்லப்பட்டது.] (௯)

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.



உ௪-ஆம்-அதி—புகழ்.

இ-ள். வசையொழிய (தம்மிடத்து) வசையுண்டாகாமல் [புகழுண்டாகவென்றபடி] வாழ்வாரே - வாழ்பவரே, வாழ்வார் (உயிர்) வாழ்வோராவர், இசையொழிய - புகழுண்டாகாமல், [வசையுண்டாகவென்றபடி] வாழ்வாரே - வாழ்பவரே, வாழாதவர் - இறந்தோராவார் — எ-று. (கருத்து.) கீர்த்தியுடன்வாழ்பவ ருயிரோடுவாழ்பவர். அக்கீர்த்தியே யொழிந்தவரிறந்தவர் - என்பதாம். * வசையொழிய வென்னும்பாட்டு வசையொழிதல் புகழ்பெறுதலானதால். இசையொழிதல் வசைபெறுதலாமிற்று. முன்பாட்டிலே புகழில்லாத வுடம்பென்றதன் விளக்கியவாறு இதனால் அம்மேன்மையுந் தாழ்வும் (உடன்சொல்லப்பட்டன) மறுமைப்பயன் வானுறையுந்தெய்வத்துள் வைக்கப்படுமென முன்னே சொல்லப்பட்டமையால் இல்லறத்துக்கு இவ்வுலகத்திலேபுகழும் தேவருலகத்திலேபோகமும் பயனென்பது சொல்லப்பட்டது. (௰)

இனி மனுமுதலிய அறநூல்களாற் பொதுவாகக்கூறப்பட்ட இல்லறங்களெல்லாம் இவ்வதிகாரங்களுக்குக்கூறிய இவற்றுள்ளேயடங்கும். அவற்றை அறிந்து அடக்கிக்கொள்க.

இல்லறவியல் முற்றுப்பெற்றது. ஆக - குறள்-உ௪௰.

---

உ

துறவறவியல்.

இனி-முறைப்படித் துறவறம் சொல்லத்தொடங்கினர். துறவறமாவது
முன்சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாது நடந்து
அறிவுடையாராய்ப்பிறப்பினை அஞ்சி முத்தியை
யடைதற்பொருட்டுத் துறந்தவர்க்குஉரித்தாகிய
அறமாம். அது விரதமும் - ஞானமும்
எனவிருவகைப்படும்.

விரதம்.

அதாவது, மனமாசுதீர்தற்கு - அந்தக்கரணங்கள் பரிசுத்தமாதற்பொருட்டு இன்ன அறங்களைச் செய்வேனென்றும், இன்னபாவங்களை விடுவேனென்றும்-தம்முடையவல்லமைக்கு ஏற்க அளவுசெய்துகொண்டு துறந்தோரால் காப்பாற்றப்படுவது - அவ்விரதங்கள் அளவில்லாதவையாயிருக்கினும் அவைபலவற்றையும் தம்முள்ளே அடக்கிநிற்குஞ் சிறப்புடைய சிலவற்றை இங்கே சொல்லத்துடங்கி முதலிலே அருளுடைமையை அருளிச்செய்கின்றார்.

## ௨௫-ஆம்-அதி-அருளுடைமை.

அதாவது, தொடர்புபற்றாமல் இயல்பாக எல்லாவுயிர்களின்மேலும் செல்வதாகிய கருணையையுடையவராதலாம். இல்லறத்துக்கு அன்புடைமைபோல் இது துறவறத்துக்குச்சிறத்தலால்முன்சொல்லப்பட்டது.

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

இ-ள். பொருட்செல்வம் - பொருளால் வருஞ்செல்வங்கள், பூரியார்கண்ணும் - இழிந்தவரிடத்தும், உள - இருக்கின்றன, (ஆதலால்) செல்வத்துள் - செல்வங்கள் பலவற்றுள்ளும், (ஆராய்ந்தெடுக்கப்பட்ட) செல்வம் - செல்வமானது, அருட்செல்வம் - அருளால்வருஞ் செல்வமாம்.—எ-று. (கருத்து.) அருளால்வருஞ்செல்வமே செல்வமாகும்பொருளால்வருஞ்செல்வம் கீழோரிடத்துமுண்டு - என்பதாம். அருளால்வருஞ் செல்வமாவது - உயிர்களைக்காப்பாற்றி அவ்வறத்தால் மேம்படுதலாம், இழிந்தோரிடத்து இல்லாமல் உயர்ந்தோரிடத்துமாத்திரம் உள்ள அருட்செல்வமே சிறப்புடையசெல்வமென்றும் இழிந்தோரிடத்தும் உள்ளமற்றைப் பொருட்செல்வங்கள் சிறப்புடையன அல்லவென்றும், சொல்லியதாம். (௧)

நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
தேரினு மஃதே துணை.

இ-ள். நல்லாற்றால் - நல்வழியிலேநின்று, நாடி - (அளவைகளை ஆராய்ந்தா லும் யுத்தியாலும் நமக்குத்துணையாகும் அறமியாதென்று) ஆராய்ந்து, அருளாள்க - அருளுடையாரகக்கடவர், பல்லாற்றால் - (ஒன்றுக்கு ஒன்று ஒத்திராத) பலசமயவழிகளால், தேரினும் - ஆராய்ந்தாலும், துணை - துணையாவது, அஃதே - அவ்வருளே, [வேறொன்றில்லையென்றபடி.]—எ-று.(கருத்து.)நல்வழியிலேநின்று இருமையை யாளுவாராயின் அவ்விருமையே துணை - என்பதாம். * அளவைகளாவன பொறிகளாலே காணும்காட்சியும், குறிகளாலே ஆலோசித்து அறியும் அநுமானமும் ஒப்பும் ஆகருத்தாமொழியாகிய - ஆகமமும் - என மூன்றுவகைப்படும் ஒப்புமைபற்றி அறிகிற உவமானமும், இப்படியல்லாமற்போனால் இது கூடாதென்று அறியும் அருத்தாபத்தியும் உண்மைக்கு எதிராகிய இல்லாமையும் - என வினையுங்கூட்டி ஆறென்பாரும் உண்டு. இவையும் அம்

* அநுமானமாவது புகையினாலே நெருப்பை அறிவது முதலானவை.

கக

அ௨ உ௫-ஆம் அதி—அருளுடைமை.

மூன்றுள் அடங்கிக் கொள்ளப்படும் யுத்தியாவது இசுகூடும் இசுகூடாது எனத் தன்னிடத்தே தோன்றுவது. ஒன்றுக்கொன்று ஒத்திராமையாவது மதவேறுபாட்டால் அளவைகளும் பொருள்களும் தம்முள்ளே மாறுகொளளுதலாம், அப்படியிருந்தாலும் - அருளநன்றென்பது எல்லாருக்கும் ஒத்திருக்குமென்பதாம். உயிர்களையோம்பலால் இருமையிலும் உதவலால் துணையென்றார் [இவை இரண்டுபாட்டிலும் அருளதுசிறப்புசொல்லப்பட்டது.] (உ)

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

இ-ள். இருள்சேர்ந்த - அந்தகாரந்தங்கிய, இன்னாவுலகம் - துன்பவுலகத்திலே, புகல் - (போய்ப்) புகுதல், அருள்சேர்ந்த - அருளைச்சேர்ந்த, நெஞ்சினார்க்கு - நெஞ்சையுடையவர்க்கு, இல்லை - இல்லை - எ-று. (கருத்து.) இருமைபொருந்தியமனமுடையோர்க்கு நரகத்திற்புகுதலில்லை என்பதாம். இருள்சேர்ந்த இன்னாவுலகமென்றது நெருங்கிய இருளையுடையதாய்த்தன்னை அடைந்தவர்க்குத் துன்பஞ்செய்வதொருநரகத்தை அதுகீழுலகத்துள் ஓரிடமாகையின் உலகமெனப்பட்டது. (ங)

மன்னுயி ரோம்பி யருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்.

இ-ள். அருளாதான்- (உயிர்களிடத்தே) அருள்செய்யாதவன், செய்யும், செய்யும் அறம்- அறத்தை, தேரின்- ஆராயின், தெருளாதான்- ஞானமில்லாதவன், மெய்ப்பொருள்- மெய்நூலிற்சொல்லப்பட்டபொருளை, கண்டற்று- (ஒருகால்) கண்டதுபோலும்—எ-று. (கருத்து.) அருளில்லாதவன் செய்யுந்தருமத்தை யாராயின் மெய்ஞ்ஞானமில்லாதவனுண்மைப்பொருளைக் கண்டாற்போலும் என்பதாம். ஆல்-அசை. எப்படிநிலைபெற்ற ஞானமில்லாதவன் நடுவே மெய்ப்பொருளை உணர்ந்தால் அதனைத்தனது ஞானமில்லாமையாற்றானே அழித்துவிடுவானோ அப்படியே அருளில்லாதவன் நடுவே அறஞ்செய்தால் அதனைத்தன்னருளில்லாமைதானே அழித்துவிடுவானென்பதாயிற்று. ஆகவே மற்றெல்லா வறங்களுக்கும் அருளுடைமை மூலமென்பது பெறப்பட்டது. [இவைநான்குபாட்டானும் அருளில்லாதவர்க்கு வருங்குற்றம் சொல்லப்பட்டது.] (௯)

வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

இ-ள். (அருளில்லாதவன்) தன்னின்மெலியார்மேல் - தன்னின்மெலியவர்கள்மேல், தான்- தான், செல்லுமிடத்து- (வருத்துதற்குச்) செல்லுமிடத்து, வலியார்- (தன்னின்) வலியவர், (தன்னைவருத்துதற்குவரும்போது) முன்- (அவர்) முன், தன்னை- (அஞ்சிநிற்கும்) தனதுநிலையை, நினைக்க- நினைக்கக்கடவன்—எ-று. (கருத்து.) வலியவன் மெலியவனைவருத்தச்செல்லும்போது தன்னினும் வலியவன் தன்னைவருத்தியதை நினைக்கக்கடவன்-என்பதாம். மெலியாரெனினும் - அஃறிணைக்குங்கொள்க. அதனைநினைக்கவே இந்தவுயிருக்கும் அப்படியே அச்சமுண்டாகுமென்று அறிந்து அதன்மேல் அருளுடையவனாவானென்பது கருத்து. [இதனாலே அருள்பிறத்தற்கு உபாயம் சொல்லப்பட்டது. (௰)

## உ௬-ஆம்-அதி-புலான் மறுத்தல்.

---

அஃதாவது, ஊனுண்ணுதலை யொழித்தலாம். கொலைபாவத்தைப்பின் உண்டாக்கலால் அதற்குக்காரணமாதலையும், முன்னும் அதனால் வருதலில் அதன்காரியமாதலையும், ஒருசேர உடைத்தாகிய ஊனுண்ணுதல் அருளுடையார்க்கு இயைவதன்றாதலின் அதனைவிலக்குதற்கு இது அருளுடைமையின் பின்வைக்கப்பட்டது.

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

இ-ள். தன்னூன்-தன்னுடம்பை, பெருக்கற்கு-வளர்த்தற்பொருட்டு, தான்-தான், பிறிதூன்-மற்றொன்றினுடம்பை, உண்பான்-தின்பவன், எங்ஙனம்-எவ்வகையால், அருள்-அருளை, ஆளும்-ஆளுவான்—எ-று. (கருத்து.) தன்னுடல் பெருக்கற்குப் பிறவுடலைத்தின்பவனெவ்வகையாற் கிருபையுடையவனாவான்- என்பதாம். * பயனில்லாத தன்னூன்வளர்த்தலைப் பயனெனநினைந்து இக்கொடுமை செய்வோனே அறிவிலாத கொடியோனென்றதாயிற்று. எங்ஙனமாளு மருளென்பது ஆளானென்பது படுகின்ற இகழ்ச்சிக்குறிப்பு. (௧)

பொருளாட்சி போற்றாதார்க் கில்லையருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

இ-ள். பொருளாட்சி-பொருளினாலேபயன் கொள்ளுதல், போற்றாதார்க்கு- (அதனைக்) காப்பாற்றாதவருக்கு, இல்லை இல்லையாம், ஆங்கு- அதுபோல, அருளாட்சி-அருளினாலேபயன்கொள்ளுதல், ஊன்றின்பவர்க்கு-புலாலுண்பவருக்கு, இல்லை-இல்லை—எ-று. (கருத்து.) பொருளைக்காப்பாற்றாதவர்க்கு பொருளின்பமில்லாமைபோல அருளைக்காப்பாற்றாதார்க்கருளின்வரும் இன்பமுமில்லை-என்பதாம். * எப்படிப் பொருட்பயனை இழத்தற்கு அதனைக்காப்பாற்றாமையோ அப்படியே அருட்பயனை இழத்தற்கு ஊன்றினல்காரண மென்றதாயிற்று. [ஊன்றினும் உயிர்களுக்கொருதீங்கு நினையாராயின் அருளாளுதற்குக் குறைவில்லையென்பாரைமறுத்து அது உண்டென்பது இவை இரண்டுபாட்டாலும், சொல்லப்பட்டது.] (எடுத்துக்காட்டுவமையணி.) (௨)

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம்.

இ-ள். ஒன்றன்-பிறிதோருயிரினது, உடல்-உடலை, சுவையுண்டார்-சுவைபடவுண்டவரது, மனம்-மனமானது, படைகொண்டார்-கொலைக்கருவியைத் (தன்கையிலே) கொண்டவரது நெஞ்சம்போல்-மனம்போல், நன்றூக்காது-(கொலையையே நோக்குவதல்லது) அருளைநோக்காது—எ-று. (கருத்து.) ஊன்றின்பவர்களதுமனம் அருளை நினையாது-என்பதாம். * சுவைபடவுண்டல்-காயங்களால் இனியசுவைபடச் சமைத்து உண்டல், படை-வாள்முதலாயின. [இதனால் ஊன்றின்பாரது மனம் அருளை நினைத்தல் உவமானப் பிரமாணத்தினாலே சாதித்து முன்பாட்டிலே சொல்லியது உறுதிசெய்யப்பட்டது.] (௩)

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

இ-ள். அருள்-அருளானது, யாதெனின்-எதுவென்றால்- கொல்லாமை- கொலைசெய்யாமையாம், அல்லது - அவ்வருளல்லாததானது

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு.

இ-ள். தவத்திற்கு- தவத்தினுக்கு, உரு-வடிவமாவது, உற்றநோ
ய் உண்டிசுருக்குதல் (முதலானவைகளால்) தம்முயிர்க்குவரும் துன்
பங்களை, நோன்றல் - பொறுத்தலும், உயிர்க்கு, பிறவுயிர்களுக்கு உறுக
செய்யாமை - (தாம்) துன்பஞ்செய்யாமையும் ஆகிய, அற்றே - அவ்
வளவேயாகும்—எ-று. (கருத்து) பசிபொறுத்தலும் உயிர்களுக்கு
துன்பஞ்செய்யாமையும் தவத்திற்குவடிவம்- என்பதாம். * மற்றைய
தன்மையெல்லாம் இவ்விரண்டிலே அடங்குமாதலின் அற்றேயென த
ற்தேகாரங்கொடுத்தார். இதனால் தவத்தினது இலக்கணஞ் சொல்ல
பட்டது.
(1

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

இ-ள். தவமும்-(பயனைபல்லாமல்) தவம் உண்டாவதும், தவமு
டையார்க்கு- (முன்னேத்) தவத்தையுடையவர்க்கே, ஆகும்-உண்டாகு
ம், (ஆதலால்; அதனை- அத்தவத்தை, அஃதிலார்- அம்முன்னைத் தவ
மில்லாதவர், மேற்கொள்வது - செயத்தொடங்குவது அவம் - வீணு
எ-று. (கருத்து.) முற்பிறப்பிற் றவஞ்செய்தவர்க்குத்தவம் பலிக்கு
என்பதாம். * முன்பழக்கத்தால் அறிவும் வல்லமையும் உடையவ
முடித்தலால் தவமுடையார்க் காகுமென்றும் பழக்கமில்லாத வர்
அவ்விரண்டும் இல்லாமையினாலே முடியாமையால் அவமென்று
கூறினர்.
(2

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்க டவம்.

இ-ள். மற்றையவர்கள் - இல்லறத்தையேபற்றி நிற்பவர்கள், துற
தார்க்கு-(இருவகைப்பற்றையும்) துறந்தவர்களுக்கு, துப்புரவு - உண்
யும் மருந்தும் இருப்பிடமும், வேண்டி - (உதவுதலை) வேண்டி - தவ
(தாம்) தவஞ்செய்தலை, மறந்தார்கொல்-மறந்தார்போலும்—எ-று.(க
த்து.) இல்வாழுவோர் துறவிகளுக்கு உண்டிமருந்து இடம்உதவவே
டித் தவத்தைமறந்தார்போலும்-என்பதாம். * துப்புரவு - அனுபவிக்க
படும் பொருள்கள். தவமானது- வேண்டியவைகளை வேண்டியபடியே
பெறத் தருவதாதலால் யாவராலும் செய்யத்தருவதாகிய அறத்தைப்
லே செய்யப்படுகிற தானத்தின்மேல் விருப்பமிகுதியால், மறந்தார்போ
லுமெனவே தானத்தினும் தவம்உயர்ந்தது என்றதாயிற்று.
(3

ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

இ-ள். ஒன்னார் - (தமது அறத்துக்குஇடையூறுசெய்த) பகைவரை
தெறலும்-கெடச்செய்தலையும், உவந்தாரை - (அதனை) விரும்பினவரை
ஆக்கலும்-உயரச்செய்தலையும், எண்ணின் - (தவஞ்செய்வோர்) நினை
பாராயின், தவத்தான் - (அவரது) தவவலிமையினால், வரும் - (அ

(அவருக்கு) உண்டாகும்—எ-று.(கருத்து.) சாபம் அநுக்கிரகம் தவத்தா லாகும் - என்பதாம். இ ஞானமுற் துறந்தவர்க்கும் பகைவரும், நட்பினரு ம் இல்லையாதலால் கூடாமையால் தவத்திற்கு ஏற்றிச் சொல்லப்பட்டது, எ ம்மினின்றதனால் அவர்க்கு அவைளண்ணுமையே இயல்பென்பது தோன்றுகின்றது பகைவர்- பெரியராயினும் அவருக்குக்கேடும் விரும் பினவர் சிறியராயினும் அவருக்கு உயர்வும் நினைத்தவளவில்வந்து நிற் றலினைத் தவஞ்செய்வார் மேல்வைத்துத் தவத்தின்வல்லமை சொல் லியபடி. (ச)

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

இ-ள். வேண்டிய-(முயன்றால்)பெறவேண்டியவைகளை,வேண்டி யாங்கு- வேண்டியபடியே, எய்தலால் (மறுமையிலேதாம்) பெறலாமா தலால், செய்தவம்-செய்த்தகுவதாகிய தவமானது, ஈண்டு - இம்மை யில், முயலப்படும் - (அறிவுடையோராலே) முயலப்படும்—எ-று.(கரு த்து.) மறுமையின்பங்களை யடையத் தவமுயற்சி செய்யப்படும்-என்ப தாம். * ஈண்டென்றதனால் மறுமைவருவிக்கப்பட்டது, மேலே சுகியு ம், மோக்ஷமும், தவத்தா லல்லாமல் அடைதல் கூடாதென்பதாம்.[இ வைரண்டுபாட்டாலும் தவத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது ] (இ)

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

இ-ள். தவஞ்செய்வார் - தவத்தைச்செய்வார், தங்கருமஞ்செய்வா ர்-தமது கருமத்தைச் செய்பவராவார், மற்றல்லார் - மற்றைப்பொருளி ன்பங்களைச்செய்வார், ஆசையுட்பட்டு-(அவைகளி) ஞசையாகிய வலையி ல் அகப்பட்டு,அவஞ்செய்வார்-(தமக்குக்) கேடுசெய்பவராவார்—எ-று. (கருத்து.) தவஞ்செய்பவர் நித்தியப்பொருளை அடைவர்-என்பதாம். * அநித்தியமாய் மூவகைத்துன்பத்துக்கு இடமாய் உயிரின்வேறாய் உள் ள உடம்புக்குவருத்தம் வருமென்றுவிடாமல் தவத்தைச்செய்தால்- பி றப்பு-பிணி-மூப்பு-இறப்பு- இவைகளால் அநாதியாகத் துன்பப்பட்டுக் கொண்டுவருகிற உயிரானது ஞானம்பெற்று மோக்ஷத்தை அடையும் ஆதலால் தவஞ் செய்வாரைத் தங்கருமஞ் செய்வாரென்றும், ஞானத் தின் அறிவதாகிய நித்தியின்பத்தின்பொருட்டுப் பலபிறவிகளிலும் துன் பப்படத்தக்க பாவஞ்செய்துகொள்ளுதலால் அல்லாதாரை அவஞ்செ ய்வாரென்றும், சொல்லினார், நித்தியமின்மை-அநித்தியம். (சு)

சுடச்சுடப் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

இ-ள். சுடச்சுட-(புடத்திலானது) சுடச்சுட, பொன்போல்- பொ ன்னுக்குக் குற்றம் நீங்கல்போல், நோற்கிற்பவர்க்கு-தவஞ்செய்ய வல்ல

மஉ

புடையவராது வேடத்தைக்கொண்டு (மனம்போனவழிபோகுதல்; பெற்றம்-பசுவானது, (காவற்காரர் அசத்தராயிருக்கும்படி) புலியின்றோலை, போர்த்து-போர்த்துக்கொண்டு, மேய்ந்தற்று- பயிரை மேய்ந்தால் அச்செய்கைபோலும்—எ-து. (கருத்து.) வலியிலானுடைய தவவேடம் பசுபுலித்தோல்போர்த்து மேய்தற்போலும் - என்பது. ம். * மேய்தலின்கு ஏற்க மனம்போனவழிபோகுதல் வருவிக்கப்பட்டது. காவற்காரர் அசத்தாமை-புலியைக்கண்டால் புல்லேறாதிருக்குமென அஞ்சுதலும், அச்சத்தாலும், ஆம் - ஆகவே, அவ்வல்லுருவங் கொள்ளுதற்கு பயன் அப்படிப்பட்ட காரணங்களால் - உலகத்தார் சந்தேகப்படாமையாயிற்று, பசுதனக்கேவுரிய புல்லைவிட்டுப் புலித்தோல்போர்த்துப் பிறர்க்கு உரியபயிரை மேய்தல்போல் அக்கூடாவொழுக்கத்தான் தனக்கு உரிய வினையைவிட்டுத் தவவேடங்கொண்டு பிறருக்குஉரிய பெண்களை அநுபவிக்க லென்க. [அப்படிசெய்கிற பசுஇல்லாமையால் இல்பொருளுவமையணி.]
(௩)

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

இ-ள். (அவ்வல்லமையில்லாத நிலைமையான்) தவம் - தவவேடத்திலே, மறைந்து-மறைந்து, அல்லவை-தவமல்லாதவைகளை, செய்தல்-செய்தல், வேட்டுவன்-வேடன், புதல்-புதலிலே, மறைந்து-மறைந்து புட்களைகளை, சிமிழ்த்தற்று-பிடித்தல்போலும்—எ-து. (கருத்து.) தவவேடத்தில் மறைந்தொழுகுவோன் வேடனையொப்பான்-என்பதாம். * தவம் அதன்வேடத்துக்கு ஆகுதலால் ஆகுபெயர். தவமல்லவற்றைச் செய்தலாவது - பிறர்க்கு உரியமகளிரைத் தன்வசத்தாராக்குதல், இப்படிசெய்தலென்பது - இத்தொழிலு வமையினாலே தோன்றுதல் அறிக. (௪)

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

இ-ள். (பிறர்தம்மை நன்குமதித்தற்பொருட்டு) பற்றற்றேமென்பார்-பற்றற்றேமென்று-சொல்லுவாரது, படிற்றொழுக்கம் - மறைந்தவொழுக்கமானது (அப்பொழுது இனிதுபோல் தோன்றுமாயினும்) எற்றெற்றென்று, (பின்) என்செய்தோம் என்செய்தோமென்று(தாமே இரங்கும்படி) ஏதம்பலவும் - பலதுன்பங்களையும், தரும் (அவருக்குக்) கொடுக்கும்—எ-து. (கருத்து.) பற்றற்றேமென்பவரது பொய்யொழுக்கம் பிற்புதுன்பந்தரும்-என்பதாம். * சொல்லினளவிலல்லதுபற்றறாமையால் பற்றற்றே மென்பாரென்றும், சிறிதாய்க் கணத்துள்ளேயழிவதாகிய இன்பத்தின் பொருட்டுப் பெரிதாய் நெடுங்காலம் நிற்பதாகிய பாவத்தைச் செய்வோர் அதுதுன்பத்தைத் தரும்போது இரே

மை எனக்காரியத்தைக்காரணமாகவும், அளவென்னுமாற்றல் எனக் ரணத்தைக்காரியமாகவும் உபசரித்தார். [களவும், துறவற்மும், இருளு ஒளியும்போல் ஒன்றுக்கொன்று பகைவரகளின் கூடிநிற்பன வல்ல என்பது இவை மூன்றுபாட்டாலும் சொல்லப்பட்டது.] (எ)

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

இ-ள். களவறிந்தார்- களவை அறிந்தவரது, நெஞ்சில்-மனதில், வஞ்சனையானது, அளவறிந்தார்- அவ்வளத்தலை அறிந்தவரது, நெஞ்சில், அறம்போல-அறமானதுபோல், நிற்கும்-நிலைபெறு —எ-று. (கருத்து.) களவுசெய்வோரிடத்துவஞ்சனைவளரும் - என்பதாம். * உயிர்முதலானவைகளை அளந்து அறிந்தவர்களுக்குத் துறவற

மானது அசையாது. நிற்குமென்பது இவ்வுபமானத்தினலேகொள்ளப்பட்டது. [களவேயொழிந்காதுநிற்பது இதனுற்சொல்லப்பட்டது.] (அ)

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

இ-ள். களவல்ல-களவல்லாத, மற்றைய- மற்றவைகளை, தேற்றாதவர்- அறியாதவர், (களவொன்றையே அறிந்தவரென்றபடி.) அளவல்ல

○ சாற்கதி, தேவ-கதி, மக்கட்கதி, நரகதி, விலங்குகதி.

ஒரு.

கஅ உகூ-ஆம்-அதி—கள்ளாமை,

அவ்வளவல்லாத தீயவினைகளை, செய்து- நினைத்து, ஆங்கே- அப்பொழுதே, வீவர்- கெடுவார்—எ-று. (கருத்து.) களவை அறிந்தோர்பாவஞ் செய்து அழிவர்-என்பதாம். * தீயவினைகளாவன- பொருளுடையவஞ்சிக்குமவிதமும், அவ்வஞ்சனையால் அதைக்கொள்ளும் விதமும், கொள்ளப்பட்ட அப்பொருளினாலே காமபோகங்களை அநுபவிக்கும் விதமும், முதலானவைகளை நினைத்துஞ்செய்தலோடொக்குமாகலின் செய்தென்றும் அந்நினைப்பு உள்ளபொழுதே அறக்கடவுள்போல, மறைப்பான் சொல்லையும் செயலையும் பொறுமித்து - அப்போது கெடுக்குமாதலால் ஆங்கேவீவரென்றும், சொல்லினர். மற்றவையாவன - துறந்தார்க்கு உரியனவாகச்சொல்லப்பட்ட - காய், கனி - கிழங்கு- சருகு, முதலானவையும் இல்லறத்தோரால் தானஞ்செய்யப்பட்டவையும் ஆம். அறியாமை அது- அவைகளேயே உண்டு போதுமென்றிருக்க அறியாமை. [இதனால் களவினாலே கெடுமாறுசொல்லப்பட்டது.] (கு)

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்வார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

நன்மை பயக்கு மெனின்.

இ-ள். பொய்ம்மையும் - பொய்ம்மைச் சொற்களும், புரைதீர்ந்த - கு
ற்றத்தினின்று நீங்கிய, நன்மை - நன்மையை, பயக்குமெனின் - (பிறருக்
கு) தருமாயின், வாய்மையிடத்த - மெய்ம்மைச் சொற்களினிடத்தனவா
ம் —எ-று. (கருத்து) குற்றமற்ற நன்மையைத் தரின் பொய்ம்மையும் வா
ய்மையை யொக்கும் - என்பதாம். ௳ குற்றந்தீர்ந்தநன்மை - அறம், அந்நோத்
ருதலாவது கேட்டோர்யாவது மரணத்தையாவது அடைய நின்றதொ
ருயிர் அச்சொற்களின் பொய்ம்மையினாலே அதனீங்கி இன்புறுதல் கட்
பதனைச் சொல்லுதலும் நன்மையைத் தராதாயின் மெய்ம்மையும் பொ
ய்மையின் மெய்ம்மையாமென்பது கருத்து. [இவையிரண்டு பாட்டா
லும் தீமைத்தராத நடந்ததைச் சொல்லுதலும், நன்மையைத் தரும்
நடவாததைச் சொல்லுதலும் மெய்ம்மையாம் - எனவும், தீமைத்தரு
ம் நடந்ததைச் சொல்லுதலும், நன்மையைத்தராத நடவாததைச் சொ
ல்லுதலும் பொய்ம்மையாம் எனவும், அவைகளினிலக்கணஞ்சொல்லப்
பட்டது ] (உ)

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

இ-ள். (ஒருவன்) தன்னெஞ்சு - தனதுநெஞ்சினாலே, அறிவது - அறி
ந்தப்படியிலதொன்றை, பொய்யற்க - (பிறர் அறியாரென்று) பொய்யா
மொழியக்கடவன், பொய்த்தபின் - பொய்த்தானாயின், தன்னெஞ்சே - (அ
தனை அறிந்த) தனதுமனம், (அப்பாவத்துக்குச் சாக்ஷியாய்நின்று) த
ன்னைச்சுடும் - தபிக்கும், (அதன்பயனாகிய துன்பத்தை அடைவிக்கும்)
எ-று. (கருத்து.) தானறிந்த பொய்யைச்சொன்னால் தன்மனமே தன்
னைக்கெடுக்கும் - என்பதாம். ௳ [பொய்மறைபாததாமிருக்கையால் அ
தைச்சொல்லலாகாதென்பது இதனால் சொல்லப்பட்டது.] (௩)

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

இ-ள். (ஒருவன்) உள்ளத்தால் - தன் மனதுக்கேற்ப, பொய்யாது -
பொய்பேசாமல், ஒழுகின் - நடப்பானாயின், (அவன்) உலகத்தார் - உயர்ந்
தோரது, உள்ளத்துள்ளெல்லாம் - மனங்களிலெல்லாம், உளன் - இருப்பா
ன் —எ-று. (கருத்து.) பொய்யாத உள்ளமுடையோன் உயர்ந்தோருள்



ளத்திலிருப்பான்-என்பதாம். ௳ உள்ளத்துக்கு என்பது உள்ளத்தி
னவருதலால் - வேற்றுமையின்மைக்கும் பொய்பேசாமல் நடத்தலாவது
மெய்பேசிநடத்தல் - அவனது அவ்வறத்தி னருமையைநோக்கி உய
ர்ந்தோர் எப்பொழுதும் அவனையே நினைப்பாரென்பதாம். [இதனுள் ..
மைப்பயன் சொல்லப்பட்டது.] (௪)

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

இ-ள். (ஒருவன்) மனத்தொடு - (தன்) மனத்தோடுபொருந்த, வா
ய்மை - உண்மையை, மொழியின் - சொல்லுவானாயின், (அவன்) தவத்தொ
டு - தவத்துடனே, தானம் - தானத்தை, செய்வாரின் - (ஒருமிக்கச்)செ
ய்வாரினும், தலை - சிறப்புடையனாவான் —எ-று. (கருத்து.) உண்மைசொ
ல்லுவோன் தவம்தானம் செய்பவரினும் மேலானவன் என்பதாம். ௳
றமாகிய மெய்யினாலே செய்யப்படும் அவைகளினும் அறமாகிய மொ
வாக்குகளாலே செய்யப்படும் இது மிகப்பயனுடையதென்பதாம். (5)

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்.

இ-ள். சினமென்னும் - கோபமாகிய, சேர்ந்தாரைக்கொல்லி - சே இனமென்னும் - (தனக்குஇடமானவரை மாத்திரமல்லாமல்) இனமென் றேப்பானது - (தனக்குஇடமானவரை மாத்திரமல்லாமல்) இனமென்னும் - (அவருக்கு) இனமாகிய, ஏமம்-இதோபதேசஞ்செய்கிற, புணை - மரக்கலத்தையும், சுடும்-சுடும்—எ-று. (கருத்து.) கோபத்தியானது மரக்கலத்தையும் சுடுமேயென்பதாம். * இனம்-உறுதிமொழி தன்னையுந் தன்னினத்தையுஞ்சுடுமென்பதாம். * இனம்-உறுதிமொழி பேசுப்பவர். இனத்தைப்புணையாகவுருவகஞ்செய்ததனாற்பிறவிக்கடலைக்



கடப்பித்து முத்திக்கரையைச் சேர்க்கின்றவெனவருவித்து அப்புணைக்குமுன் கூட்டுக. புணையையுமென் னுமெச்சவும்மை - தேக்குத் கையாகவருவிக்கப்பட்டது. சுடுமென்றதற்குத்தனக்கு இடமானவரை விட்டுநீக்கச்செய்யுமென்பது (கருத்து.) தன்னையும்பிறவிக்கடலின்றி விதானமெப்பாரையும் நீக்குமென்பதாம். [நெருப்பிற்குச்சோதியுடைமையும் சுடுதலையும் மரக்கலத்திற்கு இதோபதேசஞ்செய்தலையும் அதிகமாகச்சொல்லுதலால் பினையொற்றுமை யுருவகவணி.] (௬)

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

இ-ள். சினத்தை - கோபத்தை, பொருளென்று-(தனது வல்லமையைக்காட்டுகிற) ஒருகுணமென்று கொண்டவன் - (தன்னிடத்தே) கொண்டவனது, கேடு- அவ்வல்லமையிழப்பு, நிலத்து-பூமியினிடத்து அறைந்தான், அறைந்தவனது, கை-கையானது, பிழையாதற்று-(அந்நிலத்திலே படுதல்) தப்பாத விதம்போல் தப்பாது—எ-று. (கருத்து.) நிலத்தறைந்தவன் கைப்பயன்போல் கோபமாகிய பொருளைக்கொண்டோன் வருந்துவன் - என்பதாம். * தர்க்கநூலினது நடைபற்றி-குணம்பொருளெனப்பட்டது, பிழையாதவற்றெனபது குறைந்து நின்றது. [இவை மூன்றுபாட்டாலும் கோபஞ்செய்தோர்க்கு வருந்தீங்கு சொல்லப்பட்டது.] (௭)

இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

இ-ள். இணர்-பலசுடர்களையுடைய, எரி-பெருநெருப்பானதுதோய்வன்ன - (வந்து) சூழ்விறுத்போலும், இன்னா-துன்பந்தருமவைகளை, செயினும் - (ஒருவன்) செய்தானாயினும் வெகுளாமை (அவன்மேல்) கோபஞ்செய்யாமை, புணரின்-கூடுமாயின், நன்று- அது நன்று-எ-று. (கருத்து.) ஒருவன் நெருப்பொத்த துன்பஞ்செய்யினுமவன்மேல் கோபியாமை நல்லது-என்பதாம். * இன்னாமையின் மிகுதிதோன்ற இணரெரியென்றும், அதனைமேலுமேலுஞ்செய்தல்தோன்ற இன்னாவென்றும் அச்செய்கைமுனிவரையும் கோபிக்கச்செய்யுமென்பதுதோன்ற புணரினென்றுஞ்சொலலினார். [இதனால் கோபஞ்செய்யாமையினது நன்மை சொல்லப்பட்டது.] (௮)

உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

செய்யாமை-பெரியோர் துணிவு-என்பதாம். சிறப்புடையயோகத்தைச் சிறப்பென்றும் அதனாற்பெறப்படுதலால் அணிமாதிசித்திகளையும் சிறப்பீனுஞ்செல்வமென்றும் காமம் வெகுளிமயக்கம் என்னுமுக்குற்றங்க ளற்றமையால் மாசற்றாரென்றும் சொல்லினார். [இதனாலே தமக்கு ஒருபயனைக்குறித்துச் செய்தல் விலக்கப்பட்டது.] (க)

கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

இ-ள். (ஒருவன்) கறுத்து- (தம்மேல்) வைரங்கொண்டு, இன்னா- துன்பந்தருமவைகளை, செய்தவக்கண்ணும்- செய்தவிடத்தும், மறுத்து- மீண்டு, இன்னா- அத்துன்பந்தருமவைகளை, செய்யாமை- (தாம்) செய்யாமையும், மாசற்றார்- அக்குற்றமற்றவரது, கோள்- துணிவு—எ-று. (கருத்து.) ஒருவன் துன்பங்களைச்செய்தாலும் அவனுக்குமாறுபடி துன்பங்களைச் செய்யாமையே பெரியோர் கொள்கை- என்பதாம். * தொக்குநின்ற செய்யாமையுமென்றும் முன்பாட்டின் பொருளைத் தழுவிய எச்சவும்மை வருவிக்கப்பட்டது. அவன் செய்தவைகளை மனதிலே வையாமல் விடுவது செயத்தக்கதென்பதாம். (உ)

செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும்.

இ-ள். செய்யாமல்- (தான்முன்பு துன்பந்தருவதொன்றைச்) செய்யாதிருக்க, செற்றார்க்கும்- (தன்மேலே) வைரங்கொண்டவர்க்கும், இன்னாத- துன்பந்தருமவைகளை, செய்தபின் - (துறந்தவன்) செய்தானாயின் பின்பு (அச்செயலானது) உய்யா- கடக்கமுடியாத, விழுமம்- இடும்பையை, தரும்- (அவனுக்குக்) கொடுக்கும்—எ-று. (கருத்து.) தனக்குத்துன்பஞ்செய்தவர்க்குத் தான் துன்பஞ்செய்தல் கேட்டைத்தரும்- என்பதாம். இடும்பையாவது தவமிழந்து பழியும்பாவமும் அடைதல் (௩)

இன்னாசெய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்துவிடல்.

இ-ள். (தமக்கு) இன்னா- துன்பந்தருமவைகளை, செய்தாரை- செய்தவரை, ஒறுத்தல்- (துறந்தோர்) தண்டித்தலாவது, அவர்நாண- தாமே) நாணும்படி (அவருக்கு) நன்னயம்- இனிமையான மகிழ்ச்சிகளை- செய்து- செய்துவிடல்- (அவ்விரண்டையும்) மறத்தலாம்—எ-று. (கருத்து.) துன்பஞ்செய்தவரைத்தண்டித்தலாவது அவருக்கின்பஞ்செய்தல்- என்பதாம். மறவாதவிடத்துப் பின்னும்வந்து இனைக்குமாதலின் மறக்கவேண்டியவையாயின. அவரை வெல்லுமுபாயஞ் சொல்லியபடி. [இவை மூன்று பாட்டாலும் வைரங்கொண்டு செய்தல் விலக்கப்பட்டது.] (௪)

அறிவினு னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்ருக் கடை.

இ-ள். (துறந்தார்க்கு) அறிவினான்- (உயிர்முதலாயவைகளை உள்ள வண்ணம் அறிந்த) அறிவினால், ஆகுவது-ஆகுமொருபயன் உண்டோ, பிறிதின்நோய்- வேறோருயிருக்குவந்த நோய்- துன்பந்தருமவைகளை, தந்நோய்போல்- தமக்குவந்த துன்பந்தருமவைபோல், போற்ருக்கடை- (குறிக்கொண்டு) காப்பாற்ருதவிடத்து—எ-று. (கருத்து.) பிறவுயிர்க்குவந்த துன்பத்தைத் தன்னுயிர்க்குவந்ததைப்போல நினையாத அறிவினுற் பயனின்மை என்பதாம். * குறிக்கொண்டு காப்பாற்றலாவது, நடத்தல்- இருத்தல்- கிடத்தல்- நிற்றல்-உண்டல்- முதலாகிய தமது தொழில்களாலும் மற்றைவழிகளாலும் உயிர்களுக்குவரும் துன்பங்களை முன்னே அறிந்து அவைவாராமற் காத்தல். இத்துன்பம் பெரும்பாலும் அஃறிணையிலே எறும்புமுதலாகிய சிறியவுடம்புடைய பிராணிகளைப்பற்றி வருதலாலே பொதுப்படப்பிறிதினோயென்றும், மறப்பினாலே அவைதுன்புறாநிற்பினும் தமக்குப்பாவமென்று அறிந்து காக்கவேண்டுமாதலின் அதுசெய்யாதவிடத்து அறிவினாலே பயனில்லையென்றும் சொல்லினார். [இதனுற்சோர்வினாலே செய்தல்விலக்கப்பட்டது.] (௫)

இன்ன வெனத்தா னுணர்ந்தவை துன்னுமை
வேண்டும் பிறன்கட் செயல்.

இ-ள். இன்னுவென - (இவைமனிதருக்குத்) துன்பந்தருமவையென்று, தானுணர்ந்தவை- (அநுமானப் பிரமாணத்தினாலே) தன்னால் அறியப்பட்டவைகளை, பிறன்கண்- பிறனிடத்தே, செயல் - செய்தலை, துன்னுமை- பொருந்தாமை, வேண்டும்- (துறந்தவனுக்குவேண்டும்—எ-று. (கருத்து.) துன்பமென்றறிந்தவற்றைப் பிறனிடத்துச் செய்யாமையே வேண்டுமென்பதாம். * இன்பதுன்பங்கள் உயிர்க்குணமாகலால் அவை பிரத்தியக்ஷப்பிரமாணத்தினாலே அறியக்கூடாமை அறிக. அறமும்பாவமும் உண்டாவது மனமறிந்துசெய்தவிடத்தே ஆகலின் உணர்ந்தவையென்றார். (௬)

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானும்
மாணுசெய் யாமை தலை.

இ-ள். மனத்தானும்-மனத்தோடு உண்டாகின்ற, மாணு- துன்பந்தருமவைகளை, எஞ்ஞான்றும் - யாதொருகாலத்திலும், யார்க்கும் - யாவரொருவர்க்கும், எனைத்தானும் - எவ்வளவுசிறிதாயினும், செய்யாமை- தலை- முதன்மையான அறம்—எ-று. (கருத்து.) யாருக்கும் சிறியதுன்பந்தருமவைகளையும் செய்யாமையே தலைமையானதருமம் என்பதாம். * மனமறிந்துசெய்யாதவிடத்தேபாவமில்லையென்பதுபெற்றாம். வல்லமை



யுண்டானகாலத்திலும் செய்யலாகாமையால் - எஞ்ஞான்றுமென்றும்- எளியவருக்கும் ஆகாமையால் யார்க்குமென்றும், செயல்சிறிதாயினும் பாவம்பெரிதாகலால், எனைத்தானுமென்றும், சொல்லினார். (௭)

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ

மன்னுயிர்க் கின்னா செயல்.

இ-ள். (பிறர் செய்யும் துன்பந்தருமவை) தன்னுயிர்க்கு - தனதுயிருக்கு, இன்னாமை - துன்பந்தருமவையாந்தன்மையை, அறிவான் - (அநுபவித்து) அறிபவன், மன்னுயிர்க்கு - நிலைபெற்ற பிறவுயிர்களுக்கு, இன்னா - அத்துன்பந்தருமவைகளை, தான் - தான், செயல் - செய்தல், என் - என்ன காரணத்தால் — எ-று. (கருத்து.) தன்னுயிர்க்குத் துன்பந்தருவதை அறிபவன் பிறவுயிருக்குச் செய்வதென்ன என்பதாம். ஏ கொல் - ஓ - அசைகள். இப்படியே இனைபிறவுயிர்க்கும் துன்பந்தருமவைகளெனப் பகுத்தறிவு மானத்தால் அறிந்திருந்தும் செய்கின்றபடியால் பரிகரிக்கக் கூடாமையால் துன்பந்தருமவைகள் பின்னேவந்து தன்னை வருத்துமென்பது ஆகமத்தாலும் அறிந்துவிடக்கூடவென்பது தோன்ற, தானென்றும் அந்தன்மையால் ஒழியாமைக்குக் காரணம் மயக்கமென்பது தோன்ற - என்னென்றும் சொல்லினார். [இவைமூன்றுபாட்டாலும் பொதுவகையான் இன்னாசெயல் விலக்கப்பட்டது.] (அ)

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

இ-ள். (துறந்தவர்) பிறர்க்கு - பிறர்களுக்கு, இன்னா - துன்பந்தருமவைகளை, முற்பகல் - ஒருமுகூர்த்தத்தினது முன்பங்கிலே, செய்யின் - செய்தால், தமக்கு இன்னா - துன்பந்தருமவைகள் பிற்பகல் - அம்முகூர்த்தத்தினது பின்பங்கிலே (அவர் செய்யாதிருக்க) தாமே வரும் - எ-று. (கருத்து.) முன்பு ஒருவருக்குத் தீமைசெய்தால் பின்பு அத்தீமைதனக்கே வரும் - என்பதாம். உ தவமிறத்தல் இப்படிக்கெடினும் எளிதிலும் வரும் அதனால் அவைசெய்யாதிருக்கக்கடவரென்பதாம். *முகூர்த்தம் இரண்டுநாழிகை. (கூ)

நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

இ-ள். நோயெல்லாம் - துன்பந்தருமவையெல்லாம், நோய்செய்தார்மேலவாம் - (மன்னுயிர்க்குத்) துன்பந்தருமவைகளைச் செய்தவர் மேலனவாம், (அதனால் நோயின்மைவேண்டுபவர் -) தம்முயிர்க்குத் துன்பந்தருமவையில்லாமையை வேண்டுவோர், நோய் (மன்னுயிர்க்குத்) துன்பந்தருமவைகளைசெய்யார், செய்யார் — எ-று. (கருத்து.) தன்னுயிர்க்குத் துன்பமில்லாமையை விரும்புவோர் துன்பஞ்செய்யார் - என்பதாம். உ உலகிலத்திலே விளைவித்திட்டார்க்கு விளைவும் அதுவேயாகலான் நோயெல்லாம் நோய்- செய்தார்மேலவாமென்றார். [சொற்பொருட்பின்வருநிலையணி] [இவை இரண்டுபாட்டாலும் அதுசெய்தவர்க்கு வருந்தீங்கு சொல்லப்பட்டது.] (௰)

## ௩௰௩-ஆம்-அதி-கொல்லாமை.

அஃதாவது, ஐயறிவுடையவைமுதல் ஓரறிவுடையவை ஈறாய உயிர்களைச் சோர்வினாலும் கொல்லுதல் செய்யாமை. இது முன் சொல்லப்பட்ட அறங்களெல்லாவற்றினும் சிறப்புடைத்தாய் சொல்லவொழிந்த மற்றையறங்களையெல்லாந் தன்னுள் அடக்கிநிற்றலான்

ல்லாமை, பின்சார - (அதனை)ப்பின்சேரநிற்க,நன்று-நல்லது—எ-று.(க
ருத்து.) கொல்லாமை நல்லறம் அதிலும் பொய்சொல்லாமை நல்லறம்
என்பதாம், * அதிகாரம் கொல்லாமையாயினும் - முன்பொய்யாமை
பொய்யாமையாற்றினென்றும், யாமெய்யாக்கண்டவற்று ளில்லையென்
றும், சொல்லுதலால் - பொய்யாமை கொல்லாமையிலேசிறந்தது எ
துவென்று சந்தேகமுண்டாமென்றே அது உண்டாகாமைப்பொருட்டு
இங்கே-பின்சாரப் பொய்யாமைநன்றென்றார், முன்சொன்னதிலும் பி
ன்சொன்னது உறுதியுடையதா மாகலால். [இவை மூன்றுபாட்டானு
ம் கொல்லாமையினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௩)

நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

இ-ள். (மேற்கதியும் முத்தியும்பெறுதற்கு)நல்லாறெனப் படுவது-
நல்லவழியென்று சொல்லப்படுவது, யாதெனின் - எதுவென்றால் (அ
து) யாதொன்றும் - யாதோருயிரையும், கொல்லாமை-கொல்லாமையா
கிய அறத்தினை, சூழும் - (காக்க) நினைக்கும்,நெறி-வழியாம்—எ-று. (க
ருத்து.) யாதோருயிரையும் கொல்லாமையே நல்வழி - என்பதாம். *
புல்லுமுதலாகிய-ஓரறிவுயிரையும் உள்ளாக்குதற்கு யாதொன்று மெ
ன்றார். காத்தல் தவறாமற்காத்தல். [இதனால் கொல்லாமையையுடைய
தே நல்வழியென்பது சொல்லப்பட்டது.] (௪)

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

இ-ள். நிலை - (பிறப்புநின்ற) நிலையை, அஞ்சி-பயந்து (பிறவாமை
ப்பொருட்டு)—நீத்தாருளெல்லாம் - (மனைவாழ்க்கையைத்) துறந்



தவர்களுள்ளும், கொலை - கொலைப்பாவத்தை, அஞ்சி-பயந்து, கொ
ல்லாமை-கொல்லாமையாகிய அறத்தை, சூழ்வான்-மறவாதவன்,தலை-
உயர்ந்தோன்—எ-று. (கருத்து.) கொல்லாமையாகிய அறத்தைமறவா
தவன் துறவிகளுள் தலையானவன்-என்பதாம். * பிறப்பு நின்றநிலையாவ
து- மனிதர்முதலாகிய சரமும், மரமுதலாகிய அசரமும்ஆகிய இருவ
கைப்பிறப்புகளிலும் இன்பமென்பதொன்று இல்லாமல் உள்ளவை
யெல்லாம் துன்பமேயாகிய நிலைமை. துறவு ஒன்றேயாயினும் சமயவே
றுபாட்டால் பலவாமாதலால் - நீத்தாருளெல்லாமென்றார். [இதனால்
கொல்லாமையை மறவாதவனது உயர்ச்சி சொல்லப்பட்டது.] (௫)

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

இ-ள். உயிருண்ணுங்கூற்று- உயிரைக்கொண்டுபோம் இயமனானவ
ன், கொல்லாமை - கொலைசெய்யாமையாகிய விரதத்தை, மேற்கொ
ண்டு-மேலாகக்கொண்டு, ஒழுகுவான்-நடப்பவனது, வாழ்நாள்மேல்-
ஆயுளின்மேல், செல்லாது-செல்லான்—எ-று. (கருத்து.) கொலைசெய்
யாதவன் வாழ்நாளின்மேல் இயமன்செல்லான் - என்பதாம். * மிகவும்
பெரிய அறஞ்செய்தவரும் - மிகவும் பெரிய பாவஞ்செய்தவரும் - இம்

மையிலேதானே அவைகளின்பயன்களை அநுபவிப்பாரென்னும் அற முள்ளது அவனிவுபற்றி - இப்பெரிய அறஞ்செய்தவன்தானுங்கொல்ல ப்படானாகவே அவன் கருவுறும்போது நியமிக்கப்பட்ட ஆயுட்காலம்கு றைவுபடாதென்றற்கு - வாழ்நாள்மேல் கூற்றுச் செல்லா தென்றார்.

செல்லாதாகவே காலநீடித்திருந்து ஞானத்தைச் சம்பாதித்து மோட்ச த்தை அடைவானென்பது கருத்து. [இதனால் கொல்லாவிரதத்தோர்க் கு வரும் நன்மைசொல்லப்பட்டது.] (௬)

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை.

இ-ள். தான்-தான், பிறிது-வேறொன்றனது, இன்னுயிர்-இனிதாகி யவுயிரை, நீக்கும்-(அதனுடம்பினின்று) நீக்குதலாகிய, வினை-தொழிலை (அதுசெய்யாவிடத்து)—தன்னுயிர்-தனதுஉயிரானது, நீப்பினும்-(உ டம்பைவிட்டு) நீங்கிப்போமாயினும்; செய்யற்க-செய்யாதிருக்கக்கடவ ன்—எ-று. (கருத்து.) தன்னுயிர்போனாலும் பிறவுயிரைக்கொல்லாதே என்பதாம். ¹ பாவம் தான் கொலையுண்டவிடத்தே தேய்தலும் ஒன் றைக்கொன்றவிடத்தே வளர்தலும்-நோக்கி- தன்னை யொன்று கொன் றாலும் தான் அதனைக் கொல்லலாகாதென்றதென்க.) (௭)

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.



இ-ள். (யாகத்திலேகொன்றால்) நன்றாகும்- இன்பமிகுவதாகிய ஆக்கம்-செல்வமானது, பெரிது - பெரிதாகும், எனினும் - என்றுசொல் லப்பட்டதாயினும், சான்றோர்க்கு - (அறிவினாலே) நிறைந்தோர்க்கு, கொன்று - (ஓருயிரைக்) கொன்றதனால் ஆகும் - (அதனால்) உண்டாவதாகிய, ஆக்கம்-செல்வமானதுகடை-இழிந்ததாம்—எ-று.(கருத்து.) பெரியோ ர்க்குக் கொலையால் வருஞ்செல்வம் இழிந்ததென்பதாம். * இவர்க் குஞ் செல்வமாவது - தாமும் தேவராய்ச் சுவர்க்கத்திலே சென்று அ டையும் செல்வம் அது சிறிதாகையாலும், பின்னும் பிறத்தற்கு ஏது வாகலானும், மோட்சமாகிய அழிவில்லாத சுகத்தைத் அடைவோர்க்கு கடையெனப்பட்டது. சுவர்க்கபோகத்தை விரும்பினவருக்கு ஆகுமி னும் மோட்சத்தைத் விரும்பினவருக்கு ஆகாதென்றதனால் விதிவிலக் குகள் தம்முள்ளே விரோதப்படாமல் விலக்கியவாறாயிற்று. [இவைமூ ன்றுபாட்டாலும் கொலையினது குற்றம் சொல்லப்பட்டது.] (௮)

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

இ-ள். கொலைவினையராகிய - கொலைத்தொழிலை யுடையராகிய மாக்கள்-மனிதர் (அத்தொழிலினது இழிவை அறியாத நெஞ்சினரா ருந்தாலும்)—புன்மைதெரிவாரகத்து - அவ்விழிவை அறிவோரது நெ ஞ்சிலே, புலைவினையர் - புலைத்தொழிலாயக் கொள்ளுவர்—எ-று. (க ருத்து.) கொலை இழிந்ததென அறிந்தோர் அது செய்வோரைப் புலைத் தொழிலர் என்று எண்ணுவர்-என்பதாம். * கொலைவினைய ரென்றபடி பிறவியாகக் கொலையல்லாமையால். புலைவினையென்றதுதொழிலி லே புலையாவனென்றபடி. அவர் இம்மையிலே தாழ்வை அடைவரென் பதாம். (௯)

உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

இ-ள். செயிருடம்பின் - பார்க்கக்கூடாத நோயுடம்புடனே, செ ல்லாத்தீவாழ்க்கையவர் - வறுமைபொருந்திய இழிதொழில் வாழ்க்கை யுடையவரை (இவர் முற்பிறப்பிலே)—உயிர் - உயிர்களை, உடம்பின் (அவைநின்ற) உடம்புகளிலிருந்து, நீக்கியார் நீக்கினவர், என்பர்-என் று (வினைவிளைவுகளை அறிந்தோர்) சொல்லுவர்—எ-று. (கருத்து.) நோயையும் வறுமையுமுடையவரை முற்பிறப்பிற் கொலைசெய்தவரென்று பெ ரியோர்சொல்லுவர்-என்பதாம். * செல்லாவாழ்க்கை இழிவாழ்க்கையென் கூட்டுக. நோயுடம்பு- பெருவியாதி முதலானவை கொண்டவுடம்பு. இரு மையிலே இவையும் அடைவரென்பதாம். [இவை இரண்டுபாட்டா ல், கொல்வோர்க்கு வருந்தீங்கு சொல்லப்பட்டது.] அருளுடைமை மு தல் கொல்லாமை இறுதியாகிய இவைகளிலே சொல்லப்படாத விரத ங்களும் அடங்கும் அவ்வா அறிந்து அடக்கிக்கொள்க. (௰)

## ஞானம்.

இனி அவ்விரதங்களினாலே கரணங்கள் பரிசுத்தமானவிடத்து உண்டாவதும், மோட்சத்தைத்தருவதும், ஆகிய அறிவு அது நிலையாமைமுதல் அவாவறுத்தல் இறுதியாக நான்கதி காரத்தினால் அடக்கிச் சொல்லப் படுகிறது.

### ௩௪-ஆம் அதி-நிலையாமை.

அஃதாவது, தோற்றமுடையனவெல்லாம் நிலைபெறாத தன்மையாம். இதனை, அறிந்தவிடத்தே யல்லாமல் பொருள்களிலே பற்றுவிடாத

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு.

இ-ள். உடம்போடு-சரீரத்தோடு, உயிரிடை-உயிருக்கு உண்டாயா நட்பு-சிநேகமானது, குடம்பை-(முன்னே தனியாதிருந்த)முட்டையானது, தனித்தொழிய - தனித்துக்கிடக்க, புள்- (அதனுளிருந்த) பறவை, பறந்தற்று - பருவம்வந்தவிடத்தே) பறந்துபோந் தன்மையை யுடையதாகும்—எ-று. (கருத்து.) முட்டைக்கும் பறவைக்கும் சம்பந்தமில்லாமைபோல் உடலுக்கும் உயிருக்கும் சம்பந்தமில்லை - என்பதாம். * முன்னே தனியாமையாவது- கருவுள், தானும் ஒன்றாய்ப்பிறந்து வேறாகுமளவும் அதற்கு இடமாயிருத்தல்-அதனால் அம்முட்டை உடம்புக்கு உவமான மாயிற்று. அதனுள்ளே வேறுபாடில்லாமலிருந்தே பின்பு திரும்பி வாராமற்போகலால், புள் உயிர்க்கு உவமானமாயிற்று. நட்பு-நட்பில்லாமற்போகுகையைக் குறிப்பினாலே காட்டிநின்றது. அறிவாகியும், அருவாகியும், நித்தியமாகியும், உள்ள உயிரும்-அறியாமையாகியும், உருவாகியும், அநித்தியமாகியும், உள்ள உடம்பும் - தம்முளே மாறாகலால் வினைவசத்தினாலேகூடியதல்லாமல் சிநேகமில்லை யென்பது அறிக. [இதனால் அவ்வுடம்புகள் உயிர்நீங்கியவிடத்துக் கிடக்குமாறு சொல்லப்பட்டது.]

(அ)

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

இ-ள். (ஒருவனுக்கு) சாக்காடு-மரணம்வருதல், உறங்குவது போலும்-தூக்கம்வருதல்போலும், பிறப்பு-(அதன்பின்னே)பிறப்புவருதல், உறங்கிவிழிப்பதுபோலும்-தூங்கிவிழித்தல் வருதல்போலும்—எ-று. (கருத்து.) மரணம்நித்திரையையும் பிறப்பு விழித்தலையும் ஒக்கும்- என்பதாம். * உயிர்களுக்குஉறங்கலும்விழித்தலும்போல் இறத்தலும் பிறத்தலும், இயல்பாகக்கடிதிலேமாறி மாறிவருமென்பது கருத்து. நிலையாமையே நிலைபெற்ற விதத்தை அறிவித்தற்குப் பிறப்பும் உடன்சொல்ல



ப்பட்டது [இதனால் அவ்வுடம்புகளுக்கு இறப்பும் மாறிவருமாறு] சொல்லப்பட்டது.]

(௯)

புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

குயர்ந்த வுலகம் புகும்.

இ-ள். யானெனதென்னும் - (தானல்லாத உடம்பை) யானென்று
ம் (தன்னோடு சம்பந்தமில்லாத பொருளை) எனதென்றும் நினைத்து அ
வைகளிலே பற்றுச்செய்தற்கு ஏதுவாகிய, செருக்கு - மயக்கத்தை, அ
றுப்பான் - கெடுப்பவன், வானோர்க்கும் - தேவர்க்கும், உயர்ந்த - அடை
தற்கரிதாகிய, உலகம் - முத்தியுலகத்தில், புகும் - செல்லுவான் — எ-று.
(கருத்து.) யான் - எனது என்னுமயக்கமற்றவன் முத்தியடைவன்-என்
பதாம். ௳ மயக்கம் அறியாமை, அதனைக்கெடுத்தலாவது - குருபதேசத்
தாலும், யோகாப்பியாசத்தாலும், அவ்வுடம்பை யானல்லவென்றும்,
அப்பொருளை எனதல்லவென்றும், தெளிந்து அவைகளிலே - பற்றை
விடுதல். வானோர்க்குமென்னும் சிறப்புமை வருவிக்கப்பட்டது. [இத
னால் இருவகைப் பற்றையும் விட்டவர்க்கே மோக்ஷமுண்டென்பது
சொல்லப்பட்டது.] (௬)

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

இ-ள். பற்றினை (இருவகைப்) பற்றுக்களையும், பற்றி - இறுகப்பற்றி
விடா அவர்க்கு, விடாதவனை, இடும்பைகள் - துன்பங்கள், பற்றி - இறு



கப்பற்றி, விடாஅ - விட்டுநீங்காவாம் — எ-று. (கருத்து.) இருவகைப்ப
ற்றையும் விடாதவர்களைத் துன்பங்கள்விடாவாம்-என்பதாம். ௳ இறுகப்ப
ற்றல் - ஆசைமிகுதல்விடாதவர்க்கென்பதுவேற்றுமை மயக்கம். [இதனுல்ப
ற்றுக்களைவிடாதவர்க்கு மோக்ஷமில்லையென்பது சொல்லப் பட்டது]

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

இ-ள். தீரத்துறந்தார் - முழுதுந்துறந்தவர், தலைப்பட்டார் - (முத்
தியை) அடைந்தவராவார், மற்றையவர் - அப்படி துறவாதவர் மயங்கி-
மயக்கமுற்று - வலைப்பட்டார் - (பிறப்பாகிய) வலையிலே அகப்பட்டவ
ராவார் — எ-று. (கருத்து.) முற்றத்துறந்தவர்கள் முத்திப்பெறுவர் து
றவாதவர்பிறப்பிலுழல்வர்-என்பதாம். ௳ முழுதுந்துறத்தலாவது - பொ
ருள்களையும், இருவகை உடம்புகளையும் வெறுத்துப் பற்றற விடுதல்.
அப்படித்துறவாமையாவது - அவைகளிலேஒன்றைவிடத்தேசிறிதாயினு
ம்பற்றுச்செய்தல், அணிவுபற்றி - தலைப்பட்டாரென்றும், பொய்வழிக
ண்டேபிறப்புவலையுள் அகப்படுதலால் - மயங்கியென்றும், சொல்லினர்.

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்குமற்று
நிலையாமை காணப் படும்.

இ-ள். (ஒருவன்) பற்றற்றகண்ணே - (இருவகைப்) பற்றுகளையும்அ
ற்றபொழுதே, (அப்பற்றறுதியானது) பிறப்பு - (அவனது) பிறவியைஅ

றுக்கும் - ஒழிக்கும், மற்று - அவை அறாத பொழுது - நிலையாமை - (அவ
ற்றால் பிறத்தும் இறத்தும், வருகிற) நிலையாமையானது, காணப்படும் - அ
றியப்படும் — எ-று. (கருத்து.) பற்றற்றபொழுதே பிறப்பறும் - என்பதா
ம். ௳ காரணம் அற்றபொழுதே காரியமும் அற்றதாமுறைமைபற்றி - பற்
றற்றகண்ணே என்றார். இவை யிரண்டுபாட்டாலும் அவையிரண்டுஞ்சே
ர்த்துச் சொல்லப்பட்டன. (௯)

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்

பற்றுக பற்று விடற்கு.

இ-ள். பற்றற்றான்- (எல்லாப்பொருள்களையும் பற்றிநின்றே)பற்றில்லாதகடவுளாலே சொல்லப்பட்ட, பற்றினை- முத்திவழியை, பற்றுக- (இதுவேநல்லவழியென்று) மனத்திற்கொள்ளக் கடவர் (கொண்டு)அப்பற்றை- அதனிடத்து உபாயத்தை, பற்றுக- மனத்தினாலே செய்யக்கடவர், பற்று-(விடாதுவந்த)பற்று,விடற்கு-விடுதற்கு—எ-று. (கருத்து.) பற்றற்றான்சொல்லியமுத்திவழியைப் பற்றக்கடவர் - என்பதாம். * கடவுள் வாழ்த்துக்கேற்க இங்கும் பொதுவகையினாலே பற்றற்றானென்றார் அதனிடத்து உபாயமும்- தியானமும், சமாதியும்ஆம். விடாதுவந்தப்பற்று-அநாதியாய்வருமுடற்பற்று. [இதனால் அப்பற்று விடுதற்கு உபாயஞ்சொல்லப்பட்டது] (௰)



## ௩௬-ஆம்- அதி-மெய்யுணர்தல்.



அஃதாவது பிறப்புவீடுகளையும், அவற்றின்காரணங்களையும் விபரீத ஐயங்களால் அல்லாமல் உண்மையால் அறிதல்- இதை - வடநூலார் தத்துவஞானமென்பர், இதுவும் பற்றற்றான் பற்றினைப்பற்றிய விடத்தே உண்டாவதாகையால் அக்காரணவொற்றுமைபற்றி துறவின் பின் வைக்கப்பட்டது.

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானாம் மாணாப் பிறப்பு.

இ-ள். பொருளல்லவற்றை - மெய்ப்பொருள்க ளல்லாதவைகளை, பொருளென்று- மெய்ப்பொருள்களென்று, உணரும்- அறிகின்ற, மருளான்- விபரீதஞானத்தினாலே, மாணாப்பிறப்பு- மாட்சிமைப்படாத பிறவி (இன்பமில்லாத பிறவியென்றபடி)—ஆம்-உண்டாகும்—எ-று. (கருத்து.) பொய்ப்பொருள்களை மெய்ப்பொருளென்றெண்ணு மயக்கத்தாற் பிறப்புண்டாம் - என்பதாம். * இங்கேபொருளல்லவற்றைப் பொருளென்றுணர்தலாவது- மறுபிறப்பும், இருவகைப்பயன்களும், கடவுளும், இல்லையென்றும், மற்றும் இப்படிப்பட்டவைகளைச் சொல்லுகிறமயக்கநூல் வழக்கத்தைமெய்நூல் வழக்கமென்று துணிதல்-நரகர்-விலங்கு-மக்கள்- தேவர் என்கிறநால்வகைப்பிறப்புகளிலும் உள்ளது துன்பமேயாகலால்- மாணாப்பிறப்பென்றார். [இதனால்-பிறப்புத் துன்பமென்பதும் அதற்கு முதற்காரணம் விபரீதஞானமென்பதும் சொல்லப்பட்டது.] (௧)

இருணீங்கி இன்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

இ-ள். பிறப்பென்னும்- பிறவிக்கு முதற்காரணமெனப்படுகிற, பேதைமை- அஞ்ஞானமானது, நீங்க- கெட, சிறப்பென்னும்-மோக்ஷத்துக்கு நிமித்தகாரணமெனப்படுகிற, செம்பொருள் - செவ்வியபொருளை காண்பது- அறிவதே, அறிவு- (ஒருவனுக்கு) மெய்யுணர்வாம்—எ-று. (கருத்து.) பிறவிக்குக்காரணமாகிய அஞ்ஞானங்கெட உண்மைப்பொருளை காண்பதேயறிவாகும்- என்பதாம். ௳ பிறப்பென்னும் பேதைமையென்றும், சிறப்பென்னுஞ்செம்பொருளென்றும், காரியங்களைக்காரணங்களாக உபசரித்தார். ஐவகைக்குற்றங்களுள்- அஞ்ஞானம் மற்றைநான்குக்குங் காரணமாதலால் அச்சிறப்புபற்றி அதனையேபிறப்புக்குக் காரணமாக்கிச்சொல்லினர். எல்லாப்பொருள்களினும் சிறந்ததாகலால் மோக்ஷம் சிறப்பெனப்பட்டது. நித்தியமாகியும், பரிசுத்தமாகியும் எங்குநிறைந்துள்ள பிரமமென்னப்பட்ட முதற்பொருள் விகாரமில்லாமல் எக்காலமும் ஒரேதன்மையதாயிருத்தல்பற்றி அதனைச் செம்பொருளென்றார், முன்னேமெய்ப்பொருளென்றும், உள்ளதென்றார், சொல்லியதும் இதுபற்றியென்றறிக, அதனைக்காண்கையாவது- உயிர்தனது அஞ்ஞானங்கெட்டு அப்பொருளோடு ஒற்றுமையுற இடைவிடாமல்நினைத்தல் - இதனைச்சமாதியென்பர். மரணகாலத்தில் நினைக்கிறபடிபிறவி வருமென்றிருத்தலால் மோக்ஷமடைவோர்க்கு அக்காலத்திலே தத்துவப்பொருளைப்பாவிக்கும்படி; முன்னேபழகுதலாகிய இதனின்மிகுந்தஉபாயம் இல்லையென்பதறிக [இதனாலே தெளிதல் சொல்லப்பட்டது.] (அ)

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

இ-ள். (ஒருவன்) சார்பு - (எல்லாப்பொருள்களுக்கும்) சார்பாகிய அச்செம்பொருளை, உணர்ந்து- அறிந்து, சார்பு-இருவகைப்பற்றுக்களும் கெட- நீக்க, ஒழுகின்-நடக்கவல்லவனாயின், சார்தரும் - (முன் அவனைச் சேர்தற்குரியவையாய்நின்ற, நோய்- துன்பங்கள், அழித்து - (அவ்வுணர்வையும் ஒழுக்கத்தையும்) அழித்து, மற்றுச்சார்தரா - பின்சேரமாட்டாவாம்—எ-று. (கருத்து.) மெய்ப்பொருளையறிந்து இருவகைப்பற்றுக்களுங்கெட நடப்பவனைத் துன்பங்களணுகாவென்பதாம். ௳ இங்கே ஒழுக்கமென்றது- யோகவழிநடத்தலை. அது- இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, எனவெண்வகைப்படும், அத்துன்பங்களாவன-பிறவி அநாதியாய் வருதலால் உயிரினோ



டளவில்லாமல் சம்பாதிக்கப்பட்டிருக்கிற வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளால் அநுபவிக்கப் பட்டவையும், பிறந்தவுடம்பால் மோஷ்டுகொள்ளப்பட்டவையும், நீங்கலாகபின்னே அநுபவிக்கும்படி கிடந்தவையாம். அவைவிளக்கின்முன் இருள்போல் ஞானயோகங்களின் முன்னே கெடுதலால் அழித்துச்சார்தராவென்றார், பிறவிக்குக் காரணமாதலால் அவ்வினைப்பயனும் நோயெனப்பட்டது. [முன்மூன்று பாட்டுக்களாலும் பரம்பொருளை அறியப்பிறப்பறுமென்றார். அது அறுமிடத்தே பின்வரக்கிடந்த துன்பங்களெல்லாம் எப்படி போமென்னும், [illegible] எழுப்பிக்கொண்டு ஞானயோக முதிர்ச்சியுடைய உயிரைச் சேரமாட்டாமையாற் கெட்டு விடுமென்பது இதனாலே சொல்லப் (௯)
பட்டது.]

காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்.

இ-ள். (ஞானயோகங்களின் முதிர்ச்சி யுடையவர்க்கு)—காமம்-வெகுளி-மயக்கம் - விருப்பம் - வெறுப்பு - அஞ்ஞானம் - எனப்படுகிற இவை மூன்றன் - இக்குற்றம் மூன்றனது, நாமம் - பெயரும், கெட - கெடுதலால், நோய் - (அவைகளின் காரியங்களாகிய) வினைப்பயன்கள், கெடும் - உண்டாதலில்லை—எ-று. (கருத்து.) ஞானவான்களுக்கு முக்குற்றங்களால் வருந்துன்பங்களில்லை - என்பதாம். * அநாதியாகிய அவிச்சையென்னும் அஞ்ஞானமும் அதுபற்றியானென மதிக்கும் அகங்காரமும் அதுபற்றி எனக்கு இதுவேண்டுமென்னும் அவாவும் அதுபற்றி அப்பொருளிடத்தே செல்லும் ஆசையும் அதுபற்றி அதனது மறுதலையிடத்தே செல்லும் கோபமும் எனவடநூலார் குற்றம் ஐந்தென்பார். இவர் அவற்றுள் அகங்காரம் அவித்தையிலும், அவாவுதல் ஆசையிலும் அடங்குதலால் மூன்றென்றார். இடையறாத ஞானயோகங்களுக்குமுன்னே இக்குற்றமூன்றும் காட்டுத்தீமுன்னே பஞ்சுபோலுமாம். ஆதலால் அவைசிறிதுந்தோன்றா இவைமூன்றனுமக் கெடவென்றார் விகாரத்தாலே தொக்கநாமமும் என்னுமிழிவு சிறப்பும்மை வருவிக்கப்பட்டது. [காரணமாகிய அக்குற்றங்களைக் கெடுத்தோர் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையால் அவர்க்கு வருதற்குரிய துன்பங்களும் இல்லையென்பது இதனாலே சொல்லப்பட்டது.] முன்கிடந்த துன்பங்களும் மேல்வருந்துன்பங்களும் இல்லாமற் போகுகைமெய்யுணர்வின் பயனாதலால் இவை இரண்டும் இவ்வதிகாரத்திலே சொல்லப்பட்டன. இவ்விதத்தால் மெய்யுணர்ந்தார்க்கு உள்ளவை எடுத்தவுடம்பும் அது கொண்டவினைப்பயனுமே யென்பது பெற்றாம். (௰)



## ௩௭ - ஆம் - அதி - அவாவறுத்தல்.

அஃதாவது, முன்னும் பின்னும் வினைத்தொடர்பு அறுத்தார்க்கு நடுநிற்ற உடம்பும், அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையால் அப்பற்றி ஒரோவிடத்துத் துறக்கப்பட்ட புலன்களின்மேலே பழைய புழக்கவசத்தினாலே நினைவுசெல்லுமன்றே அந்நினைவும் பிறவிக்கு வித்தாமாகலால் அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வால் அறுத்தலாம். அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

இ-ள். எல்லாவுயிர்க்கும் - சகலவுயிர்களுக்கும், எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், தவா - கெடாதுவருகின்ற, பிறப்பு - பிறவியை, ஈனும் - விளைப்பதாகிய, வித்து - விதை, அவா - அவாவாகும் - என்ப - என

# ஙஅ - ஆம் - அதி-ஊழ்

அஃதாவது, நல்வினைப்பயனாகிய இன்பமும், தீவினைப்பயனாகிய துன்பமும், அவ்வினைகளைச் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதியாம்-ஊழ்-பால்-முறை-உண்மை-தெய்வம்-நியதி-விதி- என்பவை ஒருபொருட்சொற்கள், இது பொருளின்பங்களிரண்டிற்கும் பொதுவாய்நின்றதுள் வைக்கப்படாமையாலும் முன்சொல்லப்பட்ட அறத்தோடு சம்பந்தமுடைமையாலும் அறனிறுதியிலே சொல்லப்பட்டது

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

இ-ள். (ஒருவனுக்கு) கைப்பொருள்- கையிலிருக்கும்பொருள், ஆகூழால்- ஆகுதற்குக் காரணமாகிய ஊழினாலே அசைவின்மை- முயற்சியானது, தோன்றும்- உண்டாகும், போகூழால்-போகுதற்குக்காரணமாகிய ஊழினாலே, மடி-சோம்பலானது தோன்றும்- உண்டாகும்—எ-று. (கருத்து.) ஒருவனுக்குப் பொருள்வரும்விதியால் முயற்சியும் பொருளழியும் விதியால் சோம்பலும், உண்டாகு - என்பதாம். * ஊழானது ஒருபொருளினது ஆக்கவழிவுகளுக்குத் தன்னைக்காரணமாகிய முயற்சி சோம்பல்களையும் தானேதோன்றச்செய்யுமென்பதுகருத்து. (க)

பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

இ-ள். (ஒருவனுக்கு)—அறிவு- எல்லாவறிவும் உண்டாயிருந்தாலும், இழவூ- (கைப்பொருளை) இழத்தற்குக்காரணமாகியவூழ், (உற்றக்கடை-) பொருந்தியவிடத்து, பேதைப்படுக்கும்- (அதனை) அறியாமையாக்



கும் (அவனறிவு சுருங்கியிருந்தாலும்)—ஆகல் - (கைப்பொருள்) ஆகுதற்குக்காரணமாகிய, ஊழ், உற்றக்கடை- பொருந்தியவிடத்து, அகற்றும் (அதனை)விரிக்கும்—எ-று. (கருத்து.) போகும்ஊழ் அறிவில்லாமையையும் ஆகும்ஊழ் அறிவையும் தரும் - என்பதாம். * கைப்பொருளென்பது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது ஊழ் இயற்கையாகிய அறிவையும் வேறுபடுத்துமென்பதாம். (உ)

நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்.

இ-ள். (அறியாமையாக்குவதாகிய ஊழுடையவனொருவன்) நுண்ணிய- நுட்பமானபொருள்களையுடைய, நூல்பல - பலநூல்களையும், கற்பினும்-கற்றானாயினும் (அவனுக்கு)—மற்றும்-பின்னும், தன்னுண்மை-தனது ஊழினாலாகிய அறிவே, மிகும்- மேற்படும்—எ-று. (கருத்து.) நுட்பமாகிய நூல்களைக்கற்றாலும் அவனுக்கு ஊழினாலாகிய அறிவே மிகும்- என்பதாம். * பொருளினுண்மை: நூலின்மேல் ஏற்றப்பட்டது. மேற்படுதல்- கல்வியறிவைப் பின்னே இதை என்செய்தோமென்று அஞ்சப்படுதற்காகச் செயலுக்குத்தான் முற்படுதல். செயற்கையாகிய அறிவையும் கீழ்ப்படுத்துமென்பதாம். (ங)

இ-ள். கோடி - (அநுபவிக்கப்படும் பொருள்கள்) கோடியைத் தொகுத்தார்க்கும் - வருந்திச்சேர்த்தவர்க்கும், வகுத்தான் - தெய்வத்தினால் வகுத்த - வகுக்கப்பட்ட, வகையல்லால் - வகையாலல்லது, துய்த்தல் - அநுபவித்தல், அரிது - உண்டாகாது—எ-று. (கருத்து.) கோடிபொருளைச் சம்பாதித்தவர்க்கும் கடவுளமைத்தவளவையன்றி யநுபவித்தலரிது என்பதாம். உ எந்தவினை எந்தவுயிரினால் செய்யப்பட்டதோ அந்தவினையின்பயனை அந்த வுயிர்க்கேவகுத்தலால் வகுத்தானென்றார். தொகுத்தார்க்கு மென்றவும்மை தொகுக்காதவர்க்கு மாத்திரமல்லாமல் என்றபொருளைத் தருதலால் எச்சவும்மை. வேறுமுயற்சிகளாலே பொருள்களைச் சேர்க்கலாமேயல்லாமல் அநுபவித்தல்கூடாது அதற்கு ஊழுவேண்டுமென்பதாயிற்று. (எ)

துறப்பார்மன் துப்புர வில்லா ருறற்பால
ஊட்டா கழியு மெனின்.

இ-ள். துப்புரவில்லார் - (வறுமையினாலே) அநுபவித்தல் இல்லாதவர், துறப்பார் - (இல்வாழ்க்கையைத்) துறக்குங் கருத்துடையவராவார் (ஊழ்கள்)—உறற்பால - அடையும் பகுதியையுடைய துன்பங்களை, ஊட்டா - அடைவிக்காமல், கழியுமெனின் - நீங்குமாயின்—எ-று. (கருத்து.)



ஊழ்வினைகள் துன்பங்களை யடைவிக்காமல் நீங்கினவாறாயின் துப்புரவில்லார் துறப்பார்-என்பதாம். ஈ தம்மால்விடப்படும் பற்றுக ளெல்லாமதாமேவிடப்பெற்றிருந்தும் கருத்துவேறுபாட்டால்துன்பப்படுவது ஊழ்வலியாலென்னும் ஒழிந்தசொற்பொருளைக்காட்டலால்-மன்-ஒழியிசை. ()

நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்.

இ-ள். நன்று - நல்வினை, ஆங்கால் - இன்பங்களைக்கொடுக்கும்போது (அவ்வின்பங்களை நீக்கும் விதந்தேடாமல்)—நல்லவா - இவைநல்லவையென்றினைந்து காண்பவர் - அநுபவிப்பவர், அன்று - மற்றைத் தீவினை, ஆங்கால் - துன்பங்களைக்கொடுக்கும்போது (அத்துன்பங்களையும் அப்படி அநுபவியாமல்)—அல்லற்படுவது - (நீக்கும் விதந்தேடித்) துன்பப்படுவது, எவன் - என்னகாரியத்து—எ-று. (கருத்து.) நன்மையை யநுபவிப்பதுபோலத் தீமையையும் அநுபவிக்கவேண்டும் - என்பதாம். ஏ தாமே முன் செய்துகொண்டவையாயினும் பயனைக் கொடாமல் கழியாவாயினும் இரண்டும் இசைந்து அநுபவித்தற்கு உரியவையாம்-அவைகளிலே ஒன்றற்கு இசைந்து அநுபவித்து மற்றதற்கு அங்ஙனஞ்செய்யாமல் வருந்துதல் அறிவு அன்று - என்பதாம். [இவையிரண்டு பாட்டாலும் இன்பதுன்பங்களுக்குக் காரணமாகிய ஊழின் வலிசொல்லப்பட்டது.] (௯)

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று

சூழினுந் தான்முந் துறும்.

இ-ள். மற்றொன்று - (தன்னை விலக்குதற்பொருட்டுத்) தனக்குப் பகையாயிருக்கும் உபாயத்தை, சூழினும் - ஆராய்ந்தாலும், தான் - தான், முந்துறும் - (அவ்வுபாயத்தைப் பலதுமற்றொன்றையாவதாக்கினாக் கொண்டுவந்து அவ்வாராய்ச்சிக்கு) முற்பட்டுநிற்கும் (ஆதலால்) — ஊழின் - ஊழ்போல, பெருவலி - மிகுந்த வலிமையுடையவை, யா - எவை, உள - இருக்கின்றன — எ-று. (கருத்து.) ஊழை விலக்க நினைக்கின் அது வேறொன்றிற்கும் ஆதலால் அவ் ஊழினும் வலியவை இல்லை - என்பதாம். ஊழ் பெருவலி அதனையுடைய ஊழுக்கு ஆகுபெயர். சூழ்தல் பலருடனும் பழுதறவெண்ணுதல், ஊழானது அவ்வுபாயத்தைச் செய்தற்கேயல்லாமல் ஆராய்தற்கும் சமயங்கொடாதென்கிற பொருளைக் குறித்து நிற்கையால் உம்மை எச்சவும்மை எல்லாம் வழியாக வருதலுடைமையால் ஊழே வலிமையுடையதென்பதாம். [இதனால் அவ்விருவகை யூழ்களின் வல்லமையும் பொதுவாகச் சொல்லப்பட்டது.] (௰)

இனி இல்லறத்தின் வழிப்படுவனவாகிய பொருளின்பங்களுள் இம்மைமறுமை இரண்டையும் தருவதாகிய பொருளைச் சொல்லும்படி எடுத்துக்கொண்டார்.

முதலாவது - அறத்துப்பால் முற்றிற்று.

இரண்டாவது.

# பொருட்பால்.

பொருளாவது, அறவழியினாலே சேர்க்கப்பட்ட பொன் மணி முதலானவைகளாம். அது தனக்குத் தலைக்காரணமாகிய அரசனிடத்திலல்லவோ அடங்கும். அவ்வரசனியல்பாவது காலத்தை நடத்து முறைமையாம். அதனை அரசியல் அங்கவியல் ஒழிபியல் என மூன்றியல்களால் அருளிச்செய்தார்.

## அரசியல்.

அரசாவது, உலகத்திற்கு உயிரொத்திருக்கும் அரசனது தன்மையாம், அவ்வரசியலை இருபத்தைந்ததிகாரங்களினாலே சொல்லத்தொடங்கி முதலிலே இறைமாட்சி சொல்லுகிறார்.

## ௩௯-ஆம்-அதி-இறைமாட்சி.

அஃதாவது அரசனது நற்குண நற்செய்கைகளாம்.

படைகுடி கூழமைச்சு நட்பரணு

முடையா னரசரு ளேறு.

இ-ள். படை - சேனையும், குடி - நாடும், கூழ் - பொருளும், அமைச்சு - அமைச்சும், நட்பு - நட்பும், அரண் - அரணும் (என்று சொல்லப்பட்ட) ஆறங்கங்களையும்—உடையான் - உடையவன், அரசருளேறு - மன்னருள் ஆண்சிங்கம்போல்வனாவான்—எ-று. (கருத்து.) சேனை-நாடு-பொருள்-அமைச்சு-நட்பு-அரண் இவ்வாறங்களையுமுடையவன் அரசருளாண்சிங்கம் போல்வன் - என்பதாம். ஈ குடியையுடையநாடு குடியென்றும், கூழுக்கு ஏதுவாகியபொருள் - கூழென்றும் சொல்லப்பட்டன. அமைச்சு நட்பு பொருள் நாடு அரண்படை என்பதே முறையாயினும் இங்கேசெய்யுளோக்கிப் பிறழவைத்தார். ஆறுமுடையானென்றதனால் இவைகளிலொன்று குறையினும் அரசனிற் செல்லாதென்பது பெற்றாம் [இதனால் அரசனுக்கு அங்கமாவன இவையென்பதும் இவைமுழுதுமுடைமையே அவன்வெற்றிக்கு ஏதுவென்பதும்சொல்லப்பட்டன.] (க)

அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

இ-ள். வேந்தற்கு - அரசனுக்கு, இயல்பு - இயல்பாவது, அஞ்சாமை - திண்மையும், ஈகை - கொடையும், அறிவு - விவேகமும், ஊக்கம் - மனவெழுச்சியும், இந்நான்கும் - இந்த நான்கு குணங்களும், எஞ்சாமை



ழிவிலே நீங்காது நிற்கை—எ-று. (கருத்து.) அரசனுக்கியல்பாவது வல்லமை ஈகை யறிவு மனவெழுச்சியாகும் - என்பதாம். ஈ ஊக்கம் தொழிற்செய்தலில் மனவெழுச்சி இவற்றுள் அறிவு ஆறங்கங்களுக்கும் உரித்து ஈகை படைக்குரித்து. மற்றவை - தொழிலுக்குரியன. உயிர்குணங்களுள் ஒன்றுதோன்ற மற்றவை அடங்கிவரும் அவற்றுள் இவை அடங்கினால் அரசனுக்கும் கெடுவனபலவாம் ஆதலால் இவை எப்பொழுதும் தோன்றநிற்றல் இயல்பாக வேண்டுமென்பது தோன்றற்கு எஞ்சாமை வேந்தற்கியல்பென்றார். (உ)

தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

இ-ள். நிலனாள்பவர்க்கு - நிலத்தினையாளும் திருவினையுடையவனுக்கு, தூங்காமை யுடைமை - அக்காரியங்களிலே விரைவுடைமையும், கல்வி (யுடைமை) (அவைகளை அறிதற்கு ஏற்ற) - கல்வியுடைமையும், துணிவுடைமை - ஆண்மையுடைமையும் ஆகிய, இம்மூன்றும் - இம்மூன்று குணங்களும், நீங்கா - (ஒருபோதும்) நீங்காவாம்—எ-று. (கருத்து.) விரைவுடைமை, கல்வியுடைமை, வலியுடைமை, இம்மூன்றுமரசனை விட்டு நீங்காவாம் - என்பதாம். கல்வியதன் பயன்பாடு பின்னே சொல்லப்படும், ஆண்மையாவது ஒன்றையும் பாராமல் கடிதிலே செய்வதாகலால் அது இங்கே துணிவென்று உபசரிக்கப்பட்டது. இவற்றுள் - கல்வி ஆறங்கத்திற்கும் உரித்து, மற்றவை தொழிலுக்குரியன நீங்காமையென்பதற்கு முன்னே எஞ்சாமைக்கு உரைத்தபடி உரைத்துக்கொள்க. (௩)

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா

மான முடைய தரசு.

இ-ள். அறன் - (தனக்குச்சொல்லப்பட்ட) அறத்தினின்று, இழுக்காது - தவறாது நடந்து, அல்லவை - அறமல்லாதவைகளை, நீக்கி - (தன நாட்டிடத்தும்) உண்டாகாமற்கடிந்து, மறன் - வீரத்தினின்று, இழுக்கா - தவறாத, மானம் - மானத்தை, உடையது - உடையவன், அரசு - அரசனாவான் — எ-று. (கருத்து.) தன்னறத்தினின்று பாவங்களைநீக்கிவலிமையினுல் தவறாத மானமுடையவன் அரசன் - என்பதாம். * அவ்வறமாவது - வேதமோதல், ஈதல், யாகஞ்செய்தல், என்னும் பொதுத்தொழில்களிலும் - படைக்கலம் பயிலல், பல்லுயிரோம்பல், பகைத்திறமறுத்தல், என்னுஞ் சிறப்புத்தொழில்களிலும் - தளராமலிருத்தலை, அல்லவை, கொலை, களவு, முதலானவை குற்றமாகிய மானத்தைக்குறைத்தற்கு மறனிழுக்காமானமென்றார். அரசு - அரசனது தன்மையாதலால் அஃது உபசாரவழக்கால் அரசனைப்பேசுகின்றது. (௪)

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.



இ-ள். இயற்றலும் - (தனக்குப் பொருள்கள்வரும் வழிகளை மேன்மேலும்) உண்டாக்கலும், ஈட்டலும் - (அப்படிவந்தவைகளை) ஓரிடத்தே தொகுத்தலும், காத்தலும் - (தொகுக்கப்பட்டவைகளைப்) பிறர் கொள்ளாமல் காத்தலும், காத்த - காக்கப்பட்டவைகளை, வகுத்தலும் (அறம்பொருளின்பங்களின் பொருட்டுச்) செலவு செய்தலும், வல்லது - வல்லவன், அரசு - அரசனானவன் — எ-று. (கருத்து.) பொருள் வரவுதேடலிலும், சேர்த்தலிலும், காத்தலிலும், அறவழியில் செலவு செய்தலிலும், வல்லவன் அரசனாவான் - என்பதாம். * பொருள்களாவன - மணி - பொன் - நெல் முதலானவை. அவைவரும் வழிகளாவன - புதையலாயிருத்தலும், இறைகொள்ளலும், தன்னுடைமை காத்தலும், முதலானவை, பிறர்கொள்பவர், பகைவர், கள்வர், சுற்றத்தார், தொழில்செய்வோர், முதலானவர் - கடவுளர், அந்தணர், வறியோர், என்கிற இவர்க்கும் புகழுக்கும், கொடுத்தலை - அறத்தின் பொருட்டாகவும், யானை, குதிரை - படை - நாடு - அரண் என்கிற இவற்றுக்கும் பகையோடு கூடும்போது பிரிக்கப்படுவோர்க்கும், தன்னைவிட்டுப் பிரியும்போது கூட்டப்படுவோர்க்கும், கொடுத்தலை - பொருட்பொருட்டாகவும், மண்டபம் - வாவி - செய்குன்று - இளமரக்கா - முதலானவைகளைச் செய்தற்கும், ஐம்பொறிகளால் அநுபவிக்கப்படும் மனைவிகளுக்கும் கொடுத்தலை - இன்பப்பொருட்டாகவும், கொள்க. இயற்றுதல் முதலானவைகளைத் தவறாமல் செய்தல் அரிதாகலால் - வல்லதரசென்றார். இவ்விரண்டுபாட்டாலும் அரசனது நற்குண நற்செய்கையாகிய மாட்சியே சொல்லப்பட்டது. (௫)

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்.

இ-ள். மன்னவன்- அரசன், காட்சிக்கெளியன் (வழக்கறிவிப்பவர்க்கும் குறையிரப்பவர்க்கும்) காணுதற்கு எளியவனுகி கடுஞ்சொல்லனல்லனேல்- (யாவரிடத்தும்) கடியசொல்லினை அல்லாதவனுமாயிருந்தால். நிலம்- அவனது நிலத்தை உலகம் மீக்கூறும் (எல்லாநிலங்களினும்) உயர்த்திச் சொல்லும்—எ-று. (கருத்து.) காண்கைக்கு எளியவனும் இன்சொற்சொல்பவனும் ஆகிய அரசன் நிலத்தை உலகம் உயர்த்திச் சொல்லும் - என்பதாம். உ காணுதற்கு எளிமையாவது பெரிய அரசாட்சிமண்டபத்திலே அந்தணர் - சான்றோர் - உள்ளிட்டவரோடு சமயமுடையவனுயிருத்தல், கடுஞ்சொல்- கேள்வியிலும் தொழிலிலும் கடுமையாகியசொல், நிலத்தைஉயர்த்திச் சொல்லுமெனவேமன்னனை உயர்த்திச்சொல்லுதல் சொல்லவேண்டுவதில்லையாயிற்று. உயர்த்திச் சொல்லுதல்- இவன் காக்கின்றநாடு பசி, பிணி, பகை, முதலானவை இல்லாமல் யாவர்க்கு மிருந்த வின்பந்தருவதென்று புகழ்ந்துசொல்லல். (௬)

இன்சொலா லீத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு.



இ-ள். இன்சொலால்- இனியசொல்லுடனே, ஈந்து-கொடுத்து, அளிக்க- காப்பாற்ற, வல்லார்க்கு-வல்ல அரசனுக்கு, இவ்வுலகு-இந்தவுலகம், தன்சொலால்- தன்புகழோடுபொருந்தி, தான்கண்டனைத்து-தான் நினைத்த அளவினதாகும்—எ-று. (கருத்து.) இனியசொல்லுடன் கொடுத்துக் காக்குமரசனுக்கு தான்நினைத்தவை உண்டாகும்- என்பதாம். ஈ இன்சொல்- கேள்வியிலும், தொழிலிலும் இனிமையாகியசொல்-ஈதல்- வேண்டுவோர்க்கு வேண்டுவன கொடுத்தல், அளித்தல், தன்பரிவாரத்தினுள்ளார், பகைவராலும், நலிவுபடாமற் காத்தல். இவைசெய்தல் அருமையாகலால் வல்லார்க்கென்றும், அவன் மண்முழுதும் ஆளுமாகலால் இவ்வுலகென்றும், சொல்லினார். கருதியவளவிற்றுதல் - நினைத்தபொருளெல்லாம் காத்தல், (௭)

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

இ-ள். முறைசெய்து- (தான்) முறைசெய்து, காப்பாற்றும்-(பிறர் வருத்தாமல்) காத்தலுஞ்செய்யும், மன்னவன் அரசனானவன், (பிறவியிலே மனிதனேயாயினும்) —மக்கட்கு- மனிதர்களுக்கு, இறையென்று- (செயலினாலே) கடவுளென்று, வைக்கப்படும் - வேறுவைக்கப் படுவன்—எ-று. (கருத்து.) முறைமையின்படி குடிகளைக்காக்கும் அரசன் அக்குடிகளுக்குத்தெய்வம்-என்பதாம். ஈ முறை-அறநூலினும், நீதிநூலினும், சொல்லும்வழிமுறைமேலே சொல்லப்பட்டவர். வேறுவைத்தல் மனிதரிற் பிரித்து உயர்த்திவைத்தல். (அ)

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்

இ-ள். (ஒருவன்) கற்பவை- கற்கப்படுநூல்களை, கசடற - பழுதறக் கற்க-கற்கக்கடவன், கற்றபின்-(அப்படி)கற்றபின்னே, அதற்கு-அக்கல்விக்கு, தக-தகுதியாக, நிற்க - (அவைகளாலே சொல்லப்பட்ட வழியிலே) நிற்கக்கடவன்—எ-று. (கருத்து.) ஒருவன் கற்கப்படு நூல்களைக் குற்றமறக்கற்று அக்கல்வி யறிவிற்குத் தக்கபடி நிற்கக்கடவன்- என்பதாம். ✽ கற்பவையென்றதனால் அறம், பொருள், இன்பம், வீடு, என்கிற உறுதிப்பொருள்களை உணர்த்துகிற நூல்களென்பதுபெற்றும். கசடறக்கற்றலாவது- விபரீதசந்தேகங்களை நீக்கி - மெய்ப்பொருளை நல்லோர் பலருடனேயும் பலதரமும் பழகுதல், நிற்றலாவது - இல்வாழ்க்கையிலே கருமங்களைச்செய்து யோக்கியருக்குக்கொடுத்துத்தானு நுபவித்தலிலும், துறவிலே தவத்தால் மெய்யுணர்ந்து அவாவறுத்தலிலும், தவறுமை. [இதனால் சிறப்புடையவனுக்குக் கற்கவேண்டுமென்பதும் கற்கத்தகு நூல்களும் அவைகளைக்கற்கும் விதமும் கற்றதனுற்பயனும்சொல்லப்பட்டன.]



## ௪௰-ஆம் அதி—கல்வி

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

இ-ள். (அறியாதவராலே) எண்ணென்ப- எண்ணென்றுசொல்லப்படுவனவையும், ஏனையெழுத்தென்ப - மற்றை யெழுத்தென்று சொல்லப்படுவனவையும் ஆகிய, இவ்விரண்டும்- இக்கலைகளிரண்டையும் (அறிந்தோர்)—வாழுமுயிர்க்கு- வாழ்தற்குரியமனிதர்க்கு, கண்-கண்களாகும், என்ப- என்றுசொல்லுவார்—எ-று. (கருத்து.) கணிதநூல்களு மிலக்கணநூல்களு- மனிதர்களுக்குக் கண்களாகும்-என்பதாம். ✽ எண்-கணிதமும், எழுத்து- இலக்கணம், இவ்விருவிதநூல்களும்- அறமுதலாகியபொருள்களைக் காணுதற்குக் கருவியாகலால்-கண்ணெனப்பட்டன. [இதனால் கற்கப்படு நூல்களுக்குக் கருவியாவனவும் அவைகள் அவசியம் வேண்டுவனவென்பதும், சொல்லப்பட்டன.] (உ)

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

இ-ள். கற்றோர்- கற்றவரே, கண்ணுடையர்-கண்களுடையவர், என்பவர்- என்று உயர்த்திச்சொல்லப்படுபவர், கல்லாதவர்- கற்றிலாதவர் முகத்து-முகத்தினிடத்து; இரண்டு புண்ணுடையர்- இரண்டு புண்களை யுடையவர், (கண்ணிலார்) —எ-று (கருத்து.) கற்றோர்முகத்திலுள்ளது கண் மற்றோர் முகத்திலுள்ளது புண்-என்பதாம் ✽ தூரமான காலதேசங்களில் உள்ளவைகளையும் காணும் ஞானக்கண்ணுடைமையால்கற்றோரைக் கண்ணுடையரென்றும், அஃது இல்லாமல் நோய் முதலானவைகளாலே - துன்பஞ்செய்யும் ஊனக்கண்ணே யுடைமையால் கண்ணில்லாமை குறிப்பிக்கப்பட்ட ஊனக்கண்ணினது மெய்ம்மையாகிய சொரூபத்தைச் சொல்லிய விதத்தினாலே பொருளால் கலையுங் கருவியால் கலையுங் கற்றோரது உயர்வும், கல்லாதது இழிவும், இதனாலே சொல்லப்பட்டன.] (௩)

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்

இ-ள். (கற்றவனுக்குத் தன்னூடும் ஊருமே யல்லாமல்)—யாதானு
ம்-யாதாயினு மொருநாடும், நாடாம் - தன்னுடைய(யாதானும்)யாதாயினு
மொரூரும், ஊராம்-தன்னூராம்(அப்படியிருக்க), ஒருவன் - சாந்துணையு
ம்-இறக்குமளவும், கல்லாதவாறு-கல்லாமற்கழிகின்றது,என்-என்னகாரணத்
தால்—எ-று. (கருத்து.)கற்றவர்க்கு எந்நாடும் எவ்வூரும் தன்னூரா

[illegible]ஆம்-அதி—கல்வி. ராசக

இருக்க ஒருவன் கற்காமலிருப்பதென்ன-என்பதாம். ஆல். அசைகள்.
பின்னும் உயிரோடு செல்லுதலால் - சாந்துணையுமென்றார், பிறநாடு
ம் ஊர்களுந்தம்முடையவைபோலிருந்து மகிழ்ந்து பொருள்கொடுத்-
துப் பூசைசெய்தற்கு ஏதுவாகலால் - கல்விபோற்சிறந்ததுவேறொன்று
இல்லாதகாலின் அதனையே எப்போதும் கற்கவேண்டுமென்பதாம்.(எ)

ஒருமைக்கட் டான்கற்ற கல்வியொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

இ-ள். ஒருவற்கு-ஒருவனுக்கு, தான் - தான், ஒருமைக்கண் - ஒருபிற
ப்பிலிருந்து, கற்றகல்வி- கற்றவித்தையானது, எழுமையும் - எழுபிற
ப்புகளிலும், ஏமாப்பு - போயுதவுதலை, உடைத்து - உடையதாகும்—
எ-று. (கருத்து.) ஒருபிறவியிற்கற்ற கல்வி எழுபிறப்பிலும் உதவும்-எ
ன்பதாம். உ வினைகள்போல உயிரிடத்தேதங்கி அது சென்றவிடத்தே
செல்லுமாகலால் எழுமையுமே மாப்புடைத்தென்றார் உதவுதல் நல்
வழியிலேசேர்த்தல். (அ)

இ-ள். நிரம்பிய - (தான்) நிரம்புதற்கு ஏதுவாகிய, நூல் - நூலை, இன்றி - இல்லாமல் (ஒருவன்)—கோட்டிகொளல் - சபையினிடத்தே, (தான் ஒன்றைச்சொல்லுதல்)—அரங்கு - வகுப்பிடத்தை, இன்றி - இல்லாமல், வட்டாடியற்று - உண்டை உருட்டியதுபோலும்—எ-று. (கருத்து.) கல்வி கல்லாதவன் சபையிலொன்றைச் சொல்லல் வகுப்பறையில்லாமல் சூதாடியதுபோலும் - என்பதாம். * நிரம்புதல் - அறிய வேண்டும் அவைகளையெல்லாம் அறிதல் அப்படி செய்தலால் சொல்லும், பொருளும், வழிப்படாமற் போமென்பதாம். (க)

கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.

இ-ள். கல்லாதான் - கல்வியில்லாதவனொருவன், சொல் - (சபையினிடத்தே ஒன்று சொல்லுதலை, காமுறுதல் - வேண்டுதல், முலையிரண்டும் - இரண்டுமுலைகளும், இல்லாதாள் - இல்லாதவளொருத்தி, பெண் - பெண்மையை, காமுற்றற்று - வேண்டினதுபோலும்—எ-று. (கருத்து.) கல்லாதவன் சபையிற்பேச விரும்பின் இருகுசங்களுமில்லாள் பெண்டன்மையை யிச்சித்தல்போலும்-என்பதாம். * முலையிரண்டுமில்லாதாள் - முலைசிறிதுமில்லாதவளென்பதாம். அவளவியவிடத்து முடிவுபெறுது முடிவுபெற்றாலும் கலைகளினைக்குமென்பதாம். (உ)

சக-ஆம் அதி.—கல்லாமை.

கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

இ-ள். கல்லாதவரும் - கற்றிலாதவரும், நனிநல்லர் - மிகவும் நல்லவர் (தாமே தம்மையறிந்து)—கற்றார்முன் - கற்றோர்சபையிடத்து, சொல்லாதிருக்கப்பெறின் - (யாதொன்றையும்) சொல்லாதிருக்கப் பெறுவாராயின்—எ-று. (கருத்து.) கற்றார்முன் யாதொன்றையுஞ் சொல்லாதிருப்பின் கல்லாதவர் மிகநல்லர் - என்பதாம். * தம்மையறியாமையின் அது கூடாதென்றற்கு பெறினென்றும், பெற்றால் தம்மை வெளிப்படுத்தாமையாலும் - பின் கல்வியை விரும்புதலாலும் நனிநல்லரென்றும், சொல்லினர். [இவை மூன்றுபாட்டும் கல்லாதவர் சபையிலே பேசுதற்கு உரியரல்லவென்பது சொல்லப்பட்டது.] (ங)

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடையார்.

இ-ள். கல்லாதான் - கல்லாதவனது, ஒட்பம் - அறிவுடைமையானது, கழியநன்றாயினும் - (ஒரோவிடத்தே) மிகநன்றாயிருப்பினும், அறிவுடையார் - விவேகமுடையவர்கள், கொள்ளார் - (அதனை அறிவுடைமையாகக்) கொள்ளார்—எ-று. (கருத்து.) கல்லாதானறிவு ஒருவேளை நன்றாயிருப்பினுங் கற்றோர் கொள்ளார் - என்பதாம். * கல்லாதவனது அறிவுடைமை நன்றாகாது நன்றாயிற்றாயினும் நீர் மேலெழுத்துப் போலும். நிலைபெறாதாகலால் நிலைபெற்ற நூலறிவினையுடையவர் அவ்வறிவுடைமையை மதியாரென்பதாம்.

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

இ-ள். கல்லார்கண் - கல்லாதவரிடத்து - பட்ட - உண்டாகிய, திரு - செல்வமானது நல்லார்கண் - கற்றவரிடத்து, பட்ட - உண்டாகிய, வறுமையின் - வறுமையினும், இன்னாதே - துன்பஞ்செய்வதேயாகும் — எ-று. (கருத்து.) கல்லாதவரிடத் துண்டாகிய செல்வம் கற்றவரிடத்துண்டாகிய வறுமையினுந் துன்பஞ்செய்யும் - என்பதாம். * செல்வம் தனக்குரிய கற்றவரையும், வறுமை - தனக்குரிய கல்லாதவரையும், விட்டு மாறியிருக்கையால் அவ்விரண்டும் தாம் இடுக்கட்பட்டு உலகிற்கும் துன்பஞ்செய்தலால் ஒக்குமாயினும் செல்வம் கல்லாதவரைக் கெடுக்கும். வறுமை - கற்றோரைக் கெடுக்காது. ஆகலால் அவ்வறுமையினும் இச்செல்வம் இன்னாதென்றார். [இதனால் அவர் செல்வத்தின் குற்றம் சொல்லப்பட்டது.] (அ)

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.



இ-ள். கல்லாதவர் - கல்லாதவர்கள், மேற்பிறந்தாராயினும் - உயர்ந்த சாதியிலே பிறந்தாராயினும், கீழ்ப்பிறந்தும் - தாழ்ந்த சாதியிலே பிறந்திருந்தும், கற்றாரனைத்து - கற்றவரது பெருமை யளவினதாகிய, பாடு - பெருமையை, இலர் - இல்லாதவர்களாவார்கள் — எ-று. (கருத்து.) மேற்குலத்திற் பிறந்துங் கல்லாராயின் கீழ்க்குலத்திற் பிறந்தகற்றாரோடொப்பாகார் - என்பதாம். * உடம்போடு அழியும் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லுங்கல்வியுயர்ச்சி சிறப்புடையதென்பதாம். [இதனால் கல்லாதவரது சாதியுயர்ச்சியால் பயனில்லாமைசொல்லப்பட்டது.] (௯)

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

இ-ள். இலங்குநூல் - விளங்கிய நூலை, கற்றாரோடு - கற்றவருடன், ஏனையவர் - கல்லாதவர், விலங்கொடு - மிருகங்களோடு, மக்களனையர் - மனிதர் எவ்வளவு வன்மையுடையவரோ அவ்வளவு நிலையுடையவராவர் எ-று. (கருத்து.) கற்றவர் மக்களையும் கல்லாதவர் மிருகங்களையு மொப்பாவர் - என்பதாம். * விளங்கல் - மேம்படுதல், விலங்கைக் காட்டிலும் மனிதர்க்குமேலான அறிவுமிகுதி கற்றவரிடத்தே காணப்படுதலால் கல்லாதவரும் அவரும் சமானமான பிறப்பினரல்ல என்பதாம். [இதனால் கல்லாதவர் மனிதப் பிறப்பினாலே பயனடையாமை சொல்லப்பட்டது.] (௰)

## ௪௨-ஆம்-அதி - கேள்வி.

அஃதாவது, கேட்கத்தகுநூலின் பொருள்களைக் கற்றறிந்தவர் சொல்லக்கேட்குதல். கற்றவிடத்தே அரசனுக்காகிய அறிவை உறுதிப்படுத்தலாலும் கல்லாதவிடத்தும் அதனை உண்டாக்கலாலும் இது கல்வி கல்லாமைகளின் பின்வைக்கப்பட்டது.

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

தன்றால் அறிவினது சிறப்புச் சொல்லப்பட்டது.]

சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

இ-ள். (மனத்தை)—சென்றவிடத்தால்-(அது) போனவிடத்தி
லே, செலவிடா-போகவிடாமல் (அவ்விஷயங்களி னின்றுமமீட்டு
ஆராய்ந்து)—தீது-தீயதினின்றும், ஒரீஇ-நீக்கி, நன்றின்பால்-நல்
லத்து, உய்ப்பது-போகவிடுவது, அறிவு-விவேகம்—எ-று. (கரு
மனம்போனவழியிற் போகவிடாமல் நன்மையிற் செலுத்துவதே
வு-என்பதாம். ஐ குறிளையை நிலமறிந்து செலுத்துங் வா
வேறுக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது அறிவென்று
உயிர்க்குணமாகலால்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

இ-ள். எப்பொருள் - யாதொருபொருளை, யார்யார்வாய்-
வர்வாயில், கேட்பினும்-கேட்டாலும், அப்பொருள் - அப்பொ
ரு, மெய்ப்பொருள் - மெய்யாகியபயனை, காண்பது- காணவல்ல
றிவு- விவேகம்—எ-று. (கருத்து.) எவரெவர்வாயினுல் எப்பொ
ருளைக்கேட்டாலும் அதனுள் மெய்ப்பொருளை அறிவதே அறிவு
பதாம். ஐ முக்குணங்களும்மாறிமாறிவருதல் யாவர்க்கும் உண்ட
ல் உயர்ந்தபொருளை இழிந்தார்வாயிலும், இழிந்தபொருளை உ
வாயிலும், உறுதிப்பொருளை பகைவர்- வாயிலும், கெடுபொரு
நேகர்வாயிலும், ஒரோவிடத்தே கேட்கப்படுதலால் எப்பொருள்
யார் வாய்க்கேட்பினுமென்றார். சொல்லுவாரியல்பு நோக்கா
பொருளின் பயனைக்கு நல்லதைக்கொண்டு தீயதைவிடுவது—எ
ன்பதாம்.

இவ.

ருசுஉ-ஆம்-அதி—அறிவுடைமை.

யதிகல்.

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

இ-ள். அஞ்சுவது - அஞ்சத்தகுவதை, அஞ்சாமை - பயப்ப
மை, பேதைமை - அறிவில்லாமையாம், அஞ்சுவது - அஞ்சத்தகுவ
அஞ்சல் - பயப்படுதல், அறிவார்தொழில் - விவேகிகளது தொழில்

ம்—எ-று. (கருத்து.) அறிவுடையவர் அஞ்சத்தகுவதற்கு அஞ்சு
என்பதாம். ✽ அஞ்சத்தகுவன - பாவம் பழி கேடுமுதலாகிய பலவ

னும் சாதிபற்றி அஞ்சுவதென்று ஒருமையாகக்கூறினர். அஞ்சாமை
என்றது செய்துநிற்றல். அஞ்சுதல் - எண்ணிச்செய்யாதுவிடுதல்.
ஞ்சாமையை இறைமாட்சியாக முன்னே சொல்லுதலால் இங்கே அ
சவேண்டுமிடம் சொல்லியபடி. [இவை இரண்டுபாட்டாலும் அறி
டையவரது இலக்கணம் சொல்லப்பட்டது.] (அ)

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

இ-ள். (வரக்கடவதாகிய அதனை)—எதிரதாக்காக்கும் - முன்னே
அறிந்துகாக்கவல்ல, அறிவினார்க்கு - விவேகமுள்ளவர்க்கு, அதிர-(
வர்) நடுங்கும்படி, வருவதோர்நோய் - வருவதாகியதொருதுன்பமும்,
ல்லை—எ-று. (கருத்து.) வருந்துன்பங்களை முன் அறிந்துகாக்கும் அ
வுடையார்க்குத் துன்பம்இல்லை என்பதாம். ✽ இதனாலே வரக்கடவத
கிய துன்பத்தைக் காத்தற்குரியகாலம் அறிவிக்கப்பட்டது காத்தல்
அத்துன்பத்தின் காரணத்தை விலக்குதல். [அவர்க்குத் துன்பமில்ல
மை இதனாலே சொல்லப்பட்டது.] (கூ)

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

இ-ள். அறிவுடையார் - விவேகமுடையவர்கள், எல்லாமுடையார் -
(ஒன்றும்இல்லாதவராயிருந்தாலும்) எல்லாமுடையவராவார், அ
ர் - விவேகமில்லாதவர்கள், என்னுடையரேனும் - எல்லாமு
வராயிருந்தாலும், இலர் - (ஒன்றும்) இல்லாதவராவார்—எ-று.
(க.) அறிவு இல்லார் எல்லாம் வுடையவராயினும் ஒன்றுமில்



ர்வராவார் - என்பதாம். ✽ செல்வங்களெல்லாம் அறிவினாலே ச
ம்பாதிக்கவும் காக்கவும் படுதலால் அதனையுடையவரை - எல்லாமு
டையாரென்றும், அவையெல்லாம் முன்னமேயே அமைந்து கிடந்தாலு
அழியாமற்காத்தற்கும் அறிந்தபடித்தே சம்பாதித்தற்கும் கருவியி
ல அறிவில்லாமையால் அறிவில்லாதவரை - என்னுடையரேனு மில
ரென்றும் சொல்லினர். [இதனால் அறிவுடையவரது உடைமையும், ம
றவரது இல்லாமையும் சொல்லப்பட்டன.] (௰)

## ௪௪-ஆம்-அதி-குற்றங்கடிதல்.

இ-ள். உற்ற-(தெய்வத்தாலாவது மனிதராலாவது தனக்கு) வந்த நோய்-துன்பங்களை, நீக்கி-(நீக்கும்விதம் அறிந்து) நீக்கி, உறாமை-(பின் அப்படிப்பட்டவை) வாராதபடி, முற்காக்கும்-முன் (னறிந்து) காக்கவல்ல, பெற்றியார்-தன்மையுடையவரை, பேணி-அவர் ○ மகிழத்தக்கவைகளைச்செய்து, கொளல்-(அரசன் துணையாகக்) கொள்ளக்கடவன்—எ-று. (கருத்து.) வந்த துன்பங்களை நீக்கி அத்துன்பங்கள் வாராமற்காக்கவல்லவரை யரசன் சிநேகிக்கக்கடவன்-என்பதாம். * தெய்வத்தால்வருந்துன்பங்களாவன - மழையில்லாமையாலும், அதிகமழையாலும், காற்றத்தீப்பிணி இவைகளாலும்வருவன. அவை- கடவுளரையும், தக்கோரையும்நோக்கிச்செய்யப்படுஞ் சாந்திகளால் நீக்கப்படும். மக்களால்வருந்துன்பங்களாவன-பகைவர்-கள்வர் - சுற்றத்தார் - தொழில்செய்வார் இவர்களால் வருவன, அவைசாமபேததானதண்டங்களாகிய நால்வகை யுபாயங்களுள் ஏற்றதனால் நீக்கப்படும். முற்காத்தலாவது-தெய்வத்தால் வருமவைகளை உற்பாதங்களால் அறிந்து அச்சாந்திகளாலே காத்தலும், மனிதரால்வருமவைகளை அவரது குணம் ※ இங்கிதம் ‡ ஆசாரம் செயல்-என்பவைகளால் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றாலே காத்தலும் ஆம். ஆகவே புரோகிதனையும், மந்திரிகளையும் சொல்லியதாயிற்று [இவை இரண்டுபாட்டாலும் பெரியோரது இலக்க[illegible] துணையாகக் கொள்ளவேண்டுமென்பதும், கொள்[illegible] ப்பட்டன.]

[illegible]மையான் [illegible]
[illegible]ப்படுவது-(வை
அரியவற்று ளெல்லா மரிதே பெ[illegible] [illegible]மிருக்கதாம்)—எ-று.
பேணித் தமராக் கொளல். [illegible]மையானது எல்லாக்குற்ற

[illegible] [illegible]குணங்களெல்லாம் சேர்

○ மகிழத்தக்கவை - நன்மை-[illegible] மேற்படவல்ல வியஸ்பு
※ இங்கிதம் - குறிப்பு[illegible] தான் மேற்படவல்ல [illegible]பப்படுவதொ
‡ ஆசாரம் [illegible]பால் எத்துன்றுமென்னப்படுவதொ
[illegible]மென்பது இடக்குறைவிகாரம். [இவ்வி
[illegible] [illegible]மைகொல்லப்பட்டன.] (அ)

[illegible]—பெரியாரைத்துணைக்கோடல். [illegible]

இ-ள். பெரியாரை-பேரறிவுடையவர்களை, பேணி- அவர்மகிழத்தக்கவைகளைச்செய்து, தமரா- தமக்குச்சிறந்தவராக, கொளல்- கொள்ளுதல் (அரசர்க்கு)—அரியவற்றுளெல்லாம் - அரியபேறுகள் பலவினும், அரிதே-அரிது—எ-று. (கருத்து.) பெரியோரைச்சிநேகித்தல் அரசன் பெறும்பேறுகளுள் மிகச்சிறந்தபேறு- என்பதாம். * உலகத்திலே அரியவையெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்கு இப்பேறு சிறந்ததென்றது இதனால் அவையெல்லாம் உண்டாதலைக் குறித்தென்க. (௩)

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

இ-ள். தம்மிற்பெரியார் - (அறிவுமுதலானவைகளாலே) தம்மின் மிகுந்தவர், தமரா - தமக்குசிறந்தவராக, ஒழுகுதல் - (தாம் அவர் வழியிலே நின்று) நடத்தல் (அரசர்க்கு)—வன்மையுளெல்லாம் - வலியுடைமை பலவினும், தலை - முதன்மையாம்—எ-று. (கருத்து.) தம்மினும் பெரியோரைச் சிநேகித்தல் அரசன் வல்லமையுள் தலைமையான வல்லமை-என்பதாம். * இப்பெரியார் பொருள்படைவரங்களால் நீக்கக்கூடா

தலையாகிய தெய்வத்தால் வருந் துன்பமுதலாயவைகளையும் நீக்குதற்கு உரியவராதலால் அவைகளாலாகிய வலியினும் இத்துணைவலி சிறந்ததெனப்பட்டது. (௪)

சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

இ-ள். சூழ்வார்-மந்திரிகளை, கண்ணாக-கண்ணாகக்கொண்டு, ஒழுகலால்-(தன்பாரம்) நடத்தலால், மன்னவன் - அரசன், சூழ்வாரை-அப்படிப்பட்டமந்திரிகளை, சூழ்ந்து - ஆராய்ந்து, கொளல் - (தனக்குத்துணையாகக்) கொள்ளக்கடவன்—எ-று. (கருத்து.) அரசன் மந்திரிகளைக் கொண்டு ஒழுகிவர நடத்தலால் அவர்களைத் துணையாகக் கொள்ளவேண்டும் - என்பதாம். * தானே ஆராய வல்லவனாயிருந்தாலும் அளவில்லாத தொழில்களால் வருத்தமடையுமரசனது பாரம் அல்லாராய்தலொன்றே தொழிலாகிய மந்திரிகளால் அல்லாமல் இனிது நடவாமையபற்றி அவரைக் கண்ணாக்கிச் சொல்கின்றார். ஆராய்தல் அமைச்சியலிலே சொல்லப்படுகிற இலக்கணமுள்ளவரென்பதனை ஆராய்தல். [இவை மூன்றுபாட்டாலும் பெரியாரைத் துணைக்கொள்ளுதலின் சிறப்புச்சொல்லப்பட்டது.] (௫)

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

இ-ள். தக்காரினத்தனாய் - யோக்கியராகிய இனத்தினையுடையவனாய், தானொழுக - தானும் (அறிந்து) நடக்க, வல்லானை - வல்லவரசனை, செற்றார் - பகைவர், செயக்கிடந்தது-செய்யக்கிடந்த ஒருதுன்பமும்



இல் - இல்லை—எ-று. (கருத்து.) பெரியோரினத்தை யுடையவனாய் அறவழிப்பட்ட அரசன் பகைவரால் வெல்லப்படான் - என்பதாம். தக்கார் - அறிவொழுக்கங்களாலே தகுதியுடையவர். ஒழுகுதல் - அவர்களின் வழிதவறாது நடத்தல். வஞ்சித்தல் - கூடினவரைப் பிரித்தல் வேறுபாடுவிளைத்தல் - என்கிற இவைகளாலும், வலிமையாலும் பகைவர் செய்யும் துன்பங்கள் பலவகைப்பட்டிருப்பினும் தானும் அறிந்து அறிந்தோரது சொல்லையும் கேட்டு நடக்கையால் - அத்துன்பங்களிலே ஒன்றும்வாராதென்றற்கு- செற்றார் செயக்கிடந்ததில்லென்றார். (௬)

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

இ-ள். (இயலைக்கண்டால்) இடிக்கும்-கோபித்துப் புத்திசொல்லும், துணையாரை- துணையாந்தன்மையை யுடையவரை, ஆள்வா- (இவர் எமக்குச் சிறந்தவரென்றுகொண்டு) ஆளுகிற அரசனை, கெடுக்குந் தகைமையவர் - கெடுக்கும் பெருமையையுடைய பகைவர், யார் - (உலகத்தில்) யாவர்—எ-று. (கருத்து.) அறிவுறுத்திச் சொல்லும் மந்திரிகளைக்கொண்டு அரசாளுமரசருக்குப் பகைவரில்லை - என்பதாம். ‡ நியலை - பாவங்களும், நீதியல்லாதவையும், துணையாந் தன்மையாவது தமக்கு அளவில்லாமையும், அரசனிடத்து அன்புடையவராயிருக்கையும் ஆம். அப்படிப்பட்டவர் சொல்வழியினின்று விடாமையால் அவ்வாயாளுமரசர் ஒருவராலும் கெடுக்கப்படாரென்பதாம். ஏ - அசை [இவை இரண்டுபாட்டாலும் அதன்பயன் சொல்லப்பட்டது ] (௭)

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

இ-ள். இடிப்பாரை - கண்டிக்கும் புத்திசொல்லாரை, இல்லாத - (த னக்குத்துணையாகக்) கொள்ளாமையால், ஏமரா - காவலற்ற, மன்னன் - இராசன், கெடுப்பாரிலானும் - (பகைவரைக்) கெடுப்பவர் இல்லாதிருந் தாலும், கெடும் - (தானே) கெடுவான்—எ-று. (கருத்து.) புத்திசொல் லுமந்திரிகளைப் பெற்றிலாவரசன் கெடுக்கும் பகைவரில்லாமற் கெடு வான்-என்பதாம். ஃ கெடுப்பார் உண்டாயிருப்பரென்பது தோன்ற இ லானுமென்றார். தானே கெடுதலாவது - பாகனில்லாத யானைபோல் வழியல்லாத வழியிலே சென்று கெடுதல். (அ)

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

இ-ள். முதலிலார்க்கு - முதற்பொருளில்லாத செட்டிகளுக்கு, ஊ தியம் (அதனால் வருகிற) லாபமானது இல்லை (அதுபோல்) மதலையா ம் (தம்மைத்) தாங்குவதாகிய, சார்பிலார்க்கு - துணையில்லாத அரசர்க்கு,



நிலை - (அதனால்வருகிற) நிலையானது. இல்லை - இல்லை,—எ-று. (கருத்து.) முதற்பொருளில்லாதவர்க்கு இலாபமில்லை, அதுபோல மந்திரிகளில்லா தவரசனுக்குத் துணையில்லை என்பதாம். ஃ எப்படி முதலைக்கொண்டே இலாபம பெறவேண்டுமோ அப்படியே தாங்குவாரைக் கொண்டே நி லைபெறவேண்டுமென்பதாம், நிலை அரசர் தமது அரசாட்சியின் பாரந் தோடு அசையாது நிற்கை. (கூ)

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

இ-ள். (அரசன்) நல்லார் - பெரியவரோடு, தொடர்கைவிடல் - ந ட்புக்கொள்ளாது விடுதல் - (தான்தனியனாயிருந்துகொண்டு)—பல்லார் - பலரோடும், பகைகொளலின் - விரோதங்கொள்ளுதலினும், பத்தடுத் த - பத்துப்பங்கு அதிகமாக, தீமைத்தே - தீமையையுடையதேயாம் -எ-று. (கருத்து.) அரசன்பெரியோர் சிநேகத்தை விடுதல் பலபேர் பகைகொ ள்ளுகினும் பத்துமடங்கு தீமையுடையதாம்- என்பதாம். ஃ பலர் பகை யால் ஒருமுகமா வெதிர்த்தகாலத்து ஒருவிதத்தாலே பிழைத்தல் கூடி னுங்கூடும் பெரியோர் நட்பைவிட்டால் ஒருவிதத்தாலும் பிழைத்தல் கூடாமையால் இதுசெய்தல் அதனினும் தீதென்பதாம். [இவை மூன் றுபாட்டாலும் அது செய்யாத விடத்து உண்டாகுங் குற்றம் சொல் லப்பட்டது.] (ய)

## ஆம்-அதி-சிற்றினஞ்சேராமை.

அஃதாவது - சிறியவினத்தைப் பொருந்தாமை. சிறியவினமாவது நல்ல நிலைமையும், நியதிலே-நிலைமையும் இல்லையென்போரும்-கூடும் காக்காரும் முதலாயினோர் கூட்டம் அறிவை வேறுபடுத்தி இருமையும் கெடுக்குமியல்பினதாகிய இதனைப்பொருந்தினால் பெரியாரைத்துணை க்கோடல் பயனில்லையென்பது அறிவித்தற்கு இது அதன்பின்வைக் கப்பட்டது.

காட்டி - (தன்னைக்) காட்டி, இனத்து - (அவன் சேர்ந்த) இனத்தினிடத்தே, உளதாகும் - உண்டாகும் — எ-று. (கருத்து.) ஒருவனுக்கறிவானது அவன் சேர்ந்த இனத்தினாலாகும் - என்பதாம். ஃ மெய்ம்மை நோக்குதற்கு முன்னே மனத்துள்ளதுபோலக்காட்டியும் பின்னோக்கியவிடத்தே பழகிய இனத்துள்ளதாகியும் இருக்கையால் காட்டி எனஇறந்தகாலத்தினாலே சொல்லினார். [சிறப்பறிவும் மனத்தினிடத்து அப்போதே உண்டாவதென்பவரைநோக்கி அங்கே வெளிப்படுமளவேயுள்ளது அதற்கு மூலம் இனமென்பது இதனாலே சொல்லப்பட்டது.] (௪)

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்.

இ-ள். மனம் - (அச்சிறப்பறிவுவெளிப்படுதற்கு இடமாகிய) மனம், தூய்மை - பரிசுத்தனாகைத்தன்மையும், செய்வினை - செய்தொழில் தூய்மை - பரிசுத்தனாகைத்தன்மையும் ஆகிய, இரண்டும் - இவ்விரண்டும்; இனம் - (சேர்ந்த) இனம், தூய்மை - பரிசுத்தனாகைத்தன்மை, தூவா - பற்றுக்கோடாக, வரும் - உண்டாகும் — எ-று. (கருத்து.) மனப்பரிசுத்தமும் செய்வினைப்பரிசுத்தமும் சேர்ந்த இனத்தாலாகும் - என்பதாம். ஃ மனத்தூயனாதலாவது - சிறப்பறிவு வெளிப்படும்படி இயற்கையாகிய அறியாமையினீங்குதல் செய்வினை தூயனாதலாவது - மனோவாக்குகளாலே செய்யப்படுகிற நல்ல தொழிலையுடையவனாகுதல். [ஒருவன் பரிசுத்த இனத்தனாகவே அவ்வினத்தோடு பழகியவசத்தால் பரிசுத்த மனத்தனாகி அம்மனத்தினிடத்தே சிறப்பறிவுதோன்ற அதனால் பரிசுத்தமான சொல்லும் செயலும் உடையவனாவனென்று இதனால் இனத்தின் உள்ளதாம் விதம்சொல்லப்பட்டது.] (௫)

மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

இ-ள். மனந்தூயார்க்கு-மனம் பரிசுத்தமானவர்க்கு, எச்சம்-மக்கட்பேறு, நன்றாகும்-நன்றாகவிருக்கும், இனந்தூயார்க்கு-இனம்பரிசுத்தமானவர்க்கு, நன்றாகாவினை-நன்றாகாதசெயல், இல்லை-(யாதும்) இல்லை—எ-று. (கருத்து.) மனஞ்சுத்தமுள்ளவர்க்கு மக்கட்பேறு நன்றாகும், இனம்பரிசுத்தமுள்ளவர்க்கு நன்மையில்லாச் செயலில்லை-என்பதாம். உ காரணத்திலே காரியத்தின் குணம் உள்ளது அக்காரியத்தினிடத்தும் உண்டாமாதலால் தந்தைகுணம் மைந்தனிடத்திலும் உண்டாமென்பது பற்றி எச்சநன்றாகுமென்றும் நல்வினைக்கேதுவாகி எண்ணிச் செயப்படுதலால் இல்லைநன்றாகாவினையென்றும் சொன்னார். (௬)

மனநலம் மன்னுயிர்க் காக்க மினநலம்
எல்லாப் புகழுந் தரும்.

இ-ள். மன்னுயிர்க்கு-நிலைபெற்றவுயிர்களுக்கு, மனநலம்-மனத்தினது நன்மையானது, ஆக்கம்-செல்வத்தை (தரும்)—இனநலம்-இனத்தினது



நன்மையானது, எல்லாப்புகழும்-(அதனோடு) எல்லாப்புகழ்களையும், தரும்-கொடுக்கும்—எ-று. (கருத்து.) மனத்தினன்மை-செல்வத்தைத்தரும், இனத்தின்நன்மை-புகழைத்தரும்-என்பதாம். உ மனநன்றானால் அறமுண்டாகலால் அஃது ஆக்கந்தருமென்றும் புகழ்செய்தற்குரிய நல்லோர் தாமே இனமாதலால் இனநலம் எல்லாப்புகழுந்தருமென்றும் சொல்லினார் [முன்னே மனநன்மை இனநன்மை பற்றி வருமென்பதனை உட்கொண்டு அதை இயல்பாகவே யுடையார்க்கு இவ்வினநன்மை வேண்டாவென்பாரைநோக்கி அதுவே யல்லாமல் அவ்விடப்பட்ட பலவும் தருமென்று அவர்க்கும் இதுவேண்டுமென்பது இவ்விரண்டுபாட்டாலும் சொல்லப்பட்டது.] (௭)

மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

இ-ள். மனநலம்-மனநன்மையை, நன்கு-(முன்னை) நல்வினையினாலே, உடையராயினும்-(தாமே) உடையவராயிருந்தாலும், சான்றோர்க்கு-நிறைந்தோர்க்கு, இனநலம்-இனநன்மையானது, ஏமாப்பு-(அதற்கு) வலிமையாதலை, உடைத்து-உடையது—எ-று. (கருத்து.) மனநன்மையுடையவரானாலும் பெரியோர்க்கு இனநன்மை யுறுதி யுடையதாம்-என்பதாம். உ அந்நல்வினை உள்ளவிடத்தும் மனநலத்தை வளர்த்து வருதலால் அதற்கு வலியாத லுடைத்தாயிற்று. (௮)

இ-ள். (தொழில்செய்யுமிடத்து) அழிவதூஉம்- (அப்போது அதனால்)அழிவதையும், ஆவதூஉம்- (அழிந்தால் பின்னை)ஆவதையும், ஆகி வழிபயக்கும்-பிற்காலத்துந்தரும், ஊதியமும்-இலாபத்தையும்,சூழ்ந்து-ஆராய்ந்து, (உறுவதாயின்)செயல்-செய்யக்கடவன்-எ-று. (கருத்து.) ஒருவனழிவதையு மாவதையு மிலாபத்தையுமாராய்ந்து தொழில் செய்யக்கடவன்- என்பதாம். * உறுதலாவது- செய்கிறபோது அழிவதின் ஆவதுமிகுந்து பிற்காலத்தும் வளர்ந்து வருதல். அழிவதில்லாமையால் பின்வரும் ஆக்கத்தை ஊதியமென்றார். எனவே அவ்வூதியம்பெற்றால் செய்யும்போது அழிவதும் ஆவதும் ஒத்திருந்தாலும் விடலாகாதென்றதாயிற்று. இரண்டு காலத்திலும் பயனுடைமை தெரிந்து செய்யவேண்டுமென்பதாம். (க)

தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

இ-ள். தெரிந்த- (தம்மாலே) தெரிந்துகொள்ளப்பட்ட, இனத்தொடு- இனத்துடனே, தேர்ந்து- (செய்யத்தகுந்தொழிலை) ஆராய்ந்து, எண்ணி- (பின்னே தாமேயும்) எண்ணி, செய்வார்க்கு- செய்துமுடிக்கவல்ல அரசருக்கு, அரும்பொருள்- பெறுதற்கரியபொருள், யாதொன்றும்- இல்- இல்லை—எ-று. (கருத்து.) நல்லினத்தோடாராய்ந்து செய்யுமரசர்க்குப் பெறுதற்குரிய பொருளொன்றுமில்லை என்பதாம். * தொழிலா



வது-போர்க்குச்செல்லுகைமுதல் வெல்லுகைமுடிவாகியதொழில், பொருள்களுக்கு ஏதுவாகியவதனில் தவறாமையால் அரிய பொருள்களெல்லாம் எளிதிலே பெறுவாரென்பதாம். [இவையிரண்டு பாட்டாலும் செய்யத்தகுந்தொழிலும் அதுசெய்யும்விதமும்சொல்லப்பட்டன.] (உ)

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

இ-ள். ஆக்கங்கருதி- (பின்பெறக்கடவதாகிய) லாபத்தைநோக்கி, முதல்- (முன்பெற்றுள்ள)முதலையும், இழக்கும்-இழத்தற்கு ஏதுவாகிய செய்வினை- தொழிலை, அறிவுடையார்- விவேகமுள்ளவர், ஊக்கார்- மேற்கொள்ளார்—எ-று. (கருத்து.) அறிவுடையோர் இலாபத்தை நினைத்து முதலிழக்குந் தொழிலைச் செய்யார்- என்பதாம். * ஆக்கமேயன்றி முதலிழக்குந்தொழில்களாவன- வலியும்-காலமும் இடமும்-அறியாமல் பிறர் தேசத்தைப் பிடிக்கப்போய்த் தந்தேசத்தையும் இழத்தல் போல்வன. உம்மை வருவிக்கப்பட்டது. முன்செய்துவந்த வினையாயினுமென்றற்குச் செய்வினையென்றார். (ங)

தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்.

இ-ள். இளிவென்னும்- (தமக்கு)இளிவரவென்னும், ஏதப்பாடு-குற்றமுண்டாதலை, அஞ்சுபவர்- அஞ்சுவோர் தெளிவிலதனை-(இனத்தோடும் தனித்தும் ஆராய்ந்து) தெளியப்படாததொழிலை, தொடங்கார்- தொடங்கமாட்டார்—எ-று. (கருத்து.) குற்றத்திற்கஞ்சும் பெரியோர் தெளியப்படாததொழிலைச் செயயார்-என்பதாம். * தொடங்கினால் நடுவிலேயும் மடங்குதல் கூடாமையால் தொடங்காரென்றார். இளிவரவு- அத்

தொழிலாற் பின்னே அழிவை அடைந்துவிடத்து அதன்மேலும் அறிவும் மானமும் இலரென்று உலகத்தார் இகழுமிகழ்ச்சியாம் அதனிடையமாகவே உண்டாமாதலால் தெளிவுள்ளவிடத்துத் தொடங்குகவென்பதாம். (௪)

வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு

இ-ள். வகை- (சென்றுகடக்கும்) விதங்களையெல்லாம், அறச்சூழாது- முற்றவெண்ணாமல் (சிலவெண்ணியவளவிலென்றபடி) எழுதல் (அரசன்பகைவர்மேலே) செல்லுதல், பகைவரை - அப்பகைவரை, பாத்தி- வளருநிலத்திலே, படுப்பது- நிலைபெறச்செய்வதாகிய, ஓராறு- ஒரு வழியாம்—எ-று. (கருத்து.) அரசன்யோசியாமற்பகைவர்மேற்செல்லப் பகைவரை நிலைபெறச்செய்தலாம் - என்பதாம். * வகையாவன - வலி காலம் இடம் என்கிற இவைகளால் தனக்கும்பகைவர்க்கும் உண்டாகிய



நிலைமைகளும் - தொழிலைத்தொடங்கும் விதமும் - அதற்குவரும் இடையூறுகளும்- அவைகளைநீக்கும்விதமும்-அவரை வெல்லும்விதமும்- அதனாலே பெறும்பயனும் முதலானவை. சிலவெண்ணுதலாலும் பகைவர்க்கு இடமாம் ஆதலால்முற்றும்பெற எண்ணவேண்டுமென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் விடத்தகுந்தொழிலும் விடாதவிடத்து உண்டாம இழுக்கும் சொல்லப்பட்டன.] (௫)

செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

இ-ள். (அரசன் தனதுதொழில்களிலே) செய்தக்கவல்ல - செய்யத்தகாதவைகளை, செய் - செய்தலால், கெடும்- கெடுவான், (இனி அதனிலே மாத்திரமல்லாமல்) செய்தக்க - செய்யத்தக்கவைகளை, செய்யாமையானும் - செய்யாமையினாலும், கெடும் - கெடுவான்—எ-று. (கருத்து.) அரசன் செய்யத்தகாதவற்றைச் செய்தலாலும் செய்யத்தக்கவற்றைச் செய்யாமையாலுங் கெடுவனென்பதாம். * செய்யத்தகாதவை - பெருமுயற்சியை யுடையவையும், செய்தாற் பயனில்லாதவையும், பயன்சிறிதானவையும், ஐயமானவையும், பின்னே துயரம்விளைப்பவையும் ஆம். செய்யத்தக்கவை - முன் சொல்லப்பட்டவைகளுக்கு எதிரானவை. இவிச்செய்தல் செய்யாமைகளால் அறிவுஆண்மை பெருமையென்கிற மூவகைப்பட்ட ஆற்றல்களிலே - பொருளும் படையும் என இருவகைப்பட்ட பெருமையானது கருக்கிப் பகைவர்க்கு எளியவனாவான் ஆதலால் இரண்டும் கேட்டிற்கு ஏதுவாயின. [இதனால் செய்யத்தக்கவைகளைச் செய்துவிடத்தக்கவைகளை நீக்கவென்று இருவகையும் உடன்சொல்லப்பட்டன.] (௬)

எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு.

இ-ள். கருமம் - (செய்யத்தக்க) தொழிலும், எண்ணி-(முடிக்கும் உபாயத்தை) எண்ணி, துணிக - தொடங்கக்கடவன், துணிந்தபின் தொடங்கியபின், எண்ணுவம் - எண்ணக்கடவோமென்பது, இழுக்கு-

குற்றமாகலால்—எ-று. (கருத்து.) இராசன் செய்தொழிலை முடிக்குமுபாயமாதலெண்ணிச் செய்யக்கடவன். தொடங்கியபின் னெண்ணுதல் குற்றம்-என்பதாம். * உபாயமாவது- கொடுத்தல் - இன்சொற்சொல்லல் - வேறுபடுத்தல்-ஒறுத்தல்-என்பன. இவற்றை வடநூலார்-தானம்-சாமம் - பேதம்-தண்டம்- என்பர். இவையெல்லாம் எண்ணாது தொடங்கில் அத்தொழில் பகைவனால் விலக்கப்பட்டு முடியாமையாலும், * கைவிடுதல் கூடாமையாலும், அரசனியல் குயப்படுவா னாதலால் இழுக்கென்றார். செயத்தக்கவையும் உபாயம் அறிந்து தொடங்கவேண்டுமென்பதாம். (எ)

௪௬௮ ௪௭-ஆம்-அதி—தெரிந்துசெயல்வகை.

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

இ-ள். ஆற்றின் - முடியுமுபாயத்தால், வருந்தாவருத்தம் - (காரியத்தைக்குறித்து) வருந்தாதமுயற்சியானது, பலர்நின்று - (அநேகர்) பலர்நின்று, போற்றினும் - (புகாபடாமல்) காப்பினும், பொத்துப்படும் - புகாவிடும்—எ-று. (கருத்து.) முடியுமுபாயத்தால் வருந்தாமுயற்சியானது பலர்காத்தாலுங் குற்றம்படும்-என்பதாம். * முடியுமுபாயத்தாலே முயலவாவது - பொருளாசைக்காரனிடத்தே கொடுத்தலையும் - கழுதிணையாளன் - சோம்பலாளன்-முறையே போர்செய்து நொந்தவன் - இவரிடத்தே இன்சொல்லையும், ஆண்மையுடையானொடு தன் பகுதியோடு பொருந்தாதவன் - இவரிடத்தே வேறுபடுத்தலையும், இவைகளின் வழிவாராதவிடத்து இவரிடத்தேயும் - நம்பக்கூடாத கீழ்மக்களிடத்தேயும் - ஒறுத்தலையும், செய்துசெல்லும் வழியால் முயற்சிசெய்தலாம். புகாவிடுதல்-நன்மையைத்தராது தீமையைத்தருதல், உபாயத்தின் சிறப்புச் சொல்லியபடி. (அ)

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

இ-ள். (வேற்றரசரிடத்து) நன்று - நல்லவுபாயத்தை, ஆற்றலுள்ளும் - செய்தலுள்ளும், தவறு - குற்றம், உண்டு-உண்டாம், அவரவர் - அவரவருடைய, பண்பு-குணங்களை, அறிந்து - (ஆராய்ந்து) தெரிந்து, ஆற்றாக்கடை - (அக்குணங்களுக்கு இசையச்) செய்யாவிடத்து—எ-று. (கருத்து.) அவரவர் குணங்களையறிந்திசையச் செய்யாவிடின் நன்மைசெய்தலுள்ளும் குற்றமுண்டாம் - என்பதாம். * நல்லவுபாயம் கொடுத்தலும் இன்சொற் சொல்லலும் ஆம். அவரவர் குணங்களை அறிந்துசெய்யாமையாவது - அவைகளுக்கு உரியவரல்லாவிடத்தே செய்தல். தவறு-தொழில்முடியாமை. (௯)

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு

கொள்ளாத கொள்ளா துலகு.

இ-ள். தம்மோடு - தமது நிலைமையோடு, கொள்ளாத - பொருந்தாத உபாயங்களை, (அரசர் தொழில் முடித்தற் பொருட்டுச் செய்வாராயின்) உலகு - உலகமானது, கொள்ளாது - அங்கீகரியாது; [இகழுமென்றபடி.] (ஆதலால்)—எள்ளாத - (அவ்வுலகத்தாரால்) இகழப்படாத உபாயங்களை, எண்ணி - நாடி, செயல்வேண்டும் - செய்யவேண்டும்—எ-று. (கருத்து.) அரசர்பொருந்தாத வுபாயங்களைச் செய்வாராயி னுலகமேற்றுக்கொள்ளாது - என்பதாம். ※ தமது நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது - தாம் வலியரா யிருந்துகொண்டு மெலியார் செய்தற்குரிய தான சாமபேதங்களைச் செய்தலும், மெலியோரா யிருந்துகொண்டு வலியோர்செய்தற்குரிய தண்டம் செய்தலும், ஆம். இவை அறிவிலார் செயல்களாதலால் - உலகங்கொள்ளாதென்றார். [இவையைந்துபாட்டானுஞ் செய்யப்படுந் தொழில்களுக்கு உபாயமும் அதனுரிமையும், சொல்லப்பட்டன.] (௰)

# ௪௮-ஆம்-அதி-வலியறிதல்.

அஃதாவது, அவ்வுபாயங்களுள் தண்டஞ்செயக்கருதிய அரசனுனவன் நால்வகை வலிமைகளையும் ஆராய்ந்து அறிதலாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

இ-ள். வினைவலியும் - (தான்செயக்கருதிய) தொழிலின் வலிமையையும், தன்வலியும் - (அதனைச்செய்துமுடிக்கும்) தனது வலிமையையும், மாற்றான்வலியும் - (அதனை விலக்கும்) பகைவனது வலிமையையும், துணைவலியும் - (இருவர்க்கும்) துணையாவோரது வலிமைகளையும், தூக்கி - ஆராய்ந்து, (தனது வலிமை மிகுமாயின்) செயல் - (அத்தொழிலைச்) செய்யக்கடவன்—எ-று. (கருத்து.) தொழில்வலிமையையும் தன்வலிமையையும் பகைவன் வலிமையையும் துணைவலிமையையும், ஆராய்ந்து தன்வலிமிகுமாயி னரசனத்தொழிலைச் செய்யக்கடவன் - என்பதாம். ※ இந்நால்வகை வலிகளுள் - தொழில்வலி - கோட்டையைவளைத்தலும் - பிடித்தலும் - முதலாகிய தொழில்களாலும், மற்றவை மூவகையாற்றல்களாலும், கூறுபடுத்தி ஆராயப்படும். தன் வலிமைமிகுந்த விடத்துச் செய்கவென்றதனால் தோற்றல் நிச்சயமாகிய தன்வலிமைக் குறைவிலிடத்தும், வெல்லுதல் ஐயமாகிய தன்வலிமையும் அவன்வலிமையும், ஒத்தவிடத்தும், ஒழிகவென்றதாயிற்று. (க)

ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

யும், அச்சிறும்-அச்சுமுறியும், அப்பண்டம் - அம்மயிலிறகை (அதுசுமக்குமளவி னல்லாமல்)—சாலமிகுத்து மிகவும் அதிகப்படுத்தி, பெயின் - ஏற்றினால்—எ-று. (கருத்து.) மயிலிறகையேற்றப்பட்ட பண்டியுமச்சுமுறியும் அவ்விறகை யதிகமாகவேற்றினால் - என்பதாம். * உம்மை பண்டியினது வலிமையையும், மயிலிறகினது மெலிமையையும் காட்டிநின்றது (எளியவொன்று பலகூடும், பகைக்கொள்வோன் தான் வலியவனாயிருந்தாலும், அவர் கூடியவிடத்தே வலியழிவானென்னும் பொருள்பட நிற்கையால் - இது பிறிதுமொழிதலணி) [அது செயலாகாதென்றமையின் - இதனால் பகைவன்வலியும் அவன் துணைவலியும் அறியாதவிடத்துப்படுங்குற்றம் சொல்லப்பட்டது.] (௫)

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க் கிறுதி யாகிவிடும்.

௪அ-ஆம்-அதி—வலியறிதல். ௪௭௬

இ-ள். கொம்பர்- (ஒருமரக்) கொம்பினது, நுனி- நுனியிலே, ஏறினார்- ஏறிநின்றவர், அஃது- அவ்வளவினை, இறந்து- கடந்து, ஊக்கின்- (மேலும் ஏற) மனவெழுச்சிகொள்ளின் (அவ்வெழுச்சி—உயிர்க்கு- (அவ) ருயிர்க்கு, இறுதியாகிவிடும்-முடிவாகிவிடும்—எ-று. (கருத்து.) நுனிக்கொம்பிலேறினவர் அவ்வளவைக்கடந் தேறுவாராகி லவருயிர்க்கு முடிவுவரும்-என்பதாம். * இறுதிக்கு ஏதுவாமதனை இறுதியென்றார். பகைவர்மேற் போர்க்குச் செல்லத்தொடங்கித் தன்னாலே கூடியமட்டுஞ்சென்று நின்றவன்பின் அவ்வளவிலே நில்லாமல் மனவெழுச்சியினாலே மேலுஞ்செல்லுவானாயின் அவ்வெழுச்சியானது தொழில் முடிதற்கு ஏதுவாகாமல் அவனுயிர்முடிதற்கு ஏதுவாகும் என்கிறபொருள்

பட நிற்கையினாலே இதுவும் அவ்வணி [அளவறிந்து நிற்கவேண்டுமென்றமையின் இதனால்தொழில் வலிமை அறியாதவிடத்து உண்டாம் இழுக்குச் சொல்லப்பட்டது.] (௬)

ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

இ-ள். ஆற்றின்- (கொடுக்கும்) வழியினாலே, அளவு- (தனக்குள்ள பொருளி) னளவை, அறிந்து- தெரிந்து, ஈக- (அதற்கு ஏற்கக்) கொடுக்கக்கடவன், அது- அக்கொடுத்தலானது, பொருள்- பொருளை, போற்றி வழங்குநெறி - காப்பாற்றிக்கொண்டு நடக்கும்வழியாம்—எ-று. (கருத்து.) தனக்குள்ள அளவறிந்துகொடுக்கக்கடவன் அக்கொடைபொருளைக் காப்பாற்றும் வழியாம்-என்பதாம். * கொடுக்கும்வழி - இயற்றலுமென்னும் குறளுரையிற் சொல்லப்பட்டது, அளவுக்கேற்பக் கொடுத்தலாவது- ஒன்றனையளவை நான்குபங்கிட்டு, அவற்றுள் இரண்டைத்தன் செலவுக்காக்கி, ஒன்றைப்பின்னை ஆபத்துவந்தவிடத்து அதைநீக்குதற்கு வைப்பாக்கி, மற்றொன்றைக்கொடுத்தல். காப்பாற்றிக்கொண்டு நடத்தலாவது - ஒருவரோடு நட்பில்லாதவரைத் தம்மோடு நட்புண்டாக்கிக்கொண்டு நடத்தல், முதலிலே செலவுசுருக்கினும் பொருள் ஒருகாலும் நீங்காதென்பதாம். (௭)

ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

வேந்தர்க்கு வேண்டும் பொழுது

இ-ள். காக்கை- காகமானது,கூகையை- (தன்னின்வலிதாகிய)கோட்டானை,பகல்-பகற்பொழுதில்,வெல்லும்-வெல்லும்;(அதுபோல்)—இகல்-பகைவரை, வெல்லும்-வெல்லக்கருதுகின்ற, வேந்தர்க்கு-அரசர்க்கு,



பொழுது-(அதற்கேற்ற) காலம், வேண்டும்-வேண்டும்,—எ-று. (கருத்து.) காகங்கோட்டானைப் பகலில்வெல்லும் - அதுபோல அரசர் பகைவரைவெல்லக் காலம்வேண்டும்- என்பதாம். ✱ காலமல்லாதவிடத்தே வலிமையினாலே பயனில்லை யென்பது விளக்குகின்றது இனிக்காலமாவது வெம்மையுங்குளிர்ச்சியும் சமமாய்நோய்செய்யாமல் நீரும் உணவுமுதலானவை யுடைத்தாய்ச் சேனைவருந்தாமல் செல்லுந்தன்மையாம். (இதுஎடுத்துக்காட்டுவமையணி) [இதனால் காலத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௧)

பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

இ-ள். (அரசன்) - பருவத்தோடொட்ட - காலத்தோடுபொருந்த, ஒழுகல்- (தொழில்செய்து) நடத்தல், திருவினை- (ஒருவரிடத்தும் நில்லாது நீங்கும்) செல்வத்தை, தீராமை- (தன்விடத்து) நீங்காமல், ஆர்க்கும்-கட்டுவதாகிய, கயிறு-கயிறுகும்—எ-று. (கருத்து.) காலமறிந்துதொழிலைநடத்தல், செல்வத்தைக் கட்டும் கயிறும்- என்பதாம். ✱ காலத்தோடுபொருந்துதல் - காலந்தப்பாமற்செய்தலாம். தொழில் கைகூடிவருதலால் அதனால் உண்டாகும் செல்வம்-எக்காலும்- நீங்காதென்பதாம் (௨)

அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

இ-ள். அருவினையென்ப- (அரசராற்) செய்தற்கரியதொழில்களென்று சொல்லப்படுமவை, உளவோ - உண்டோ, கருவியால் (அவைகளை முடித்தற்காகும்) சாதனங்களுடனே, காலம் - செய்தற்காகும், காலத்தை, அறிந்து- தெரிந்து, செயின்-செய்தால்—எ-று. (கருத்து.) காலமறிந்துசெய்தால் அரியதொழில்களுளவோ - என்பதாம். ✱ கருவிகள்-மூலபலமுதலானவைகளும் கல்லனைகள் உபாயங்களும், ஆம். அவை உண்டாயவிடத்தும், காலம்வேண்டுமென்பது அறிவித்தற்குக் கருவியாலென்றார். இப்படிசெய்வார்க்கு எல்லாத் தொழில்களும் எளிதின் முடியுமென்பதாம். (௩)

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலம்
கருதி யிடத்தாற் செயின்.

இ-ள். (ஒருவன்)—ஞாலம்-பூமிமுழுதையும், கருதினும்- (தானே ஆள) நினைத்தாலும் (அது)—கைகூடும் -கைக்குள்ளாம், காலம் - காலத்தை, கருதி- அறிந்து, இடத்தால்- இடத்தோடுபொருந்த, செயின்- (அதற்குச்செய்யும் தொழிலைச்) செய்வானாகில்—எ-று. (கருத்து.) அரசன் காலமறிந்து தொழில் செய்தால் உலகெல்லாமாள நினைத்தாலும் கைகூடும்- என்பதாம். ✱ இவ்விரண்டாகியவிடத்தும் காலம்வேண்டுமென்பதற்குஇடத்தானென்றார். இப்படி செய்வார்க்குக் கைகூடாதவையும்

கைகூடுமென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் காலமறிதலின் பயன் சொல்லப்பட்டது.] (௪)

காலங் கருதியிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

இ-ள். ஞாலம்- பூமியெல்லாம், கலங்காது- தப்பாமல், கருதுபவர்- (கொள்ள) நினைக்குமரசர், (தம்வலிமிகுமாயினும் அதனை நினையாமல்) காலம்- அதற்கு (ஏற்ற) காலத்தையே, கருதி- நினைத்து, இருப்பர் (அதுவருமளவும்) இருப்பர், பகைமேற்செல்லார்—எ-று. (கருத்து.) பூமிமுற்றுமாள நினைக்குமரசர் பகைவரைவெல்லக் காலம் பார்த்திருப்பர் என்பதாம். ✽ அதைநினையாமற்சென்றால் பொருளும் படையும் ஆகிய இருவகைப் பெருமைகளும் தேய்ந்து வருந்துவராகலால் இருப்பரென்றார், இருத்தலாவது- நட்பாக்கல்- பகையாக்கல்- மேற்செல்லுதல்- இருத்தல்- பிரித்தல்- கூட்டல் என்கிற அறுவகைக்குணங்களுள் மேற்செல்லுதலுக்கு - எதிராகியதொழில் [இதனாற்காலம் வாராதவிடத்தே செய்யவேண்டியது சொல்லப்பட்டது.] (௫)

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

இ-ள். ஊக்கமுடையான்- மிகுந்த வலிமையுடையவரசன், ஒடுக்கம்- (பகைமேற்செல்லாது) காலம்பார்த்திருக்கின்ற இருப்பு, பொருதகர்- போர் செய்கின்ற ஆட்டுக்கடா, தாக்கற்கு- (தன்பகை கெடப்) பாய்தற்பொருட்டு, பேருந்தகைத்து- பின்னே கால்வாங்குந்தன்மைத்து—எ-று. (கருத்து.) வலிமையுள்ளவரசன் பின்வாங்குதல் வெல்லும் பொருட்டாம்- என்பதாம். ✽ உபமானத்திலே தாக்கற்கென்று சொல்லப்பட்டிருக்கையினாலே உபமேயத்திலே வெற்றிபெறுதற் கென்பதுகொள்க. [இதனால் அவ்விருத்தலின் சிறப்புச்சொல்லப்பட்டது] (௬)

பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

இ-ள். ஒள்ளியவர்- அறிவுடையவரசர், ஆங்கே- (பகைவர்தீங்குசெய்த) அப்பொழுதே, (அவரறிய)—பொள்ளென- விரைவாக, புறம்வேரார்- புறத்திலே கோபஞ்செய்யார், காலம்- (தாம் அவரைவெல்லுதற்கேற்ற) காலத்தை, பார்த்து- அறிந்து (அதுவருமளவும்)—உள்வேர்ப்பர்- உள்ளேகோபஞ்செய்வார்—எ-று. (கருத்து.) அறிவுடையவரசர் கோபத்தைப் புறங்காட்டார் காலம் வருமளவு மக்கோபத்தை யுள்ளேவைத்திருப்பர்- என்பதாம். ✽ பகைவரறியக் கோபஞ்செய்தவிடத்தே அவர் தம்மைக்காத்துக் கொள்வாராகலால் புறம் வேராரென்றும் கோபஞ்செய்யாமல் அடக்குதல் கூடாமையால் உள்வேர்ப்ப ரொள்ளியவரென்றும் சொல்லினார். (௭)

செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை.

இ-ள். (வெல்லக்கருதிய அரசர்) செறுநரை - பகைவரை, காணின் - கண்டால், சுமக்க - (அவர்க்கு முடிவுகாலம் வருமளவும்) பணியக்கடவர்; இறுவரைகாணின் - அக்காலம்வந்து முடியுமிடத்து, தலை - (அவரது) தலை, கிழக்காம் - கீழ்விழும் — எ-று. (கருத்து.) அரசர் பகைவரைக்கண்டா லவர்க்கு முடிவுகாலம் வருமளவும் பணியக்கடவர் - என்பதாம். * பகைமை தோன்றாமல் மிகவும் வணங்குகவென்றற்கு சுமக்கவென்றும் அப்படி வணங்கவே அவர் தம்மைக் காத்துக்கொள்ளாமையினாலே தப்பாமல் கெடுவாரென்றற்கு கிழக்காந் தலையென்றும் சொன்னார். [இவ்விரண்டுபாட்டாலும் காலம்பார்த்திருக்குமிடத்துப் பகைமைதோன்றாமல் இருக்கவேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (அ)

எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

இ-ள். (பகையைவெல்ல நினைத்திருந்த அரசர்) — எய்தற்கரியது - (தம்மாலே) பெறுதற்கரியகாலம், இயைந்தக்கால் - வந்துகூடியக்கால், அந்நிலையே - அது நிற்குமளவிலே, செய்தற்கரிய - (அதன்முன்னே) செய்தற்கு அரியனவாயிருந்த தொழில்களை, செயல் - செய்யக்கடவர் — எ-று. (கருத்து.) அரசர் பகையைவெல்லக் காலம்வாய்த்தா லப்பொழுதே யத்தொழிலைச்செய்யக்கடவர்-என்பதாம். * ஆற்றல் முதலானவைகளாலே செய்துகொள்ளக் கூடாததாயிருக்கையால் எய்தற்கரியதென்றும் அதுதானேவந்துகூடுதல் அரிதாகலால் இயைந்தக்காலென்றும் கூடியவிடத்தும் பின்னில்லாதொழிப்போ மாதலால் அந்நிலையேயென்றும், அது பெறுதவிடத்தே செய்யக்கூடாமையால் செய்தற்கரியவென்றும் சொன்னார். [இதனால் காலம்வந்தவிடத்து விரைந்து செய்கவென்பது சொல்லப்பட்டது.] (கூ)

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

இ-ள். கூம்பும்பருவத்து - தொழிலின்மேலே செல்லாதிருக்கவேண்டுங்காலத்திலே, கொக்கொக்க - கொக்கு இருக்குமாறுபோல் இருக்கக்கடவன், மற்றுச்சீர்த்தவிடத்து மற்றதைச் (செல்லுங்காலம்) வாய்த்தவிடத்து, அதன்குத்தொக்க - அதுதப்பாமற் செய்துமுடிக்குமாறுபோல் தப்பாது செய்துமுடிக்கக்கடவன் — எ-று. (கருத்து.) அரசன் பகையைவெல்லக் காலம் வாய்க்காவிடத்துக் கொக்கடங்கிப்போ லிருக்கக்கடவன் வாய்த்தவிடத்து அதன் குத்தைப்போல வெல்லக் கடவன்-என்பதாம். * மீன்கொள்ளுதற்கு இருக்குமிடத்து அதுவருமளவும் அது தன்முயற்சியை முன்னறிந்து தப்பிப்போகாமற் பொருட்டு உயிரில்லதுபோல இருக்குமாகலாலும் வந்தவிடத்துத் தப்பிப்போவதற்கு முன்னமே விரைந்துகுத்து மாதலாலும் இருத்தலுக்கும் செய்தலுக்கும் கொக்கு உபமானமாயிற்று; கொக்கொக்க வென்றாராயினும் அது கூம்புமாறுபோற் கூம்புகவென்றும், குத்தொக்கவென்றாராயினும் அது குத்துமாறுபோற் குத்துகவென்றும் உரைக்கப்படும். [இதனால் இருத்தலுக்கும், தொழில் செய்தலுக்கும் இலக்கணம் சொல்லப்பட்டது.] (௰)

## ௫௰ - ஆம் - அதி - இடனறிதல்.

அஃதாவது, வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்லுவோன் தான் செல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதலாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

நின்று, செயின்- அத்தொழிலைச்) செய்வாராயின், எண்ணியார்-(முன்பு அவரை வெல்ல) எண்ணியிருந்த பகைவர், எண்ணம் - அவ்வெண்ணத்தை, இழப்பர் - இழந்துவிடுவார்—எ-று. (கருத்து.) அரசர் இடமறிந்து போர்செய்வாராகில் பகைவரொன்றுஞ் செய்யார் என்பதாம். * எண்ணப்பட்ட வெற்றியை எண்ணமென்றார். பகைவர் போர்செய்யாமல் தம்மைக் காத்துக்கொள்ளுதலால் எண்ணமிழப்பரென்றார். இதனால் அவர் பகைவர் தோற்பரென்பதாயிற்று. [இவை நான்கு பாட்டாலும் பகைவரது அரணின் புறத்து இறங்கற்கு ஆமிடமறிதல் சொல்லப்பட்டது. (௪)

நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற.

இ-ள். முதலை - முதலையானது, நெடும்புனலுள் - ஆழமுள்ள நீர்வாவில், பிற - பிறவுயிர்களையெல்லாம்-வெல்லும் - வென்றுவிடும், புனலின் - அந்நீரினின்றும், நீங்கின் - நீங்கினால், அதனை - அதை, பிற - பிற

வுயிர்களெல்லாம், அடும்-வெல்லும்—எ-று. (கருத்து.) முதலை நீரிலிருந்தால் எல்லாவுயிர்களையும் வெல்லும் அது அந்நீரைவிட்டால் மற்றவுயிர்களாலே தோல்வியடையும் என்பதாம். * எல்லாரும் தமது இடத்திலே வலியராயிருப்பாரென்பது சொல்லப்பட்டது. [நிலையாத நீரினிடத்தே பிறவுயிர்கள் நிற்கமாட்டாமையால் அவையெல்லாம் முதலைக்கு

எளியனவாகும் அவை சஞ்சரித்தற்குரிய நிலத்தினிடத்தே அம்முதலை சஞ்சரிக்க மாட்டாமையால் அவைகளுக்கெல்லாம் எளிதாமென்பது

மேற்செல்லுமரசன் பகைவர் நிற்கமாட்டாத விடமறிந்து சென்றால் அவர் அவனுக்கு எளியவராவர் தான் நிற்கமாட்டாத விடத்தே சென்



றால் அவருக்கு அவன் எளியவனாவான் என்கிற பொருள்தோன்றுகின்றமையால் பிறிதுமொழிதலணி.] (௫)

கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

இ-ள். கால்வல-(நிலத்தில் ஓடுகின்ற) வலிமைபொருந்திய உருளைகளையுடைய, நெடுந்தேர்-பெரியதேர்களானவை, கடல்- கடலில், ஓடா- ஓடமாட்டாவாம், கடலோடும்- கடலில்ஓடுகின்ற, நாவாயும்-மரக்கலங்களும், நிலத்து-நிலத்தில், ஓடா-ஓடமாட்டாவாம்—எ-று. (கருத்து.) நிலத்திலோடுந்தேர்கள் கடலிலோடாவாம், கடலிலோடு மரக்கலங்கள் நிலத்திலோடாவாம்-என்பதாம். * ஓடுதற்கேற்ற வலியும் பெருமையும் உடையதாயிருக்கிறதுமென்பது தோன்ற காலவனெடுந்தேரென்றார். [இப்பாட்டு போர்க்குச்சென்றவன் பகைவரிடங்களை அறிந்து அவைகளுக்கு ஏற்ற சாதனங்களால் தொழில் செய்யவேண்டு மென்னும் பொருள்தோன்ற நிற்கையினாலே இதுவும் அவ்வணி.] (௬)

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.

இ-ள். (அரசர்)—எஞ்சாமை - (பகைவரிடத்துத் தொழில்செய்யும் விதங்களையெல்லாம்) குறைபாடமல், எண்ணி-ஆலோசித்து, இடத்தால்- இடத்தோடுபொருந்த, செயின்- செய்வாராயின் (அச்செயலுக்கு)— அஞ்சாமை யல்லால் - (தமது) தைரியமல்லாமல், துணை - வேறு துணை, வேண்டா - வேண்டுவதில்லை—எ-று. (கருத்து.) குறைவில்லாதெண்ணி யிடமறிந்து போர்செய்தால் தைரியமின்றி வேறுதுணை வேண்டாவாம்-என்பதாம். * அத்தொழில் தவறுதலுக்கு ஏதுவில்லாமையால் தைரிய முடையராயின் அது முடித்தலல்லது துணைவேண்டாவென்றார். [இவைமூன்று பாட்டானும் போர்செய்தற்கு ஆமிடமறிதல் சொல்லப்பட்டது.] (எ)

சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும்.

இ-ள். உறுபடையான் - பெருஞ்சேனையையுடைய அரசன், சிறுபடையான் - சிறுசேனையையுடையவனது, செல்லிடம் - செல்லிடத்தை, சேரின்-(அவனை அழிக்கவேண்டித்தான்) சேர்வானாயின் - (அவனால்)— ஊக்கம் - (தன்) பெருமை, அழிந்துவிடும் - அழிவான்—எ-று. (கருத்து.) நிறைசேனையுடைய அரசன் குறைசேனையையுடைய அரசனிடத்தைச் சேர்ந்தழிக்க நினைத்தவனாற் பெருமையை யிழந்து விடுவான்-என்பதாம். * செல்லிடம்-செல்லுமிடம் எனவிரியும். ஊக்கத்தினழிவு உடையான்மேல் ஏற்றப்பட்டது. தன்சேனையின் பெருமைநோக்கி இடம்நோக்காமல் செல்வானாயின் அச்செலவு அச்சேனைக்குறுப்பேச்சென்று தொழில்செய்யக் கூடாமையாலாவது பழக்கமில்லாமையாலாவது, அப்பெருமையாற் பயனில்லாமல் அழிவானென்பதாம். (அ)

௫௦-ஆம்-அதி—இடனறிதல்.

சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது.

இ-ள். சிறைநலனும்-அரணழித்தற்கருமைநலமும் [illegible] மையாகிய ஆற்றலையும், இலரெனினும் - உடையரல்லராயினும், மாந்தர்- (தொழில்செய்தற்குரிய) மனிதரை, உறைநிலத்தோடு-(அவரது) இருப்பிடத்திற்சென்று, ஒட்டல்-தாக்குதல், அரிது-அரிது—எ-று. (கருத்து.) அரண்வலியும்பலமுமில்லாராயினும் பகைவர் இருப்பிடஞ்சென்றுவெல்லலரிது- என்பதாம். * ஆண்மையுடையவராச் சிறுமைநோக்கி அவரிருப்பிடத்திலே சென்றுதாக்கினால் அதைவிட்டுப்போவதற்குத் துணியமல் சாவதற்குத் துணிவுகொண்டவராய்ப் போர்செய்வா ராதலால் அவருக்குப் பெரியசேனையும் தோற்றோடிப்போமென்பதாம். (௯)

காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

இ-ள். கண்ணஞ்சா-பார்க்கு அடங்காதவையும், வேலாள்முகத்த - வேலையுடைய ஆள்களைக்கோத்த கொம்பையுடையனவையும், ஆகிய களிறு-யானைகளை, காலாழ்-கால்புதைகிற இயல்பினதாகிய; களரில்-சேற்றுநிலத்திலே (அகப்பட்டவிடத்து)—நரி - நரிகளானவை, அடும்-கொல்லும்—எ-று. (கருத்து.) நரிகள்யானைகளைச் சேற்றுநிலத்திற்கொல்லும்-என்பதாம். * முகம்கொம்புக்கு ஆகுதலால் ஆகுபெயர். (ஆண்மையும் பெருமையும் உடையராயினும் தகாதஇடத்திலே சென்றால் அவைகளாற் பயனின்றி மிகவும் எளியரால் அழிவரென்பது தோன்ற நிற்கையால் இதுவும் அவ்வணி. [இவை மூன்றுபாட்டாலும் பகைவரைச் சார்தலாகாத இடமும் சார்ந்தவிடத்து உண்டாகும் இழுக்கும் சொல்லப்பட்டன.] (ல)

## ௫க - ஆம் - அதி - தெரிந்துதெளிதல்.

அஃதாவது, மந்திரிமுதலானவர்களைப் - பிறப்பு-குணம்-அறிவு - என்பவைகளையும், செய்கையையும், காட்சி - கருதல் - ஆகமம் என்கிற பிரமாணங்களினாலே ஆராய்ந்து தெளிதல். வலிமுதலாகிய மூன்றையும் அறிந்து பகைமேற் செல்வானுக்குச் சேனை கருதியதோடு தொழில்செய்தற்கும், எதிரிடாமைக்கும், இத்தெளிவுவேண்டுதலால் அவைகளின் பின் வைக்கப்பட்டது.

அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

உ௱

௫க-ஆம்-அதி—தெரிந்துதெளிதல்.

இ-ள். அற்றாரை - சுற்றமில்லாதவரை, தேறுதலோம்புக - தெளிதலொழியக்கடவன்; (அவர்) — மற்றுப்பற்றிலர் - உலகத்தோடு சம்பந்தமிலராதலால், பழி - பழியை, நாணார் - அஞ்சார் — எ-று. (கருத்து.) அரசன் சுற்றமற்றவரைத் தெளிதலொழியக்கடவன் அவருலகத்தோடொட்டாதவராதலாற் பழிக்கஞ்சார் - என்பதாம். * உலகத்தாரால் பழிக்கப்படுவன வெனஅஞ்சி அவைவிடுதற்கும், புகழப்படுவன வெனவவை செய்தற்கும், காரணமாகிய உலககடைப்பிடியல்பு சுற்றமில்லாதவர்க்கு இல்லாமையால் அவரை நம்பலாகாதென்பதாம். (௬)

காதன்மைகந்தா அறிவறியார்த்தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்

இ-ள். காதன்மை - அன்புடைமையானது, கந்தா - பற்றுக்கோடாக, அறிவு - (தமக்கு) அறியவேண்டுமவைகளை, அறியார் - அறியாதவரை, தேறுதல் - தெளிதலானது, பேதைமையெல்லாம் - அறிவில்லாமையையெல்லாம், தரும் - (அரசனுக்குத்) தரும் — எ-று. (கருத்து.) அறியவேண்டியவைகளை யறியாதவர்களை யரசன் தெரிந்துகொள்ளுதலவனுக் கறிவின்மையெல்லாந்தரும் - என்பதாம். * தன்னோடு அவரிடத்துள்ள அன்புபற்றி அரசன் அறிவில்லாதவரைத் தொழில்செய்யவைத்தால் அத்தொழில் அவரறிவில்லாமையினாலே கெடும் கெட்டால் அவர்க்குள்ளது மாத்திரமல்லாமல் தொழிலுக்குரியவரை அறியாமையும், மேல்விளைவதை அறியாமையும் முதலாக அவனுக்கு அறியாமைகள் பலவும் உண்டாகும் என்பதாம். (௭)

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

இ-ள். பிறனை - தன்னோடு சம்பந்தமில்லாதவனை, தேரான் - (பிறப்பு முதலானவைகளாலும் செய்கையாலும்) ஆராய்ந்திலனாகி, தெளிந்தான் - தெளிந்த அரசனுக்கு (அத்தெளிவு) — வழிமுறை - (அவன்) சந்ததிமுறையிலும், தீரா - நீங்காத, இடும்பை - துன்பத்தை, தரும் - கொடுக்கும் — எ-று. (கருத்து.) தன்னோடு சம்பந்தமில்லாதவனைத் தெரிந்துகொண்ட அரசனுக்கு அத்தெளிவு துன்பந்தரும் - என்பதாம். * சம்பந்தம் - தன்குடியோடு தொடர்ந்த மரபு தெளிதல், அவனிடத்தே தொழில்



வைத்தல், அத்தொழில் கெடுதலால் அவன் குலத்திற்பிறந்தவரும் பகைவர்கைப்பட்டுத் தீராவென்பதாம். (௮)

தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

இ-ள். யாரையும் - யாரையும், தேராது - ஆராயாமல், தேறற்க - தெளியாதிருக்கக்கடவன், தேர்ந்தபின் - ஆராய்ந்தபின், தேறும் பொருள் - தெளியப்படுபொருள்களை, தேறுக - தெளியக்கடவன் — எ-று. (கருத்து.) அரசன் யாரையும் ஆராயாமல் கொள்ளாதிருக்கக்கடவன் ஆராய்ந்தபின் கொள்ளக்கடவன் - என்பதாம். * தேறற்கவென்று பொதுப்படச் சொன்னமையால் - யாதொருதொழிலினும் தெளியலாகாதென்பது பெறப்பட்டது. இங்கே தேறுகவென்றதற்கு ஐயுறாதிருக்கக் கடவனென்பது கருத்து. தேறும்பொருள் - அவரவர் வல்லமைக்கு ஏற்றதொழில்கள், பொருள் - ஆகுபெயர். (௯)

தேரான் தெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்

தீரா விடும்பை தரும்.

இ-ள். (அரசன்) தேரான்- (ஒருவனை) ஆராய்ந்திலனாகி, தெளிவும்- தெளிதலும், தெளிந்தான்கண்- ஆராய்ந்து தெளியப் பட்டவனிடத்தே, ஐயுறவும்- சந்தேகப்படுதலும், தீராவிடும்பை- நீங்காத துன்பத்தை, தரும்- (அவனுக்குக்) கொடுக்கும்—எ-று. (கருத்து.) அரசன் ஒருவனை யாராய்ந்திலனாகித் தெளிதலும், ஆராயப்பட்டவனிடத்திலையங்கொள்ளுதலும், அவனுக்குத் துன்பந்தரும் - என்பதாம். * அரசன் ஒருவனிடத்து ஒருதொழிலை வைத்தபின் ஒருதவறும் காணாமல் சந்தேகப்படுவானாயின் அதனை அவன் அறிந்து இனி இது நில்லாதென்று கருதினால் அத்தொழிலைத் தளர்விடுவான் அதுவல்லாமல் பகைவராலே எளிதிலே பிரிக்கவும்படுவான் ஆதலால் தெளியப்பட்டவனிடத்தே சந்தேகப்படுதலும் ஆகாதாயிற்று. தெளிவுக்கு அளவுசொல்லியபடி [இவை ஐந்துபாட்டாலும் தெளியப்படாதவர் இவரென்பதும், அவரைத் தெளிந்தால் உண்டாகும் இழுக்கும், தெளிவுக்கு அளவும், சொல்லப்பட்டன.] (0)

## ருஉ-ஆம்-அதி-தெரிந்துவினையாடல்.

———*———

அஃதாவது, அத்தெளியப்பட்டவரை அவர் செய்யவல்ல தொழில்களை அறிந்து அவைகளிலே ஆளுந்திறம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

[illegible] ருஉ-ஆம்-அதி—தெரிந்துவினையாடல்.

இ-ள். (அரசன் முதலிலே ஒருதொழிலைக்கொடுத்தால்) நன்மையுந் தீமையும் - (அத்தொழிலிலே) ஆவதையும் ஆகாததையும் ஆகிய செயல்களை, நாடி - ஆராய்ந்தறிந்து, நலம் - (அவைகளுள்) ஆவதன்மேலே, புரிந்த- விரும்பிய, தன்மையான்- இயல்பையுடையவன், (பின்பே அவ்வரசனாலே)—ஆளப்படும் - (சிறந்ததொழில்களிலே) ஆளப்படுவான்—எ-று. (கருத்து.) நன்மைதீமைகளையறிந்து ஆவனவைகளைச் செய்பவன் அரசனாலாளப்படுவான் - என்பதாம். * தன்னை உரிமை அறிதற்பொருட்டு உள்ளுக்கும் புறம்புக்கும் நடுவாகிய ஒருதொழிலை அரசன் தன்னிடத்தே வைத்தவிடத்து அதிலே ஆகுஞ்செயல்களையே செய்தவன் பின்னும் அத்தன்மையாலே நம்பற்றி உள்ளாகிய தொழிலிலே ஆளப்படுவானென்பதாயிற்று. புரிந்தவென்று இறந்தகாலத்தாற் சொல்லுதலால் முன்னே உரிமையை அறிதற்பொருட்டு வைத்த தொழிலென்பது பெறப்பட்டது. (க)

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

இ-ள். வினைதான் - தொழில்தான், அறிந்து-(செய்யும் உபாயங்களை) அறிந்து, ஆற்றி-(செயலாலும் இடையூறுகளாலும்வருந் துன்பங்களைப்) பொறுத்து, செய்கிற்பாற்கல்லாமல்-(முடிவு) செய்ய வல்லவனையல்லது, சிறந்தானென்று-(இவனிடத்து) அன்புடையவனென்று, ஏவற்பாற்றன்று-(வேறொருவனை) ஏவுதற்றன்மையை உடையதன்று—எ-று. (கருத்து.) தொழில்செய்யு முபாயங்களையறிந்து முடிப்பவனுக்கல்லது தொழிலை மற்றவனுக்குக் கொடுக்கலாகாது-என்பதாம். [அறிவாற்றல்களையல்லது அன்பினாலே முடியாதென இதனால் தொழிலது இயல்பு சொல்லப்பட்டது.] (ரு)

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

இ-ள். செய்வானை-செய்பவனிலக்கணத்தை, நாடி-(முன்னே) ஆராய்ந்து, வினை-(செய்யப்படுந்) தொழிலினியல்பை, நாடி-(பின்னே) ஆராய்ந்து, (அதன்பின்பு அவனையும அதனையும்) காலத்தோடு-காலத்துடனே, (சேர்த்து) எய்த-பொருந்த, உணர்ந்து - அறிந்து, செயல்-(அவனை அத்தொழிலினிடத்து ஆளுதல்) செய்கடவன்—எ-று. (கருத்து.) அரசன் தொழில்செய்பவனை யறிந்து பின்னைத்தொழிலை யறிந்து



அவனைத்தொழிலில் வைத்தாளக்கடவன்-என்பதாம். † செய்பவனிலக்கணமும், தொழிலினியல்பும், முன்னே சொல்லப்பட்டன. காலத்தோடு பொருந்த அறிதலாவது - இக்காலத்தில் இவ் விலக்கணமுடையான் செய்தால் - இவ் வியல்புடையதாகிய தொழில்முடியுமென்று கூட்டி அறிதல். (சு)

இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன் கண் விடல்.

இ-ள். இதனை-இத்தொழிலை, இதனால்-இச்சாதனத்தால், இவன்முடிக்குமென்று-இவன் முடிக்கவல்லவனென்று, ஆய்ந்து (கூறுபடுத்தி ஆராய்ந்து, (இம்மூன்றும் தம்முள் ஒத்திருக்கவிடத்து) அதனை-அத்தொழிலை, அவன்கண் - அவனிடத்து, விடல்- விடக்கடவன்—எ-று. (கருத்து.) அரசன் இத்தொழிலை யிச்சாதனத்தா லிவன் முடிக்கவல்லவனென்றறிந்து அத்தொழிலை யவனிடத்து விடக்கடவன் - என்பதாம். ‡ சாதனம் - துணைவரும், பொருளும், முதலானவை செய்பவனும், சாதனமும்தொழிலும், தம்முள் ஒத்திருத்தலாவது - ஒவ்வொன்றோடு மற்றையிரண்டுக்கும் பொருத்தம் உண்டாகுதல் விடுதல் - அவனை அத்தொழில்செய்தற்கு உரியவனாக்குதல். (எ)

வினைக்குரிமை நாடிய பின்றை யவனை

யதற்குரிய னாகச் செயல்.

இ-ள். (ஒருவனை அரசன்) உரிமை-(தனது) தொழில்செய்தற்குரியனாயிருக்கையை, நாடியபின்றை - ஆராய்ந்தறிந்தபின்பு, அவனை அவனை, அதற்கு-அத்தொழில்செய்தற்கு, உரியனாக-உரியவனாக, செயல்-(உயரச்) செய்யக்கடவன்—எ-று. (கருத்து.) அரசன் ஒருவனைத்தொழிற்குரியவனாயிருக்கையையறிந்து அவனையத்தொழிற் குரியவனாகச் செய்யக்கடவன்-என்பதாம். ‡ உயரச்செய்தல்- அதனைத்தானே செய்துமுடிக்க வல்லவனாக்கல், அது செய்யாதவிடத்தும் கெடுமென்பது கருத்து. (அ)

வினைக்கண் வினையுடையான் கேண்மை வேறாக
நினைப்பானை நீங்குந் திரு,

இ-ள். வினைக்கண்-(தனது)தொழிலிடத்தே, வினையுடையான்-(எப்போதும்) முயற்சியை யுடையவன், (அவ்வுரிமையால்) கேண்மை-(தனக்குச்) சுற்றமாய் நடக்கின்ற தன்மையை, (அது பொறாதவர் சொல்லைக்கேட்டு) வேறாக-மாறுபட, நினைப்பானை-நினைக்கும் அரசனை, திரு-சீதேவி, நீங்கும்-நீங்குவாள்—எ-று. (கருத்து.) தனது தொழிலிலே முயற்சியுடையவனை வேறாகநினைக்கும் அரசனைச் சீதேவிநீங்குவாள்-என்பதாம். ‡ சுற்றமாய்நடக்கின்ற தன்மையானது-தான் பிழையில்லாமல் சுற்றத்தார்செய்யும் உரிமையையெல்லாம் செய்



ந்தல். அவனை அவமதித்துக்கோபிக்க நினைப்பானாயின் பின்னொருவரும் உட்பட்டு முயல்வாரில்லாமல் செல்வங்கெடுமென்பது கருத்து. [இந்நான்குபாட்டாலும் ஆளுதற்கு உரியவனை ஆளுந்திறம் சொல்லப்பட்டது.] (௯)

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

இ-ள். வினைசெய்வான்-தொழில்செய்பவன், கோடாமை-கோணாதிருக்க, உலகு-உலகமானது, கோடாது-கோணாது, (ஆதலால்) நாடோறும்-தினந்தோறும், மன்னன்-அரசன், நாடுக-(அவன்செயலை) ஆராயக்கடவன்—எ-று. (கருத்து.) தொழில்செய்பவன்கோணாதிருக்க உலகங்கோணாது ஆகையால் அரசனவனை நாள்தோறும் ஆராயக்கடவன் என்பதாம். ‡ அவ்வொன்றனையும் ஆராயவே அதன்வழிப்பட்ட உலகெல்லாம் ஆராய்ந்தவனாவன் அதனால் அவனுரிமை அழியாமல் தன்னுள்ளே ஆராய்ந்துகொண்டுவரக்கடவனென்பதாம். [இதனால் ஆண்டவிடத்துச்செய்வது சொல்லப்பட்டது.] (௰)

## ௫௩-ஆம் அதி-சுற்றந்தழால்.

அஃதாவது, அரசன் தனது சுற்றத்தாரைத் தன்னை விட்டு நீங்காதிருக்கும்படி தழுவுதல், தொழில்செய்வோரைச்சொல்லிமேற்றைச்சுற்றத்தாரைச்சொல்லுதலால் இது தெரிந்துவினையாடலின் பின்வைக்கப்பட்டது.

பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

இ-ள். பற்றற்றகண்ணும்- (ஒருவன்) செல்வந்தொலைந்து வறுமையுற்றவிடத்தும், பழமை-(தம்மோடு அவனிடத்துண்டாகிய) பழமையை; பாராட்டுதல்-(நினைத்துக்) கொண்டாடுமியல்புகள், சுற்றத்தார்கண்ணே - உறவினரிடத்தே, உள-உளவாகும்—எ-று. (கருத்து.) ஒருவன் செல்வப் பற்றற்றவிடத்தும் பழமைகொண்டாடுதல் சுற்றத்தாரிடத்தே யுண்டாம்-என்பதாம். * பற்றற்றகண்ணும் என்பதில் உம்மை வறியனாவிடத்துப் பாராட்டாமையை விளக்கிநின்றது. பழமை-செல்வத்தோடிருந்தகாலத்திலே தமக்குச்செய்த உபகாரம் சுற்றத்தார்பாராட்டுதலைத் தெளிவித்தலால் ஏகாரந்தேற்றேகாரம். [இதனாலே சுற்றத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (க)

விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.

உ௩

ஈஅ௩ ௫௩-ஆம்-அதி—சுற்றந்தழால்.

இ-ள். விருப்பறா-அன்புநீங்காத, சுற்றம் - சுற்றமானது, இயையின்-(ஒருவனுக்குக்) கிடைக்குமாயின், (அது) அருப்பறா - நீங்குதலில்லாத, ஆக்கம்பலவும், - பலசெல்வங்களையும், தரும் - (அவனுக்குக்) கொடுக்கும்—எ-று. (கருத்து.) ஒருவனுக்கு அன்புள்ள சுற்றங்கிடைத்தால் அது பலசெல்வங்கொடுக்கும் - என்பதாம். * உட்பகையாகிறவர்களுக்குச்சற்று விருப்பறாச்சுற்றமென்றும், தானேவளர்க்கும் செல்வத்தை நீக்குதற்கு அருப்பறா ஆக்கமென்றும் அடைகொடுத்துச் சொன்னார். இயையின்பது-அதுகிடைத்தலினது அருமையைக் காட்டினது. பலவுமென்றது - யானைகள் - ஆடுகளையும் - பலர்கூடிவளர்த்தலால் அவைமேலுமேலும் பெருகுமென்பதுகருத்து. (உ)

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

இ-ள். அளவளாவில்லாதான் - (அச்சுற்றத்தோடு) கலந்தலில்லாதவனது, வாழ்க்கை - வாழ்வானது, குளவளா - குளப்பரப்பானது, கோடின்றி - கரையில்லாமல், நீர்நிறைந்தற்று- நீர்நிறைந்தாற்போலும்—எ-று. (கருத்து.) சுற்றத்தாரோடு கலவாதவன் வாழ்வானது கரையில்லாகுள நீர்நிறைந்தாற்போலும் - என்பதாம். *சுற்றம் அதோடத்திலே கருவிக்கப்பட்டது. வாழ்க்கைக்கு ஏதுவான செல்வத்தை வாழ்க்கையென்றார். சுற்றமில்லாதவனது செல்வங்கள் தாங்குவாரில்லாமையால் புறத்திலேபோமென்பதாம். (௩)

சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

இ-ள். செல்வம் - செல்வத்தை, பெற்றத்தால்-பெற்றஅதனால்பெற்றபயன் - (ஒருவன்) பெற்றபயனாவது, (தன்) சுற்றத்தால்-உறவினரால், தான்சுற்றப்பட-தான்சூழப்படும்வகை, ஒழுகல்-(அச்சுற்றத்தைத்) தழுவிநடத்தலாம்—எ-று. (கருத்து.) செல்வம்பெற்றதினால் வரும்பயனாவது சுற்றத்தைக்காத்தலாம் - என்பதாம். * இக்கடக்கை பலவகையில்லமல் அரசனாதற்கு ஏதுவாகலால் இதனைச்செல்வத்திற்குப் பயனென்றார். [இவைமூன்றுபாட்டாலும் சுற்றத்தைத்தழுவுதல் செல்வத்தக்குவதாவும், அரணும்-பயனும், ஆமென்பது சொல்லப்பட்டது.] (௪)

கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய

சுற்றத்தால் சுற்றப் படும்.

இ-ள். (சுற்றத்தார்க்கு)-கொடுத்தலும்- (வேண்டுமவைகளைக்கொடுத்தலையும், இன்சொலும் - இனியசொற்சொலுதலையும், ஆற்றின்- (ஒருவன் செய்ய) வல்லவனாயின், அடுக்கிய- (தம்மிலே) தொடர்ந்த, சுற்றத்தால்- (பலவகைச்) சுற்றத்தாலும், சுற்றப்படும்-சூழப்படுவான்.



எ-று. (கருத்து.) கொடுத்தலும்; இனியசொற்சொல்லுதலும், ஒருவன்செய்தால் அவன் சுற்றத்தாற் சூழப்படவாழ்வான் - என்பதாம். ஆற்றின் - அவ்விரண்டும் அளவறிந்துசெய்தல் - அரிதென்பதுதோன்ற ஆற்றினென்றார். தம்மில் தொடர்தலாவது, உறவினை அது உறவும், அதனது உறவும், தொடர்ச்சம்பந்தப்பட்டுவருதல். (ருு)

பெருங் கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத்தில்.

இ-ள். (ஒருவன்) பெருங்கொடையான் - மிகுந்தகொடையையுடையவனும்; வெகுளி-கோபத்தை, பேணான் - விரும்பாதவனும் (ஆனா ல்)— அவனின் - அவன்போல், மருங்குடையார் - சுற்றமுடையவர், மாநிலத்து-இப்பெரிய உலகத்தில், இல்-இல்லை—எ-று. (கருத்து.) மிகுந்த கொடையும் கோபமில்லாமையு முடையவனுக்கு அவன்போற் சுற்றமுடையவரில்லை - என்பதாம். மிகுந்தகொடை தன்றிறனும் சுருங்காப் படாதிருக்கக்கொடுத்தல். விரும்பாமை இது அரசர்க்குவேண்டுவதென்று அளவுகடந்துசெய்யாமை. (சு)

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.

இ-ள். காக்கை-காகங்கள், (தமக்குஇரையைக்கண்டவிடத்து) கரவா, மறைக்காமல், கரைந்து - (இனத்தை) அழைத்து, உண்ணும்-(அதனுடனேகூடி, உண்ணும், ஆக்கமும்- (சுற்றத்தினாலாகிய)பெருக்கங்களும், அன்னநீரார்க்கே - அப்படிப்பட்ட இயல்பையுடையவர்க்கே, உள-உளவாகும் —எ-று. (கருத்து.) காகமிரைகிடைத்தாலதனைத்தன்னைத்தன்னுடனருந்தல்போல இச்செய்கை நல்லினத்தார்க்குளவாம் - என்பதாம். அப்பெருக்கங்களாவன, பகைமையில்லாமை பெருஞ்செல்வமுடைமை முதலானவை எச்ச உம்மையால் அறமும் இன்பமும் அன்றிப்பொருளும் பெறுவனென்பதாயிற்று. அப்படிப்பட்டவியல்பு தம்மால் அனுபவிக்கப்பட்டவைகளையெல்லாம் அவரும் அனுபவிக்கும்படிவைத்தல். (எ).

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

இ-ள். வேந்தன்-அரசனானவன், பொதுநோக்கான், எல்லாரையுமொருத்தன்மையாகநோக்காமல், வரிசையா - அவரவர்தகுதிக்குஏற்க, நோக்கின் - நோக்குவானாயின், அதுநோக்கி - அச்சிறப்புநோக்கி, வாழ்

ரேர் - (அவனைவிடாது) வாழுஞ்சுற்றத்தார், பலர் - அநேகர் — எ-று. (கருத்து.) அரசனவரவர்க்குத் தகுதிப்படிக்கு நடப்பானாகி லதனைவிடாது வாழுஞ்சுற்றத்தார்பலர்-என்பதாம். * உயர்ந்தார்கீழ்க்குறலகுறித்து பொ



துநோக்கை விலக்கினல்லாரும் விடாதொழுகுதல் குறித்துவரிசைநோக்கைவிதித்தார். [இவைநான்குபாட்டாலும் சுற்றந்தழுவுதற்கு உபாயஞ்சொல்லப்பட்டது]
(அ)

தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்

காரண மின்றி வரும்.

இ-ள். தமராகி - (முன்னே) சுற்றத்தாராயிருந்து, தற்றுறந்தார்-(தன்னோடு பொருந்தாமல் யாதாயினும் ஒருகாரணத்தினாலே) தன்னைப்பிரிந்துபோனவர், சுற்றம் - (பின்னும்வந்து) சுற்றத்தாராகுதல், அமராமைக்காரணம்-அப்பொருந்தாமையின் காரணம், இன்றி - (தன்னிடத்தே) இல்லையாக, வரும் - (தானே) உண்டாகும் — எ-று. (கருத்து.) முன்சுற்றத்தாரைப் பின்பிரிந்தவர் மற்றுஞ் சுற்றத்தாராகுதல் காரணமில்லாதுண்டாம்-என்பதாம். உ பொருந்தாமையின் காரணமாவது - தான்நெறிதப்பிநடத்தல் - வெறுப்பனசெய்தல் - இவைமுதலியவைகளால் வருவது. இயற்கையாகவே அன்புடையராகிய சுற்றத்தார்க்குச் சேர்க்கையால் வந்தபிரிவு - அச்செயல்களை ஒழிக்க ஒழிதலால் அவர்க்கு அன்புமுறையியல்பாகவே நிற்குமென்றற்கு வருமென்றார். (௯)

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த

னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

இ-ள்: உழை -(தன்) இடத்தினின்றும்பிரிந்து-(காரணமில்லாமற்) பிரிந்துபோய், காரணத்தின் - (பின்பு) காரணத்தினாலே, வந்தானை - வந்தசுற்றத்தானை, வேந்தன் - இராஜனானவன், இழைத்திருந்து - அந்தக்காரணத்தைச்செய்துவைத்து, எண்ணி - ஆராய்ந்து, கொளல் - (தழுவிக்) கொள்ளக்கடவன் — எ-று. (கருத்து.) ஒருவன் காரணமில்லாமற் பிரிந்துபோய்ப் பின்பொரு காரணத்தால் வந்தவனை அரசன் ஆராய்ந்து கொள்ளக்கடவன் - என்பதாம். * சும்மா உழைப்பிரிந் தென்றமையாற் பிரிதற்குக் காரணமில்லாமை கொள்ளப்பட்டது. வருதற்காரணத்தைச்செய்யாதவிடத்துப்பின்னும் பிரிந்துபோய்ப்பகைவரோடு கூடுவனாதலால் இழைத்திருந்தென்றும், அன்பில்லாமற்போய்ப் பின்னுங்காரணத்தால் வந்தமையால் எண்ணிக்கொள்ளென்றும், சொல்லினர் பிரிந்துபோனசுற்றத்தாருள் தீமைசெய்யப்போய்ப் அதனைவிடவருவாரும், அதுசெய்யாமற்போய்ப் பின்பு நன்மைசெய்யவருவாரும், தழுவப்படுதலால் - தழுவுமாறுமுறையே [இவ்விரண்டுபாட்டாலும் சொல்லப்பட்டது.] (௰)



# ௫௪ - ஆம் - அதி - பொச்சாவாமை.

அஃதாவது, அழகும், செல்வமும், ஆற்றலும் முதலானவைகளால் மகிழ்ந்து தன்னைக்காத்துக்கொள்ளுதலிலும், பகையறிதல் முதலான காரியங்களிலும், மறதிசெய்யாமையாம். முன்சொல்லப்பட்ட சுற்றத்தாரால் பயனுள்ளது - இம்மறதியில்லாவிடத் தாகையால். இது சுற்றந்தழாலின் பின்வைக்கப்பட்டது.

இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

இ-ள். சிறந்தவுவகை- மிகுந்த அகமலர்ச்சியினது, மகிழ்ச்சியின்-களிப்பால்வருவதாகிய, சோர்வு-மறதியானது, இறந்தவெகுளியின் - அளவுகடந்த கோபத்திலும், தீதே - (அரசனுக்குத்) தீதேயாம்—எ-று. (கருத்து.) மிகுமகிழ்ச்சியால் வருமறதியானது அளவு கடந்தகோபத்தைப்பார்க்கிலும் அரசனுக்குக் குற்றந்தரும் - என்பதாம். * மிகுந்தவுவகையாவது பெருஞ்செல்வம் பேரின்பம் பெருமிதம், என்கிற இவைகளால்வருவது அளவு, பகைவரை வெல்லுதலுக்கும், கொடியோரை ஒறுத்தலுக்கும், வேண்டியது அக்கோபம், ஒரோவிடத்துப் பகைவரையும் கொல்லும், இது அப்படிப்பட்டதல்லாமல் தன்னையேகொல்லலால் அதனினும் தீதாயிற்று. (௧)

பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

இ-ள். பொச்சாப்பு - மறதியானது, புகழை - (ஒருவனது) கீர்த்தியை, கொல்லும் - கெடுக்கும், நிச்சநிரப்பு - நித்தியவறுமையானது, அறிவினை - புத்தியை, கொன்றாங்கு - கெடுக்கும்விதம்போல்—எ-று. (கருத்து.) தரித்திரமறிவைக் கெடுக்கும் அதுபோலமறதிபுகழைக் கெடுக்கும்-என்பதாம். * நித்தியவறுமை - தினந்தோறும் யாசகத்தால் வருந்தித் தன்வயிறு நிறைத்தல், எப்படி அந்நித்தியவறுமை அறிவுடையானிடத்தே உண்டானால் அவனுக்கு இளிவரவாலும், பாவத்தாலும், இகழ்ச்சியை உண்டாக்கி அவன்கனத்தை அழிக்குமோ அப்படிமறதியும் புகழுடையவனிடத்தே உண்டாயின் அவனுக்குத் தன்னைக்காத்துக் கொள்ளாமையாலும், காரியக்கேடியாலும், இகழ்ச்சியை உண்டாக்கி அவன்கனத்தை அழிக்குமென்பதாயிற்று. [இவ்விரண்டுபாட்டானும் மறதியினது குற்றஞ்சொல்லப்பட்டது.] (௨)

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

இ-ள். புகழ்மை - புகழுடையாரிருக்கையானது, பொச்சாப்பார்க்கு - மறந்துவிடப்பவர்க்கு, இல்லை - இல்லை, அது - (அவ்வில்லாமையானது,



(இந்நூலுடையவர்க்கு மாத்திரமல்லாமல்) உலகத்து - உலகத்தில், எப்பாலூலோர்க்கும் - எவ்வகைப்பட்ட நூலுடையவர்க்கும், துணிவு - ஒப்பமுடிந்தது—எ-று. (கருத்து.) புகழ்ச்சிமறதியுடையோர்க்கில்லை இது எல்லா நூலார்க்குந் துணிவுதான்-என்பதாம். * அரசர்க்கேயல்லாமல்] அறமுதலாகிய நான்கினும் முயல்பவர் யாவர்க்கும் அவை கூடாமையினாலே புகழ் இல்லையென்பது தோன்ற, எப்பாலூலோர்க்குந் துணிவென்றார். (௩)

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை

பொச்சாப் புடையார்க்கு நன்கு.

இ-ள். அச்சமுடையார்க்கு - பயமுடையவர்க்கு, அரண் - (காடு மலை முதலாகிய) அரண்களில் (இருந்தாலும்) இல்லை - (அவைகளாலே பயன்) இல்லை, ஆங்கு-அதுபோல், பொச்சாப்புடையார்க்கு- மறதியுடையவர்க்கு, நன்கு-செல்வமெல்லாம், (உடையாராயிருந்தாலும்) இல்லை (அவைகளாலே பயன்) இல்லை—எ-று. (கருத்து.) பயமுடையவர்க்கு நால்வகையரண்களிருந்தும் பயனில்லை; அதுபோல மறதியுடையவர்க்குச் செல்வங்களிருந்தும் பயனில்லை - என்பதாம். செல்வம் நன்றுக்கு ஏதுவாகலால், அதனை நன்கென்றார். எப்படி அச்சமுடையவரது அரணம் அழியுமோ அப்படி மறதியுடையவர் செல்வமும் அழியுமென்பதாயிற்று. (௪)

முன்னுறக் காவா திழுக்கியான் தன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

இ-ள். (வாராமற் காக்கப்படுந் துன்பங்களை) முன்னுற - (அவை வருதற்கு) முற்பட, காவாது - (அறிந்து) காவாமல், இழுக்கியான் - மறந்திருந்தவன், பின் - பின்பு, ஊறு - உற்றகாலத்து, (காக்கக்கூடாமையால்) தன்பிழை - தன்னுடைய அத்தவறு (நினைத்து) இரங்கிவிடும் - இரங்கிவிடுவான்—எ-று. (கருத்து.) துன்பம்வருமுன் காக்காமல் மறந்திருந்தவன் தன்குற்றத்தைக் குறித்தும் பின் விசனப்படுவான் - என்பதாம். அத்துன்பங்களாவன - மறதிபார்த்துப் பகைவராலே செய்யப்படுவன. துன்பம்-உற்றகாலத்திலே காக்கக்கூடாமையால் இரங்கிவிடுமென்றார். [இவைமூன்றுபாட்டாலும் மறதியுடையவர்க்குவரும் துன்பம் சொல்லப்பட்டது.] (௫)

இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில்.

இ-ள். (அரசர்க்கு) இழுக்காமை - மறவாமையானது, யார்மாட்டும்-யாவரிடத்தும், என்றும் - எக்காலத்திலும், வழுக்காமை - ஒழிவில்லாமல், வாயின்-கோப்பெறுமாயின், அது-அதனை, ஒப்பது-ஒக்குநன்மை



யானது, இல்- இல்லை—எ-று. (கருத்து.) யாவரிடத்து மறவில்லாமை வாய்க்குமானால் அதற்கொப்பான்றுமில்லை-என்பதாம். தொழில்செய்வோர்- சுற்றத்தார்-என்கிற தம்மவரிடத்தும் சமமாகவேண்டுதலால் யார்மாட்டுமென்றும், தன்பெருக்கக்காலத்திலும் சுருக்கக்காலத்திலும் சமமாகவேண்டுதலால் - என்றுமென்றும், எல்லாக்காரியங்களிலும் சமமாகவேண்டுதலால்-வழுக்காமையென்றும் சொல்லினர். (௬)

அரியவென் றாகாத வில்லை பொச்சாவாக்
கருவியாற் போற்றிச் செயல்.

இ-ள். அரியவென்று- (இவை) அரியவையென்று சொல்லப்பட்டு, ஆகாத- (ஒருவனுக்கு) முடியாதகாரியங்கள், இல்லை - இல்லையாகும், பொச்சாவா- மறவாத, கருவியால்- மனதினாலே, போற்றி - எண்ணி, செயின் - செய்தால்—எ-று. (கருத்து.) மறவாத மனந்தாலாலோசித்துச் செய்தால் அரசனுக்கரியவை யொன்றுமில்லை - என்பதாம். * அந்தக்கரணமாதலால் - மனத்தைக் கருவியென்றார். இடைவிடாத நினைவும் தப்பாத எண்ணமும் உடையவர்க்கு எல்லாம் எளிதின் முடியுமென்பதாம் [இவை இரண்டொட்டாலும் மறவாமையினது சிறப்புச்சொல்லப்பட்டது.] கரணம்-காரணம்.

(எ)

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

இ-ள். புகழ்ந்தவை - (நீதிநூலுடையாரால் இவை அரசர்க்கு உரியவையென்று) உயர்த்திச்சொல்லப் பட்டசெயல்களை, போற்றி- முடிபத்தி, செயல்வேண்டும் - செய்யக்கடவர், செய்யாது (அப்படி) செய்யாமல், இகழ்ந்தார்க்கு-மறந்தவர்க்கு, எழுமையும்-எழுபிறப்பிலும்வருமினமை- இல்-இல்லை, (ஆதலால்)—எ-று. (கருத்து.) மேலானவற்றையெண்ணிச் செய்யக்கடவர் செய்யாது மறந்தவர்க்கெழுபிறப்பிலு நன்மையில்லை - என்பதாம். * அச்செயல்களாவன மூவகை ஆற்றலும், நால்வகையுபாயமும், ஐவகைத்தொழிலும், அறுவகைக்குணமும், முதலானசெயல்கள், சாதி தருமமாகிய இவைகளில்வழுவிய அரசர்க்கு துக்கமே உள்ளதாகலால் - எழுமையுமில்லை யென்றார். எழுமை-குபெயர். [இதனால் மறவாதுசெய்ய வேண்டுமவைகள் சொல்லப்பட்டன.]

(அ)

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

இ-ள். (அரசர்) தம்மகிழ்ச்சியின்- தமது மகிழ்ச்சியினிடத்து, தாம்மைந்துறும்போழ்து - தாம்செருக்குறும்பொழுது, இகழ்ச்சியின் (முற்காலத்திலே அசனல் ஆகிய) மறதியினாலே, கெட்டாரை - கெட்டவர்களை, உள்ளுக-நினைக்கக்கடவர்—எ-று. (கருத்து.) அரசர்செல்வத்திலே



மகிழ்ச்சியடையும்போது முற்காலத்திலே மகிழ்ச்சியிலே மறதியடைந்தவர்களை நினைக்கக்கடவர்-என்பதாம். * மகிழ்ச்சிக்குக்காரணமாயுள்ளவைகளொடு அவர்க்கு உண்டாகிய உரிமையை மகிழ்ச்சியொடேற்றி தம்மகிழ்ச்சியினென்றும். இகழ்ச்சியும் கேடும் உடன்தோன்றுமாகலால் மகிழ்ச்சியின் மைந்துறும், போழ்தென்றும் சொல்லினர், கெட்டாரை நினைக்கவே தாமும் அப்படியே கெடுவோமென்று அதனிடத்தே செருக்குறுமென்பது கருத்து.

(௯)

உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

இ-ள். (அரசனுக்கு) உள்ளியது- (தான்பெற) நினைத்தபொருளை, எய்தல் - (அந்நினைத்தபடியே) அடைதல், எளிதுமன் - எளிதாகும், மற்றும்-பின்னும், தான்-தான், உள்ளியது-அந்நினைத்தபொருளையே,உள்ளப்பெறின் - நினைக்கக்கூடுமானால்—எ-று. (கருத்து.) அரசனினைத்தபொருளை நினைக்கக்கூடுமானா லப்பொருளை யடைதலெளிதாகும்- என்

பதாம். அது கூடாதென்னும் ஒழிந்த சொற்பொருளைக் காட்டவல் மன்- ஒருமிசையிலேவந்தது- இசையென்பதுசொல். அதனையே மீளே த்தலாவது மறத்தலாவது மறதியில்லாமல் அதனிடத்தே முயற்சி செ ய்தல், [இவை இரண்டுபாட்டாலும் மறவாமைக்கு உபாயஞ் சொல் ப்பட்டது.] (௰)

# ௫௫- ஆம்- அதி-செங்கோன்மை.

அஃதாவது அரசனாலேசெய்யப்படுமுறையினது தன்மை. அத்முறை யானது ஒருபக்கத்திலே சாயாமற்செவ்வையாகியகோல் போலுதலா லே செங்கோலெனப்பட்டது. அதுமறதியில்லாத அரசனாலே செய் த்தக்கதாகலால் இதுபொச்சாவாமையின் பின்வைக்கப்பட்டது.

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.

இ-ள். (தன்கீழ் வாழ்வோராலே செய்யப்பட்டகுற்றத்தை) ஓர் து-காடி, யார்மாட்டும்- யாவரிடத்தும், கண்ணோடாது- முகம்கோடா மல், இறைபுரிந்து, நடுவுநிலைமையைப்பொருந்திதேர்ந்து- (அக்குற்ற த்துக்குச் சொல்லப்பட்ட தண்டத்தை நூலோரோடும்) ஆராய்ந்து, செ ய்வஃதே- அவ்வளவின்தாகச்செய்தலே, முறை-செங்கோலாம்—எ-று. (கருத்து.) அரசன்குற்றத்தையாராய்ந்து எல்லாரிடத்தும் நடுவுநிலை பொருந்தி யாசாள்வதே செங்கோலாம் - என்பதாம். ஈ-ஃதியால் கை இறை என்கிற அரசனுக்குஇயல்பாகலால் அதனைஇறையென்



உயிரிலும் சிறந்தவரிடத்தும் என்றற்கு- யார்மாட்டுமென்றும், சொல் கின்றார், இறைமை-இறை-என்ம், செய்வது-செயவஃது-என-ம்- விகாரப்பட் டன, [இதனாலேசெங்கோன்மையினது இலக்கணம்சொல்லப்பட்டது.]

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

இ-ள். உலகெல்லாம்- உயிர்களெல்லாம், வானோக்கி - மழையை நோக்கி, வாழும்-வாழும், (என்றாலும்) குடி-குடிகளானவை, மன்னவ ன்-அரசனது, கோனோக்கி- செங்கோலைநோக்கி, வாழும்-வாழும்-எ-று. (கருத்து.) உயிரனைத்தும் மழையைநோக்கிவாழும்; குடிகளனைத்தும் அரச ன்செங்கோலைநோக்கிவாழும்- என்பதாம். உ வானாலாகிய உணவை வா னென்றும் கோலாலாகிய ஏமத்தைக்கோலென்றும், சொல்கின்றார். அவ் வழும் இல்லாதவிடத்தே உணவு உளதாயிருந்தாலும் குடிகளுக்கு அ துனாலே பயன் இல்லை என்பதாம். (உ)

அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

இ-ள். மன்னவன்கோல்-அரசன்செங்கோலானது, அந்தணர் நூ ற்கும்- அந்தணர்க்கு உரித்தாகியவேதத்திற்கும், அறத்திற்கும் - (அதனு லேசொல்லப்பட்ட) தருமத்திற்கும், ஆதியாய் - காரணமாகி, நின்றது-

லைபெற்றது—எ-று. (கருத்து.) வேதத்திற்குந் தருமத்திற்குங்காரண மாகின்றது அரசன்செங்கோலாம்-என்பதாம். * வேதமும், அறமும், ஒழியாமிலும் செங்கோல் இல்லாதவிடத்து நடவாதாகலால் அதனை அவைகளுக்கு ஆதியென்றும், அப்பெற்றியே தனக்கு ஆதியாவதுவே றொன்றும் இல்லையென்றதற்கு நின்றதென்றும், சொல்லினர், [இவை இரண்டுபாட்டாலும் செங்கோலது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௩.)

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு.

இ-ள். உலகு-உலகத்தார், குடிதழீஇ-(தன்) குடிகளையும் அணைத்து கோலோச்சும்-செங்கோலையும் செலுத்தும், மாநிலமன்னன் பெரு நிலவேந்தனது, அடிதழீஇ-அடியைப்பொருந்தி, நிற்கும் - நிற்பார்கள் எ-று. (கருத்து.) உலகத்தார் - குடிகளைத்தழுவி அரசனடியைப் பொருந்திநிற்பார்-என்பதாம். * அணைத்தல்- இன்சொற்சொல்லுதலும், தக்கவிடத்து வேண்டுமவை கொடுத்தலும். முதலானவை. இவ்விரண்டும் தப்பாமற்செய்பவன் நிலமுழுதும், ஆள்வானாகையால் அவனை மாநில மன்னனென்றும், அவனிடத்தில் யாவரும் நீங்காத அன்புடையாராவராகலால்- அடிதழீஇ நிற்குமுலகென்றும், சொல்லினர். (௪)

உரு

௫௪௫ ௫௫-ஆம் அதி—செங்கோன்மை.

இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

இ-ள். பெயலும்-பருவமழையும், விளையுளும் (குறையாத) விளைவும், தொக்கு-கூடி, இயல்புளி - (நூல்களாலேசொல்லப்பட்ட) இயல்பால், கோலோச்சும்-செங்கோலைச்செலுத்தும், மன்னவன்-அரசனது, நாட்ட-நாட்டிலுள்ளனவாம்—எ-று. (கருத்து.) நீதிமன்னன்நாட்டிலேமழையும் விளைவுநிறைந்திருப்பனவாம்-என்பதாம். * அவனதுநாட்டிலேவானமும் நிலமும்சேரத்தொழிற்பட்டு வளஞ்சுரக்குமென்பதாம். (௫)

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

இ-ள். மன்னவன்-அரசனுக்கு, வென்றிதருவது (போரில்) வெற்றியைத்தருவது, வேலன்று- (அவனெறியும்) வேற்படை யன்றாகும் கோல்-(அவனது) செங்கோலாகும், அதூஉம்- அக்கோலும், (அப்படிப்பட்டதர்வது) கோடாதெனின் (தான்) கோணாதிருக்குமாயின்-எ-று. (கருத்து.) அரசனுக்குவேல் வெற்றியைத்தாராது செங்கோல் வெற்றியைத்தரும்-என்பதாம். * கோல் செம்மையாயிருக்கின்றவிடத்தே வேல்பயன்படுமென்றற்கு வேலன்று வென்றிதருவது கோலென்றார். (௬

இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்.

இ-ள். இறை-அரசனானவன், வையகமெல்லாம் - பூமிமுழுதை
ம், காக்கும்-காப்பாற்றுவான், முறை (அவனது) செங்கோலானது,
வனை-அவனை, காக்கும்-காப்பாற்றுவதாகும், மூட்டாச்செயின் - மு
டாமற் செலுத்துவானாயின்—எ-று. (கருத்து.) அரசன் பூமியைக்கா
பான், செங்கோலவனைக்காக்கும் - என்பதாம். * மூட்டாமற் செங்கோ
ல் செலுத்தியவிதத்தை மகனைத் தேர்க்காலில் வைத்தூர்ந்த சோழ
டத்தும், அயலார் வீட்டுக்கதவைத்தட்டிய தன் கையைக்குறைத்த ப
ண்டிய னிடத்தும், காண்க. [இந்நான்கு பாட்டாலும் செங்கோல் செ
லுத்தியவன் அடையும்பயன் சொல்லப்பட்டது.] (ா

எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் றானே கெடும்.

இ-ள். (வழக்கறிவிப்பவர்க்கு) எண்பதத்தான் - எளிதானசமய
த்தையுடையவனாகி, ஓரா (அவரால் அறிவிக்கப்பட்ட வைகளை நன்கு
ப்லரோமல்) ஆராய்ந்து, முறைசெய்யா (வின்ற உண்மைக்கு ஒப்பா
முறைசெய்யாத, மன்னவன்-அரசன், தண்பதத்தால் - தாழ்ந்த பதத்
லேவின்று தானேகெடும்-தானேகெடுவான்—எ-று. (கருத்து.) என



சமயமுடையவனாகி யாராய்ந்து முறைசெய்யாத மன்னன் தானேகெடு
வான்-என்பதாம். * தாழ்ந்தபதம், பாவமும், பழியும், அவ்விடத்து நிற்
கும் நிலை. அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றமாகலால் பகைவரில்லா
திருந்தாலும் தானே கெடுமென்றார். [இதனால் முறைசெலுத்தாதவனை
து கேடுசொல்லப்பட்டது.] (அ)

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

இ-ள். குடி-குடிகளை, புறங்காத்து - பிறர்வருத்தாமற்காத்து,ஓம்
பி-தாமும்வருத்தாமல் ஆதரவுசெய்து, குற்றம் (அவரிடத்திலே) - கு
ற்றம் உண்டானால், கடிதல்-(அதனைத்தீர்க்கும்படி) தண்டித்தல், வேந்
தன்றொழில்-அரசனது தொழிலாம், (ஆகலால்)—வடுவன்று - பழியா
காது—எ-று. (கருத்து.) குடிகளைக்காத்துக் குற்றங்கடிதல் அரசனது
தொழிலாம்-என்பதாம். * துன்பஞ்செய்தல் - பொருள்வாங்கல் - கொ
ல்லுதல்-என-மூறுப்பு என்கிறதண்டம்மூன்றும், அவைகளுள் இங்கே
சொல்லப்பட்டவை - குற்றங்கடிதலென்றதனால் முன்னைய விரண்டுமோ
ம். தன் கீழ்வாழ்வாரை ஒறுத்தல் - அறனல்லாமையால் வடுவாமென்ப
தனை ஆக்ஷேபமாக்கிக்கொண்டு அது அரசனுக்கு அவரை அக்குற்றத்
திலிக்கப் பரிகாரமாகுதலால் - சாதி தருமமென்றார். (க)

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

இ-ள். வேந்து-அரசனானவன், கொடியாரை-கொடியவரை, கொலையின்-கொலையினாலே, ஒறுத்தல் - தண்டித்து (நல்லோரைக் காப்பாற்றல்)—(உழவனானவன்)—பைங்கூழ் - பயிரை, களைகட்டதனொடு - களையைக்களைந்து காப்பாற்றலோடு, நேர்-ஒக்கும்—எ-று. (கருத்து.) அரசன்கொடியவரைத் தண்டித்து நல்லவரைக் காத்தல் உழவன் பயிர்க்குக்களையெடுத்தல்போலாம்-என்பதாம். * கொடியோர் - தீக்கொளுவுவோர்-நஞ்சிடுவோர்-படையிற்கொல்வோர்-கள்வர் - வழியலைப்போர்-கொள்ளையிடுவோர் பிறனில்லாளை விரும்புவோர் இவர் முதலாயினோர்கள். இப்படிப்பட்டவரை அரசன் கொல்லாதவிடத்துப் புல்லுக்களைக்கு அஞ்சாவிடாத பயிர்போன்று பலவருத்தங்களை அடைந்து உலகத்தார் துன்பப்படுவார். [இவை இரண்டுபாட்டாலும் செங்கோல் செலுத்தும் அரசனுக்குத் தீயோரிடத்துமூவகைத்தண்டமும் செய்யவேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (௰)



## ௫௬-ஆம்-அதி- கொடுங்கோன்மை.



அஃதாவது, அம்முறையினது கோணுதற் றன்மையாம், செங்கோன்மைக்கு மாறுகலால் இது அதன்பின்வைக்கப்பட்டது.

> கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்
> டல்லவை செய்தொழுகும் வேந்து.

இ-ள். அலை-(பொருளை விரும்பிக்குடிகளை)அலைத்தற்றொழிலை,மேற்கொண்டு- (தன்) மேற்கொண்டு, அல்லவை- முறையல்லாதவைகளை, செய்து-செய்து, ஒழுகும் - நடக்கும், வேந்து-அரசனானவன், கொலை-(பகைமைபற்றிக்கொல்லுதற்றொழிலை, மேற்கொண்டாரின் - (தம்) மேற்கொண்டு நடப்பவரினும், கொடிதே-கொடியவனாவான்—எ-று. (கருத்து.) அநியாயஞ்செய்யுமரசன் - கொலைசெய்பவரினுங் கொடியன்-என்பதாம். * அவர்செய்வது ஒருவரைத்துன்பம் - இவன்செய்வது எல்லாரும் துன்பமாமென்பதுபற்றி அவரினும் கொடியனென்றார் அலைத்தல்-கொலையினும் கொடியதென்பதாயிற்று. (௧)

> வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
> கோலொடு நின்றா னிரவு.

இ-ள். கோலொடு-ஒறுத்தற்றொழிலோடு, நின்றான் - நின்றவரசன், இரவு-(குடிகளைப்பொருள்) வேண்டுதலானது, வேலொடு - வேலாயுதத்தோடு, நின்றான் - (வழியில் அலைத்துப்பறிக்கு மிடத்தினிடத்தவிலே) நின்றகள்வன், இடுவென்றதுபோலும் - (வழிப்போக்கரைநோக்கி உன்கைப்பொருளைத்) தாவென்று வேண்டுதல்போலும்—எ-று. (கருத்து.) கொடுங்கோலரசன் குடிகளை வருத்திப் பொருள் வேண்டுதல் வழிப்போக்கரைக் கள்வன் வருத்திப்பொருள்கொடு வென்றல்போல்-என்பதாம். * வேலொடு நின்றானென்றதனாலே பிறரொடு நில்லாமையும்

இரவென்றதனாலே - குடியிறையல்லாமையும், கொள்ளப்பட்டனர் நீ ராக்கால் - தண்டிப்பேனென்னும் குறிப்பின்றாகலால் இரவலர்க்கு ஞம் கொடுங்கோன்மை யாயிற்று. [இவ்விரண்டுபாட்டாலும் கொடுங் கோன்மையினது குற்றம்சொல்லப்பட்டது.] (௨)

நாடொறுநாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்.

இ-ள். நாடொறும்-நாள்தோறும், நாடி - (தன்னாட்டிலேதோன்று ம் தீமைகளை) ஆராய்ந்து, முறை-முறைமையை, செய்யா - (அதற்கு த் தக்க) செய்யாத, மன்னவன் - அரசன், நாடொறும்-நாள்தோறும், நா டு கெடும்-நாடிழப்பான் — எ-று. (கருத்து.) தன்னாட்டிற்குற்றங்களையா ய்ந்து நீதிசெலுத்தாதமன்னன்-தன்னாட்டையிழப்பான் - என்பதாம். நா



நாடொறும்பாகலால் அதன்கெடுதல் அவன்மேல்நின்றது. இழத்தல்-ப யன் அடையாமை. (௩)

கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

இ-ள். சூழாது - (மேல்வருவினைவை) எண்ணாமல், கோல்கோடி - மு றைதப்ப, செய்யும் - செய்யும், அரசு - அரசனானவன், (அச்செயலால்) கூழும் - (முன்னேசம்பாதிக்கப்பட்ட) பொருளையும், குடியும் - பின் (அதுசம்பாதிக்கைக்கு ஏதுவாகிய) குடிகளையும், ஒருங்கு - ஒருசேர, இ ழக்கும் - இழப்பான் — எ-று. (கருத்து.) மதுநீதிதப்பியவரசனுமரசன் பொ ருளையும் குடிகளையுமிழப்பான் - என்பதாம், ஈ கோடியென்னும் வினையெ ச்சம் கோடவென்னும் வினையெச்சப்பொருளில்வந்தது. முன்சம்பாதி க்கப்பட்டபொருளை இழத்தற்கு ஏதுவருமிதபாட்டாற்சொல்லுகிறார். (௪)

அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

இ-ள். செல்வத்தை - (அரசன்) செல்வமாகிய (மரத்தை) — தேய் க்கும் - குறைக்கும், படை - வாளாவது, (அவன்) முறைசெய்யாமையி னாலே — அல்லற்பட்டு - (குடிகள்) துன்பப்பட்டு, ஆற்றாது - (அதனை ப்) பொறுக்கமாட்டாமல், அழுதகண்ணீரன்றே - அழுதகண்ணீரல்ல வோ — எ-று. (கருத்து.) குடிகளழுதகண்ணீரல்லவோ கொடுங்கோல் வேந்தன் செல்வத்தையறுக்கும் வாளென்பதாம். ஈ அல்லற்படுத்திய பாவத்தினது தேய்தல் அதற்கு ஏதுவாகிய கண்ணீர்மேல் நின்றது. அக்கண்ணீரைக்காட்டிலும் கொடியதுவேறில்லாமையால் செல்வக்க டிதிலே தேயுமென்பது கருத்து. (ஏகதேசவுருவகவணி.) (௫)

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி.

இ-ள். மன்னர்க்கு - அரசர்க்கு - மன்னுதல் - (புகழ்களாலே) நிலை பெறுதல், செங்கோன்மை - செங்கோன்மையினால் (ஆகும்) — அஃது - அச்செங்கோன்மை, இன்றேல் - இல்லையாயின், மன்னர்க்கு - அரசர்க் கு, ஒளி - அப்புகழ்களானவை, மன்னுவாம் - உண்டாகாவாம் — எ-று. (கருத்து.) அரசர்க்குச்செங்கோன்மையே புகழ்களாம். அஃதில்லாவி

டி லப்புகழ்க ளுண்டாகாவாம் - என்பதாம், * மன்னுமை-ஒருபோதும் நிலையாமை. பழிக்கப்பட்டால் புகழில்லாமையால் தாழும்நிலையா மெ ன்பதாயிற்று. வெற்றிக்கொடை முதலாயினவற்றுக்களால் புகழ்பலவாகைப் படுதலால் மன்னு எனப்பன்மையாற் சொல்லினர். அப்புகழ்களெல் லாம் செங்கோன்மையில்லாதவிடத்து இல்லையாமென்பதாம். [இவை



நான்குபாட்டாலும் கொடுங்கோன்மையான் அடையும் குற்றம் சொ ல்லப்பட்டது.] (௬)

துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

இ-ள். வேந்தன் - அரசனது, அளியின்மை-அருளில்லாமையான து, வாழும் - (அவனாட்டிலே) வாழும் உயிர்க்கு -குடிகளுக்கு, துளி-ம ழையினது, இன்மை - இல்லாமையானது, ஞாலத்திற்கு-பூமியில்வாழு முயிர்களுக்கு, எற்று - எவ்வகைத்துன்பந்தருமோ, அற்றே-அவ்வகை த்துன்பந்தரும்—எ-று. (கருத்து.) மழையில்லாமை துன்பந்தரும், அதுபோல அரசனருளில்லாமை குடிகளுக்குத் துன்பந்தரும் - என்ப தாம். * உயிரென்றது குடிகளை முன்வானோக்கி வாழுமென்றதனோடொ திர்மறைமுகத்தாற்சொல்லியபடி. (௭)

இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

இ-ள். முறைசெய்யா-முறைமையைச்செய்யாத, மன்னவன் - அரச னது, கோற்கீழ் - கொடுங்கோலின்கீழ், படின் - வாழின், (யாவர்க்கும்) உடைமை-(பொரு)ளுடைமையானது, இன்மையாயின்-இல்லாமையினு மின்னாது - அதிகதுக்கத்தைச்செய்வதாகும்—எ-று (கருத்து) அர சன்கொடுங்கோலின்கீழ் வாழ்ந்தால் வறுமையிலுங்கொடிய துன்பந் தரும் - என்பதாம். * தனக்குரிய பொருளோடு அமையாதுமேலும் வி ரும்புவானது நாட்டிலே அடிகுத்துமுதலானவை பொருளுடையார்க் கேஆதலால் அவ்வுடைமையில்லாமையினும் இன்னாதாயிற்று, [இவை இரண்டுபாட்டாலும் அவனாட்டுவாழ்வார்க்கு வருங்குற்றஞ்சொல்லப் பட்டது.] (அ)

முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.

இ-ள். மன்னவன் அரசன், முறைகோடி -முறைதப்ப, செய்யின் -(பொருளைச்) சம்பாதிப்பானாயின், (அவனதுநாட்டிலே) உறை - பரு வமழையானது, கோடி - இல்லாமற்போக, வானம் - மேகமானது, பெ யல் - பொழிதலை, ஒல்லாது - பொருந்தாது—எ-று (கருத்து.) அரசன்மு றைதப்ப வரசாளிலவனாட்டிலே மழைபெய்யாது. - என்பதாம், * பருவமழையில்லாமைக்கு ஏதுவருகின்ற பாட்டாற்சொல்லுகின்றார்.

கோடி எனவந்த இரண்டுசொற்களும் கோடஎன்னுஞ் சொற்பொரு ளில்வந்தன. (௯)

ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

இ-ள். காவல் - காப்பாற்றற்குஉரிய அரசன், காவானெனின் - (உயிர்களைக்) காப்பாற்றானாயின், (அவனதுநாட்டிலே) ஆ-பசுக்களும், பயன்குன்றும் - பால்சுருங்கும், அறுதொழிலோர் - அந்தணரும், நூல் - நூல்களை, மறப்பர் - மறந்துவிடுவார் — எ-று. (கருத்து.) அரசன் உயிர்களைக் காவாவிடின் அவனாட்டிற் பசுக்கள் பால்சுருங்கும், வேதியர் - வேத மறப்பர் - என்பதாம். ஆ பயன் - ஆவினின்றும் கொள்ளப்படும்பயன். அறுதொழிலாவன, வேதமோதல் - ஓதுவித்தல் - யாகஞ்செய்தல் - செய்வித்தல் ஈதல் - ஏற்றல் - என்பன. பால்குறைதலாலும், ... மறத்தலாலும், தேவர்க்குயாகம் நடவாமையால் மழைபெய்யாதென்பதா

மறு. [இவையிரண்டுபாட்டாலும் அவனாட்டில் உண்டாங்குற்றம் சொல்லப்பட்டது.] (ரு)

# ருஎ-ஆம்-அதி-வெருவந்தசெய்யாமை.

அஃதாவது, குடிகள் அஞ்சுவதும், பகுதியென்று சொல்லப்படுகிற மந்திரிமுதலாகிய அங்கங்கள் அஞ்சுவதும், தான் அஞ்சுவதும், ஆகிய தொழில்களைச்செய்யாமை. அவைசெய்தல் கொடுங்கோன்மையிலே சேர்தலால் இது அதன்பின்வைக்கப்பட்டது.

> தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
> லொத்தாங் கொறுப்பது வேந்து.

இ-ள். (ஒருவன் மெலியவனுக்குத் தீங்குசெய்தவிடத்து) தக்காங்கு - வாய்மின்று, நாடி - (அதனை) ஆராய்ந்து, தலைச்செல்லாவண்ணத்தால் - (பின்னும்) அப்படிப்பட்ட காரியத்திலே செல்லாமற்பொருட்டு, ஒத்தாங்கு - (அக்குற்றத்துக்கு) ஏற்க, ஒறுப்பது - (அவனைத் தண்டிப்பவனே, வேந்து - அரசனாவான் — எ-று. (கருத்து) நடுவுநின்று ஒருவன்குற்றத்தை யாராய்ந்து தக்கப்படி தண்டிப்பவனேயரசனாவானென்பதாம். இதனாலே தகுந்ததண்டம் நடாமையும், வேறொருகாரணம் பற்றி அதிகமாகத்தண்டித்தலும், குடிகள் அஞ்சுந்தொழிலாதல் பெற்றாம். (௧)

> கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
> நீங்காமை வேண்டு பவர்.

இ-ள். ஆக்கம் - செல்வமானது, நெடிது - நெடுங்காலம், நீங்காமை - நீங்காமையை, வேண்டுபவர் - விரும்புவோர், கடிதோச்சி - (அத்தகுந்த தண்டம்செய்யத் தொடங்கும்போது) அளவுகடக்கச் செய்பவர்போலே தொடங்கி, மெல்லவெறிக, (செய்யும்போது) அளவுகடவாமற்செய்யக்கடவர் — எ-று. (கருத்து.) செல்வம் வேண்டுவோர் வசியதண்ட

னைச்செய்பவர்போலத்தொடங்கி மெல்லத்தண்டனைசெய்க - என்பதாம். * கடிதோச்சல் - குற்றஞ்செய்வார் அதனை அஞ்சுதற்பொருட்டும்; மெல்லவெறிதல்யாவரும் அஞ்சாமைப் பொருட்டும், ஆம்,தொடங்குமளவுக்குக் குறைதல்பற்றி - தகுந்ததண்டஞ்செய்தலை மெல்லவென்றார். ஓச்சுதல் - எறிதல் - இரண்டும் உவமைபற்றிவந்தன [இவை இரண்டுபாட்டாலும் குடிகள் அஞ்சுவன செய்யாமையின் இலக்கணம் சொல்லப்பட்டது.] (௨)

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும்.

இ-ள். (அரசன்) வெருவந்த - (குடிகளால்) அஞ்சப்பட்டசெயல்களை, செய்து - செய்து, ஒழுகும் - நடக்கும், வெங்கோலனாயின் - கொடுங்கோலனாயிருந்தால், ஒருவந்தம் - நிச்சயமாகவே, ஒல்லை - கடிதில், கெடும் - (அவன்) கெடுவான் - எ-று. (கருத்து.) குடிகளஞ்சத்தக்கவற்றைச் செய்யுங்கொடுங்கோலரசன் விரைவிற்கெடுவான் - என்பதாம். * அச்செயல்களும் கேடும் பின்னே சொல்லப்படும். (௩)

இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

இ-ள். இறை - (நம்) மரசனானவன், கடியனென்று - பொல்லாதவனென்று, உரைக்கும் - (குடிகளாலேசொல்லப்படுகிற) இன்னாச்சொல் - துன்பந்தருஞ்சொல்லையுடைய, வேந்தன் - அரசன், உறைகடுகி, ஆயுளுங்குறைந்து, ஒல்லை கெடும் - (செல்வமும்) கடிதினிழப்பான் - எ-று. (கருத்து.) கொடியனென்றுசொல்லப்பட்ட கொடுங்கோலரசன் ஆயுள்குறைந்து செல்வமிழப்பான் - என்பதாம். * ஆயுள்குறைதலாவது - அச்சொல்லில்லாதவர்க்கு உள்ளதிலே குறைதல். (௪)

அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

இ-ள். அருஞ்செவ்வி - (தன்னைக்காணவேண்டுவோர்க்கு) அரிதாகிய சமயத்தையும், இன்னாமுகத்தன் - (கண்டால்) இனிமையில்லாத முகத்தையும் உடையவனது, பெருஞ்செல்வம் - பெரியசெல்வம், பேஎய் - பேயால், கண்டன்னது - காணப்பட்டது போல்வதொருகுற்றத்தை, உடைத்து - உடையதாகும் - எ-று. (கருத்து.) அரியசமயத்தையும் கடியமுகத்தையுமுடைய அரசன்செல்வமானது பேய்கண்டசெல்வம்போலாம் - என்பதாம். * என்வே இவையிரண்டும் அஞ்சுவன செய்தலாயிற்று. இவைசெய்வானை ஒருவரும் சேராமையால் அவன்செல்வம் தனக்கும்பிறருக்கும் பயன்படாதென்பது பற்றிப்பேய்கண்டன்னதுடைத்தென்றார். காணுதல் தன்வசமாக்கல். (௫)



கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை.

இ-ள். உலகியல்-உலகநடையானது, கண்ணோட்டத்து-கண்ணோட்டத்தினிடத்தே, உள்ளது-நிகழ்வதாகும், (ஆகையால்) அஃதிலார் - அக்கண்ணோட்டமில்லாதவர், உண்மை - உளராதல், நிலக்கு-பூமிக்கு, பொறை பாரமாவதற்கே, (வேறொன்றுக்குமன்று)—எ-று. (கருத்து) உலகம் கண்ணோட்டத்திலே நடப்பதாம். இஃதில்லாதவர் பூமிக்குப்பாரமாவர் - என்பதாம். * உலகநடையாவது - உபகாரஞ்செய்தல் - காப்பாற்றல் - பிழைபொறுத்தல் இவைமுதலானவை, அவையுண்டாகாமையால் கண்ணோட்டமில்லாதவர் தமக்கும்பிறர்க்கும் பயன்படாரென்பதுபற்றி நிலத்துக்குப்பொறையென்றார். [இவை இரண்டுபாட்டாலும் கண்ணோட்டத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௨)

பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னும்
கண்ணோட்ட மில்லாத கண்.

இ-ள். பண் - இசையானது, பாடற்கு-பாடற்றொழிலோடு, இயைபின்றேல்-பொருத்தமில்லையாயின், என்னும் - என்னபயனுடைத்தாகும், (அதுபோல்) கண்-கண்ணானது கண்ணோட்டமில்லாதகண் - கண்ணோட்டமில்லாதவிடத்து, என்னு - என்னபயனுடைத்தாகும் - எ-று. (கருத்து.) பாடற்கிசையில்லாவிடிற்பயனில்லை அதுபோலக் கண்ணிற்குத் தாட்சிணியமில்லாவிடிற் பயனில்லை - என்பதாம். * எப்படிப்பாடற்றொழிலோடுபொருந்தாதவிடத்து இசையினாலேபயனில்லையோ அப்படியே கண்ணோட்டத்தோடு பொருந்தாதவிடத்துக்கண்ணினாலே பயனில்லையென்பதாம். (௩)

உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்டமில்லாத கண்.

இ-ள். அளவினால்- தகுமளவினால், கண்ணோட்டமில்லாத- தாட்சிணியமில்லாத, கண்-கண்களானவை, முகத்து -முகத்தினிடத்து, உளபோம் = உள்ளவைபோல, (கண்டோர்க்குத்தோன்றுதலையல்லாமல்



எவன் (வேறே) என்னபயனை, செய்யும்-செய்யும்—எ-று. (கருத்து.) கண்ணோட்டமில்லாதகண்கள் என்னபயனைத்தரும் - என்பதாம். தோன்றுதலையல்லாமல் என்னுஞ்சொற்கள் வருவிக்கப்பட்டன—அதிகமான கண்ணோட்டத்தை விலக்குதற்கு அளவினாலென்றார். அக்கண் தன் ஒருபயனையும் செய்யா வென்பது கருத்து. (௪)

கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

இ-ள். கண்ணிற்கு - (ஒருவனது) கண்ணிற்கு, அணிகலம்-அணியும் அணியாவது, கண்ணோட்டம்-தாட்சிணியமாகும், அஃதின்றேல் - அவ்வணி இல்லையாயின், (அக்கண்) புண்ணென்று - புண்ணென்று, உணரப்படும் - (அறிவுடையவரால்) அறியப்படும்—எ-று. (கருத்து.) கண்ணிற்கு ஆபரணந்தாட்சிணியமாம். அஃதில்லாவிடிலக்கண் புண் - என்பதாம். * கண்ணிற்குவேறே அணியில்லாமையால் - கண்ணிற்கணிகலமென்றும், கண்ணாய்த்தோன்றிநின்றும் - நோய்செய்தும் - நீர்பத்தலாலும் - துயர்விளைத்தலாலும் புண்ணென்றுணரப் படுமென்றும், சொல்லினர் [இவைமூன்றுபாட்டாலும் அதுசெய்யாதகண்ணின் குற்றம் சொல்லப்பட்டது.] (௫)

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

இ-ள். கண்ணோடு-(ஓடுதற்குஉரிய) கண்ணோடு-இயைந்து-பொருந்தியிருந்தும், கண்ணோடாதவர்-அக்கண்ணோடுதலில்லாதவர், (சஞ்சரிக்கின்றவராயிருந்தாலும்) மண்ணோடு - மண்ணுடன், இயைந்த-பொருந்தி நின்ற, மரத்தனையர் - மரத்தினையொப்பர்—எ-று. (கருத்து.) தாட்சிணியமில்லாதவர் மரத்திற்கொப்பாவார் - என்பதாம். உ கண்ணினது தொழிலாகிய ஓடுதல் கண்ணையுடையவன்மேல் நின்றது, மரம்-கண்ணோடு பொருந்தியும் கண்ணோடாமையால் உபமானமாயிற்று. (சு)

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில்,

இ-ள். கண்ணோட்டமில்லவர்- கண்ணோட்டமில்லாதவர், கண்ணிலர் - கண்ணுடையவருமல்லர், கண்ணுடையார்-கண்ணுளார், கண்ணோட்டமின்மையும்- கண்ணோட்டமில்லாதவராதலும், இல்-இல்லை-எ-று. (கருத்து.) கண்ணோட்ட மில்லாதவர் குருடர் கண்ணோட்டமுள்ளவர் கண்ணுளார் - என்பதாம். உ நெருப்பு எங்கே இல்லையோ அங்கே புகையும் இல்லை புகையெங்கே இருக்கிறதோ அங்கே நெருப்பும் இருக்கும்-என்பதுபோல்-கண்ணோட்டம் எவரிடத்து இல்லையோ அவரிடத்தே கண்ணும்மில்லை-கண் எவரிடத்து இருக்கின்றதோ அவரிடத்தே கண்ணோட்டமும் இருக்கும் என அநுமானப்பிரமாணம் பற்றிச்சொல்லியது [இவைஇரண்டுபாட்டாலும் கண்ணோடாதாரிழிவு சொல்லப்பட்டது.]



கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

இ-ள். (இவ்வுலகு) இந்தவுலகம், கருமம்-(முறைசெய்தலாகிய தமது) தொழில், சிதையாமல்-அழியாமல், கண்ணோடவல்லார்க்கு - கண்ணோட்டஞ்செய்யவல்ல அரசர்க்கு, உரிமை- உரியதாந்தன்மையை, உடைத்து - உடையதாகும்—எ-று. (கருத்து.) கண்ணோட்டமுடையவரசருக் கிவ்வுலகமுரிமையுடையது-என்பதாம். உ தமமோடு பொருந்தினவர் பிறருக்கு இடுக்கண்செய்தவிடத்து - அவரைக் கண்ணோட்டத்தினாலே தண்டிக்காதவர்க்கு முறைகெடுதல் முன்னே கூறிய கண்ணோடாதென்ற குறளிலே சொல்லப்பட்ட முறையிலக்கணத்தாலும் பெற்றும், முறைகெடவருமிடத்துக் கண்ணோட்டஞ் செய்யாமையும், அதுவாராதவிடத்துக் கண்ணோட்டஞ் செய்தலும், ஒருவனுக்குச் சுபாவமாகுதல் அருமையாகலால், - கண்ணோட வல்லார்க்கென்றும், அச்சுபாவமுடையவர்க்கு உலகமுழுதும் நெடுங்காலம் வசப்படுதலால், உரிமையுடைத்தென்றும், சொல்லினார். [இதனால் கண்ணோட்டஞ்செய்யும் விதம் சொல்லப்பட்டது.] (அ)

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

வல்லறிதல் வேந்தன் றொழில்.

இ-ள்: எல்லார்க்கும் - எல்லாரிடத்தும், நிகழ்பவையெல்லாம்-நடப்பவைகளையெல்லாம், எஞ்ஞான்றும்-காலந்தோறும், வல்லறிதல் - (ஒற்றராலே) விரைந்தறிதல், வேந்தன்றொழில்-அரசனுக்குரியதொழில் — எ - று. (கருத்து.) யாவரிடத்து நடப்பவைகளை யொற்றராலறித லரசனதுதொழிலாம் — என்பதாம். ‡ எல்லார்க்குமென்றது பகைவர், அயலோர்-நட்பினர், என்னுமூவகையாரையும், நிகழ்பவையெல்லாமென்றது, நல்லவையும், தீயவையும், ஆகியசொற்களையும், செயல்களையும், அவைநிகழ்ந்தபொழுதே, அவைகளுக்குத் தக்கவழியாகவாவது தேறுதலாகவாவது செய்யவேண்டுதலால் - வல்லறிதலென்றார். அவ்விருதொழில்களுக்கும் அறிதல் காரணமாகலால் அதனைத் தொழிலென்று உபசரித்தார், ஒற்று அதிகாரத்தால்வந்தது. [இதனால் ஒற்றினாலாகிய பயன் சொல்லப்பட்டது.] (௨)

ஒற்றினு னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

௫௯-ஆம்-அதிகாரம்-ஒற்றாடல். உ௫௯

இ-ள். ஒற்றினால்-ஒற்றனைக்கொண்டு, ஒற்றி-(எல்லாரிடத்தும் நிகழ்ந்தவைகளை) அறிந்துவரச்செய்து, பொருள் - (அவைகளால் அடையும்) பயனை, தெரியா - ஆராய்ந்தறியாத, மன்னவன் - அரசனானவன், கொற்றங்கொளக்கிடந்தது - வெற்றியடையக்கிடந்தது; இல் - (வேறொருவழி) இல்லை — எ - று. (கருத்து.) ஒற்றனைக்கொண்டு பகைவர்காரியங்களை யறியாதவரசன் வெற்றியடையானென்பதாம். ‡ அந்நிகழ்ச்சியையும் பயனும் அறியாமல் பகைக்கு எளியனாதல் ஒற்றதனாலே யன்றி வேறொன்றினாலே நீங்காமையால், கொற்றங்கொளக்கிடந்த தில்லென்றார். [இதனால் அத்தொழில் செய்யாதவிடத்துவரும் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௩)

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

இ-ள். தம்-தம்முடைய, வினைசெய்வார்-காரியஞ்செய்பவர், சுற்றம்-சுற்றத்தார், வேண்டாதார்-பகைவர், என்றாங்கு - என்றுசொல்லப்பட்ட, அனைவரையும், எல்லாரையும், ஆராய்வது- (சொல்லாலும் செயலாலும்) ஆராய்பவனே, ஒற்று - ஒற்றனாவான் — எ - று. (கருத்து.) தொழிலாளரையும்-உறவினரையும்-பகைவரையும் ஆராய்பவனே ஒற்றனாவான் - என்பதாம். ‡ அரசனுக்குக் காரியஞ்செய்வோராலே செய்யப்படுமவையும், சுற்றத்தாராலே தன்னிடத்தும் பிறரிடத்தும் செய்யப்படுமவையும், பகைவராலே தன்சோர்வுபார்த்தலும் மேலேதேறப்படுதலும், முன்னிட்டுச் செய்யப்படுமவையும், அறிந்து அவைகளுக்கு ஏற்பவைகளைச் செய்யவேண்டுதலால் இம்மூவகையாரையும் குறையாமல் ஆராயவேண்டுமென்றற்கு - அனைவரையுமாராய்வதொற்றென்றார்; (௪)

கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
முகாஅமை வல்லதே யொற்று.

இ-ள். (எவரது செய்தியை அறிதற்குச்சென்றானோ அவராலே) கடாஅ - சந்தேகிக்கப்படாத, உருவொடு - வடிவோடு, (பொருந்தி) (அவர் சந்தேகித்து அறியத்தொடங்கினால்) கண்ணஞ்சாது - (கோபித்துப் பார்க்கின்ற அவர்) கண்ணிற்கு அஞ்சாமலின்று, யாண்டும் - எவ்வுபாய

க்களும் செய்தாலும், உகா அமை - (மனதிலுள்ளவைகளை) உமிழாதி ருக்க வல்லதே-வல்லவனே, ஒற்று - ஒற்றனுவான்—எ-று. (கருத்து.) ஐயமில்லா வடிவோடு பொருந்தி யஞ்சாதிருந்து பகைவர்களென்செய்யி னுமுள்ளதைச் சொல்லாதவனே ஒற்றன்-என்பதாம். * சந்தேகிக்கப் படாதவடிவு-பார்ப்பார் - ஞானிகள்-முதலானவர்வடிவு. (௫)

துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.



இ-ள். துறந்தார்-முழுதுந்துறந்தோரும், படிவத்தர்-விரதவொழு க்கத்தோரும், ஆகி - ஆகி, இறந்து - (போகக்கூடாத விடங்களிலெல்லா ம்) போய், ஆராய்ந்து - ஆராயவேண்டியவைகளெல்லாம் ஆராய்ந்தறி ந்து, என்செயினும் அவ்விடத்தோர் (சந்தேகித்துப்பிடித்து) என்னவ ன்பஞ் செய்துகேட்டாலும், சோர்விலது - தன்னை வெளிப்படுத்தாதவ னே, ஒற்று-ஒற்றனுவான்—எ-று. (கருத்து.) துறவிகள் விரதர்கள்வடி வங்கொண்டு, எங்கும்போய் யாவும் அறிந்து பகைவர் துன்பஞ்செய்யினுந் தன் னைக்காட்டாதவன் ஒற்றனுவான் - என்பதாம். * விரதவொழுக்கம் - தீர் த்தயாத்திரை முதலானவை செயினுமென்பது - அசவோமொன்று செ ய்யாவென்பதை விளக்கின்றது, முன்னேசால்வகை உபாயமுஞ்சொ ல்லி இங்கேயுந் தண்டத்தைப் பிரித்துச்சொல்லியது அதன்பொருத்த த் தன்மைச்சிறப்புநோக்கி. (௬)

மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று.

இ-ள். மறைந்தவை - எவர்களு செயல்களை அறியச்சென்றானே அ வர்களு) மறைவாயுள்ள செயல்களை, கேட்கவற்றாகி - (அவருக்கு உள்ள ளவராலே) கேட்கவல்லவனாகி, அறிந்தவை - (கேட்டு) அறியப்பட்ட அச்செயல்களிலே, ஐயப்பாடில்லாத - (பின்) சந்தேகப்படுதலில்லாதவ னே, ஒற்று-ஒற்றனுவான்—எ-று. (கருத்து.) இரகசியங்களைக்கேட்கவல் லவனாகிப் பகைவர் சந்தேகப்படாதவனே ஒற்றனுவான் - என்பதா ம். * அம்மறைவாயுள்ள செயல்களைச்சொல்லுவாரை அறிந்து அவர்ச ந்தேகியாதபடிபோய் நட்டு அவரே சொல்லும்படிக்கு அதற்குஏற்ற சொல்லையாவது செயலையாவது முன்னே உண்டாக்கி அச்சமயத்தி லுலேகேட்கும்போதும் அயலார்போலே நின்றுகேட்கவேண்டுதலை ல்-கேட்கவற்றாகியென்றார், கேட்டு அறியப்படுமவைகளைத்தானேசந் தேகித்து வந்துசொன்னாலும் அரசனுல் அவைகளுக்கு எற்றகாரியம் செ ய்யக் கூடாமையால் ஐயப்பாட்டில்லதே யென்றும், சொல்லினார். [இ வை நான்குபாட்டாலும் ஒற்றனது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௭)

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினு லொற்றிக் கொளல்.

இ-ள். ஒற்று - ஓரொற்றனாலே, ஒற்றி - மறைவாயறிந்துவந்து, தந்த - அறிவிக்கப்பட்ட, பொருளையும் - காரியத்தையும்; மற்றுமோரொற்றினுல் - பின்னும், (ஓரொற்றனாலும்) ஒற்றி - அறிந்துவரச்செய்து, கொளல் - (உ ப்புமைகண்டு) கொள்ளக்கடவன் — எ-று. (கருத்து.) ஒரொற்றனறிந்து வந்தபொருளை மற்றொருவொற்றனலறிந்து வரச்செய்து அரசன் கொள்ளக்கடவன் - என்பதாம். * அவரோடின்னொருவன் மாறுபடச்சொல்லு தலும் கூடுமாகையால் அரசனுக்குறுதவல் சொல்லையே நம்பலாகா தென்பதாம். (அ)

ஒற்றொற் றுணராமை யாள்கடவுன் மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

இ-ள். (ஒற்றனை ஆளுமிடத்து) ஒற்று - ஓரொற்றன், ஒற்றும் மற்றொரொற்றனை, உணராமை - அறியாதிருக்கும்படி, ஆள்க - ஆளக்கடவர் (அப்படி ஆளப்பட்ட ஒற்றர்களுள்) உடன்மூவர் - (ஒருபொருண்மேலே வேறுவேறுவிடப்பட்ட) மூவருடைய, சொல் - சொற்களும், தொக்க - (பயனுல் ஒத்திருக்குமாயின்) — தேறப்படும் - (அப்பொருள்மெய்யென்று) தெளியப்படும் — எ-று. (கருத்து.) ஒரொற்றன் மற்றோரொற்றனையறியாதிருக்கும்படி யரசனுளக்கடவன் - என்பதாம். * ஆமினென்றது வருவிக்கப்பட்டது, ஒருவனை ஒருவன் அறிந்தால் தம்மிலேகலந்துகொண்டு ஒப்பச்சொல்வாராகையால் - உணராமை ஆள்கவென்றும் - மூவர்க்கும் செஞ்சு ஒருதன்மைப்படுதலும் பட்டால் கீடித்திருத்தலும், கூடாமையால் தேறப்படுமென்றும், சொல்லினர். இதனாலே மூவர்சொல்லும் ஒத்திராமற்போனால் பின்னும் ஆராய்கவென்பதும் பெறப்பட்டது. (௯)

சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

இ-ள். ஒற்றின்கண் - (மறைந்தவைகளை அறிந்து சொல்லிய) ஒற்றனிடத்து, சிறப்பு - சிறப்பை, அறிய - (பிறர்) அறிய, செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன், - செய்யின் - செய்தால், மறை - (தன்னுள்ளே அடக்கப்படுமவைகளை) — புறப்படுத்தானாகும் - (தானே) வெளி இட்டவனாவான் — எ-று. (கருத்து.) அரசன் ஒற்றனுக்குப்பிறரறியச் சிறப்புச் செய்யாதிருக்கக் கடவன்செய்தால் தனது இரகசியங்களை வெளிப்படுத்தினவனாவான், என்பதாம். * மறையாவது - அவன் ஒற்றனென்பதும் - அவன்சொல்லியதும் - ஆம். சிறப்புப்பெற்ற இவன்யாரென்றும் - இதுபெறுதற்குக்காரணம்யாதென்றும் - வினவுவாரும் சொல்வாரும் - ஆயினராகலால் புறப்படுத்தானாகுமென்றார். [இவைமூன்றுபாட்டானும் ஒற்றனை ஆளும்விதமும், அவராலேநடந்தவை அறியும்விதமும் - அறிந்தார்க்குச்சிறப்புச்செய்யும் விதமும், சொல்லப்பட்டன.] (௰)

## ௬௰-ஆம்-அதி-ஊக்கமுடைமை

அஃதாவது, மனமானது தொழில் செய்தலிலே எழுச்சியை யுடைத்தாதலாம். ஒற்றால் நடந்தவை அறிந்து அவைகளுக்கு ஏற்ற தொழில்செய்வோனுக்கு இது அவசியம் வேண்டுதலால் அதன்பின் வைக்கப்பட்டது.

உடைய ரெனப்படுவ தூக்க மஃதில்லா
ருடைய துடையரோ மற்று.

இ-ள். உடையரெனப்படுவது - (ஒருவனை) உடையவனென்று சொல்லுதற்குச் சிறந்தது, ஊக்கம் - மனவெழுச்சியாம், அஃதில்லார் - அம்மனவெழுச்சியில்லாதவர், மற்றுடையது - வேறுடையதொன்றனால், உடையரோ - உடையராவரோ — (ஆகார்) — எ-று. (கருத்து.) உடையவனென்று சொல்லத்தக்கது மனவெழுச்சியாம் - அவ்வெழுச்சியில்லாதவர் யாதுமில்லாதவர் - என்பதாம். * வேறுடையதென்றது - முன்னடைந்தின்றபொருளை, உம்மைவருவிக்கப்பட்டது காப்பாற்ற வலிமையில்லாமையால் அதையும் இழப்பரென்பதாம். (௧)

உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

இ-ள். (ஒருவனுக்கு) உள்ளமுடைமை - மனவெழுச்சியுடைமையே, உடைமை - (நிலைபெற்ற) வுடைமையாவது, பொருளுடைமை - பொருளுடைமை, நில்லாது - நிலைபெறாமல், நீங்கிவிடும் - நீங்கும் — எ-று (கருத்து.) மனவெழுச்சி நிலையுள்ளவுடைமையாம் - பொருளுடைமை நிலையில்லாதாம் - என்பதாம். * மனவெழுச்சி உள்ளத்தின் குணமாதலால் அதற்குநிலைபெறுதலும் - பொருள் உடம்பினும்வேறாய் அழிவதாயிருக்கையால் அதற்கு நிலைபெறாமையும், சொல்லப்பட்டன, சொல்லவே அது உடைமை [அன்றென்பது பெறப்பட்டது.] (௨)

ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

இ-ள். ஒருவந்தம் - நிலைபெற்றதாகிய, ஊக்கம் - மனவெழுச்சியை, கைத்து - கைப்பொருளாக, உடையார் - உடையவர், (இழந்தாராயினும்) ஆக்கம் - கைப்பொருளை, இழந்தேமென்று - இழந்துவிட்டோமென்று, அல்லாவார் - மனஞ்சுழலார் — எ-று. (கருத்து.) மனவெழுச்சியுடையவர் பொருளிழந்தும் வருந்தார் - என்பதாம். * மனஞ்சுழலாமைக்கு ஏது வருகின்ற பாட்டாற்சொல்லப்படுகிறது. (௩)

ஆக்க மதர்வினாய்ச்செல்லுமசைவிலா
வூக்க முடையா னுழை.

இ-ள். அசைவிலா - அசைவில்லாத, ஊக்கமுடையானுழை - மனவெழுச்சியுடையவனிடத்தே, ஆக்கம் - பொருளானது, அதர்வினாய் - வழிகேட்டுக்கொண்டு, செல்லும் - போகும் — எ-று. (கருத்து.) மனவெழுச்சியுடையவனிடத்துச் செல்வம்வரும் - என்பதாம். * அசைவின்மை இடுக்கண்முதலாகியவைகளால் தளராமை வழிகேட்டுச்சென்று சேர்வார்போலே தானேசென்று சேருமென்றற்கு - அதர்வினாய்ச்செல்லுமென்றார். [இவைநான்குபாட்டாலும் அடைந்து நின்றபொருளும் அதற்குக்காரணமாகிய ஊக்கம் சிறந்ததென்பது சொல்லப்பட்டது.] (௪)



வெள்ளத் தனையமலர்நீட்டம் மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு

இ-ள். மலர்-நீர்ப்பூந்தாள்களது, நீட்டம்-நீட்சியானவை, வெள்ளத்தனைய-நின்றநீரளவினவாம், (அதுபோல) மாந்தர்-மனிதர்கள், உயர்வு-உயர்ச்சியானது, உள்ளத்தனையது- (அவர்) மனவெழுச்சியளவினதாம்—எ-று. (கருத்து.) நீர்ப்பூந்தாள்கள் நிறைநீரளவாம் அதுபோல மனிதர்களுயர்வுமனவெழுச்சியளவாம் - என்பதாம். மலர அதன் றாளுக்கு ஆகுபெயர். நீர்மிகுந்தாற்போல் மலர்கள்நீளுமென்பது தோன்ற-வெள்ளத்தனைய வென்றார். இவ்வுபமான வலிமையாம் ஊக்கமிகுந்தவனாயும் மனிதர் உயர்வாரென்பது பெறப்பட்டது. உயர்வு-பொருள் படைகளால்மிகுதல். (௬)

உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

இ-ள். (அரசரானவர்) உள்ளுவதெல்லாம்-நினைப்பதெல்லாம், உயர்வு-(தமது) உயர்ச்சியையே உள்ளல்-நினைக்கக்கடவர், அது-அவ்வுயர்ச்சியானது, தள்ளினும்-(ஊழ்வகையினாலே)கூடாமற் போயினும் (அந்நினைப்பு) தள்ளாமைநீர்த்து-தள்ளாமைக் குணமுடையதாம்-எ-று. (கருத்து.) அரசருயர்வை நினைக்கக்கடவர் அவ்வுயர்ச்சி கூடாவிடினும் அந்நினைப்பு நீக்காக்குணமுடையதாம் என்பதாம். மற்று-அசை - தள்ளினுமென்றதனால் தள்ளாமை மிகுதியாதல் விளக்கிற்று. தள்ளியவிடத்தும் முயற்சியிலே அவர் தவறுதல் இல்லாமல் நல்லோராலேபழிக்கப்படாமையால் தள்ளாத இயற்கையுடைத்தென்பதாம். முன்னே உள்ளத்தனையதுயர், வென்றதனை உறுதிசெய்தபடி. (௭)

சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

இ-ள். களிறு-யானையானது, புதையம்பில்- கட்டாகிய அம்பினாலே, பட்டுபுண் பட்டவிடத்து, பாடூன்றும்-(தளராமல்தம்) பெருமையைநிறுத்தும். (அதுபோல) உரவோர் - மனவெழுச்சியையுடையவர், சிதைவிடத்து- (தாம்நினைத்தஉயர்ச்சிக்கு) அழிவுவந்தவிடத்து, ஒல்கார் தளராமல்தம்பெருமையைநிலைநிறுத்துவார்—எ-று. (கருத்து.) யானைகளையம்புண் பட்டவிடத்துந்தளராமற் பெருமையை நிறுத்தும் அதுபோல மனவெழுச்சியுடையார் வருத்தம் வந்தவிடத்துத்தளரார்-என்பதாம். பட்டு-பட்டாரென்பதன் பொருளிலேவந்தது. ஒல்காமை-களிற்றுக்கும், பாடூன்றல்-உரவோருக்கும், கூட்டப்பட்டன. நினைக்கப்பட்ட வுயர்ச்சியானது கூடாமற்போயினும் தவறுமல் அதனை



முடிப்பரென்பதாம். [இவை மூன்றுபாட்டானும் ஊக்கமுடையாரது உயர்ச்சிசொல்லப்பட்டது.] (௭)

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

இ-ள். உள்ளமிலாதவர்-மனவெழுச்சியில்லாத அரசர், உலகத்து-இவ்வுலகத்தாருள், வள்ளியமென்னும் - வண்மையையுடையமென்று, (தம்மைத்தாமேமதிக்கும்) செருக்கு-மதிப்பை, எய்தார்-பெறார் -எ-று, (கருத்து.) மனவெழுச்சியில்லாதவர் மதிப்படையார்,என்பதாம். ஊக்கமல்லாதவர்க்கு முயர்ச்சி-பொருள்-கொடை-செருக்கு -. இவைமுறையே- இல்லாமற்போதலால்-செருக்கெய்தாரென்றார், கொடைவேற்றிகளால் ஆகியவின்பம் தமக்கல்லது பிறருக்குக்காணப்படாமையாற் தன்மையிடத்தாற் சொல்லப்பட்டது. (௮)

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை

வெரூஉம் புலிதாக் குறின்.

இ-ள். யானை-யானையானது, (பரியது-எல்லாவிலங்குகளினும்)பெரிய உடம்பையுடையது (அதுவல்லாமலும்) - கூர்ங்கோட்டது, கூர்மையான கொம்புகளையுமுடையது, ஆயினும்-ஆனாலும், புலி-புலியானது, தாக்குறின்-(தன்னை) எதிர்ப்படின், வெரூஉம்- (அதற்கு) அஞ்சும் —எ-று. (கருத்து.) யானைபெரிதுங் கொம்புடையதுமானாலும் புலிக்கு கிலஞ்சும்-என்பதாம். * பெருடம்பால் வலிமிகுதி சொல்லப்பட்டதாயிற்று. புலியைக்காட்டிலும் மிகுந்த உடல்வலிமையும் வெல்லுதற்குச்சிறந்த ஆயுதமும் உடையதாயினும்யானை ஊக்கமில்லாமையால் அதனையுடைய அப்புலிக்கு அஞ்சுமென்ற இந்தவாக்கியம், பகைவரைக்காட்டிலும் மிகுந்த உடல்வலிமையும், வெல்லுதற்குச்சிறந்த ஆயுதமும் உடையவராயினும் அரசர்ஊக்கமிலராயின் அதனையுடைய அரசர்க்கு அஞ்சுவரென்பது தோன்றநிற்றலால்-பிறிதுமொழிதல்.] (௯)

உரமொருவற் குள்ள வெறுக்கை யஃதில்லார்
மரமக்க ளாதலே வேறு.

இ-ள். ஒருவற்கு-ஒருவனுக்கு, உரம்-திடமான அறிவாவது, உள்ளவெறுக்கை - மனவெழுச்சியின் மிகுதியாம், அஃது-அதனை, இல்லார்-இல்லாதவர், மரம்-(மனிதராகார்) மரங்களாவர் வேறு - (சாதிமரங்களோடு (இம்மரங்களிடத்து) வேற்றுமை, மக்களாதலே-மனிதவடிவாயிருக்கையே(வேறில்லை)—எ-று. (கருத்து.) ஒருவனுக்கறிவாவது மனவெழுச்சியாம் அஃதில்லாதவர் மரங்களுக்கொப்பாவர் - என்பதாம். * மனிதருக்கு இருக்கவேண்டிய நல்லறிவும் காரியமுயற்சியும் இல்லாமைபற்றிமரமென்றும், மரத்தில் உண்டாம்பயன் இல்லாமைபற்றி மக்களாதலேவேறென்றும், சொல்லினர், மரத்திற்குப்பயன் - பழமுதலானவையும், ஆலயம், வீடு, தேர், மரக்கலம், இவைகளுக்கு உதவுபாதல் முதலானவையும். ஆகும். [இவ்விருவகைப்பட்டாலும் ஊக்கமில்லாதவரது இழிவுசொல்லப்பட்டது.] (௰)



## ௬௧-ஆம்-அதி-மடியின்மை.



அஃதாவது, நினைக்கப்பட்டவைகளைச் செய்யும்போது சோம்பலில்லாமையாம். ஊக்கமுடையவர்க்கு ஒரோவிடத்தே குணவசத்தால் சோம்பல் வருதலைக்குறித்து இது அதன்பின் வைக்கப்பட்டது.

குடியெனுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

இ-ள். குடியென்னுங்குன்றாவிளக்கம் - (தான்பிறந்த) குடியாகிய மழுங்காவிளக்கானது, மடியென்னுமாசு- (ஒருவனது)சோம்பலாகிய இருளானது, ஊர - செருக்க, மாய்ந்துகெடும்-மழுங்கிக்கெடும்—எ-று, (கருத்து) ஒருவன் குடியென்னும் விளக்கானது அவன்சோம்பலாற் கெடும்-என்பதாம், * உலகனைத்துமுள்ள வஸ்துக்கும் இடையறாது தன்னுட்பிறந்தவரை விளக்குதலால் - குடியைக்குன்றாவிளக்கென்றும், தமோகுணத்தினாலேவருதலால் சோம்பலை இருளென்றும், அதுமற்றை இருள்போலாகாமல் அவ்விளக்கைத்தான் செருக்கிமாய்க்கும் வலியுடைமையால் - மாசூரமாய்ந்துகெடுமென்றும், சொல்லினர். கெடுதல் பெயரும் வழங்காமற்போகுதல். (௧)

மடியை மடியா வொழுகல் குடியைக்

குடியாக வேண்டு பவர்.

இ-ள். குடியை - (தாம்பிறந்த) குடியை, குடியாக - (மேன்மேலு யரும்) நற்குடியாக, வேண்டுபவர் - வேண்டுவோர், மடியை - சோம்பலை, மடியா - சோம்பலாகவே, (நினைத்து) ஒழுகல் - (முயற்சியோடு) நடக்கக்கடவர் — எ - று. (கருத்து) தாம்பிறந்த குடியைநற்குடியாகவ் வேண்டுவோர் சோம்பலைவிடக்கடவர் - என்பதாம், ＊ நெருப்பைக்காட்டிலுங் கொடியது வேறில்லாமைபற்றி நெருப்பாகவே நினைக்கவேண்டும். என்பதுபோல் மடியைக்காட்டிலுங் கொடியது வேறில்லாமைபற்றிப் பின்னும் அப்பெயரானே சொல்லினர். சோம்பலைச் சோம்பலாக வே நினைத்து முயற்சிசெய்து நடந்தால் தாம் உயர்தலாலேகுடி. உயருமென்றற்கு - குடியைக்குடியாகவேண்டுபவரென்றார், அப்படி நடவாமற்போனால் குடி அழியுமென்பது கருத்து. (உ)

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

இ-ள். மடி - மடிக்கத்தகுவதாகிய, மடி - சோம்பலை, கொண்டு - (தன்னுள்ளே) கொண்டு, ஒழுகும் - நடக்கும், பேதை - அறிவில்லாதவன் பிறந்த - பிறந்த, குடி - குடியானது, தன்னினும் - அவனினும், முந்து - முற்பட, மடியும் - அழியும் — எ - று. (கருத்து.) சோம்பலுடையவன் குடி.



யான் முகெடும் - என்பதாம், அறிவுதருஞ்சோம்பலை உட்கொண்டு நடத்தலாலே பேதையென்றும், அவனாலே காப்பாற்றப்படுவதாதவாய். குடிதன்னினு முந்துமடியுமென்றும், சொல்லினர். ஆக்கத்திலேபிறப்பினும் அழிவிலேமுற்படு மென்பதாம். (௩)

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு.

இ-ள். மடி - சோம்பலிலே, மடிந்து - வீழ்தலால், மாண்டவுஞற்றிலவர்க்கு - திருத்தமாகியமுயற்சியில்லாதவராயினவர்க்கு, குடி - குடியும், மடிந்து - அழிந்து, குற்றம் - குற்றங்களும், பெருகும் - பல்கும் — எ - று. (கருத்து) முயற்சியில்லாதவர்க்குக் குடியுங்கெடும்க்குற்றங்களும் பெருகும் - என்பதாம் ＊ குற்றங்கள் பின்வருங்குறளிலே சொல்லப்படுகின்றன. [இவை நான்குபாட்டாலும் சோம்பலினது தீமை சொல்லப்பட்டது] (௪)

நெடுநீர் மறவி மடிதுயி னான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

குடியாண்மை யுள்வந்த குற்றமொருவன்
மடியாண்மை மாற்றக்கெடும்.

இ-ள். ஒருவன்-ஒருவன், மடியாண்மை-சோம்பலை ஆளுந்தன் மையை, மாற்ற-ஒழிக்கவே, குடி-(அவனது) குடியுள்ளும், ஆண்மையுள்- ஆண்மையுள்ளும் (வந்த;—குற்றம்-குற்றங்கள், கெடும் -அழியும் —எ-று (கருத்து) ஒருவன்சோம்பலையொழிக்க அவன்-குடியினும்ஆண்மையினும். வந்தகுற்றங்களழியும் - என்பதாம். ஆ சோம்பலை ஆளுதலாவது சோம்பலுடைமைக்குக் காரணமாகிய தமோகுணம், அவற்றுள் வந்த குற்றமென்றது-சோம்பலாலன்றி முன்னே வேறுகாரணங்களா லுண்டாகிய குற்றங்களை அவையும் சோம்பலுடைமையை ஒழித்து முயற்சியுடையவனாக நீங்குமென்பதாம் (கூ)

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

௬௱௰ ௬௧-ஆம்-அதி-மடியின்மை.

இ-ள். மடியிலா-சோம்பலில்லாத, மன்னவன்-அரசன், அடி-(தன்) அடியளவினாலே, அளந்தான்-(எல்லாவுலகத்தையும்)அளந்தகடவுள், தாஅயது எல்லாம்-கடந்தபரப்பு முழுவதையும், ஒருங்கு-ஒருசேர், எய்தும்-அடைவான்—எ-று. (கருத்து.) சோம்பலில்லாவரசன் உலகமுழுவதுமடைவான் - என்பதாம். ஆ எப்போதும் தொழிலிலிடத்தே முயற்சியால் இடைவிடுதலில்லாமல் அடைவா னென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் சோம்பலில்லாதவன் அடையும்பயன்சொல்லப்பட்டது.]

## ௬௨-ஆம்-அதி.-ஆள்வினையுடைமை.

—※—

அஃதாவது, இடைவிடாத மெய்ம்முயற்சியை யுடையனாதல், அது ஆளும்வினையெனக் காரியத்தாற் சொல்லப்பட்டது. சோம்பலைக்கெடுத்தாலும் தொழிலை முயற்சியாலல்லாமல் ஆளக்கூடாமையினாலிது மடியின்மையின் பின்வைக்கப்பட்டது.

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

இ-ள். இன்பம்விழையான் - (தனக்கு) இன்பத்தை விரும்பாதவனாகி, வினைவிழையான் - தொழில்முடித்தலையே விரும்புவோன்; தன்கேளிர் - தன் சுற்றத்தாரும் நட்பாளருமாகிய கேளிரது, துன்பம் - (பாரத்தின்) துன்பத்தை; துடைத்து - ஒழித்து, ஊன்றும் - (அதனைத்) தாங்கும், தூண் - தூணாம்—எ-று. (கருத்து.) தனக்கின்பம் விரும்பாதவனாகி முயற்சியை விரும்புவோன் தன் சுற்றத்தினர் துன்பத்தைத் தாங்குந் தூண் - என்பதாம். * கேளிரது வறுமையுந் தீர்த்து அவரைக் காத்தலுஞ் செய்யவல்லனெனவே தனக்கு அவை செய்து கொள்ளுதல் சொல்ல வேண்டுவதில்லையாயிற்று, காரியமாகிய இன்பத்தை விரும்பாமல் காரணமாகிய முயற்சியை விரும்புவோன் எல்லாப் பயன்களும் அடைவானென்றதனால் அக்காரணத்தைவிட்டு அக்காரியத்தை விரும்புவோன் ஒரு





பயனும் அடையானென்பது பெறப்பட்டது. (ஏகதேசவுருவகம்) [இதனால் அதனையுடையவனது நன்மை சொல்லப்பட்டது.] (௫)

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்

இ-ள். முயற்சி - (அயராது செய்யப்படுவதாகிய) முயற்சியானது, திருவினை - (அவரது) செல்வத்தை ஆக்கும் - வளர்க்கும்; முயற்றின்மை - அம்முயற்சியில்லாமையானது, இன்மை - வறுமையை, புகுத்திவிடும் - அடைவித்துவிடும்—எ-று. (கருத்து.) முயற்சி செல்வத்தை வளர்க்கும் அம்முயற்சியில்லாமை தரித்திரத்தைக் கொடுக்கும் - என்பதாம். * இக்கே செல்வம் - பக்திமுதலாகிய அறுவகை அங்கங்கள், வறுமை அவையில்லாதவாதல், அவற்றை அடைவித்துவிடவே பகைவரால் அழிவென்பது கருத்து. (௬)

மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

இ-ள். மாமுகடி - கரியமூதேவியானவள், மடியில் - (ஒருவனது) சோம்பலினிடத்தே, உளாள் - இருப்பாள்; தாமரையினாள் - சீதேவியானவள் மடியிலான் - சோம்பலில்லாதவனது தாள் - முயற்சியினிடத்தே, உளாள் - இருப்பாள், என்ப - என்று (அறிந்தோர்) சொல்லுவர்—எ-று (கருத்து.) மூதேவி சோம்பலுடையவனிடத் திருப்பாள், சீதேவி சோம்பலில்லாதவனிடத்திருப்பாள் - என்பதாம். * பாவத்தின் கருமை அதன்பயனாகிய முகடிமேலேற்றப்பட்டது சோம்பலையும் முயற்சியையும் உடையவரிடத்தே அவர்களிடத்தில அவைகளின்மேலே ஏற்றினார். [இவையிரண்டுபாட்டாலும் அவ்விரண்டுக்கும் ஏதுக்கள் சொல்லப்பட்டன]

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்

ஆள்வினை யின்மை பழி.

இ-ள். பொறியின்மை (பயனைத்தருவதாகிய) விதியில்லாமை, யார்க்கும், யாவருக்கும், பழியன்று-பழியாகாது, அறிவறிந்து-அறியவேண்டுமவைகளை அறிந்து, ஆள்வினையின்மை - தொழில்செய்யாமையே, பழி- பழியாகும் — எ-று. (கருத்து.) யாவருக்கும் விதியில்லாமை பழியாகாது முயற்சியில்லாமை பழியாகும்-என்பதாம். * அறியவேண்டுமவை வழிமுதலானவையாம், ஊழ்பொருந்தாத விடத்தே தொழில்செய்யாலே பயன் இல்லையென்பாரைநோக்கி உலகம் பழையவினைபற்றிப் பழியாது இவ்விடத்தே தொழில்செய்யாத குற்றமுடைமை பற்றியே பழிப்பென்றார். அதனால் விடாதுமுயல்கவென்பது கருத்து. (அ)

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.



இ-ள். (முயற்சிசெய்ததொழில்) தெய்வத்தான்- ஊழ்வகையால், ஆகாதெனினும்- (நினைக்கப்பட்டபயனைத்) தாராதாயினும், முயற்சி-முயற்சி, தன் மெய்-தனக்கிடமாகிய உடம்பு, வருத்தக்கூலி- (வருந்திய) வருத்தத்தின் கூலியளவு, தரும் - கொடுக்கும்- (பாழாகாது) — எ-று. (கருத்து.) ஊழில்லாவிடினும் முயற்சிபயனைத்தரும் - என்பதாம் * ஊழினால் ஆகியவிடத்துத் தன்னளவின் மிகுந்த பயனைத்தருமென்பது உம்மையாற்பெற்றும். ஆனவிடத்தும் ஆகாவிடத்தும் பாழாகாமையால் ஊழைநோக்கி இராமல் முயல்கவென்பது கருத்து. (௯)

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

இ-ள். ஊழையும் (பயனைவிலக்குவதாகிய) ஊழையும், உப்பக்கங்காண்பர்- புறங்காண்பார், உலைவின்றி- (அவ்விலக்குதற்கு) இளையாமல், தாழாது- தாழ்வற, உஞற்றுபவர் - (தொழிலை) முயல்வோர் — எ-று. (கருத்து.) இடைவிடாது முயற்சிசெய்வோர் விதியையும் விலக்குவார் - என்பதாம் * தாழ்வருதல்- ஆலோசனையிலும் வழிமுதலானவை யறிதலிலும், செயலிலும், குற்றமறுதல், ஊழான அத்தொழிலை ஒருகால்-இடுக்கண் அல்லாமல் விலக்காமையாலே பலகாலும்முயற்சிசெய்வோர் பயனை அடைவாரென்றற்கு உப்பக்கங்காண்ப ரென்றார். [ஊழினாலே இடுக்கண்வரினும் முயற்சிவிடத்தக்க தல்லவென்பது இம்மூன்றுபாட்டாலும் சொல்லப்பட்டது.] (௰)

## ௬௩-ஆம்-அதி-இடுக்கணழியாமை

அஃதாவது, தொழிலிலே முயல்பயன் ஊழினாலாவது, பொருளில்லாமையிலாவது, மெய்வருத்தத்தாலாவது தனக்குத் துன்பம் வந்தவிடத்து அதற்கு மனங்கலங்காமை. அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

இடுக்கண் வருங்கா னகுக வதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

இ-ள். (ஒருவன்) இடுக்கண் - துன்பமானது, வருங்கால் - (வினையினாலே) வருமிடத்து, நகுக - (அதற்கு அழியாமல்) உள்ளமகிழ்க்கடவன், அதனை - அத்துன்பத்தை, அடுத்து - மேலுமேலுமாய், ஊர்வது - நெருக்கவல்லது, அஃதொப்பது - அம்மகிழ்ச்சிபோல்வது, இல் - வேறே இல்லை—(ஆகலால்)—எ-று. (கருத்து.) ஒருவன் துன்பம் வரும்போது மகிழக்கடவன்; அத்துன்பத்தை நெருக்கக்கடவன் : என்



பதாம். ✽ தொழில் நன்றாக முடிந்தவிடத்தே உண்டாவதான மகிழ்ச்சியை அதற்கு நடுவிலே துன்பம் வருமிடத்து உட்கொண்டால் அவன் அறிவின்றி மனவெழுச்சியால் அதனைத்தள்ளி அக்குறை முடிக்க வல்லனாவானாதலில் அதனையடுத்தூர்வ தஃதொப்பதில் லென்னார். (௧)

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

இ-ள். வெள்ளத்தனைய - வெள்ளம்போலே கரையில்லாத, —இடும்பை - துன்பமெல்லாம், அறிவுடையான் - புத்தியுள்ளவன், உள்ளத்தின் - உள்ளத்தினாலே, உள்ள - (அதனை) நினைத்தவளவிலே, கெடும் - அழியும்—எ-று. (கருத்து.) அறிவுள்ளவனொருவன் நினைக்கத் துன்பமெல்லாங்கெடும்—என்பதாம். ✽ துன்பமானது - உள்ளத்து ஒருகோட்பாடேயென்பதும் - அதனை ஒருபாடாகக்கொண்டால் நீங்குமென்பதும் - அறியவேண்டுதலால் அறிவுடையானென்று, அவ்வுபாயத்தின் எளிமைதோன்ற - உள்ளத்தினுள்ளவென்றும், சொல்லினார். [இவ்விரண்டு பாட்டாலும் ஊழினாலாகிய இடுக்கணால் அழியாமைக்கு உபாயஞ்சொல்லப்பட்டது.] (௨)

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

இ-ள். இடும்பைக்கு - (தொழில்செய்யும்போது அதற்கு நடுவிலே வந்த) துன்பத்திற்கு, இடும்பைப்படாதவர் - வருந்ாதவர், இடும்பைக்கு - அத்துன்பத்திற்கு, இடும்பை - துன்பத்தை, படுப்பர் - உண்டாக்குவார்—எ-று. (கருத்து.) துன்பத்திற்குத் துயரப்படாதவர் துன்பத்திற்குத் துன்பத்தைக் கொடுப்பர் - என்பதாம். ✽ வருந்துதல் இனைந்து செய்யாமல் விடநினைத்தல் - மனத் திட்பமுடையராய் விடாது முயன்றால் தொழில்முடிவு பெற்றுப்பயன் படுமாதலால் எல்லாத்துன்பங்களும் நீங்குமென்பதுபற்றி - இடும்பைக்கிடும்பை படுப்பரென்றார், வருகின்ற பாட்டிரண்டிலும் இதற்கு இப்படியே பொருள்கொள்க. (௩)

மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற

இ-ள். மேல்-அறிவுடையார், உடம்பு-தேகமானது, இடும்பைக்கு-துன்பமாகியவாளுக்கு, இலக்கமென்று-குறியிடமென் றறிந்திருக்கின்றதனால் கைத்தை-(தம்மேல்வந்த) துன்பத்தை, கையாறு-துன்பமாக, கொள்ளாதாம்-கொள்ளார்—எ-று. (கருத்து.) அறிவுடையவன் துன்பத்தைத் துன்பமாகக்கொள்ளான்-என்பதாம். * (இடும்பையை வாளென்றும உடம்பை இலக்கமென்றதனுல் ஏகதேசவுருவகம்) இயல்பாக்கொள் ளவேண்டுமென்றறிக. (௭)



இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன்.

இ-ள். இன்பம்-(தன்னுடம்பிற்கு) இன்பமானவைகளை, விழையான்-விரும்பானாகி, இடும்பை-(வினையால்) துன்பமடைதல், இயல்பென்பான்-இயல்பென்று தெளிந்திருப்பவன், துன்பமுறுதலிலன்-(கவ்வுவதினால்) துன்படையான்—எ-று. (கருத்து.) இன்பத்தை இச்சியாதவனாகித் துன்பத்தையியல்பென்று நினைப்பவன் துன்பமடையான்-என்பதாம். * இன்பம்விரும்பினாலும், இயல்பென்னாது வாராமல்காக்கவுறினாலும், துன்பம்வினைதலால் இவ்விரண்டும் செய்யாதவனைத் துன்பமுறுதலிலனென்றார். (௮)

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

இ-ள். இன்பத்துள்-(வினையினாலே) இன்பம்வந்தவிடத்து, இன்பம்-அவ்வின்பத்தை, விழையாதான்-(அநுபவித்துக்கொண்டேமனத்தால்) விரும்பாதவன், துன்பத்துள்-துன்பம்வந்தவிடத்தும், துன்பம்-அத்துன்பத்தை, உறுதலிலன்-(அநுபவித்துக் கொண்டேமனத்தால்) அடையான்—எ-று. (கருத்து.) இன்பத்தை இச்சியாதவன் துன்பத்தில் விசனப்படான்-என்பதாம். * துன்பமுயர்ச்சியால்வருமிடுக்கண் இரண்டும் ஒருதன்மையாகக்கொள்ளலால்பயன்களும் இலவாயின. (௯)

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

இ-ள். (ஒருவன்தொழில்செய்யுமிடத்து) இன்னாமை-(முயற்சியால்வருந் துன்பத்தையே, இன்பமெனக்கொளின் (தனக்கு) இன்பமாக நினைத்துக்கொள்ளுவானாயின், (அதனால்) தன்னொன்னார்-தன்பகைவர், விழையும்-நன்குமதித்தற்கு ஏதுவாகிய, சிறப்பு-உயர்ச்சியானது-ஆகும்-உண்டாகும்—எ-று (கருத்து.) துன்பத்தை யின்பமாகக் கொள்வானாகி லவன்பகைவராலே மதிக்கப்படு முயற்சியடைவான்-என்பதாம். * துன்பந்தானும் உயிர்க்கு இயல்பாம் இக்கணிதமாய்மனத்தினிடத்தே நிகழ்வதோர் கோட்பாடாகலின் அதனைமாறுபடக் கொண்டால் அதற்கு அழியாமல் மனமகிழ்ச்சியுடையனாகி அதனாலேதொடங்கிய தொழிலை முடிக்கவல்லவனாகுமென்பது கருத்து. [இவைநான்குபாட்டாலும் மெய்வருத்தத்தாலாகி துன்பத்துக்கு அழியாமையும், அதற்கு உபாயமும், சொல்லப்பட்டது.] (௰)

——❧——

# அங்கவியல்.

இனிமுறையானே அரசியலைக் கடத்துதலிலே ஒன்றற்கொன்று துணையாகிய] அங்கங்களது இயல்பை முப்பத்திரண்டு அதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி அவ்வங்கங்கள் ஆறனுள்ளும் ஆக்ஞைசக்கரத்தைச் செலுத்தலிலே அவ்வரசனுக்குச் சமானமாகிய அமைச்சனது இயல்பு பத்ததிகாரத்தினாலே சொல்லத்தொடங்கி முதலிலே அமைச்சைச்சொல்லுகின்றார்.

## ௬௰௪-ஆம் அதி- அமைச்சு.

அஃதாவது அமைச்சனது தன்மை, அத்தன்மை அவன்குணங்களும் செய்கைகளும் ஆம்.

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

இ-ள். (தொழில்செய்யும்போது) கருவியும்- (அதற்குவேண்டும்) சாதனங்களும், காலமும்- (அதற்குஏற்ற) காலமும், செய்கையும்- (அது) செய்யும்விதமும், செய்யுமருவினையும்- (அவ்விதத்திலே செய்யப்படும் அரியதொழில்களும், மாண்டது- பொருந்தவெண்ண வல்லவனே, அமைச்சு- மந்திரியாவான்—எ-று. (கருத்து.) கருவியும்-காலமும் செய்கையும் தொழிலும் இவற்றையெண்ணவல்லவன் மந்திரி-என்பதாம். சாதனங்கள்-சேனையும், பொருளும், காலம்-அத்தொழிலைத் தொடங்குங்காலம், செய்கையெனவே அது தொடங்கு முபாயமும், இடையூறு நீக்கி முடிக்கும் விதமும், அடங்கின, சிறியமுயற்சியினாலே பெரியபயன் தரும்மென்றற்கு அருவினையென்றார். இவ்வைந்தையும் வடநூலார்மந்திரத்திற்கு அங்கமென்பார். (௧)

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

இ-ள். வன்கண் - (தொழில்செய்தலிலே) அசைவில்லாமையும், குடிகாத்தல்- குடிகளைக்காத்தலும், கற்றறிதல்- (நீதிநூல்களைக்)கற்று(விஷயங்களை) அறிதலும், ஆள்வினை-முயற்சியும், ஐந்துடன்-(முன்சொல்லப்பட்ட) அங்கங்களோடுடனே, மாண்டது - திருந்துடையவனே, அமைச்சு-மந்திரியாவான்—எ-று. (கருத்து.) அசைவில்லாமையும் குடிகளைக்காத்தலும் கற்றறிதலும் முயற்சியும் உடையவன் மந்திரி என்பதாம். இந்நான்கையும் முன்னையவைகளோடு சேர்த்துச்சொல்லியது- அவைகளும் இவைகளோடுகூடியே மாட்சிமைப்படவேண்டு



மென்பதை அறிவித்தற்கும் அவை ஐந்தென்றுந் தொகைப்படுத்தற்கும், என்க. (௨)

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

இ-ள். (போர்வந்தவிடத்து) பிரித்தலும் - பகைவர்க்குத் துணையாயினவரை அவரைவிட்டுப் பிரிக்கவேண்டிஞல் பிரித்தலும், (பேணிக் கொளலும்) தம்மிடத்தோரை அவர் பிரியாமற்கொடையினலும் இன்சொல்லினுலும் - காத்துக்கொள்ளுதலும்; பிரிந்தார் - (தம்மைவிட்டுத் தம்மவரைவிட்டும்) பிரிந்தவரை, பொருத்தலும் - மறுபடிபொருந்தவேண்டிஞல் பொருத்தலும்; வல்லது - வல்லவனே, அமைச்சு - மந்திரியாவான் — எ-று. (கருத்து.) பிரித்தலும் - காத்தலும் - பிரிந்தவரைப் பொருந்தச்செய்தலும் வல்லமையுடையவன் மந்திரி - என்பதாம். * இவைகளுள் அப்பொழுதைத் நிலைக்கு ஏற்றசெயலறிதலும், அதனை அவரறியாமல் அதற்குஏற்ற உபாயத்தால் முடிவுறப்பிடித்தலும், அருமையாதல் நோக்கிவல்லதென்ருர், பொருந்தலுக்குச் சந்தியென்றும், பிரித்தலுக்கு விக்கிரகமென்றும், பெயர்கள். (௩)

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

இ-ள். (ஒருகாரியச்செய்கை பலவிதமாகத்தோன்றினுல்) தெரிதலும் - (அவற்றுள் ஆவனத) ஆராய்ந்தறிதலும், தேர்ந்து செயலும் - (அதுசெய்யும்போது பலிக்கும் விதமும்) நாடிச்செய்தலும், (சிலவைப்பிரித்தல் பொருத்தல்செய்யவேண்டிய) — ஒருதலையாச்சொல்லலும் - (அவர்க்கு இதுவேசம்பத்தக்கதென்று) துணிவுபிறக்கும் வகைசொல்லலும், வல்லது - வல்லவனே; அமைச்சு - மந்திரியாவான் — எ-று. (கருத்து.) ஆராய்தலும் ஆராய்ந்துசெய்தலும் ஒருதலையாகச்சொல்லலும் வல்லவன்மந்திரி-என்பதாம். * தெரிதல்செயலின் மேலாயிற்று வருகின்றதது வாகலின். (௪)

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை.

இ-ள். அறன் (அரசனுலேசெய்யப்படும்) அறங்களை, அறிந்து - தெரிந்து, ஆன்றமைந்த - (விளக்குஏற்ற கல்வியாலே; நிறைந்தமைந்த, சொல்லான் - சொல்லையுடையவனுகி, எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், திறன் - (தொழில்செய்யுந்) திறங்களை, அறிந்தான் - அறிந்தவன், தேர்ச்சித் துணை - ஆலோசனைக்குத் துணை - அவனுக்குத் துணையாவான் — எ-று. (கருத்து.) தருமங்களையறிந்து தொழில்செய்யுந்திறங்களைத் தெரிந்தவன் மந்திரி என்பதாம். * தன்னைக் கொண்டிய காலத்திலும் பெருமைபெறாலத்திலும் கடிவானகாலத்திலும் என்பதற்கு எஞ்ஞான்றுமென்றுர். [இவ்வைந்துபாட்டாலும் மந்திரிகளது குணத்தன்மைசொல்லப்பட்டது.] ()



மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

இ-ள்: மதிநுட்பம் - இயற்கையாகியபுத்திநுட்பத்தைத்; நூலோடு - செயற்கையாகிய நூலறிவோடு, உடையார்க்கு - உடையமந்திரிகளுக்கு, அதிநுட்பம் - அதிகநுட்பத்தையுடைய ஆலோசனைகளாய்; முன் னிற்பவை - எதிர்நிற்பவை, யாவுள - எவையுள—எ-று. (கருத்து.) புத்திநுட்பத்தையுடைய மந்திரிகளுக்கு முன்னிற்கு மாலோசனைகளெவை யுள - என்பதாம். * நூல் - அதனாலறிவுக்கும்; அதிநுட்பம் - அதனையுடைய ஆலோசனைக்கும், ஆகுதலால் ஆகுபெயர்கள், முன்னிற்றல் - பகைவராலோசனையால் தம்மாலோசனை அழியாதுநிற்றல், பல்லவராலோசனையை தாம் அறிந்து அழித்து அவராலும் அழியாதனவகளைத் தாம் ஆலோசிப்பவரென்பது கருத்து. [இதனால் அவரது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௬)

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

இ-ள். செயற்கை - நூல்வழியினால்தொழில்செய்யுந்திறத்தைத்; அறிந்தக்கடைத்தும் - அறிந்தவிடத்தும், உலகத்து - உலகத்திலே; இயற்கை - அப்போது நடக்கின்ற இயற்கையை, அறிந்து - தெரிந்து, செய்யல் - அதனோடுபொருந்தச்செய்யக்கடவன்—எ-று: (கருத்து:) தொழில்செய்யுந் திறத்தையறிந்தாலும் உலகநடக்கையையறிந்துசெய்யக்கடவனென்பதாம். * நூல்வழியேயாயினும் உலகவழியோடு பொருந்தாதவைகளைச்செய்தால் அவ்வுலகம் பழிக்குமென்று உலகியற்கையி னறிவினால் பயன்சொல்லியபடி. (௭)

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

இ-ள். அறிகொன்று - அறிந்து சொல்லினவர்தம் அறிவையும் அழித்து; அறியானெனினும் - தானும் அறியானேயாயினும், அக்குற்றநோக்கிவிடாமல், உறுதி - அரசனுக்கு உறுதியானவைகளை, கூறல் - சொல்லுதல்; உழையிருந்தான் - மந்திரியினது, கடன் - முறைமையாகும்—எ-று (கருத்து.) சொன்னவரறிவை யழித்துத் தானறியானாயினும் அரசனுக்குறுதியானவைகளைச்சொல்லுதல் மந்திரியின் கடமையாம் - என்பதாம். * அழித்தல் - தான்கொள்ளாமல் மேலும்இகழ்ந்துசொல்லல், உறுதி சொல்லாதபோது அவன்முடிவெய்தும் குற்றத்தை உலகந்தன்மேலேற்றுமென்றதற்கு கூறல்கடனென்றார். [இவையிரண்டுபாட்டாலும் அவர்செயல் சொல்லப்பட்டது.] (௮)

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும்.

உ௯

இ-ள். பக்கத்துள்-பக்கத்திலிருந்து, பழுதெண்ணும்-தீங்குசெய்ய வெண்ணும், மந்திரியின்-மந்திரியொருவனில், தெவ் - (அரசனுக்கு) எதிர்க்கிறவர் எழுபதுகோடி-எழுபதுகோடிபகைவர், உறும்-உறுவர்—எ-று. (கருத்து) அரசனுக்குத் தீங்குசெய்ய மந்திரியொருவனே எழுபதுகோடி பகைவரினுங் கொடியன்-என்பதாம். ✱ எழுபதுகோடியென்றது, மிகவும் பலவாகிய எண்ணிக்கைக்கு ஒன்று காட்டியபடி. அவர்வெளிப்பட்டு நிற்கையால் அவருக்குத் தப்பலாம் உட்பகையாய் நிற்றலால் இவனுக்குத் தப்புதல் கூடாதென்பது பற்றி இப்படிச்சொல்லினர். (௯)

முறைபடச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

இ-ள். (செய்யப்படுந்தொழில்களை) - திறப்பாடு-(முடித்தற்குற்ற) கூறுபாடு, இலாஅதவர்-இல்லாதவர், முறைபடச்சூழ்ந்தும்-(அவைகளை முறையினோடே) அடைவுபட ஆலோசித்திருந்தும், முடிவிலவேசெய்வர், (செய்யும்போது அவைகள்) முடிவில்லனவே செய்யாநிற்பர்—எ-று. (கருத்து.) செய்தொழிலிலே திறமில்லாமந்திரிகள் முன்பாலோசித்தும்பின்பு முடிவில்லாமற்செய்வார்கள் - என்பதாம். ✱ அக்கூறுபாடாவன-வந்தவந்த இடையூறுகளுக்கு ஏற்றஏற்ற பரிகாரம் அறிந்துசெய்தலும், தாம்திடமுடையவராதலும், ஆம். தப்பாமல் ஆலோசிக்கவல்லவராயிருந்தும். செய்து முடிக்கமாட்டாதவரும் உண்டென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் மந்திரிகளுள் விடப்படுவோரைக்குறித்துச்சொல்லப்பட்டது. (௰)

## ௬௫-ஆம்-அதி-சொல்வன்மை.

அஃதாவது, தான் நினைத்த தொழில்முடியும் வழியால் வார்த்தை சொல்லவல்லனாகுதல், முன்னதிகாரத்திலே ஒருதலையாகச்சொல்லுமொன்றனை சிறப்புபற்றிவிரித்துச்சொல்லுதலால் அதன்பின் வைக்கப்பட்டது.

நாநல மென்னுநலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ள தூஉ மன்று.

இ-ள். மந்திரிகளுக்கு அவசியம்வேண்டியகுணமாவது) நாநலமென்னும்- நாநலமென்றுசிறப்பித்துச்சொல்லப்படும், நலனுடைமை-சாதுரியமுடையராதல், அந்நலம் - அந்நலமானது, (பிறர்க்கும்) யாநலத்து-பிறநலங்களிலெல்லாம், உள்ளதூஉமன்று - அடங்குவதன்றி



யிருந்தது (ஆதலால்)—எ-து. (கருத்து.) மந்திரிகளுக்கு நாநலம் போல வேறுநலமில்லை-என்பதாம். ✱ நலம்-சாவாதுமாதரிய நலமென விரிப்பர், இந்நலம் -உலகத்தைத்தன்வசமாக்கும் மந்திரிகளுக்கு வேறுவிருக்கவேண்டுமென்னும் நீதிநூல்வழக்குப்பற்றி-நாநலமென்றும், பிறருக்கும் இதுபோற் சிறந்ததொன்றில்லாமையால் - அந்நலம் யாநலத்துள்

ளாதுடைமன் றென்றுஞ், சொல்கின்றார், பிரித்தல் பொருத்தல்முதலாகிய தொழில்களில்லார்க்கும் இது அவசியம் வேண்டுவதனால் அத்தொழிலு டைய மந்திரிகளுக்குச் சொல்ல வேண்டுமோ வென்பது கருத்து. (க)

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

இ-ள். (மந்திரிகள்) சொல்லின்கண்-சொல்லிடத்து, சோர்வு-சோர்தலைக் காத்தோம்பல்- (தம்மிடத்தே உண்டாகாமல்) காக்கக்கடவர், (தமக்கும் அரசனுக்கும் அங்கங்களுக்கும்) ஆக்கமும்-பெருக்கமும், கேடும் - அழிவும், அதனால்-அச்சொல்லினாலே, வருதலால் - வருகையால்—எ-று. (கருத்து.) செல்வமும், கேடும், சொல்லால்வருதலால்மந்திரிகள் சொற்சோர்வு வாராமற்காக்கக்கடவர் - என்பதாம். * ஆக்கத்துக்குக் காரணமாகிய நல்லசொல்லையும், கேட்டுக்கு ஏதுவாகிய தீயசொல்லையும், சொல்வோன் மிக-தப்புமைப்பற்றி - அதனைவென்றார் இவர் சொற்சோர்வு மற்றைச்சோர்வு போலாகாமல் உயிர்களுக்கெல்லாம் ஒரு சேரவருதலால் காத்தோம்பலென்றார். [இவையிரண்டுபாட்டாலும் சொல்வல்லமை மந்திரிகளுக்கு அவசியம் வேண்டுவதென்பது சொல்லப்பட்டது.] (உ)

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

இ-ள். (கேட்டார்கட்பாம்) வேறுக்கொண்டவரை, பிணிக்கும்-(பின்வேறுபடாமற்) கட்டும், தகைகுணங்களை, அவாய்-அவாவி, கேளாரும்- (மற்றைப்பகையா) வேறுகொள்ளாதவரும், வேட்ப- (பின் அப்

பகையொழிந்து கேட்பினை) விரும்பும் வண்ணம், மொழிவது-சொல்லப்படுவதே, சொல் - சொல்லாம்—எ-று. (கருத்து.) கேட்டாரும்-கேளாதவரும் இச்சிக்கச்சொல்வதேசொல்லாம் - என்பதாம். * அக்குணங்களாவன வழுவில்லாமை, சொற்சுருங்குதல் - பொருள்விளங்குதல், இனிதாதல்-மேலானபயனைத்தருதல், இவைமுதலானவை, அவைகளை அவாவுதலாவது - அச்சொல்சொல்லுவான்குறித்த பொருளையேயன்றி வேறேபுத்தி நுட்பமுடையவராலே கொள்ளப்பட்டவைகளின்மேலும் நோக்குடைத்தாதல், இதனால் சொல்லினது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௩.)

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

இ-ள். (மந்திரிகள்) சொல்லை-அப்படிப்பட்ட சொல்லை, திறன்-(தம் மூடையவும் கேட்பாருடையவுமான) திறங்களை, அறிந்து-தெரிந்து, சொல்லுக - சொல்லக்கடவர், அதனினூஉங்கு - அப்படி சொல்லுதற்குமேற்பட்ட, அறனும்பொருளும் - தருமமும்பொருளும், இல்- இல்லை, (ஆதலால்)—எ-று. (கருத்து.) மந்திரிகள் சொற்றிறங்களையறிந்து சொல்லக்கடவர்-என்பதாம். ஈ அத்திறங்களாவன - குடிப்பிறப்பு, கல்வி-ஒழுக்கம், செல்வம்-உருவம் -பருவம்-என்பவைகளால் வரும்தகுதி வேறுபடுதல். அவைகளை அறிந்து சொல்லுதலாவது-அவைகளாலே தமக்கும் அவர்க்கும் உண்டாகிய உயர்வுதாழ்வுகளை அறிந்து அவரவர்க்குத்தகுந்த மரபினாலே சொல்லுதல், அது உயர்ந்தோர்களையோடு பொருந்தலையும், இனிமையையும், தருதலால் அறனும்பிற்று. தமது காரியமுடிதலாலேபொருளாயிற்று, அறனும் பொருளும் எனக்காரணத்தைக்காரியமாக்கிச்சொல்லினார். (௪)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

இ-ள். சொல்லை - தாம்சொல்லக்கருதியசொல்லை, வெல்லுஞ்சொல் - வெல்லவல்லசொல்லாகிய, பிறிதோர்சொல்-பிறிதோர்சொல், இன்மை-இல்லாமையை, அறிந்து-தெரிந்து, அச்சொல்லை - அந்தச்சொல்லை, சொல்லுக - சொல்லக்கடவர்—எ-று (கருத்து.) பிறர்சொல்லுஞ் சொல் வெல்லுஞ்சொல்லில்லாமையைக்கண்டு சொல்லக்கடவர்- என்பதாம். ஈ பிறிதோர்சொல்லாவது - பகைவராது எதிரானசொல், வெல்லுதல் - குணங்களாலே மிகுதல் அதுவே வெல்லச்சொல்லுக வென்பதாம். (௫)

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசற்றார் கோள்.

இ-ள். வேட்ப-(பிறர்பின்னுங்கேட்க) விரும்பும்படி, தாஞ்சொல்லி-தாங்கள்சொல்லி, பிறர்சொல் - (பிறர்தமக்குச்சொல்லுஞ்) சொல்லினது பயன்கோடல்-பயனைக்கொண்டுவிடுதல், மாட்சியில் - (மந்திரி) யிலக்கணத்திலே, மாசற்றார்-குற்றமற்றவரது, கோள் - துணிவு—எ-று. (கருத்து.) பிறரிச்சிக்கும்படி சொல்லிப்பிறர்சொற் பயனைக்கொள்ளுதல் மந்திரிகள் கொள்கையாம்-என்பதாம். ஈ பிறர்சொற்களிலேகுற்றமுளவாயினும் அவைநோக்கி இகழாரென்பதாம். வல்லமை இல்லாதவரையிகழ்தல் - வல்லவர்க்குத் தகுதியல்லாமையால் இதுவும் உடன்



சொல்கிறார். [இவைமூன்றுபாட்டாலும் அவைச்சொல்லும்விதம்சொல்லப்பட்டது.] (௬)

துணர விரித்துரையா தார்.

இ-ள். கற்ற-கற்றநூல்களை, உணர (பிறர்) அறியும்விதமாக, விரித்துரையாதார்-விரித்து உரைக்கமாட்டாதவர், இணர்-கொத்தினிடத்தே, ஊழ்த்தும்-மலர்ந்திருந்தும், நாறா-மணக்காத, மலரனையர்-பூப்போல்பவர்—எ-று. (கருத்து.) கற்றநூல்களை விரித்துச்சொல்லாதவர்கள் வாசனையில்லா மலருக்கொப்பாவார்-என்பதாம். ஃ எப்படிச்செவி பெற்றிருந்தும் வாசனைசெய்யாதமலர் சூடப்படாதோ அப்படியே நூல்களைக் கற்றறிந்தும் சொல்லமாட்டாதவர் நன்குமதிக்கப்படாரென்பதாம் [இவையிரண்டுபாட்டானும் அதுமாட்டாத இழிவுசொல்லப்பட்டது.]



# ௬௰௬-ஆம்-அதி-வினைத்தூய்மை.

——...✻✻...——

அஃதாவது, செய்யப்படுந்தொழில்கள் பொருளை மாத்திரமல்லாமல் அறமும்புகழுந்தருவனவாயிருத்தல். சொல்லேயல்லாமல் செயலும் நன்றாக வேண்டுமென்கின்றமையால் இது அதன்பின் வைக்கப்பட்டது.

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

இ-ள். (ஒருவனுக்கு) துணைநலம்-துணையினது நன்மையானது, ஆக்கம்-செல்வமொன்றையே, தரூஉம்-கொடுக்கும், வினைநலம்-தொழிலினது நன்மையானது, வேண்டியவெல்லாம்-(அவன்) வேண்டியவைகளையெல்லாம், தரும்-கொடுக்கும்—எ-று. (கருத்து.) ஒருவனுக்குத்துணை நன்மை செல்வமொன்றைத்தரும், தொழிலின் நன்மைவேண்டியவற்றைத்தரும் என்பதாம். ஃ வேண்டியவெல்லாமென்றது- இம்மையில் அறம்பொருளின் முதலானவைகளையும், மறுமையில்தான் விரும்பிய பதங்களையும், [இதனால்காரணப்பேற்றுணை நன்மையினும் காரியப்பேற் தொழிலினன்மை சிறந்ததென வினைத்தூய்மையது சிறப்புச்சொல்லப்பட்டது.] (●)

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

இ-ள். (தம்மரசனுக்கு) புகழொடு-இம்மைக்குப் புகழையும், நன்றி-(மறுமைக்கு) அறத்தையும் பயவா-தாராத, வினை-தொழில்களை,



என்றும்-எக்காலத்திலும், ஒருவுதல்வேண்டும்-(மந்திரிகளுக்கு) ஒழிதல் வேண்டும்—எ-று. (கருத்து.) அரசனுக்குப்புகழையுந் தருமத்தையுந் தராத்தொழில்களை மந்திரிகள் விடவேண்டும் என்பதாம். ஃ பெருகல் சுருங்கல் கழிதல் என்கின்றகிலை வேறுபாடுகள் காலத்தினால்வருதலால் என்றுமென்றார். (௨)

ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை

யாஅது மென்னு மவர்.

இ-ள். ஆஅதும்-மேலாகக்கடவோம், என்னுமவர்-என்றுநினைப்பவர், ஒளி (தம்)மொளி, மாழ்கும்-கெடுதற்குக்காரணமாகிய, வினை- தொழிலை, செய்- செய்தலை, ஓஒதல்வேண்டும், ஒழியக்கடவர்—எ-று. (கருத்து) மேலாவோமென்றெண்ணுவோர் கெடுதற்குக்காரணமானதொழிலை விடக்கடவர் என்பதாம். ஒளியாவது- தாமிருக்கின்றகாலத்திலே- எல்லாராலும் நன்குமதிக்கப்படுதல்-ஒளிகெடவருமார்க்கம்-ஆக்கமன்றென்பதாம். (௩)

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

இ-ள். நடுக்கற்ற- அசைவற்ற, காட்சியவர் - தெளிவையுடையவர், இடுக்கட்படினும்- (தாம்) துன்பத்திலேபடவரினும், (அதுதீர்தற்பொருட்டு) இளிவந்த- (முன்செய்தவர்க்கு) இழிவுவந்த தொழில்களை, செய்யார்- செய்யார்.—எ-று. (கருத்து.) அசைவில்லாவறிவினையுடையவர் துன்பம்வரினும் இழிதொழிலைச்செய்யார் - என்பதாம். அறிவு அப்போது நிலைகுலைவதாகிய துன்பத்தைநோக்கி எப்போதும்நீக்காத இழிவை அடையலாகாதென்பதும் அவ்விழிவை அடைந்தாலும் வருவதாயுள்ள அத்துன்பமானது வருமென்பதும் தெளிவாராதலால்- செய்யாரென்றார். (௪)

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

இ-ள். எற்றென்று- (நாஞ்செய்தது) எப்படிப்பட்டதென்று, இரங்குவ- (பின்தானே) இரங்குந்தொழில்களை செய்யற்க- (ஒருநாளும்) செய்யாதிருக்கக்கடவன், செய்வானேல் - (ஒருகால்மயங்கி அவைகளைச்) செய்வானாயின், மற்று- பின்பு, அன்ன - அவ்விதங்களை, செய்யாமை - செய்யாமை, நன்று - நல்லது.—எ-று. (கருத்து.) தான்வருந்தும் தொழில்களைச் செய்யாதிருக்கக்கடவன் அவற்றைச்செய்வானாயினும்பின் செய்யாமை நல்லது-என்பதாம். தொழில்பலவாதலால் இரக்கமும் பலவாயிற்று, செய்துவிட்டபின்பு இரங்குவானாயின் அதுதிரும்வழி அறிந்திலனென்றும், தெரிவுமிலனென்றும், பயனில்லாதவைகளைச் செய்கின்றானென்றும், தன்பழியைத்தானே தூற்றுகின்றானென்றும் எல்லாரும் இகழுவாராதலால் பின்புஇரங்காமை நன்றென்றார், இரங்காமையும் நல்லதொழில்செய்வோர் செயலாதலால் உடன்சொல்லப்பட்டது.

உ௱௨ சுசு-ஆம்-அதி—வினைத்தூய்மை.

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ்செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

சலத்தாற் பொருள்செய் தேமார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

இ-ள். (மந்திரியானவன்) சலத்தால் - தீயதொழில்களால்; பொருள்செய்து - பொருளைச்சம்பாதித்து, ஏமார்த்தல் - (அதனால் அரசனுக்கு) காப்புச்செய்தல், பசுமட்கலத்துள் - பசியமண்ணின்பாத்திரத்துள், நீர்பெய்து - நீரைவார்த்து, இரீஇயற்று - (அதற்குக்) காப்புச்செய்ததனோடொக்கும் — எ-று. (கருத்து.) மந்திரியானவன் வஞ்சிப்பால் பொருளைத்தேடிக்காத்தல் பசிய மண்பாத்திரத்துள்ளே நீரைவார்த்துக் காத்தல்போலாம் என்பதாம். * இருத்துதல் கெடுங்காலம் இருப்பச்செய்தல், அரசனும்பொருளும் ஒருசேரப்போமென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் அதற்குக்காரணம் சொல்லப்பட்டது.] (௰)

## ௬௭-ஆம்-அதி-வினைத்திட்பம்.

அஃதாவது, அப்பரிசுத்தமாகிய தொழிலை முடிப்பவனுக்கு வேண்டுவதாகிய மனவலிமையாம். அதிகாரமுறைமையும் இதனாலேயே விளங்கும்.

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

இ-ள். வினைத்திட்பமென்பது - தொழில்செய்யுமிடத்து வலிமையென்றுசொல்லப்படுவது, ஒருவன் - (அதனைமுடித்தற்குரிய) ஒருவனது, மனத்திட்பம் - மனத்தினதுவலிமையாம், மற்றையவெல்லாம் - அதுநீக்கவுள்ளனவல்லமைகளெல்லாம்; பிற - (அதற்கு) வலிமையென்றுசொல்லப்படுவனவல்ல — எ-று. (கருத்து.) தொழில்வலிமையென்று சொல்லப்படுவது ஒருவன் மனவலிமையாம் மற்றவலிமை யிதற்கு வேறல்லவாம் என்பதாம். * அவர்க்கலாணவ-பாட்டாள் நட்பு முதலான

ரெமன்றதனாலும் - உவமானத்தாலும் - சிறுமைவருவிக்கப்பட்ட து. அச்சு - உருள்கோத்தமரம் - ஆணி - உருள்கழலாமல் அதன்கடையிலே சொருகுவது அதுவடிவிலே சிறிதாயிருந்தே பெரியபாரத்தைக் கொண்டுசெலுத்துகிற வலிமை யுடைத்தாதல்போல் வடிவிலேசிறியராயிருந்தே பெரியதொழிலைக்கொண்டு செலுத்துகின்ற வலிமையுடைய மந்திரிகளும் உண்டு அவரை அவ்வலிமைநோக்கி அறிந்துகொள்கவென்பதாம். [இதனால் அவரை அறியும்விதம் சொல்லப்பட்டது.] (எ)

கலங்காது கண்ட வினைக்கட் டுளக்காது
தூக்கங் கடிந்து செயல்.

இ-ள். கலங்காது-(மனம்)தெளிந்து, கண்ட-(செய்வதாகத்)துணிந்த, வினைக்கண் - தொழிலிடத்து, துளக்காது, (பின்) அசைதலில்லாமல் தூக்கங்கடிந்து, ஆலசியத்தை. ஒழித்து, செயல் - செய்யக்கடவர் —எ-று. (கருத்து.) மனந்தெளிந்து செய்யத்துணிந்த தொழிலிடத்து ஆலசியமில்லாமலத்தொழிலைச் செய்யக்கடவர் - என்பதாம். கலங்கியவிடத்து ஒழிவதுசெய்வதுபோல் தோன்றுமாதலால் தெளிந்தபோதல் ஆராய்ந்தாலும் செய்வதாக [illegible] தொழிலை-கலங்காது கண்ட வினையென்றார், துளக்காமை-வலிமையுடைமை. (அ)

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

இ-ள். (முதலிலேமெய்வருத்தமாய்ப்பின்னாலே) துன்பம் - துன்பமானது, உறவரினும்-(தமக்கு) மிகவரினும், (அதுகண்டுதளராமல்) இன்பம்-சுகத்தை, பயக்கு - (முடிவிலே) தருகின்ற, வினை-தொழிலை, துணிவாற்றி-வலிமையுடையராய்செய்க - செய்யக்கடவர்—எ-று. (கருத்து.) துன்பம்வரினு மின்பந்தரும் தொழிலைச்செய்யக்கடவ ரென்பதாம். துணிவு - கலங்காமை - அக்கலங்காமை யுடையவர்க் கல்லது சிறிதுகாலத்திலே நீக்குவதாகிய முயற்சித்துன்பம் நோக்காமல் அதனால் உண்டாய்நிலைபெறும் இன்பத்தை நோக்கிச்செய்தல் கூடாமையாலே - துணிவாற்றிச்செய்கவென்றார். [இவைஇரண்டுபாட்டாலும் அவர்தொழில்செய்யும் விதம்சொல்லப்பட்டது.] (கூ)

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

இ-ள். உலகு-உயர்ந்தோர், வினைத்திட்பம்-தொழில்வலிமையை, வேண்டாரை-(இதுநமக்குச் சிறந்ததென்று) கொள்ளாதமந்திரிகளை, எனைத்திட்பம் - அனைவர்க்குமாகிய வலிமைகளெல்லாம், எய்தியக்கண்ணும்-உடையவராகியவிடத்தும், வேண்டாது-மன்குமதியார்—எ-று. (கருத்து) உயர்ந்தோர் தொழில்வலிமையை விரும்பாத மந்திரிகளை மதியாரென்பதாம். மனதினிடத்திலே வலிமையில்லாதவர்க்கு - படை - அரண் - நட்புமுதலானவைகளின் வலிமைகளெல்லாம் உண்டாயினும் தொழில் முடியாமையால் அவ்வலிமைகளெல்லாம் கெடுமென்பதுபற்றி உலகுவேண்டா தென்றார். [இதனால்தொழில் வலிமை யில்லாதவர் தாழ்வுசொல்லப்பட்டது.] (ய)

## ௬௰அ-ஆம்-அதி-வினைசெயல்வகை.

அஃதாவது, அவ்வலிமையுடைய மந்திரியானவன் அத்தொழிலைச் செய்யுந் திறமாம், அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது.

இ-ள். சூழ்ச்சி-ஆலோசனைக்கு, முடிவு-எல்லையாவது, துணிவெய்தல்-(ஆலோசிப்பவன் இனி இதைச்செய்யவேண்டுமென்று) துணிவைப்பெறுதல், அத்துணிவு-அப்படித்துணிவுபெற்றதொழில், தாழ்ச்சியுள்-(பின்) ஆ

லசியத்தில், தங்குதல்-தங்குதல், தீது-குற்றமுடையதாம்—எ-று. (கருத்து.) ஆலோசனைக்கெல்லையாவது துணிவுபெறுதல் அத்துணிவு பின் ஆலசியப்படுதல் குற்றம்-என்பதாம். * சூழ்ச்சிமுடிவு துணிவெய்தலென்றதனால் துணிவுபெறுமளவுக்கும் ஆலோசிக்கவேண்டுமென்பதாயிற்று. பின்னர்த்துணிவு-அதுபெற்றதொழிலுக்கு ஆதலால் - ஆகுபெயர். ஆலசியமுண்டானவிடத்தே வேலைக்குறிவாதலாலும் பகைவர் அறிந்து அழித்தலாலும் முடியாமையால் அதனைத்தீதென்றார். (௧)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

இ-ள். தூங்கி-ஆலசியித்து, செயற்பால-செய்யும்பகுதியை யுடையதொழில்களுள், தூங்குக - ஆலசியம் பண்ணக்கடவன், தூங்காது-ஆலசியம்பண்ணாமல், செய்யும்வினை - செய்யுந்தொழில்களுள், தூங்கற்க ஆலசியம்பண்ணுதிருக்கக்கடவன்—எ-று. (கருத்து.) ஆலசியமாகச் செய்யுந்தொழில்களை ஆலசியமாகச் செய்யக்கடவன் - விரைவாகச் செய்யுந்தொழில்களை விரைவாகச் செய்யக்கடவன்-என்பதாம். * இருவகைத்தொழில்களும் - வலியாலும் காலத்தாலும் அறியப்படுமே, மாறிச்செய்தால் - அவைபலியாமற்போமென்பது கருத்து. முன்னே தூங்காமையென்றதை இங்கே பகுத்துச் சொல்கிறார். [இவை இரண்டுபாட்டாலும் பொதுவாகையால் தொழில்செய்யுந்திறம் சொல்லப்பட்டது.] (௨)

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

இ-ள். (தொழில்செய்யும்போது) ஒல்லும் வாயெல்லாம் - கூடுமிடத்தெல்லாம், வினை - தண்டஞ்செய்தல், நன்று - நல்லதாகும், ஒல்லாக்கால் - (அது) கூடாதவிடத்து (மற்றைமூன்று உபாயங்களிலே) செல்லும் வாய்நோக்கி - (அது) முடிவதோருபாயம்நோக்கி, செயல் - செய்யக்கடவன்—எ-று. (கருத்து.) குற்றங்கூடுமிடத்தெல்லாம் தண்டித்தல் நல்லது அதுகூடாதவிடத்து மூன்றுபாயங்களாற் செய்யக்கடவன் என்



பதாம். * கூடுமிடம் - பகைவனிலும் தான்வலியனாகிய காலம், அக்காலத்திலே பகைவர் தண்டத்துக்கே அஞ்சுவராதலால் - அத்தண்டமே நன்றென்றார், கூடாதவிடம் - ஒத்தகாலமும் இளைத்தகாலமும், ஆம் [இதனால்-வலிமை - ஒப்புமை - மெலிமை - என்கிற மூவகைப்படுமென்பதும், அவைகளுள் வலிமையினது சிறப்பும் சொல்லப்பட்டன.] (௩)

வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

இ-ள். வினை-(செய்யத்தொடங்கிய) தொழிலும், பகை-(அழிக்கத்தொடங்கிய) பகையும், என்றிரண்டின் - என்றுசொல்லப்பட்ட இரண்டினது, எச்சம்-குறையும், நினையுங்கால் - ஆராயுமிடத்து, தீயெச்சம்போல-தீயினதுகுறைபோல், தெறும்-(பின்வளர்ந்து) கெடுக்கும்—எ-று. (கருத்து.) தொழிலும் பகையும் அக்கினிபோல் வளர்ந்து கெடுக்கும்-என்பதாம். ✽ இனி இக்குறை என்னசெய்யமாட்டுமென்று இகழ்ந்து விட்டுவிடாமல் முடிவுபெறச் செய்கவென்பதாம். பின்வளர்தற்றொப்புமைபற்றிப் பகையெச்சமும் உடன்சொல்லினார். [இதனால்வினையை ன் செய்யுந்திறம் சொல்லப்பட்டது.] (௪)

பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

இ-ள். (தொழில்செய்யுமிடத்து) பொருள்-பொருளும், கருவி-சாதனமும், காலம்-காலமும், வினை-தொழிலும், இடன்-இடமுமாகிய, ஐந்தும்-ஐந்தும், இருடீர-மயக்கமற, எண்ணி-நினைத்து, செயல்- செய்யக்கடவன்—எ-று. (கருத்து) பொருளும் சாதனமும் காலமும் தொழிலும் இடமும் இவ்வைந்து நினைத்துத் தொழில்செய்யக்கடவன் என்பதாம். ✽ பொருள் அழியும் பொருளும்-ஆகும்பொருளும், கருவி-தன்சேனையும், பகைவர்சேனையும், காலம்-தனக்கு ஆங்காலமும், அவர்க்கு-ஆங்காலமும், வினை-தான்வல்லதொழிலும் அவர்வல்லதொழிலும், இடன்- தான் வெல்லும்இடமும், அவர்வெல்லும் இடமும், இவைகளைத்தான் வெற்றி பெறுந்திறத்தில் தப்பாமல் யெண்ணிச்செய்க வென்பதாம். (௫)

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

இ-ள். (தொழில்செய்யுமிடத்து) முடிவும்-(அது) முடிதற்குளதாகிய முயற்சியையும், இடையூறும்-(அதற்குவரும்) இடையூற்றையும், முற்றி-(அவ்விடையூறுநீக்கி) முடித்தால், எய்தும்-(தான்) அடையும், படுபயனும்-பெரும்பயனையும், பார்த்து-சீர்தூக்கி, செயல்-செய்யக்கடவன்—எ-று. (கருத்து) முயற்சியையும், இடையூற்றையும், பய



னையும், ஆராய்ந்து தொழில்செய்யக்கடவன்-என்பதாம். ✽ முடிவு- அதன் முயற்சிக்கு ஆகுதலால் ஆகுபெயர், முயற்சியளவுக்கும் இடையூறளவுக்கும் பயனளவு பெரிதாயிருந்தால் அத்தொழிலைச்செய்க வென்பதாம். (௬)

செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

இ-ள். செய்வினை-(அவ்வாறின்றிலே) செய்யப்படுந்தொழிலை, செய்வான்-செய்யத்தொடங்கினவன், செயன்முறை-செய்யுமுறைமையாவது, அவ்வினை-அத்தொழிலினது, உள்-உளப்பாட்டை, அறிவான்-அறிபவனது, உள்ளம்-கருத்தை, கொளல்-(தான்) அறிதல்—எ-று. (கருத்து.) தொழிலைச் செய்யத் தொடங்கினவன் செய்யுமுறைமையாவது அத்தொழிலினுளப்பாட்டை அறிதல் - என்பதாம். ✽ அவ்வாறென்பது பொருள்முதலானவைகளை எண்ணுதலையும், முடிவுமுதலானவைகளை ஆராய்தலையும், உள்ளறிவான் முன்செய்துகைவந்தவன், அவன் கருத்து, அதனைச்செய்துவந்த உபாயம், அதனை அறியவேதானும் அவ்வுபா



அஃதாவது, பொருந்தல் பிரிதல்களுக்கு வேற்றரசரிடத்தே சென்று வாராநின்ற தன்மை. அவ்விரண்டனையும் முன்வினை செயல்வகையே யென்றமையால் இது அதன்பின் வைக்கப்பட்டது. தான்வகுத்துச்சொ

ல்லுவோன் சொல்லியது சொல்லுவோன் எனத்தூது இருவகைப்ப டும். அவருள் முன்னோன் மந்திரியோடொப்பானாகலானும்பி ன்னோன் அவனிற் கற்பக்குணங்குறைந்தோனாகலானும்இஃ து அமைச்சியலாயிற்று.

> அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
> பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

இ-ள். அன்புடைமை - (தன்சுற்றத்தாரிடத்து) அன்புடையனா தலும், ஆன்றகுடிப்பிறத்தல் - (மந்திரித்தொழில்செய்தற்கு) அமை ந்த குடியிற்பிறத்தலும், வேந்தவாம்பண்புடைமை - அரசர் விரும்பு ம்படியான குணமுடையனாதலும், தூதுரைப்பான் - தூதுவார்த்தைகளைச் சொல்லுவோனுக்கு பண்பு - இலக்கணமாம் — எ-று. (கருத்து.) அன்பும் நற்குடியிற்பிறத்தலும் அரசர்விரும்புங் குணமுமுடையனாதல் தூதிலக்கணம்-என்பதாம். ✽ முன்னையவிரண்டினாலும் முறையே சு

௬௯-ஆம்-அதி—தூது. உசஎ

ற்றத்தார்க்குத் தீங்குவாராமல் தானேகாத்துநடத்தலும்,தன்முன்னோர் நியல்கேட்டு அறிதலும், பெற்றும், வேந்தவாம்பண்புடைமை- பின்பு மன்னனைச் சேர்ந்தொழுக்கிலே அறியப்படும். அதனால் வேற்றரசரு ம் அவனுக்கு வசப்படுதல் கொள்ளப்படும். (௧)

> அன்பறிவாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
> கின்றி யமையாத மூன்று.

இ-ள். அன்பு-(தம்மரசனிடத்து)அன்புடைமையும், அறிவு - (அ வனுக்கு ஆம்வகைகளை அறியும்)அறிவுடைமையும், (அவைகளைவேற்று வேந்தரிடத்துச் சொல்லும்போது) ஆராய்ந்தசொல்வன்மை - ஆராய் ந்துசொல்லுதல் வலிமையுமென, தூதுரைப்பார்க்கு- தூதுசொல்ல உ ரியவர்க்கு, இன்றியமையாத - அவசியமாகவேண்டிய குணங்கள், மூன் று-மூன்றும் — எ-று. (கருத்து.) அன்பு-அறிவு-சொல்வன்மை-இவை தூதுசொல்வோர் குணங்களாம்-என்பதாம். ✽ ஆராய்தல், அவைகளு க்குச் சம்மதிக்கும் சொற்களைத் தெரிதல், அவசியமாகவேண்டிய குண ங்கள் மூன்றெனவே மந்திரிகளுக்குச்சொல்லிய மற்றைக் குணங்களு ம் வேண்டுமென்றதாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் இருவகைத் தூதர்க்கும் பொதுவிலக்கணம் சொல்லப்பட்டது.] (உ)

> நூலாருள் நூல்வல்ல னாகுதல் வேலாருள்
> வென்றி வினையுரைப்பான் பண்பு.

இ-ள். வேலாருள் - வேலினையுடைய வேற்றரசரிடத்து, வென்றி - (தன்னரசனுக்கு வெற்றியைத்தருகின்ற, வினையுரைப்பான் - தொழிலைச்சொல்வோனுக்கு, பண்பு - இலக்கணமாவது, நூலாருள் - நீதிநூலை அறிந்தமந்திரிகளிடத்து, நூல்வல்லனாகுதல் - (தான்) அந்நூலில் வல்லவனாகுதல் - எ-று. (கருத்து.) தூதனுக்கிலக்கணமாவது - மந்திரிகளிடத்து வல்லவனாகுதல் - என்பதாம். * கொலைத்தொழிலோரென்பதுதோன்ற - வேலாரென்றும், அந்தத்தொழி லிரண்டு மடக்கவென்றி வினையென்றும் சொல்லினார்; வல்லவனாகுதல் - அறிதன்மாத்திரமுடையராகிய அவர் முன்னவருக்கும் வல்லமையுடைய னாகுதல். (௩)

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றின்
செறிவுடையான் செல்க வினைக்கு.

இ-ள். அறிவு - (இயற்கையாகிய) அறிவும், உருவு - (கண்டோரிச்சிக்கும்) தோற்றப்பொலிவும், ஆராய்ந்தகல்வி - (பலரோடும்பலகாலும்) ஆராயப்பட்டகல்வியுமென, இம்மூன்றின் - (தன்குமதித்தற்கு ஏதுவாகிய) இம்மூன்றினது, செறிவுடையான் - கூட்டத்தையுடையவன், வினைக்கு - (வேற்றரசரிடத்துத்தூதுத்) தொழிலுக்கு, செல்க - செல்லக்கட வன் - எ-று. (கருத்து.) அறிவு - உருவு, கல்வி - இவற்றையுடையவன் தூது
கடவ



செல்லக்கடவன் - என்பதாம். * இம்மூன்றும் ஒருவனிடத்துக் கூடுதல் அரிதாகலால், செறிவுடையானென்றார். இவைகளாலே தன்குமதிப்புடையவனாகவே இனிதுமுடியுமென்பது கருத்து. (௪)

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

இ-ள். (வேற்றரசருக்குப் பலகாரியங்களைச் சொல்லுமிடத்து) தொகச்சொல்லி - (காரணவகையால்) தொகுத்துச்சொல்லியும், (இனிமையில்லாத காரியங்களைச் சொல்லுமிடத்து) தூவாதநீக்கி - வெய்யசொற்களை நீக்கியும், நகச்சொல்லி - (இனிமையானசொற்களால்) மகிழச்சொல்லியும், நன்றிபயப்பது - (தன்னரசனுக்கு) நன்மையைச் செய்பவனே, தூது - தூதனாவான் - எ-று. (கருத்து.) தொகுத்துச்சொல்லியும் கடுஞ்சொல்லை நீக்கியும் மகிழச்சொல்லியு மரசனுக்கு நன்மைசெய்பவனே தூது - என்பதாம். * பலகாரியங்களுக்கு உடன்படாதவர் யாம் பலவாயால் அப்பலவும் முடித்தற்குக் காரணமான ஒருகாரியத்தைச்சொல்ல அதனுள் அனைவரும் படும்விதத்தை ஆலோசித்தறிதல் அருமையாதலால் - சுருக்கத்தால் உடன்படுபவர் இனிமையில்லாத காரியங்களுக்கு உடன்படாதவர். மகிழச்சொல்ல அவ்வினிமையில்லாமைதோன்றாமையால் உடன்படுவர். ஆகலால் அவ்விருவழியாலும் தன்காரியம் தவறாமல்முடிக்க வல்லவனென்பதாம். (௫)

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்க தறிவதாம் தூது.

இ-ள். கற்று - (நீதிநூல்களைக்) கற்று, செல் - (பகைவேந்தர்)மன த்தைக்கொள, சொல்லி - (தானுசென்றகருமத்தைச்) - சொல்லி, கண்ணஞ் சான் - அவர்கோபித்துப்பார்க்கில் அப்பார்வைக்கு அஞ்சாதவனும், கா லத்தால் - காலத்தோடுபொருந்த, தக்கது - (அதுமுடிக்கத்) தக்கவுபா யத்தை, அறிவது - அறிபவனே, தூதாம் - தூதனாவான் - எ-று. (கருத் து.) நீதிநூலைக்கற்றுப் பகையரசர் மனக்கொளச்சொல்லி யஞ்சாதவனு ய் காலத்திற்கேற்க வுபாயமறிபவனே தூதன்-என்பதாம். * அவ்வுபா யம் அறிதற்பொருட்டு நீதிநூற்கல்வியும், அதனாலன்றி வேறொன்றால் முடியுங்காலம்வரின் அவ்வாறு முடிக்கவேண்டுதலால் - காலத்தாற்றக்க தறிதலும், இலக்கணமாயின. (௬)

கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

இ-ள். கடன் - (வேற்றரசரிடத்துத் தான்செய்யு) முறைமையை, அறிந்து-தெரிந்து, காலங்கருதி - (அவர்) சமயம்பார்த்து, இடன்(சென் றகருமஞ் சொல்லுதற்குற்ற) விடத்தை, அறிந்து-தெரிந்து, எண்ணி-சொல்லும் (வழியைமுன்னே) விசாரித்து, உரைப்பான் - (அவ்வழி)



சொல்லுவோன், தலை - (தூதரில்) மிக்கவன் - எ-று. (கருத்து.)முறை தெரிந்து சமயம்பார்த்துத் தக்கவிடமறிந்து எண்ணிச்சொல்பவனே தூ தன்-என்பதாம். * செய்யுமுறைமையாவது அவர்நிலையும், தன்னரச னிலையும், தன்னிலையும், சீர்தூக்கி அவைகளுக்கு ஏற்பக்கூறு முறை மையும் சொல்லுமுறைமையு முதலாயின. செவ்வி- தன்சொல்லை வே ற்றுக்கொள்ளுமனமகிழ்ச்சி. அது காலத்தின் வசத்ததாகலால் - காலமெ ன்றார். இடன் - தனக்குத் துணையாவார் உடனுமியவிடம்-என்றுதல் தான் அதுசொல்லும் விதமும், அதற்கு அவர்சொல்லும் உத்தரமும், அதற்குப்பின் தான்சொல்லுமவைகளும் ஆக இவ்வழியால் மேலுமே லும் தானே யெண்ணுதல்-வடநூலார், இவ்விரு வகையாருடனே நில கொடுத்து சிற்பனையும்,கூட்டித்துதனை-தலைஇடை கடையென வகுத்துச் சொல்லினராகலால் அவர்மதமும்தோன்ற தலையென்றார். தூதென்ப து அதிகாரத்தாலன்றது. [இவை ஐந்துபாட்டாலும் தான் வகுத்துச் சொல்லுவானது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௭)

தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

இ-ள். வழி - (தன்னரசன் வார்த்தையை) அவன்சொல்லியவழியே, உரைப்பான் - (வேற்றரசர்க்குச்) சொல்லுவானது, பண்பு - இலக்கணமா வது, தூய்மை (பொருளாலும் காமத்தாலும்) பரிசுத்தனாதலும், துணை மை - (தனக்கு அவர் மந்திரிகள்) துணையாந்தன்மையும், துணிவுடை

மை-துணிதலையுடைமையும், இம்மூன்றின் - இம்மூன்றுங்கூடிய, வா ய்மை - மெய்மையும்-ஆம் - எ-று. (கருத்து.) சுத்தமும்- துணையும்-து

ளிவும்-சத்தியமும் - இக்கான்கும் தூதனிலக்கணமாம் - என்பதாம். * பொருள் காமங்கள்பற்றி வேறுபடச் சொல்லாமைப்பொருட்டு - தூ ய்மையும் - தன்னரசனுக்கு உயர்ச்சிசொல்லியவிடத்தே எம்போலல்லார்க்கு அது இயல்பென்று அவர்கோபத்தை நீக்கற்பொருட்டு துணைமையும், இதுசொன்னால் இவர் துன்பம் செய்வாரென்று ஒழியாமைப்பொருட்டுத் துணிவுடைமையும். யாவராலும் நம்பப்படுதற்பொருட்டு, மெய்மையும் வேண்டப்பட்டன. (அ)

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

இ-ள். விடுமாற்றம் - தன்னரசன்சொல்லி விட்டவார்த்தையை, வேந்தர்க்கு-வேற்றரசர்க்கு, உரைப்பான்-சொல்லுதற்குரியவன், தனக்குவரும் துன்பத்திற்கு அஞ்சி வடுமாற்றம் - (அவனுக்குத்) தாழ்வான வார்த்தையை, வாய்சோரா - வாய்சோர்ந்தும் சொல்லாத, வன்கணவன் - வலிமையை யுடையவன் — எ-று. (கருத்து.) தன்னரசன்வார்த்தை



யை வேற்றரசர்க்குச் சொல்லுதற்குரியவனே தூதரில்சுவையவன் - என்பதாம். * தாழ்வு அரசர்சாதிக்குத் தருமமல்லாமையால் - அதனை வடு வென்றார். (௯)

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

இ-ள். இறுதிபயப்பினும் - (அவ்வார்த்தைதனக்கு) முடிவைத்தருமாயினும், எஞ்சாது-அதற்கு அஞ்சிவிடாது, தன்னரசன்சொன்னபடியே இறைவற்கு-அவ்வரசனுக்கு, உறுதி-மிருதியை, பயப்பது- வேற்றரசனிடத்துச்சொல்லுவோனே, (தூதாம்) தூதனுவான் — எ-று. (கருத்து.) தனக்கு முடிவுவரினும் அஞ்சாது வேற்றரசனுக்குத் தன்னரசன்சொல்லைச் சொல்பவனே தூதன்-என்பதாம். * முடிவைத்தரினுமென்றதனுல் மற்றைத் துன்பங்களைத் தருதல் சொல்லவேண்டுவதில்லை யாயிற்று. [இவை மூன்றுபாட்டாலும் சொல்லியது சொல்லுவானது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௰)

௭௰-ஆம்-அதி-மன்னரைச்சேர்ந்தொழுகல்.

[அஃதாவது, மந்திரி அரசனைப் பொருந்தி நடக்கும்விதம், இதுவேந்தவாம் பண்புடைமையென முன்சொல்லப்பட்டமையால் தூதின்பின் வைக்கப்பட்டது.]

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

இ-ள். இகல்-மாறுபடுதலையுடைய, வேந்தர் - அரசரை, சேர்ந்து ஒழுகுவார் - நடக்குமந்திரிகள், (அவரை) அகலாது - மிகநீக்காமலும், அணுகாது - மிகநெருங்காமலும், தீக்காய்வார்போல்க - நெருப்பிற் குளிர்காய்வார்போல் நடுவிடத்து நிற்கக்கடவர்—எ-று. (கருத்து.) மந்திரிகள் மாறுபாடுடைய வேந்தரிடத்து அகலாமலும் அணுகாமலு மிருக்கக்கடவர்-என்பதாம். * முன்கோபக்காரனென்பது தோன்ற இகல் வேந்தரென்றார், மிகநீங்கினாற் பயன் கொடாமல் மிகநெருங்கினால் அவமதிப்பற்றி வருத்தும் வேந்தர்க்கு - மிகநீங்கினாற்குளிர் நீங்காமல் மிகநெருங்கினாற் சுடுவதாதலால் தீ உவமானமாயிற்று. (க)

மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.

இ-ள். மன்னர் - (தம்) மன்னரால், விழைப - விரும்பப்பட்டவைகளை, விழையாமை - (தாம்) விரும்பாதிருத்தல், மன்னரால் - அவ்



வரசராலே, மன்னிய-நிலைபெற்ற, ஆக்கம் - செல்வத்தை, தரும்-(மந்திரிகளுக்குக்) கொடுக்கும்—எ-று. (கருத்து.) தம்மரசரால் விரும்பப்பட்டவற்றை விரும்பாதிருத்தல் மந்திரிகளுக்கவரால் செல்வமுண்டாம் என்பதாம் * இங்கே விரும்பப்பட்டவையென்றது - அவர்க்குச்சிறப்பாக உரியவைகளை, அவை உண்ணப்படுவனவும் - அணியப்படுவனவும் முதலானவை இவைகளைச்சமமாய்த் தோன்றற்கு அஞ்சி விரும்பாதொழியவே அவ்வச்சநோக்கி மகிழ்ந்து அவர்தாமே எல்லாச்செல்வமும் தருவரென்பது கருத்து. (உ)

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கு மரிது.

இ-ள். (மந்திரிகள்) போற்றின் - (தம்மைக்) காத்துக்கொள்ளவேண்டினால், அரியவை-அரியபிழைகளை, போற்றல்- தம்மிடத்திலேவாராமற் காக்கக்கடவர், கடுத்தபின் - (அவ்வரசர் அவை வந்தவைகளாகக் கேட்டு) சந்தேகித்தபின்பு, தேற்றுதல்- (அவரைப்பின்) தெளிவித்தல், யார்க்கும்-யார்க்கும், அரிது-அருமை, (ஆதலால்)—எ-று. (கருத்து.) மந்திரிகள் தங்களிடத்துக் குற்றம்வாராமற் காக்கக்கடவர் தம்மரசர் சந்தேகித்தபின் அவரைத்தெளிவித்தலரிது-என்பதாம் * அரியபிழைகள்-அவராலே பொறுத்தற்கரிய இழுத்தல் முதலானவை, அவைகளைக் காத்தலாவது - ஒருவன்சொல்லியக்கால் அவர்நம்பாதிருக்கும்படி நடத்தல் பின் ஒருவழியால் நம்புவித்தலும் கடன்கொண்டவனைக் கண்டவிடத்தெல்லாம் அப்பொருள் போல்தம்மைக்கண்டவிடத்தெல்லாம் அப்பிழைதோன்றுமாதலால் யார்க்குமரிதென்றார். [இவைமூன்றுபாட்டாலும் அறவொழுகுவகையாற் சொல்லப்பட்டது.] (ங)

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

இ-ள். ஆன்ற-நிறைந்த பெரியாரகத்து - அரசரிடத்திருக்கும்போது, செவிச்சொல்லும் - ஒருவன்காதிலேசொல்லுதலையும், சேர்ந்தநகையும் - (ஒருவன்முக) நோக்கி நகைத்தலையும், அவித்து - நீக்கி, ஒழுகல்-நடக்கக்கடவர்—எ-று. (கருத்து.)மந்திரி அரசனிடத்திருக்கையில் ஒருவன் காதிற்சொல்லுதலையும் ஒருவன்கண்டு நகைத்தலையும் நீக்கி நடக்கக்கடவன் - என்பதாம். * சேர்தல் - பிறனொடுசேர்தல்—அவைசெய்தாலதன்சேர்வுகண்டுசெய்தவையாகக்கொள்வரென்பதுகருத்து. (ச)

> எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
> விட்டக்காற் கேட்க மறை.

இ-ள். மறை - (அரசனுக்குப்பிறரோடு) ரகசியம் நிகழுமிடத்துள்ள ப்பொருளும் - யாதொருபொருளையும், ஓரார் - செவிகொடுத்துக்கேளாமலும்,



லும், தொடரார் - (அவனை) மூடுகினவாமலும், அப்பொருளை - அந்தரகசியப்பொருளை, விட்டாக்கால் - (அவனே) அடக்காமற்சொல்லுவு ல், கேட்க-கேட்கக்கடவர்—எ-று. (கருத்து.) அரசனிரகசியம் பேசு

கையிற் கேளாமலு மனதைவினவாமலும் இருந்து அவன் சொன்னால் மந்திரிகள் கேட்கக்கடவர் - என்பதாம். * மூடுகி வினவுதற்குரியபொருளாயிருந்தாலு மென்றதற்கு எப்பொருளுமென்றார். (ரு)

> குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
> வேண்டுப வேட்பச் சொலல்.

இ-ள். (அரசனுக்குக்காரியஞ்சொல்லும்போது) - குறிப்பறிந்து - (அப்பொழுதுகேட்கின்ற அவனது) குறிப்பையறிந்து, காலங்கருதி (சொல்லுதற்குவற்ற) காலத்தையும்பார்த்து, வெறுப்பில - வெறுப்பில்லாதனவும், வேண்டுப - வேண்டுவனவும் ஆகியகாரியங்களை, வேட்ப (அவன்மனம்) விரும்பும்வகை, சொலல் - சொல்லக்கடவர் —எ-று. (கருத்து.) குறிப்பறிந்துசமயம்பார்த்து வெறுப்பில்லாதவற்றையும் வேண்டுவனவற்றையுஞ் சொல்லக்கடவர் - என்பதாம். * அரசன்மனங்காரியத்திலன்றிக் காமவெகுளியுள்ளிட்டவைகளிலே நிகழுமிடத்தும், அதற்குஏற்றகாலத்தும், சொல்லுதல் பயன்படாமற்போதலால் - குறிப்பறிந்து காலங்கருதியென்றும், அவனுடன்படாத காரியங்கள் முடிவுபெறாமையால் - வெறுப்பிலவென்றும் பயனில்லாதவையும், பயன்சுருங்கியவையும் - ஆகியகாரியங்களைச் செய்யவேண்டாமையால் வேண்டுபவென்றும், அவைகளை இனியவையாய்ச் சுருங்கிவிளங்கிய பொருளுடையவையாகிய சொற்களாலே சொல்லுகவென்றதற்கு வேட்பச் சொல்லென்றும், சொல்லினர். (சு)

> வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
> கேட்பினுஞ் சொல்லா விடல்.

இ-ள். (பெரும்பயனுள்ளவையும்) - வேட்பன - (அரசன்) விரும்புவனவும், (ஆகியகாரியங்களை) சொல்லி - (அவன்கேட்டிலனாயினும்) சொல்லி, எஞ்ஞான்றும் - எக்காலும், வினையில - பயனில்லாதவைகளை, கேட்பினும் - (தானே) கேட்டாலும், சொல்லாவிடல் - சொல்லாது விடக்கடவன்—எ-று (கருத்து.) அரசன் விரும்பியவற்றைச்சொல்லிப் பயனி

ல்லாதவற்றை யவன்கேட்டாலு மந்திரி சொல்லாதுவிடக்கடவன் - என்பதாம். * வினையில்கேட்பினும் என்வந்தசொற்களால் அவைகளுக்கு எதிரானசொற்கள் - வருவிக்கப்பட்டன. வினையால்வருதலின் - வினையென்றும், வறுமைக்காலமும் அடக்க-எஞ்ஞான்றுமென்றும்,செல்லினர். சொல்லத்தக்கவையும், சொல்லத்தகாதவையும் வகுத்தச்



சொல்லியபடி. [இவையைந்துபாட்டானும் சிறப்புவகையாற்சொல்லப்பட்டது.] (௭)

இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

இ-ள். இளையர்-(இவர்எமக்கு)இளையவர், இனமுறையர்(எமக்கு) இன்னமுறையினர், என்றிகழார்-என்று (அரசனை) அவமதியாமல், நின்ற-(அவரிடத்து) நிலைபெற்ற, ஒளியோடு- ஒளியோடுபொருந்த, ஒழுகப்படும் - நடக்கத்தகும்—எ-று.(கருத்து.) அரசனிளையவனென்றுமுறையினர் என்றிகழாமல் மந்திரிகள் மதிக்கப்படுவர் - என்பதாம். * ஒளியென்றது செய்யாதிற்கவும் உலகங்காக்கின்ற அவனதுதெய்வத்தன்மை அதனோடுபொருந்த வொழுகுதலாவது - அவர்தேவரும் தாம்மனிதருமாக நடத்தல். அவ்வொளியினாலே நீக்கப்பட்ட இளமையும் முறைமையும்பற்றி இகழ்வாராகனால் தாமும் நீக்கப்படுவரென்பது கருத்து. (௮)

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

இ-ள். துளக்கற்ற - அசைவற்ற,காட்சியவர்- அறிவையுடையவர், கொளப்பட்டேமென்று - (அரசனால்) நன்குமதிக்கப்பட்டோமென்று, எண்ணி-நினைத்து, கொள்ளாத - (அவன்) விரும்பாதவைகளை,செய்யார்-செய்யார்கள்—எ-று. (கருத்து) அறிவுடையவர் அரசனாலே மதிக்கப்பட்டோமென்று நினைத்து அவன்விரும்பாதவற்றைச்செய்யார் - என்பதாம். * விரும்பாதவைகளைச்செய்து அழிவடைவோர் கொள்ளப்பட்டபின்பு தம்மை வேறொருவராக நினைப்பவராதலால் முன்னையராக வேநினைத்து அஞ்சிநடப்பவரை - துளக்கற்ற காட்சியவரென்றார். (௯)

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

இ-ள். பழையமெனா -(அரசனுக்குப்) பழைமையோமென, கருதி நினைத்து, பண்பல்ல - (தமக்கு) இயல்பல்லாதவைகளை, செய்யும் - செய்கின்ற, கெழுதகைமை-உரிமையானது, கேடுதரும் - (மந்திரிகளுக்கு) கேட்டைத்தரும்—எ-று. (கருத்து.) அரசனுக்குப்பழைமையோமென்று நினைத்து இயல்பல்லாதவற்றைச்செய்யு முரிமையானது மந்திரிகளுக்கு கேட்டைத்தரும் - என்பதாம். * அவன்பொறுத வருத்தும் பொழுதில் அப்பழைமைநோக்கி முகங்கொடாமல் உயிரைவௌவுதலால் அவன்வேண்டாதவை செய்தற்கு ஏதுவாகிய உரிமைகேடு தருமென்றார். [இவைமூன்றுபாட்டானும் பொறுப்பரென்று அரசர்க்குவெறுப்பாயுள்ளவைகளைச்செய்யலாகாதென்பது சொல்லப்பட்டது. (௰)



# எக-ஆம்-அதி-குறிப்பறிதல்.

அஃதாவது, அரசர்நினைத்ததை அவர்சொல்லாமல் அறிதல். இது மன்னரைச்சேர்ந்து நடப்பவர்க்கு அவசியமானதாகலால், இது அதன்பின் வைக்கப்பட்டது.

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.

இ-ள். குறிப்பு -(அரசனாற்) குறிக்கப்பட்டகாரியத்தை, கூறாமை (அவன்) சொல்லவேண்டாவகை, நோக்கி - அவன் முகத்தையாவது கண்ணையாவது) பார்த்து, அறிவான் - அறிகிறமந்திரியானவன், எஞ்ஞான்றும்-எந்தகாலும், மாறாநீர் - வற்றாதநீராலேசூழப்பட்ட, வையக்கு - உலகத்துள்ளார்க்கு, அணி - ஆபரணம்—எ-று. (கருத்து.) அரசன்குறிப்பையறிகிற மந்திரி உலகத்தார்க்கு ஆபரணமாவான் - என்பதாம். * அறிவுடையனாகி எல்லார்க்கும் அழகுசெய்தலால் வையக்கணி யென்றார். குறிப்பும்வையமும் ஆகுபெயர்கள். வையத்திற்கென்பது விகாரம். (க)

ஐயப்படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

இ-ள். அகத்தது - (ஒருவனது) மனதினிடத்திலே நிகழ்வதை, ஐயப்படாஅது-சந்தேகப்படாமல், உணர்வானை-துணிவாக அறியவல்லவனை, (மனிதனேயாயினும்) தெய்வத்தோடொப்ப - தெய்வத்தோடுசமானமாக, கொளல்-நன்குமதிக்கப்பட்டவன்—எ-று. (கருத்து.) மனத்தினிடத்து நடப்பதை அறிபவனைத் தெய்வத்தோடு சமானமாகக்கொள்ளக்கடவன்-என்பதாம். * உடம்புமுதலானவைகளால் ஒப்பாகானாயினும் பிறர்நினைத்ததை அறிகிறதெய்வத்தன்மை யுடைமையால் தெய்வத்தோடொப்பவென்றார். (உ)

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

இ-ள். குறிப்பின் - (தன்) குறிப்புநிகழும்விதம் அறிந்து, குறிப்புணர்வாரை (அதனால்) பிறர்குறிப்பு அறியுந்தன்மையவரை, உறுப்பினுள் (அரசர்தம்) உறுப்புகளுள் - யாதுகொடுத்தும் -(அவர்வேண்டுவது)யாதொன்றைகொடுத்தாயினும், கொளல்-(தமக்கு) துணையாகக்கொள்ளக்கடவர்—எ-று. (கருத்து.) குறிப்பால் குறிப்பறிவாரை வேண்டியதைகொடுத்துக் கொள்ளக்கடவர்-என்பதாம். * உள்ளேநிகழும்வழி யாவர்க்கும் ஒத்தலால் பிறர்குறிப்பை அறிதற்குத் தன்குறிப்புச் சாதன



மாயிற்று; உறுப்புகள் - பெருங்-நாடுமுதலாகிய புறத்துறுப்புகள். [இவை மூன்றுபாட்டாலும் குறிப்பறிவானது சிறப்புச் சொல்லப்பட்டது.]

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

இ-ள். குறித்தது-(ஒருவன் மனத்தில்) நினைத்ததை, கூறாமை(அவன்) சொல்லாமல் - கொள்வாரோடு, அறியவல்லவரோடு, ஏனை -மற்றை (அறியமாட்டாதவர்)—உறுப்பு - அவயவத்தால், ஓரனையர்- ஒருதன்மையராகவொப்பினும், வேறு (அறிவால்) வேறு—எ-று. (கருத்து.) மனதினினைத்ததைச் சொல்லாமலறிய வல்லவரோடு அறியமாட்டாதவருடலாலொப்பினுமறிவால் வேறாவர்-என்பதாம். ✽ அறியமாட்டாதவரென்பதும் - அறியாரென்பதும் வருவிக்கப்பட்டன. சிறந்த அறிவில்லாமையால் மிருகமென்னுங் கருத்தால் வேறென்றார். (ச)

குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

இ-ள். குறிப்பின் - (குறித்ததை அறியவல்லதன்) காட்சியால், குறிப்பு - (பிறர்) குறிப்பை, உணராவாயின் - அறியமாட்டாவாயின், (ஒருவனுக்கு) உறுப்பினுள் - அவயவங்களுள், கண் - (சிறந்த) கண்கள், என்னபயத்தவோ-(வேறே)என்னபயன் செய்வனவோ—எ-று. (கருத்து.) குறிப்பால் பிறர்குறிப்பை யறியாவிடில் கண்கள் என்பயனைத்தருவன - என்பதாம். ✽ குறிப்பறியுமிடத்தே தனக்குச்சிறப்புப்பற்றி உயிரினறிவு கண்மேல் ஏற்றப்பட்டது. அக்கண்களாலே பயனில்லையென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் குறிப்பறியாரிழிவு சொல்லப்பட்டது.] (ரு)

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

இ-ள். அடுத்தது - (தன்னை) அடுத்தபொருளினது நிறத்தை, காட்டும் - (தான்கொண்டு) காட்டுகிற, பளிங்குபோல்-பளிங்கினைப்போல், நெஞ்சம் - (ஒருவனது) நெஞ்சத்தில், கடுத்தது - மிகுந்தகுணத்தை, முகம் - (அவன்) முகமானது, காட்டும்-(தான்கொண்டு) காட்டும்—எ-று. (கருத்து.) அடுத்தபொருளைக்காட்டும் கண்ணாடிபோல ஒருவன் மனத்தின் குணத்தை முகங்காட்டும் - என்பதாம். ✽ அடுத்ததெனலால் ஆகுபெயர், ஒருபொருள் வேறொருபொருளின் குணத்தைக் கொண்டுதோற்றுதலாகிய தொழிலுவமம். (சா)

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

இ-ள். (உயிரானது) உவப்பினும் -விரும்பினாலும், காயினும்-வெறுத்தாலும், தான்-தான், (அறிந்து) முந்துறும் - (அவ்விரண்டையும் அவ்





வுயிர்க்கு) முற்பட்டுத்தோற்றும், (ஆதலால்) முகத்தின் - முகத்தைப்போல், முதுக்குறைந்தது - அறிவுமிகுந்தது, உண்டோ-வேறுண்டோ—எ-று. (கருத்து) முகம்போல அறிவுமிகுந்தது வேறில்லை - என்பதாம். ✽ அறிவு உயிர்க்கேயல்லாமல் முகத்திற்கு இல்லையென்பானை நோக்கி உயிரினது கருத்தை அறிந்து அதுவிரும்பினும் தான்மலர்ந்தும், அதுவெறுப்பின் தான்கருகியும் விரைவாய் உண்டென்று மறுப்பவர்போல் குறிப்பறிதலுக்குச் சாதனம் சொல்லியபடி. (எ)

முகநோக்கி நிற்க வமையுமகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

இ-ள். (குறையுறுவோன்) அகநோக்கி - (தன்) மனத்தைக்குறிப்பால் அறிந்து, உற்றது-(தான்) உற்றதனை, உணர்வார் - அறிந்துதீர்ப்பாரை பெறின்-பெற்றால், (அவர்தன் முகத்தைப்பார்க்கும்படியாக) —முகநோக்கி - (அவர்) முகத்தைப்பார்த்து, நிற்க -(அவ்வளவிலே) நிற்க, அமையும் - போதும்—எ-று. (கருத்து.) மனதைக்குறிப்பாலறிந்து உற்றதை, அறிவாரைப்பெற்றாலவர் முகம்பார்த்து நிற்கப்போதும் - என்பதாம். அப்படியில்லாமல் சொல்லுவானாகில் இருவருக்கும் சிறுமையாமாகலால் அதுவேண்டாமென்பதாம். குறையுறுவோனது இயல்பு சொல்லுவார்போல் சாதனம்சொல்லியபடி [இவைமூன்றுபாட்டாலும் குறிப்பறிதற்குச் சாதனம்முகமென்பது சொல்லப்பட்டது.] (௮)

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

இ-ள். கண்ணின்வகைமை-(தமது) பார்வைவேறுபாட்டுத் தன்மையை, உணர்வார்- அறியவல்லமந்திரிகளை, பெறின்-(அரசர்) பெற்றால், (அவர்க்கு) பகைமையுங்கேண்மையும்-(மனத்திலுள்ள) பகைத்தன்மையும் நட்புத்தன்மையும், (வேற்றரசர் சொல்லாமற்போயினும்) கண்-(அவர்) கண்களே, உரைக்கும்-சொல்லும்—எ-று. (கருத்து.)கண்ணின் தன்மையை யறியவல்ல மந்திரிகளை யரசர்பெற்றாலவர்க்குப் பகையையு நட்பையும் கண்காட்டும் - என்பதாம். பார்வைவேறுபாடாவன-வெறுத்தபார்வையும், விரும்பியபார்வையும், ஆம். உணர்தல் - அவைகளை அந்தந்தக்குறிகளால்அறிதல். (௯)

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

இ-ள். நுண்ணியமென்பார் - நுட்பவறிவுடையேமென்றிருக்குமந்திரிகள், அளக்குங்கோல் -(அரசருகருத்தை) அளக்குங்கோலாவது, காணுங்கால்-ஆராயுமிடத்து, கண்ணல்லது - (அவரது) கண்களல்லாமல், பிற-வேறு, இல்லை-இல்லை—எ-று. (கருத்து.) அரசர்கருத்தை யளக்



குங்கோலாவது அவர்கள்கண்களேயல்லாமல் வேறில்லை-என்பதாம். இங்கிதம்-வடிவு-தொழில்-சொல் - என்பவைமுதலானபிறர்கருத்தளக்கிற அளவைகள் பலவும் முன்னறிவித்திட்டதே அவராலே மறைக்கப்படும் பார்வை மனத்தோடுகலத்தலால் மறைக்கப்படாதென்பதுபற்றி அதனையே பிரித்துச்சொல்கிறார். [இவையிரண்டுபாட்டாலும் நுண்ணியகருவி பார்வையென்பது சொல்லப்பட்டது] (௰)

## எஉ-ஆம்-அதி-அவையறிதல்

அஃதாவது அரசனோடிருந்த சபையியல்பை அறிதல் - காரியஞ் சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யல்லாமல் இதுவும் வேண்டுதலாற்பின்வைக்கப்பட்டது.

இ-ள். ஒளியார்முன் - (அறிவுடைய) ஒளியாரது சபையினிடத்து, ஒ ள்ளியராதல் - (தாமும்) ஒள்ளியராகக்கடவர், - வெளியார்முன் - (மற்றை) வெள்ளைகளது சபையினிடத்து, வான்சுதைவண்ணம் - (தாமும்) வெண் சுண்ணச்சாந்தின் நிறத்தை, கொளல் - கொள்ளக்கடவர் — எ-று. (கருத் து.) அறிவாளிகள் சபைமுன்னே அறிவாளிகளாகக்கடவர். அறிவில்லா ர் சபைமுன்னே அறிவில்லாராகக்கடவர் - என்பதாம். ஒளியென்ற து - மிக்க அறிவையும், நற்பேற்றையும், ஒள்ளியராதல் - தமது நூலறிவும் சொ ல்வன்மையும் தோன்றவிரித்துரைத்தல். வைரம் - இதன்பகுதியைவைரம் வைரமில்லாதமரத்தை வெளிறென்பதுபோல் அவ்விரண்டுமெய்யாத பு ல்லரை வெளியாரென்றார். அவர்மதிக்கும்படிக்கு அவரினும் வெண்மை யுடையராகவென்றற்கு - வான்சுதைவண்ணங்கொளவென்றார். [சபை யுளவறிந்தார் செய்யுந் திறம் இதனால் தொகுத்துச் சொல்லப்பட்டது.](௪)

நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.

இ-ள். முதுவருள் - (தம்மின்) மிகுந்தவரது சபையினிடத்து, மு ந்து - (அவருக்கு) முற்பட்டு, கிளவா - (ஒன்றைச்) சொல்லாத, செறிவு - அடக்கம், நன்றென்றவற்றுள்ளும் (ஒருவர்க்கு இது) நல்லதென்று சிற ப்பித்துச்சொல்லப்பட்ட குணங்கள் பலவினும், நன்றே - நல்லதாகும் — எ-று. (கருத்து.) அறிவுடையோர் சபையிலவர் முன்னமொன்றைச் சொல்லாதவடக்கமானது நன்மையெல்லாவற்றுள்ளு நல்லது - என்ப



தாம். நன்றென்றவும். அவர்மிகுதியும் - அவர்சொல்லுதற்கு முன்னே சொன்னால் உண்டாகிற இழுக்கும், சொல்லாவிட்டால் வருகிறநன்மை யும். அறிந்தே அடங்கலால் அவ்வடக்கத்தை நன்றென்றவற்றுள்ளு ந ன்றே என்றார். முன்சொல்லுதலையே விலக்கின்மையால் உடன்சொ

ல்லுதலும், பின்சொல்லுதலும், ஆமென்பது பெறப்பட்டது, [இதனா ல் மிகுந்தவரது சபையினிடத்துச் செய்யுந்திறம் சொல்லப்பட்டது.]

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

இ-ள். வியன் புலம் - விரிந்தநூற்பொருள்களை, ஏற்று - உட்கொண் டு, உணர்வார்முன்னர் - (அவைகளின் மெய்ம்மையை) அறியவல்லவர்ச பையினிடத்து, இழுக்கு (வல்லவனொருவன்) சொல்லிழுக்குப்படுதல் (மு த்திபெறற்பொருட்டு நல்வழியினின்றவனொருவன்) — ஆற்றின் - அவ் வழியினின்றும், நிலைதளர்ந்தற்றே - நிலைதளர்ந்து வீழ்ந்தாற்போலாகும் — எ-று. (கருத்து.) கற்றவர்சபையில் கற்றவனிழுக்குப்படுதல் நல்வழி யினின்றவன் நிலைதவறி விழுந்தாற்போலும் - என்பதாம். நிலைதளர்ந் து விழ்தல் - அறிவால் ஐம்பொறிவென்றொழுகியவன் பின்னிளைக்கு உட ட்டவொழுக்கத்தானொருதல். பயனிழந்ததலையன்றி இகழ்வும் படுமாகெ ன்பதாம் [இதனால் அச்சபையில் தவறியவிடத்துப்படும் குற்றம்சொல் லப்பட்டது.] (௬)

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

இ-ள். கசடற-வழுப்படாமல், சொற்றெரிதல்-சொற்களை ஆராய்தலில், வல்லாரகத்து-வல்லவர் சபையிடத்தே, (சொல்லினால்) கற்று-(பலநூல்களையும் கற்று) அறிந்தார் - (அவைகளாலாகியப்பயனை) அறிந்தவரது, கல்வி-கல்வியானது, விளங்கும்-(யாவர்க்கும்)விளங்கித்தோன்றும்—எ-று. (கருத்து.) குற்றமறக்கற்றவர் சபையிற்கற்றவர் கல்விவிளங்கும்-என்பதாம். ஃ அப்படிப்பட்ட சபையிலேயே சொல்லக்கடவனென்பதாம். (எ)

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

இ-ள். உணர்வது-(பொருள்களைத்தாமே) அறியவல்ல அறிவை, உடையார்முன்- உடையவர்சபையினிடத்து, சொல்லல்-(கற்றவர் ஒன்றை)ச்சொல்லுதல், வளர்வதன்- (தானே) வளர்வதொருபயிர்நின்ற, பாத்தியுள்-பாத்தியினுள், நீர்சொரிந்தற்று - நீரைச்சொரிந்தாற்போலும்—எ-று. (கருத்து.) கற்றவர்சபையிற் கற்றவரொன்றைச்சொல்லல்பாத்தியில்நீர் விட்டாற்போலும்-என்பதாம். ஃ தானேயும் வளர்தற்குரிய கல்விமிகவுளதாமென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் ஒத்தாரது சபையிடத்து எவ்வழியும் சொல்லக்கடவனென்பது சொல்லப்பட்டது.] (அ)

உ௯௨ எஉ-ஆம்-அதி—அவையறிதல்.

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.

இ-ள். நல்லவையுள்-நல்லவரிருந்தசபையினிடத்து, நன்கு - நல்லபொருள்களை, செல- (அவர்) மனங்கொள்ள, சொல்லுவார் - சொல்லுதற்குஉரியவர் - புல்லவையுள்- (அவையறியாத) புல்லரிருந்த சபையினிடத்து, பொச்சாந்தும்-மறந்தும், சொல்லற்க- (அவைகளைச்) சொல்லாதொழியக்கடவர்—எ-று. (கருத்து.) நல்லோர்சபையிலே நற்பொருளைச் சொல்பவர் புல்லர்சபையிலே மறந்துஞ் சொல்லாதிருக்கக்கடவர்-என்பதாம். ஃ சொல்வாராயின் தமக்குரிய சபையை அறியாதகுற்றம்பற்றி நல்லோர்சபையும், சொன்ன பொருளறியாமையால் புல்லர்சபையும், இகழ்தலால் இரண்டுசபைக்கும் ஆகாரென்பது கருதி - பொச்சாந்துஞ்சொல்லற்கவென்றார். (௯)

அங்கணத் துளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

இ-ள். (நல்லோர்) - தங்கணத்தரல்லார்முன், தம்மினத்தவரல்லாதவர் சபையிடத்து-கோட்டிகொளல், யாதொன்றையும்- சொல்லாதிருக்கக்கடவர், (சொன்னால் அது)- அங்கணத்துள்-(பரிசுத்தமல்லாத) முற்றத்துள், உக்க-வீழ்ந்த, அமிழ்தற்று-அமிர்தமொக்கும்—எ-று. (கருத்து.) தம்மினத்த ரல்லார் சபையில் ஒன்றுஞ்சொல்லா திருக்கக்கடவன், சொல்லுதல் சேற்றுள் வீழ்ந்தவமிர்தமொக்கும்-என்பதாம். ஃ சொல்லின்-அது, இவ்விரண்டும் வருவிக்கப்பட்டன. சகலருமநுபவிக்கு உண்பொருளையினும் படாமல் அங்கேற்றத்திற்கும் பொருத்தமில்லாமல் கெட்டவிதம் தோன்றற்கு-உக்கவமிழ்தென்றார். அச்சொல் பயனில்லாத சொல்லாமென்பதாயிற்று. [இவைஇரண்டுபாட்டாலும் தாழ்ந்தோர் சபையிலிடத்து ஒருவழியும் சொல்லலாகாதென்பது சொல்லப்பட்டது.] (௰)

# எ௩-ஆம்-அதி - அவையஞ்சாமை.



அஃதாவது, சொல்லுதற்குரிய சபையை அறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும்.

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

இ-ள். சொல்லின்-றொகையறிந்த-சொற்களதுதொகையை அறிந்த, தூய்மையவர்-பரிசுத்தகுணமுடையவர், வகையறிந்து-(கற்று)வல்ல



சபை மூடசபை என்கிறசபையின்) வகையை அறிந்து,வல்லவை-கற்றுவல்ல சபையில், (ஒன்றுசொல்லும்போது) வாய்சோரார், (அச்சத்தாற்பிழைபடச்) சொல்லார்—எ-று. (கருத்து.) சொல்லினதுதொகையையறிந்தவர்சபையினது வகையையறிந்து பிழைபடச்சொல்லார்-என்பதாம். * இந்தாரது வல்லமைசபைமேல் ஏற்றப்பட்டது. அச்சத்தாலென்பது-அதிகாரத்தால் வந்தது. (௧)

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

இ-ள். கற்றார்முன்-கற்றோர்சபையிலிடத்தே,கற்ற- (தாம்) கற்றவைகளை, செல-(அவர்)மனங்கொள்ளும்வகை, சொல்லுவார்-(அஞ்சாமல்) சொல்லவல்லவர், கற்றாருள்- கற்றவரெல்லாரினும், கற்றார் - (இவர்) நன்றாகக்கற்றவர், எனப்படுவர்-என்று(உலகத்தோராலே)சொல்லப்படுவர்—எ-று. (கருத்து.) கற்றவர்சபையிற் கற்றவற்றைச்சொல்ல வல்லவர் கற்றவரெல்லாருள்ளும் கற்றவரென்று சொல்லப்படுவார் - என்பதாம். * உலகமறிவது அவரையேயாகலின் அவ்வுலகத்தினாலே புகழப்படுவாரும் அவரே யென்பதாம். (௨)

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்.

இ-ள். பகையகத்து-பகையினிடத்து, சாவார்- (அஞ்சாதுபோய்) இறக்கவல்லவர், எளியவர்-(உலகத்தாற்) பலர், அவையகத்து - சபையினிடத்து, அஞ்சாதவர் - அஞ்சாமற் (பேசச்சொல்ல) வல்லவர், அரியர்-சிலர்—எ-று. (கருத்து.) பகையினிடத்தஞ்சாரிறக்கவல்லவர்பலர் சபையினிடத்தஞ்சாது பேசவல்லவர் சிலர்-என்பதாம். * அஞ்சாமைசாவாரென்பதனேடுங் கூட்டி அதனாலே சொல்லவல்லவரென்பது வருவிக்கப்பட்டது. [இவை மூன்றுபாட்டாலும் அவைஅஞ்சாது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

இ-ள். கற்றார்முன்-(பலநூல்களையும்) கற்றோர்சபையினிடத்து, கற்ற-(தாம்) கற்றவைகளை, செல-(அவர்) மனங்கொள்ளும்படி, சொல்லி-சொல்லிக்காட்டி, தாங்கற்ற-தாங்கற்றவைகளினும், மிக்க-அதிகமானபொருள்களை, மிக்காருள்-அதிகமாகக்கற்றவரிடத்து, கொளல்-(அறிந்து) கொள்ளக்கடவர்—எ-று. (கருத்து.) கற்றவர் முன்கற்றவற்றைச்சொல்லித் தாங்கற்றவைகளினு மிக்கவற்றைக் கற்றவரிடத்துக் கொள்ளக்கடவர்-என்பதாம். * எல்லா மொருவருக்குக் கற்றல்கூடாமையால் வேறுவேறாகிய கல்வியுடையவர் பலரிருந்த சபையில் தாங்



கற்றவைகளைச்சொல்லிக் கற்கப்பெறாதவையுங்கேட்டறியலா மென்றதாயிற்று. [இதனால் அதனது ஒருசார்பயன் சொல்லப்பட்டது.] (ச)

ஆற்றி னளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

இ-ள். அவை-(வேற்றுவேந்தர்) சபையில், அஞ்சா-அஞ்சாமல், மாற்றம்-எதிர்மொழியை, கொடுத்தற்பொருட்டு-கொடுக்குங்காரணமாக, ஆற்றின்-(சொல்லிலக்கண) வழியாலே, அளவு-அளவுநூலை, அறிந்து-தெரிந்து, கற்க-(மந்திரிகள்) கற்கக்கடவர்—எ-று. (கருத்து.) வேற்றரசர் சபையிலஞ்சா தெதிர்மொழி கொடுத்தற்பொருட்டுச் சொல்லிலக்கண வழியாலளவை நூலறிந்து மந்திரிகள்கற்கக்கடவர்கள்-என்பதாம். * அளவைநூல்சொல்லிலக்கணங்கற்றே கற்கவேண்டுதலால் இதற்கு அதுவழியெனப்பட்டது. அளவையெனப்பட்ட தர்க்கநூலைக்கற்றவர்க்கே அவர்சொல்லை வெல்லக்கூடுமாகலால் அவைகளை பிழைபடாமற் கற்கக்கடவ ரென்பதாம். [இதனால் அதற்காரணஞ் சொல்லப்பட்டது.] (ரு)

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

இ-ள். வன்கண்ணரல்லார்க்கு-சௌரியமுடைய ரல்லாதவர்க்கு, வாளொடு-வாளாயுதத்துடன், என்-என்ன, (சம்பந்தமுண்டு) (அதுபோல்) நுண்ணவை-புத்திநுட்பமுடையவரது சபையை, அஞ்சுபவர்க்கு-அஞ்சுவோர்க்கு, நூலொடு-நூலுடனே, என்-என்ன (சம்பந்தமுண்டு)—எ-று. (கருத்து.) சௌரியமில்லாதவர்க்கு வாளாயுதத்துடனென்ன சம்பந்தமுண்டு அதுபோலக்கற்றவர் சபைக்கஞ்சுவோர்க்குநூலோடென்னசம்பந்தமுண்டு-என்பதாம். * இருந்தாரது நுண்மைஅவைமேல் ஏற்றப்பட்டது. நூலுக்கு உரியவரல்ல ரென்பதாம். (சு)

பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

இ-ள். அவையகத்து-(சொல்லப்படுந்) சபையிடத்தில், அஞ்சுமவன்-(அதனை) யஞ்சுமவன், கற்றநூல்-கற்றறிந்த நூல், பகையகத்து-(எதிர்க்கப்படும்) பகைவரிடத்தில், பேடி-(அதனை அஞ்சும்) பேடி, கை-கையிற்பிடித்த, ஒள்வாள்-கூர்வாளையொக்கும்—எ-று. (கருத்து.) சபைக்கஞ்சுவோன் கற்றநூல்பேடி கைவாளையொப்பாகும்-என்பதாம். * பேடிபெண்ணியல்புமிகுந்து ஆணியல்புமுடையவன்-இடமும்-வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததேயாயினும் பிடித்தவனது குற்றத்தால் வாள்சிறவாமைபோல சபையும் வாய்த்துத்தானும் நன்றாயிருந்ததேயாயினும் கற்றவனது குற்றத்தால் நூல்சிறவாதாயிற்று. (எ)

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.

இ-ள். நல்லவையுள்-நல்லவரிருந்தசபையுள், நன்கு - நல்லசொற்பொருள்களை; செல-(அவர்க்கு)ஏற்க, சொல்லாதார்- (அச்சத்தால்)சொல்லமாட்டாதவர், பல்லவைகற்றும்-பலநூல்களைக் கற்றாராயினும், பயமிலரே-(உலகத்துக்குப்) பிரயோசனப் படுதலிலர்—எ-று. (கருத்து.) நல்லவர்சபையிலே நல்லபொருளைச் சொல்லாதவர் பலநூல்களைக் கற்றாராயினும் பயனில்லாதவர்-என்பதாம். ௧ அறிவார் முன்சொல்லாமையால் கல்வியினுண்மை அறியார், இல்லையென்பதாம். (அ)

கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார்.

இ-ள். கற்று-(நூல்களைக்)கற்று, அறிந்தும் - (அவைகளாலே பயனை) அறிந்திருந்தும், நல்லார்-நல்லவரிருந்த, அவை- சபையை, அஞ்சுவார் - அஞ்சி (அவ்விடத்திலே)சொல்லாதவரை, கல்லாதவரின்-மூடரினும், கடை-கடையர், என்ப-என்று (உலகத்தோர்) சொல்லுவார்-எ-று. (கருத்து.) கற்றிருந்தும் கற்றவர் சபைக்கஞ்சுபவர் கல்லாதவரினுங் கடையாவர்-என்பதாம். ௧ அக்கல்வியறிவுகளாலே பயனைத்தாமும் அடையாமல் பிறரையும் அடைவிக்காமல் கல்வித்துன்பமே அடைந்தமையால் கல்லாதவரிற் கடையெனஉலகம்பழிக்கும் என்பதாம்.()

உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

இ-ள். களன்-சபைக்கு, அஞ்சி-பயந்து, கற்ற - (தாம்)கற்றவைகளை, செல- (அதற்கு) ஏற்க, சொல்லாதார் - சொல்லமாட்டாதவர், உளரெனினும் - உயிரோடிருந்தாலும், உலகத்தோரால் எண்ணப்படாமையால்) இல்லாரோடொப்பர் - இறந்தவரோடொப்பாவார்—எ-று. (கருத்து.) சபைக்கஞ்சிக் கற்றவற்றைச் சொல்லாதவர் உயிரோடிருந்தும் இறந்தவரோ டொப்பர்- என்பதாம். ௧ [இவை ஐந்துபாட்டாலும் சபைக்கு அஞ்சுவோரது இழிவுசொல்லப்பட்டது.] (ம)

அங்கவியலில் அமைச்சு-முற்றியது.

௭௪-ஆம் - அதி- நாடு.

இனி அவ்வரசனுக்கும்-மந்திரியர்க்கும்- கொண்டுசெலுத்தப்படுவதும், மற்றைஅரண்முதலியஅங்கங்களுக்கு அவசியம் வேண்டுவதும், ஆகியநாடு ஓரதிகாரத்தினாலே சொல்லுகின்றார்.

அஃதாவது, இப்படிப்பட்ட தென்பதும் அதிகாரமுறையும் இதனால் விளங்கும்.

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

இ-ள். நாடு-நாடாவது, தள்ளாவிளையுளும்-குன்றாதவிளைவு செய்வோரும், தக்காரும் - அறவோரும், தாழ்விலாச்செல்வரும் - கேடில்லாத-செல்வமுடையோரும், சேர்வது-கூடிவாழ்வதேயாம்—எ-று. (கருத்து.) உழவரும் அறிவோரும் செல்வரும் கூடிவாழ்வதேநாடாம்-என்பதாம். * தக்கார்முதலானவரோடும், சேர்தற்குறிப்போடும், பொருந்தாமையால் விளைவென்பது உழவரை உணர்த்திநின்றது. குன்றாமை-எல்லாவுயிர்களும் நிறைய உண்டாதல். இதனால் வாழ்வோர்க்கு வறுமையில்லாமை பெறப்பட்டது, அறவோர் அறத்தோரும் அந்தணரு முனிவருமாயினோர் இதனால் அறிவில்லாமை பெறப்பட்டது, கேடில்லாமை-கொடுக்கக் குறையாமை செல்வர்-பாலினும் பண்டியினும் பொருள்தரும்வணிகர். இதனால் அரசனுக்கும், வாழ்வோர்க்கும், பொருள்கொடுத்தல் பெறப்பட்டது. (௧)

பெரும்பொருளாற் பெட்டக்க தாகியருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

இ-ள். நாடு-நாடாவது, பெரும்பொருளால் - அளவற்றபொருளுடைமையால், பெட்டக்கதாகி- (பிறதேசத்தாராலும்) விரும்பத்தக்கதாகி-அருங்கேட்டால்-அழிவில்லாமையோடுகூடி, ஆற்றவிளைவது- மிகவிளைவதேயாம்—எ-று. (கருத்து.) அளவில்லாப்பொருளுடைமையால்பிறரால் இச்சிக்கத்தக்கதாகி அழிவின்மைபொருந்தி மிகவிளைவதே நாடாகும்-என்பதாம். * கேடாவது அதிமழை-மழையில்லாமை-எலி-விட்டில்-கிளி-அரசாண்மை-எனப்படுகிற இவைகளால் வருவது, இவைகளை வடநூலார் ஈதிபாவமென்று சொல்வர் இவைகளுள் அரசாண்மை அரசனறத்தாலும், மற்றவை அவன்மறத்தாலும். இலவாம். இவை இல்லாமற் போகவே மிகவுவிளையுமென்பதாயிற்று. (௨)

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

இ-ள். நாடு-நாடாவது, பொறை - (பிறநாடுகள்சுமந்த) பாரமெல்லாம், ஒருங்கு - ஒருசேர, மேல்வருங்கால் (தன்) மேல்வரும்போது, தாங்கி-(அவைகளைத்) தாங்கி, (அதன்மேலும்) இறைவர்க்கு (தன்) அரசனுக்கு, இறையொருங்கு- இறைப்பொருண்முழுதையும், நேர்வது - உடன்பட்டுக்கொடுப்பதேயாம்—எ-று. (கருத்து) பிறநாட்டுப்பாரங்கள் மேல்வரும்போது அவற்றைத்தாங்கித் தன்னரசனுக் கிறைப்பொருள் முற்றுந்தருவதே நாடாம்-என்பதாம். * பாரமாவது- மனிதர்கூட்டமும், பசுமுதலாகிய விலங்கின்கூட்டமும், தாங்குதலாவது - அவைகள் தத்தந்தேசங்களிலே பகைவர்வருதலாலாவது - அரசன்முறைதப்பாலாவது, உணவில்லாமையாலாவது தன்னிடத்துவந்தால் அவ்வத்தேசங்கள்போல் இனிதிருப்பச்செய்தல், அதனால் தன்னரசனுக்கு வரிப்பணங் குறைப்படுத்தாமல் தானேகொடுப்பதென்றற்கு - இறையொருங்கு நேர்வதென்றார். (௩)



உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

இ-ள். நாடு - நாடாவது, உறுபசியும்-அதிகபசியும், ஓவாப்பிணியு ம்-நீங்காதநோயும், செறுபகையும்- (புறத்திலிருந்துவந்து) அழிவுசெய் யும்பகையும், சேரா து-அடையப்பெறாமல், இயல்வது-இனிதுநடப்பதே யாம்—எ-று. (கருத்து.) பசியும்-பிணியும்-பகையுஞ்சேராதிருப்பது நா டாகும்-என்பதாம். * அதிகபசி-உழுவாருடைமையாலும்-மிகவிளைதலா லும்-சேராதாயிற்று, நீங்காதநோய் நிக்காத்துமிக்க குளிர்வெப்பங்களு ம்-உண்ணப்படுவனவைகளது தீமையும் இல்லாமையால் சேராதாயிற்று, செறுபகை - அரசன்வலிமையும்-விலைப்படையும்-அடவியும்- அரணும்- உடைமையால் சேராதாயிற்று. (௪)

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

இ-ள். நாடு-நாடாவது, பல்குழுவும் - (சங்கேதவசத்தால் மாறுப் பட்டுக்கூடும்) பலகூட்டமும், பாழ்செய்யும் - (உடனிருந்துகொண்டே) பாழாகச்செய்யும், உட்பகையும் - கள்ளர்முதலியவுட்பகையும், வேந்த லைக்கும்-(சமயம்வந்தால்) அரசனை அலைக்கின்ற, கொல்குறும்பும்-கொ லைத்தொழிற்குறும்பரும், இல்லது-இல்லாததேயாம்—எ-று. (கருத்து.) பலகூட்டமும், பகையும்- கொலைத்தொழிற்குறும்பரும் இல்லாததே நா டாகும்-என்பதாம். * சங்கேதம்-சாதிபற்றியும், சமயம்பற்றியும், பலர் க்கு உண்டாமொருமை. உட்பகை-வழியிலேதடுப் பறிக்குங்கள்வர் கோ ள்சொல்லுவோர் முதலாகியமக்களும், பன்றி-புலி-காடை- முதலியவிரு கங்களும், இம்மூன்றும் அரசனாலும், வாழ்வோராலும் கடியப்பட்டுக டப்பதென்பதாம். (௫)

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

இ-ள். கேடறியா-(பகைவராலே) கெடுதலறியாததும், கெட்டவி டத்தும்-(அரிதிற்) கெட்டவிடத்தும், வளங்குன்றா- (அப்போதும்) வ ளங்குறையாததும், ஆனா-க-டு, நாட்டை - நாட்டின், (எல்லா) நாடுகளி லும், தலை-முதன்மையதாகும், என்ப-என்று (நூலோர்) சொல்லுவா ர்—எ-று. (கருத்து.) கேடில்லாததும், வளங்குன்றாததுமான நாட்டை யெல்லா நாட்டிலுமுதன்மையான நாடென்பர்- என்பதாம். * அறியா த் குன்றா- என்பன. இறுதிகெட்டு வந்தன, கேடறியாமை-அரசன்- வலிமையாலும், கடவுட்பூசை அறங்கள் எனுமிவைகளைச் செயலாலு ம்,வரும், வளம்- வளம். * ஆகரங்களிற் படுமவையும், வயல் நன்டலை

* ஆகரம்-மணி-பொன்-முதலியவை-எடுக்குங்குழிகள்.



களில் விளையுமவையும், ஆம், குறையாமை- அவை சம்பாதிக்கவேண்டா மல் இயல்பாகவே உளவாகவும் முன்சம்பாதிக்கப்படுங் குறையுநுதலு ம், [இவை ஆறுபாட்டாலும்நாட்டது இலக்கணஞ்சொல்லப்பட்டது.]

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

இ-ள். வேந்து - அரசனோடு, அமைவில்லாத - பொருந்துதலில்லாத, நாடு - நாடானது, ஆங்கு - மேற்சொல்லியகுணங்களெல்லாம், அமைவெய்தியக்கண்ணும் - நிறைந்துள்ளதாயினும், பயமின்றே - (அவைகளாலே) பயனுண்டாகாதென்று-எ-று. (கருத்து.) இராசனுடன் பொருந்தாத நாடானது எல்லாநிறைவுள்ளதாயினும் பிரயோசனமில்லை - என்பதாம். * வேந்தமைவென்பது குடிகள் அவனிடத்தே அன்புடையராதலும் அவன் குடிகளிடத்தே அருளுடையனாதலும் அடங்கின, அமைவில்லாவிடத்து அக்கூட்டில்வாழ்வோரில்லாமையால் அவைகளாலே பயன் இல்லையாயிற்று [இவை இரண்டுபாட்டாலும் அவனது குற்றம் சொல்லப்பட்டது.] (௰)

# எ௫-ஆம்-அதி-அரண்.

இனி அக்கூட்டிற்கு உறுப்பாய் அடங்குமாயினும் பகைவரால் தொலைவுவந்துழித் அதற்கும், அரசனுக்கும், காப்பாதற் சிறப்புப்பற்றியே வேறொன்றாகச்சொல்லப்பட்ட அரண் அதிகாரத்திற் சொல்லுகின்றார்.

அஃதாவது, இன்னதென்பதும் அதிகார. முறைமையும், இதனுள் விளங்கும்.

ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

இ-ள். அரண்-கோட்டையானது, ஆற்றுபவர்க்கும் - (மூலகைவலிமையுமுடையவராய்) பிறர்மேலே செல்வோர்க்கும், பொருள் - சிறந்ததாகும், அஞ்சி - (அவ்வலியில்லாமல் தம்மேல்வருவோர்க்கு) அஞ்சி, தற்போற்றுவோர்க்கும்-தன்னையே அடைவோர்க்கும், பொருள் - சிறந்ததாகும்-எ-று. (கருத்து.) கோட்டையானது போர்செய்வோர்க்கும் தன்னையடைந்தோர்க்கும் சிறப்பொருளாகும்-என்பதாம். * பிறர்மேற்செல்லும்போது உரிமைப்பொருள் முதலானவைகளைப் பிறனொருவன் வௌவாமல்வைத்துச் செல்லவேண்டுதலாலும், பெருமைதொலைந்து முடிவுவந்தவிடத்துக் கடலினுடே உடைகப்பற்காரர் போன்று காப்புக்காணாது முடிவராகலாலும், அவ்விருவகையோர்க்கும் அரண்



பொருளாயிற்று, வலிமையுடையவராயினும் அரணில்லாதவிடத்து அழியுந்தன்மையராகலால் அவனை முன்சொல்லினர், [இதனால் அரணினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (க)

மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

இ-ள். அரண்-கோட்டையானது, மணிநீரும்-மணிபோல் நிறத்தை யுடையநீரும்-மண்ணும் - வெளிநிலமும், மலையும் - மலையும், அணிநிழற் காடும் - குளிர்ந்தநிழலையுடையகாடும், உடையது - உடையதேயாம்— எ-று. (கருத்து.) நீரையும், வெளிநிலத்தையும், மலையையும்காட்டையுமுடையது கோட்டையாம்-என்பதாம். * எக்காலும் வற்றாத நீரென்றற்கு மணிநீரென்றும்- நீர்முதலாயில்லாத வெறுநிலமென்றற்கு மண்ணென்றும் செறிந்தகாடென்றற்கு அணிநிழற்காடென்றும், சொல்லினர் மதிற்புலத்து வெளிநிலம்பகைவர் அரண்பற்றாமைப்பொருட்டு, நீரரண் - நிலவரண்-மலையரண் - காட்டரண் - என்கிற இந்நான்காலுஞ்சூழப்பட்டது அரணென்பதாம். (௨)

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவரணென் றுரைக்கு நூல்.

இ-ள். உயர்வு-உயர்ச்சியும், அகலம்-அகலமும், திண்மை-வலிமையும், அருமை - அருமையும், (எனப்பட்ட) இந்நான்கின் - இந்நான்கினை, அமைவு - மிகுதியையுடையமதிலை, அரணென்று - கோட்டையென்று, நூல் - நூலோர், உரைக்கும்-சொல்லுவார்— எ-று. (கருத்து.) உயர்வு-அகலம் - வலிமை-அருமை-இந்நான்கின்-மிகுதியையுடைய மதிலைக் கோட்டை யென்றுசொல்லுவர் - என்பதாம். * அமைவுநூல் இரண்டும் ஆகுபெயர்கள் - உயர்வு-ஏணிக்கு எட்டாதது, அகலம்-புறத்தோர்க்குத் தோண்டக்கூடாத அடியகலமும் உள்ளிடத்தோர்க்கு நின்றுதொழில் செய்தற்காந்தலையகலமும், திண்மை - கருங்கல் செங்கல்களாலே செய்தலால் - குத்தப்படாமை, அருமை பொறிகளாலேசேர்தற்கருமை [பொறி-எந்திரப்பாவைகள்.] (௩)

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

இ-ள். அரண் - கோட்டையானது, சிறுகாப்பின்-காக்கவேண்டுமிடஞ்சிறிதாய், பேரிடத்ததாகி - பரந்தவிடத்தையுடையதாய், உறுபகை- (தன்னைச்) சூழ்ந்தபகைவரது, ஊக்கம் - மனவெழுச்சியை, அழிப்பது, கெடுப்பதேயாம்— எ-று. (கருத்து.) காக்குமிடஞ் சிறிதாய்ப்பரந்தவிடமுடையதாப்பகைவர் வலிமையைக் கெடுப்பதே கோட்டை - என்பதாம். * வாயிலும் வழியும் ஒழிந்தவிடங்கள் மலை - காடு-நீர் - நிலை - என்றிவைகளால் ஏற்பவைகளை - உடைத்தாதல்பற்றி - சிறுகாப்பினென்றும்



ந்திடத்தோர்க்கலிவில்லாமல் இருத்தல்பற்றி பேரிடத்ததாகியென்றும் வலிமைகண்டு இப்பொழுதே அழிப்போமென்று வரும்பகைவர்கள் அதுகண்டால் அத்தைரியம் ஒழிதல்பற்றிஊக்கமழிப்பதென்றும் சொ லினர். (௪)

கொளற்கரிதாய்க் கொண்ட கூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

இ-ள். அரண் - கோட்டையானது, கொளற்கரிதாய் - (புறத்தோராலே) கொள்ளுதற்கரிதாய், கொண்ட - உட்கொண்ட, கூழ்த்தாகி (பலவகை) புணவையுடையதாகி, அகத்தார் - உள்ளிடத்தோரது, நிலைக்கு - (போர்) நிலைக்கு - எளிதாம் - எளிதாகின்ற, நீரது - குணத்தையுமுடையதே யாம் — எ-று. (கருத்து.) பகைவர் கொள்ளுதற் கரிதாய்ப் பலவகையுணவையுடையதாய் உள்ளிட்டோர் போர்நிலைக்கெளிதாகிய குணமுமுடையதே கோட்டை - என்பதாம். * கொள்ளுதற் கருமைகாவற்காடு இடங்குகளாலும், பொறிகளாலும் இடங்கொள்ளுதற்கருமை - உணவு - தலைமைபற்றிச்சொல்லினமையால் மற்றுமுள்ள அநுபவிக்கப்படு மனவைகளும் அடங்கின, நிலைக்கெளிதா நீர்மையாவது உள்ளிடத்தோரால் விடப்பட்ட ஆயுதமுதலானவை புறத்தோர்மேலே எளிதிலே செல்லலும், அவரால்விடப்பட்டவை உள்ளிடத்தோர்மேலே செல்லாமையும் பதணப்பரப்பும் முதலானவை - பதணம் - மதிலுண்மேடை. (௫)

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

இ-ள். அரண் - கோட்டையானது, எல்லாப்பொருளும் - (உள்ளிடத்தோர்வேண்டும்) பொருள்களெல்லாவற்றையும், உடைத்தாய் - உடையவாகி, இடத்து - (புறத்தோரால்) அழிவடையுமளவில், உதவும் - (அதுவராமற்படி) உதவிக்காக்கவல்ல, நல்லாள் - நல்லவீரரையும், உடையது - உடையதேயாம் — எ-று. (கருத்து.) எல்லாப் பொருளுள்ளதாய் வீரரையுடையது கோட்டை - என்பதாம். * அரசனிடத்து அன்பும், மானமும் - மறமும் - சோர்வில்லாமையும் - முதலாகிய நற்குணங்களை உடைமைபற்றி - நல்லாளென்றார். (௬)

முற்றியு முற்று தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

இ-ள். அரண் - கோட்டையானது, முற்றியும் - (வலவுபோக்குறுதியும்வகை) நெருங்கிச்சூழ்ந்தும்முற்றாது - அப்படிச்சூழாமல், எறிந்தும் - (செகிழ்ந்தவிடங்கோக்கி) ஒருமுகமாகப் போர்செய்தும், அறைப்படுத்தும் - (உள்ளிடத்தோரை அவருக்கும்பிக்கை யானவரைவிட்டுக்) கீழறுத்துநிறப்பித்தும், (பற்றற்கரியது - புறத்தோராலேபிடித்துக்) கொள்ளுதற்கரியதேயாம் — எ-று. (கருத்து.) சூழ்ந்துஞ்சூழாமலும் போர்,



செய்தும் கீழறைசெய்தும் பிறரால்கொள்ளுதற்கரியது கோட்டையாம் - என்பதாம். * இம்மூன்று உபாயங்களுள்ளும் - முதலாவது - எல்லாப் பொருளு முடைமையாலும், மற்றவைகள் நல்லாளுடைமையாலும் பலியாதனவல்லவாயின. (௭)

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

இ-ள். அரண் - கோட்டையானது, முற்றாற்றி - (சேனைப்பெருமையால்) சூழ்தல் வல்லவராகி, முற்றியவரையும் - வந்து சூழ்ந்தபுறத்தோரையும், பற்றியார் - (தன்னைப்பற்றிய) உள்ளிடத்தோர், பற்றாற்றி - (தாம்) பற்றியவிடம் விடாதேநின்று, வெல்வது - (போர்செய்து) வெல்வதேயாம் — எ-று. (கருத்து.) தன்னைப்பற்றிச் சூழ்ந்தவரையும் தன்னிடத்திருந்தவர் பற்றி வெல்வதேகோட்டை - என்பதாம். * வெல்வதென்

அரணுடையார்தொழில் அரண்மேலே நின்றது -- பெரும்படை யானைச் சிறுபடையானைப் பொருத்துமீற்குத் துணையென்று வெல்லுமியல்பி னதென்பதாம். [இவை ஏழுபாட்டாலும் அதனதுஇலக்கணம் சொல்லப்பட்டது.] (அ)

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

இ-ள். அரண் - கோட்டையானது; முனைமுகத்து - போர்தொடங்கினவளவிலே, மாற்றலர் - பகைவர் சாய-கெட, வினைமுகத்து,(உள்ளிடத்தோர்செய்யும்) தொழில்வேறுபாடுகளால், வீறெய்தி-வீறுபெற்று; மாண்டது - (மற்றும்வேண்டும்) பெருமையை யுடையதேயாம்—எ-று. (கருத்து.) போரிடத்துப் பகைவர்கெடத்தொழிலிடத்துப் பெருமையுடையது கோட்டை-என்பதாம். ஆரம்பத்திலே கெட்டவர்பின்னுங் கூடிப்போர்செய்தல்கூடாமையால் முனைமுகத்துச் சாயவென்றார். தொழில் வேறுபாடுகளாவன - பகைவர்தொடங்கிய போரை அறிந்தளவில் எறிதல் குத்துதல் வெட்டுதல் - என்றிவைமுதலாகிய தொழில்களும் அப்போரை அழிப்பனவைகளைச்செய்தல், மற்றும் வேண்டும் பெருமையென்றது புறத்தோர் அறியாமல் புகுதல் போகுதல்செய்தற்கு உண்டாக்கப்பட்டசுருங்கைவழி முதலானவையுடைமை. (கூ)

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

இ-ள். அரண் - கோட்டையானது, எனைமாட்சித்தாகியக்கண்ணும்-(முன்சொல்லப்பட்ட) பெருமையெல்லாம் உடைத்தாகிய விடத்தும், வினை - தொழில் செய்யுமிடத்து, மாட்சி - பெருமையை, இல்லார்கண் - இல்லாதவரிடத்து, இல்லது-(அவை) இலதாம்—எ-று. (கருத்து)



கோட்டை எவ்வளவு பெருமையுடைத்தாகிய விடத்தும், தொழிற் பெருமையில்லாதவரிடத்தும் பயனிலதாம் என்பதாம். சும்மாவிருக்கவும், அளவறியாதுசெய்தலும், ஏற்காததுசெய்தலும், எல்லாமடங்க - வினைமாட்சியில் லில்லாரென்றும், ஏற்றதொழிலை அளவறிந்து செய்து காப்பாற்றுமற் போனால் அவ்வரணானது அப்பெருமைகளாலே பயனில்லாமல் அழியுமென்றற்கு - அவையுடைத்தன்றென்றும் சொல்லினார். [இவை யிரண்டுபாட்டாலும் காப்பவர் அவசியம் வேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (ய).

## எகூ-ஆம்-அதி-பொருள்செயல்வகை.

இனிப்பெரும்பாலும் நாட்டாலும், அரணாலும், வளர்க்கவும், காக்கவும் படுவதாகிய பொருள் சம்பாதித்தலின்விதம், இவ்வதிகாரத்தாலே சொல்லுகின்றார். அஃதாவதின்னதென்பதும் அதிகாரமுறைமையும் இ

தனுள் விளங்கும்.

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

இ-ள். பொருளல்லவரை - ஒருபொருளாக மதிக்கப் படாதவரை யும், பொருளாகச்செய்யும் - பொருளாக மதிக்கப்படச் செய்யவல்ல, பொருளல்லது - பொருளையல்லாமல், பொருள் - ஒருவருக்குப்பொருள்-இல்லை-வேறில்லை—எ-று. (கருத்து.) மதிக்கப்படாதவரையுமதிக்கப் படச்செய்யும் பொருளல்லாமல் ஒருவர்க்கு வேறுபொருளில்லை - என் பதாம். ஃ மதிக்கப்படாதவர்- அறிவில்லாதவரும், இழிகுலத்தாரும், மதிக்கப்படச்செய்தல் அறிவுடையவரும், உயர்குலத்தவரும், அவரிடத் திலேபோய் கிற்கப்பண்ணுதல், ! அதனாலே சம்பாதிக்கவேண்டுவது அதுவேயென்பதாம். (க)

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

இ-ள். (எல்லாகல்வியையு முடையவரா யிருந்தாலும்) இல்லாரை (பொருள்) ளில்லாதவரை, எல்லாரும்-யாவரும், எள்ளுவர்-இகழ்வர், (கல் லாத்திமையு முடையவராயிருந்தாலும்) செல்வரை - அப்பொருளுடை யவரை, எல்லாரும்-யாவரும், சிறப்புச்செய்வர்- உயர்செய்வர்—எ-று. (கருத்து.) வறியவரை யாவருமிகழ்வர் செல்வரையாவரும்புகழ்வர்-என் பதாம். ஃ உயரச்செய்தல்தாம் தாழ்த்துகித்தல். இகழ்விலும், தாழ்விலும் பகைவர், நட்பினர், அயலவர், என்று மூவகையோரும் ஒத்தலால் எல் லாருமென்றார். பின்னுஞ்சொல்லியது அதனை உறுதிசெய்தற்கு. (உ)





எ௬-ஆம்-அதி—பொருள்செயல்வகை.

பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று.

இ-ள். பொருளென்னும் - பொருளென்று (எல்லாராலுஞ்) சிறப்பிக்கப்படும், பொய்யாவிளக்கம் - நந்தாவிளக்கானது, (தன்னைச்சம்பாதித்தவர்க்கு)—எண்ணிய - (அவர்) நினைத்த, தேயத்து-தேசத்தில், சென்று-போய், இருள்-(பகையென்னு) மிருளை, அறுக்கும்-கெடுக்கும்—எ-று. (கருத்து.) பொருளென்னும் விளக்கானது பகையென்னு மிருளைக்கெடுக்கும்-என்பதாம். ஃ பொருள்-எல்லார்க்கும்-எக்காலும் அவசியம்வேண்டுதலால் வருதல்பற்றி- பொய்யாவிளக்கென்றார். மற்றவிளக்கோடு- இதனிடத்து வேற்றுமைதோன்ற-எண்ணியதேயத்துச் சென்றென்றும், சொல்லினார். ஏகதேசவுருவகம். [இவை மூன்றுபாட்டாலும் பொருளது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௩)

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

இ-ள். திறனறிந்து - (சம்பாதிக்கும்) திறத்தை அறிந்து, தீதின்றி - (அரசன்) கொடுங்கோன்மையிலனாக, வந்தபொருள் - கிடைத்தபொருள், (அவனுக்கு) அறன் - அறத்தையும், ஈனும் - கொடுக்கும், இன்பமும் - இன்பத்தையும், ஈனும் - கொடுக்கும் — எ-று. (கருத்து.) குற்றமில்லாது வந்தபொருளானது தருமத்தையு மின்பத்தையுந் தரும் - என்பதாம். * திறம் - சம்பாதித்தற்கு உரியவழி. செங்கோலனென்று புகழப்படுதலாலும், கடவுட்பூசைதானங்களாலே பயன் அடைதலாலும், அறனீனுமென்றும், நெடுங்காலமிருந்து அனுபவிக்கப்படுதலால் இன்பமுமீனுமென்றும், சொல்லினர், ஆதலால் அத்திறத்தாற்சம்பாதிக்க வென்பதாம். (௪)

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

இ-ள். அருளொடும் - (தாம்குடிகளிடத்துச்செய்யும்) கருணையோடும், அன்பொடும் (அவர்தம்மிடத்துச்செய்யும்) அன்போடும், வாரா - (கூடி) வாராத, பொருளாக்கம் - பொருட்சம்பாதித்தியத்தை, புல்லார் - (அரசர்) பொருந்தாராகி, புரளவிடல் - நீக்கவிடக்கடவர் — எ-று. (கருத்து.) அருளோடு மன்போடும் வாராதபொருளை யரசர்நீக்கக்கடவர் - என்பதாம். * அவைகளோடு கூடிவருதலாவது அழிவொன்றும்வருதல். அப்படிக்கு வாராதபொருள் - பச்சைமண் பாண்டத்துநீர்போல் சம்பாதித்தவனையும் கொண்டு இறத்தலால் அதனைப்புல்லாரென்றும் வளவிலேயிருத்தாமற் புரளவிடலென்றும் சொல்லினர். (௫)

உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.



இ-ள். உறுபொருளும் - (உடையவர் இல்லாமையால்தானே வந்து) கிடைத்தபொருளும், உல்குபொருளும் - சுங்கமாகியபொருளும், தன்னொன்னார் - தன் பகைவரை, தெறுபொருளும் - வென்று (திறையாக்கொள்ளும்) பொருளும், வேந்தன்பொருள் - அரசனுக்குரிய பொருள்கள் — எ-று. (கருத்து.) உடையவரில்லாப் பொருளும், சுங்கப் பொருளும், பகைவரைவென்று திறைகொண்ட பொருளு மரசன்பொருள்களாம் என்பதாம். * உறுபொருள் - வைத்தவரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கீழ்க்கிடந்து பின்கண்டெடுத்ததுமாம், சுங்கம் - மரக்கலத்திலும் பண்டியிலும் வரும்பண்டங்களுக்கு வாங்கும்வரி. தெறுபொருள் - தெறுதலால் வரும்பொருளெனவிரியும். ஆறிலொன்றல்லாததும், உரிய வலைசொல்லியபடி. [இவைமூன்றுபாட்டாலும் அதுசம்பாதிக்கும் வழி சொல்லப்பட்டது.] (௬)

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

இ-ள். அன்பீன் - அன்பினால் பெறப்பட்ட அருளென்னும் - அருளென்கின்ற, குழவி - குழந்தையானது, பொருளென்னும் - பொருளென்று உயர்த்திச் சொல்லப்படும், செல்வம் - செல்வத்தையுடைய, செவிலியால் - செவிலித்தாயால், உண்டு - வளரும்—எ-று. (கருத்து.) அன்பினின்றும் பிறப்பட்ட அருளென்னும் குழந்தையானது பொருளென்னுஞ் செவிலித்தாயால் வளரும்-என்பதாம். * சம்பந்தம்பற்றாமல்வருந்தமடைந்தவரிடத்துச் செல்வதாகிய அருள் - சம்பந்தம்பற்றிச் செல்லும் அன்புமிகுந்தவிடத்து உண்டாவதாகலால் அதனை அன்பீன்குழவியென்றும், அதுவறியவர் மேற்செல்வது - அவ்வறுமைகளையவல்ல பொருளுடையவர்க்கு ஆகலால்பொருளை - அதற்குச்செவிலியென்றும், அது உலகிற் செவிலிபோலல்லாமல் தானேஎல்லாப்பொருளும் உதவி வளர்த்தலால் - செல்வச்செவிலியென்றும், சொல்லினர். (எ)

குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

இ-ள். தன்கைத்து-தன்னிடத்தாகியபொருள், உண்டாக-உண்டாயிருக்க, ஒன்று-ஒருதொழிலை, செய்வான்-செய்பவனது, வினை-செய்கையானது, குன்றேறி-(ஒருவன்)மலைமேல் ஏறிநின்று, யானைப்போர்-யானைகளதுபோரை, கண்டற்று-கண்டதனோடொக்கும்—எ-று. (கருத்து.) தன்பொருளிருக்க வொருதொழிலைச்செய்பவன் செய்கையானது மலைமேலேறியானைகள்போரைக்கண்டதொக்கும்- என்பதாம். * எப்படிக்குன்றேறினவன் அச்சமும்வருத்தமும் இல்லாமல் பூமியில் யானையும் யானையும் செய்கின்றசண்டையைத்தான் இனிதிருந்து காண்பானோ அப்படிக் கைப்பொருளுண்டாக ஒருதொழிலை மேற்கொண்ட



வனும் அச்சமும் வருத்தமும் இல்லாமல்வல்லவனைவெலித் தான் இனிதிருந்து முடிப்பானென்பதாம். (அ)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃக தனிற் கூரிய தில்.

இ-ள். (தமக்கு ஒன்றுண்டாகநினைப்பவர்) பொருளை - திரவியத்தை, செய்க-சம்பாதிக்கக்கடவர்,(அப்பொருள்) செறுநர் - (தம்) பகைவரது, செருக்கு-திருக்கை, அறுக்கும்-கெடுக்கும், எஃகு - ஆயுதமாம், (அதற்கு) அதனின்-அதுபோல், கூரியது-கூரியஆயுதம், இல்-(வேறு) இல்லை—எ-று. (கருத்து.) திரவியத்தைச் சம்பாதிக்கக்கடவர் அத்திரவியம் பகைவர் செருக்கைக்கெடுக்குமாயுதமாம் அதுபோல் கூரியவாயுதம்வேறில்லை-என்பதாம். * பொருளைச்சம்பாதித்தவர் பெருமையுங்கட்புமுடையவராவாதலாலே பகைவர்செருக்கு நீங்கித்தாமே அடங்குவரென்பதற்கு - செறுநர் செருக்கறுக்கு மெஃகென்றும், மற்றையாயுதங்கள் அதுபோல் அருவப்பொருளை அறுக்க மாட்டாமையால் அதனிற்கூரியதில்லையென்றும், சொல்லினர். (கூ)

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

இ-ள். ஒண்பொருள் - நல்லவழியால்வரும் பொருளை, காழ்ப்ப - மிகுதியாக, இயற்றியார்க்கு - உண்டாக்கினவர்க்கு, ஏனையிரண்டும் - மற்றை அறமும்இன்பமும், ஒருங்கு - ஒருசேர, எண்பொருள், எளியபொருள்களாம்—எ-று. (கருத்து.) நல்லவழியால் வரும்பொருளை மிகவுமுண்டாக்கினவர்க்குத் தருமமுமின்பமு மெளியனவாம்-என்பதாம். காழ்த்தல் முதிர்தல், அப்பொருள் பயன் கொடுத்தல்லது போகாமையால் - ஒண்பொருளென்றும், மற்றையிரண்டும் அதன்வினைப்பயனாகலாற் றாமே ஒருகாலத்திலே உண்டாகு மென்பதற்கு எண்பொருளென்றும் சொல்லினர். [இவை நான்குபாட்டாலும் அதன்பயன் சொல்லப்பட்டது.] (௰)



# எஎ-ஆம்-அதி- படைமாட்சி.

இனிப்பொருளினால்ஆவதாய்வெல்வதாகியபடையைஇரண்டதிகாரத்தா

[illegible]

[illegible]முதலிலே படைமாட்சி சொல்லுகிறார்.

அஃதாவது, சேனையினது நன்மையாம். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

> உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
> வெறுக்கையு ளெல்லாந் தலை.



இ-ள். உறுப்பு - (யானைமுதலாகிய) நாலுறுப்புகளாலும், அமைந்து - நிறைந்து, ஊறு - (போரிலே) காயம்படுதற்கு, அஞ்சா - அஞ்சாமல், வெல் - (பகையை) வெல்வதாகிய, படை - சேனையானது, வேந்தன் - அரசனது, வெறுக்கையுளெல்லாம் - செல்வங்களிலெல்லாம், தலை - முதன்மையாகிய (செல்வமாம்)—எ-று. (கருத்து.) போரிலஞ்சாது நின்று வெல்லும்படையானது அரசன்செல்வம் யாவற்றிலும் தலைமை என்பதாம். * இவ்விடத்திலே படையென்றது - அங்கமெல்லாம் கூட்டத்தை, சேனை - ஊறஞ்சியவிடத்தே வெல்லுதல் கூடாமையால்ஊறஞ்சா வென்றும், அச்சேனையொழிந்த அங்கங்களுக்கும் அரசனுக்கும் காவலாகலால் வெறுக்கையுளெல்லாந் தலையென்றும்சொல்லினர் (௧)

> உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
> தொல்படைக் கல்லா லரிது.

இ-ள். தொலைவிடத்து-(தாம்) சிறிதாயவிடத்தும், உலைவிடத்து-(அரசனுக்குப்போரிலிடத்து) அழிவுவந்தால், ஊறு-(தன்மேலே)காயம்படுதற்கு, அஞ்சா - அஞ்சாதுநின்றுதாக்கும், வன்கண் - சௌரியமானது, தொல்படைக்கலால் - அவன் மூலம் முன்னுறாத் தொடர்ந்துவருஞ் சேனைக்கல்லாமல், அரிது - உண்டாகாது—எ-று. (கருத்து.) அஞ்சாதுநின்றுதாக்குஞ் சௌரியமானது அரசன் பழையசேனைக்கல்லது மற்றவர்க்கில்லை - என்பதாம். * இழிவு சிறப்பும்மையிகாரத்தால்தொக்கது மூலப்படை - கூலிப்படை - நாட்டுப்படை - காட்டுப்படை - துணைப்படை - பகைப்படை - எனப்படும் அறுவகைப்படைகளுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படையாதலால் அரசன் அதற்கு வேண்டியவைகளைக் கொடுத்து அதைக்காப்பாற்றுகவென்பது கருத்து. (உ)

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

இ-ள். எலிப்பகை - எலிகளாகியபகைதிரண்டு, உவரி-கடல்போல், ஒலித்தக்கால் - இரைந்தால், என்னாம்-(பாம்புக்கு)என்னதுன்பம்வரும் நாகம் - அப்பாம்பு, உயிர்ப்ப - மூச்செறிந்தளவிலே, கெடும் - (அதுதானே) கெடும்—எ-று. (கருத்து.) எலிகள்கூடிச் சத்தித்தால் பாம்புக்கென்ன துன்பம்வரும் பாம்பு மூச்சுவிட்டளவில் எலிகளழியும் - என்பதாம். * இத்தொழிலுவமத்தால் திரட்சிபெற்றும், (வீரமில்லாதார்பலர்திரண்டு ஆர்த்தால் அதற்குவீரன் அஞ்சான் அவன் எழும்பினவளவிலே அவர் கெடுவரென்பதுதோன்றநிற்றலையால்-இதுபிறிதுமொழிதலணி) வீரமில்லாதார் பலரினும் வீரனொருவனே ஆகுதல் கலவதென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் முறையே அரசனுக்குப் படையாவது மற்றையக்களுட் சிறந்ததென்பதும், அதனுள்ளும் மூலப் படை சிறந்ததென்பது அதனுள்ளும் வீரன் சிறந்தவனென்பதும், சொல்லப்பட்டன.] (௩)

உஎ௰ எஎ-ஆம்-அதி—படைமாட்சி.

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

இ-ள். படை - (அரசனுக்குப்) படையாவது, அழிவின்றி (போரிடத்துக்) கெடுதலில்லாமல், அறைபோகாதாகி - (பகைவராலே) கீழறுக்கப்படாதாகிய, வழிவந்த - பழமையாகவந்த, வன்கணதுவே - சௌரியமுடையதே—எ-று. (கருத்து.) போரிற்கெடுதலில்லாமல்பழமையாகவந்த சௌரியமுடையதே அரசனுக்குப் படையாம்-என்பதாம். * அழிவில்லாமையால் மறமானங்களுடைமையும், அறைபோகாமையால் அரசனிடத்து அன்புடைமையும் பெறப்பட்டன. (௪

கூற்றுடன்று மேல்வரினுங் கூடியெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

இ-ள். படை-சேனையானது, கூற்று-கூற்றுவன், உடன்று-கோபித்து, மேல்வரினும் - தன்மேல்வரினும், கூடி-மனமொத்து, எதிர்நிற்கும் - எதிர்நின்றுதாக்கும், ஆற்றலதுவே - வலிமையையுடையதே—எ-று. (கருத்து.) இயமன்கோபித்து வெகுண்டுவரினுமெதிர்நின்றுதாக்கும் வலிமையுடையதே படையாம் - என்பதாம். * மிகப்பலர் மனமொத்ததற்குக்காரணம் அரசன்மேலன்பு - உம்மை சிறப்பும்மை. (௫

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு.

இ-ள். மறம் - சௌரியமும், மானம் - மானமும், மாண்ட-மாட்சிமைப்பட்ட, வழிச்செலவு - (முன்வீரர்சென்ற)நல்வழியிலேசெல்லுதலும், தேற்றம் - (அரசனால்) நம்பப்படுதலும், எனநான்கே-என இந்நான்கு குணமுமே, படைக்கு-சேனைக்கு,ஏமம்-அரணும்—எ-று. (கருத்து.) சௌரியமும்,மானமும்,நல்வழிச்செல்கையும், நம்பிக்கையும், ஆகியவிந்நாற்குணமுஞ்சேனைக்காணுருமம்-என்பதாம். *இவைகளால்முறையேயகைவரைச் செல்லத்திலேகொல்லுகிற்கையும்,அரசனுக்குத்தாழ்வுவராமற்காத்தலும், தோற்பவர்மேற் படையெறியாமை முதலியவும். அரசபோகாமையும், ஆகியசெய்கைகள்பெறப்பட்டன இச்செய்கை யோர்க்குப் பகைவர் நெருங்க மாட்டாராகையின் வேறரண்வேண்டா வென்பதாம். (சு)

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

இ-ள். தானை - சேனையானது, தலைவந்த - (பகைவராலேவகுப்புட்டுத்) தன்மேல்வந்த, போர்-(படையின்) போரை,தாங்குந்தன்மையிலாக்கும்வகுப்பை, அறிந்து-அறிந்து, (வகுத்துக்கொண்டு) தார்-(அவரது) தூசிப்படையை, தாங்கி - (தன்மேல்வாராமல்) தடுத்து, செல்வது



தான்அதன் (மேலே)செல்வதே—எ-று. (கருத்து.) தன்மேல்வந்தபோரைவிலக்கும்வகுப்பையறிந்துபகைவர் தூசிப்படையைத்தடுத்துச்செல்வதே படையாம் - என்பதாம். *படைவகுப்பாவது வியூகம் அதுஎழுவகை உறுப்புகளை யுடையதாய் வகையால்நான்காய் - விரியால்முப்பதாம் இவைகளின் பெயரும் இலக்கணங்களும் இங்கேசொன்னால்] விரியும். அவையெல்லாம் வடநூல்களுட்கண்டு கொள்க. [இவைநான்குபாட்டாலும் படையது இலக்கணம்பிசொல்லப்பட்டது.] (எ)

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

இ-ள். தானை-சேனை, அடற்றகையும்-[(பகைமேலேதான்சென்று) போர்செய்யுஞ் சௌரியமும், ஆற்றலும் -(அதுதன்மேல்வந்தால்)பொறுக்கும் வலிமையும், - இல்லெனினும்,இல்லையாயினும் படைத்தகையால் - தனதுதோற்றப்பொலிவாலே, பாடு - பெருமையை,பெறும்-அடையும்—எ-று. (கருத்து.) சேனையானது சௌரியமும் வலிமையுமில்லையாயினும் பொலிவினாலே பெருமையை யடையும் - என்பதாம். * இல்லெனினுமெனவே அவசியம் அவைகள் வேண்டுமென்பது பெறப்பட்டது. தோற்றப்பொலிவாவது - அலங்கரிக்கப்பட்டதேர்-யானை- குதிரைகளுடனும்-படாகை - கொடி - குடை - பலவாத்தியமும்காளமுதலானவைகளுடனும் அணிந்து[தோன்றும் அழகு பாடு கண்டவளவிலே பகைவரஞ்சும் பெருமை. (அ)

சிறுமையுஞ் செல்லாத்]துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை

இ-ள். சிறுமையும் - (தானதேய்ந்து) சிறிதாகலும், செல்லாத்துனியும் - (மனத்திலிருந்து) நீங்காதவெறுப்பும், வறுமையும் - தரித்திரியமும்,இல்லாயின்-(தனக்கு) இல்லையாயின், படை-சேனையானது,வெல்லும் - (பகையை) வெல்லும்—எ-று. (கருத்து.) சிறிதாகலும்வெறுப்பும் வறுமையும் இல்லாவிடின் சேனையானது பகையைவெல்லும் - எ

கானமுயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

இ-ள். கானம் - காட்டிலோடுகின்ற, முயல்-முயலை, எய்த - (தப்பாம ல்) எய்த அம்பினின் - அம்பைப்பார்க்கிலும், யானை- (வெச் சிலத்திலேநின்ற) யானையை (எதிர்ந்து) - பிழைத்தவேல்- தப்பியவேலை ஏந் தல்- தாங்குதல், இனிது-நன்று—எ-று. (கருத்து.) முயலையெய்தஅம் பையேந்துதலைப் பார்க்கிலும் யானையையெய்து தப்பிய அம்பையேந் தல் நல்லது-என்பதாம். * கானமுயலென்றதனால்-வெளிநிலமென்பதூ ம் - பிழைத்தவேலென்றதனால் தப்பாமலென்பதூம், முயற்குத்தக யதவென்றதனால் யானைக்குத்தக எறிதலும், வருவிக்கப்பட்டன. இத ளையரசனது சேனையோடு சண்டைசெய்து அதுதோற்றுப் பி

* நெடுமொழிவஞ்சியாவது - பகைவர்முன்னே தன்னுண்மை சொல்வது.



விடக்கண்டு காணிப்பின் அவ்வரசன்மேற் செல்லலுற்ற ஒருவீரனது சொல்லு. (௨)

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

இ-ள். தறுகண்-(பகைவரிடத்தே முகங்கொடாமற்செய்கிற) மற ம், பேராண்மை-மிகுந்தவாண்மையாகும், ஒன்றுற்றக்கால்-(அவர்க்கு) ஒருதாழ்வு வந்தகாயின், (அதுதீர்த்துக் கொள்ளுதற்பொருட்டு) ஊரா ண்மை- (முகங்கொடுத்து) உபகாரியாந்தன்மை, அதன்-அதற்கு, எஃ கு-கூர்மையாகும், என்ப- என்று (அறிவோர்) சொல்லுவார்—எ-று. (க ருத்து.) பகைவரைவெல்லுமரமானது மிகுந்தவாண்மையாகு மப்பகை வர்க்குத்தாழ்வுவந்தகாலத்துதவுதல் கூர்மையாகும்- என்பதாம். * மற் று-அசை, [இவைஇரண்டுபாட்டும் * தழிஞ்சி.] (௩)

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

இ-ள். கைவேல்-(தன்) கைப்படையாகியவேலை, களிற்றொடு-(த ன்மேல்வந்த) யானையோடு, போக்கி-எறிந்துவிட்டு, வருபவன்-(வருகி ன்றயானைக்கு வேல்தேடித்) திரிபவன், மெய்வேல் - தன்மார்பிலிருந்த வேலை, (கண்டு) பறியா-பிடுங்கி, நகும்- மகிழ்வான்—எ-று. (கருத்து.) கைவேலை யானைமேலெறிந்துவருபவன் தன்மெய்வேலைப்பிடுங்கி மகிழ் வான்-என்பதாம். * களிற்றொடுபோக்கல் - களிற்றினைக்கொண்டு போம்படி விடுதல், மகிழ்ச்சிதேடியது அடைதலால், இதனுள் களித் தையல்லது எதியானென்பதூம், கோபமிகுதியால் வேல்மார்பிலே பு தைந்ததை அறிந்திலனென்பதூம், பின்னும்போர்மேல் விரும்பினனெ ன்பதூம், பெறப்பட்டன, [இது ௦ தாழிலாட்டு.] (௪)

விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னோட்டன்றோ வன்க ணவர்க்கு.

செயற்கரியன வில்லையென்றும், செய்தால் பகைவர் அஞ்சிப்போர் தொடங்காராதலால்- அதுபோல் போர்வாராமற் காத்தற்கு அரியவா வையில்லையென்றும், சொல்லினார், நட்பு-இயற்கை செயற்கை, என இருவகைப்படும். அவைகளில் இயற்கை-நட்பு-பிறப்பு - முறையாலாகிய தும், தேயமுறையாலாகியதும, என இருவகைப்படும், அவைகளுள் முன்னையது சுற்றமாதல் 'ல்சுற்றந்தழா'லில் அடங்கிற்று. மற்றதுபகை யிடையிட்டதே யத்தாகலால் அதனை வலியறிதலுள் அடக்கிற்று. [இனி இவ்வதிகாரத்திலே சொல்லப்படுவது முன்செய்த வுதவிபெற்று வருவதாகிய செயற்கைநட்பேயாகலால் அதன்சிறப்பு இதனுல் சொல்லப்பட்டது.] (க)

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

இ-ள். நீரவர்-அறிவுடையவரது, கேண்மை- நட்புகள், பிறை - பிறைபோல், நிறைநீர-(நாடோறும்) நிறையுந்தன்மையினவாம், பேதையார்- அறிவில்லாதவரது, நட்பு - நட்புகள், மதி - (நிறைந்த) சந்திரன் போல்,பின்னீர-பின்னேநாடோறுங்குறையுந்தன்மையனவாம்—எ-று. (கருத்து.) அறிவுடையோர்நட்பு இளம்பிறைபோல்வளரும், அறிவிலார்நட்பு நிறைசந்திரன்போல் குறையும் - என்பதாம். * இவிரைமைப் றி நீரவரென்றார். அறிவுடையவர் தங்களிலே செய்தநட்பு முன்சுருங்கிப் பின்பெருகற்கும், அறிவிலாதவர் தங்களிலே செய்தநட்பு முன்பெருகிப் பின்சுருங்கற்கும், காரணம், தம்முள் முன்னறியாமையும் பின்னறிதலுமாம். (உ)

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

இ-ள். பண்புடையாளர்-நற்குணமுடையமக்கள், தொடர்பு - (தங்களிலேசெய்த) நட்பு, பயிறொறும்- பழகுந்தோறும், (அவருக்குஇன்பஞ்செய்தல்) நூல் - நூற்பொருள், நவிறொறும் - கற்குந்தோறும, நயம் போலும்- (கற்பவர்க்கு) இன்பஞ்செய்தல்போலும்—எ-று. (கருத்து.) நற்குணமுடையவர் நட்புப்படிக்குந்தோறு நூற்பயன் கொடுத்தல்போலாம்- என்பதாம். * இரண்டிலும் ஒருபோதுக்கு ஒருபோது மிகுமென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் அச்சிறப்புக்கு ஏதுசொல்லப் பட்டது.] (ந)

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

இ-ள். நட்டல் - (ஒருவரோடு ஒருவர்) நட்புச்செய்தல், (நகைசெய்தற்கு) ஏற்றவைசொல்லி, நகுதற்பொருட்டு - நகைசெய்தற்பொருட்டு, அன்று-அல்ல, மிகுதிக்கண்- (அவர்க்கு) வேண்டாதசெய்கை-(உண்டானவிடத்து) மேற்சென்று, முற்பட்டு-இடித்தற்பொருட்டு - கண்டித்து புத்திசொல்லுதற்பொருட்டு—எ-று. (கருத்து.) சிநேகஞ்செய்தல்நகை செய்தற்பொருட்டல்ல புத்திசொல்லும் பொருட்டே - என்பதாம். *



பழியும் பாவமும் தருஞ்செய்கை - துன்பமேதருதல்பற்றி வேண்டப்ப டுதல்லாமையால் - அதனைமிகுதியென்றும், அதுசெய்தற்கு முன்னே திருப்பவேண்டுதலால் - மேற்சென்றென்றும், இனியசொல்லுக்குத் திரும்பாமையால் - இடித்தற்பொருட்டென்றும், சொல்லினார் [இதனுல் நட்பின்பயன் சொல்லப்பட்டது.] (ச)

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்.

இ-ள். (ஒருவனோடு ஒருவன் நட்பாகுதற்கு) புணர்ச்சி - ஓரிடத்திலிருத்தலும், பழகுதல் - பலதரங்கள்பேசலும், வேண்டா - வேண்டுவதில்லை, உணர்ச்சிதான் - (இருவர்க்கும்) ஒத்த அறிவுதானே, நட்பாம் - சிநேகமாம், கிழமை - உரிமையை, தரும் - கொடுக்கும் — எ-று. (கருத்து) இருவர்க்கு மொத்தவறிவே சிநேகத்தரும் - என்பதாம். * (இவையில்லையாயினும் ஒருவனையொருவர் சமமாகவறிதலே உடனுயிர் நீங்குதற்குரியநட்பை (உண்டாகுமென்பதாம்) நட்பிற்கு - புணர்ச்சி - பழகுதல் - உணர்ச்சியொத்தல் - என்றிறகாரண மூன்றனுள்ளும் பின்னதுசிறப்புடையதென்பது [இதனால் சொல்லப்பட்டது.] (ரு)

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

இ-ள். முகநக - (கண்டவிடத்து) முகமாத்திரமேமலரும்,வகைநட்பது - சிநேகிப்பது, நட்பன்று - சிநேகமன்று, நெஞ்சத்தகநக - (அன்பால்) உள்ளம்மலர, நட்பது - சிநேகிப்பதே, நட்பு - சிநேகமாம் — எ-று. (கருத்து.) முகமலர்ந்து சிநேகிப்பது சிநேகமல்ல அகமலர்ந்து சிநேகிப்பதே சிநேகம் - என்பதாம். * நெஞ்சத்தகமுமென்றுமெச்சவும்மைதொக்குநின்றது. அதனால் இரண்டும் ஒருசேரமலரவேண்டுமென்பதுபெற்றும். (சு)

அழிவினவை நீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

இ-ள். நட்பு - (ஒருவனுக்கு நட்பாவது, அழிவின் - அழிவைத்தருகிற, அவை - தீயவழிகளாலே, நீக்கி - விலக்கி, ஆறு - நல்வழிகளிலே, உய்த்து - நடத்தி, அழிவின்கண் - (ஊழினாலே) கேடுவந்தவிடத்து, அல்லல் - அத்துன்பத்தை, உழப்பதாம் - உடனிருந்து அநுபவிப்பதே — எ-று. (கருத்து.) நட்பாவது தீயவழியைநீக்கி நல்வழியைநோக்கித் துன்பத்தையநுபவிப்பதாம் - என்பதாம். * ஆறெனவருகின்றமையால் அழிவினவை தீயவழியெனப்பட்டது. (எ)

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.



இ-ள். நட்பு - நட்பாவது, உடுக்கையிழந்தவன் - (சபையினிடத்து) ஆடைகுலைந்தவனுக்கு, கைபோல - கைசென்றுதவுதல்போல (சிநேகிக்கப்பட்டவனுக்கு) ஆங்கே - அப்பொழுதே, இடுக்கண் - துன்பத்தை, களைவதாம் - நீக்குவதாம் — எ-று. (கருத்து.) ஆடைகுலைந்தவன் கைபோலத்துன்பத்தை நீக்குவதேநட்பாம் - என்பதாம். * ஆடைகுலைந்தவனுக்குக் கையெப்படியோ அப்படியே ஆபத்தை அடைந்தவனுக்குநட்பாளன் மனத்திலும்முற்பட்டு உதவிசெய்து துன்பம் ஒழிப்பானென்பதாம். நட்பினன் செயல் நட்பின்மேலேற்றப்பட்டது. (அ)

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.

இ-ள். நட்பிற்கு - சிநேகத்திற்கு, வீற்றிருக்கை - அரசிருக்கை, யாதெனின் - யாதென்றால் (அது — கொட்பின்றி - (எக்காலும்) வேறுபடாமல், [illegible] த்தெல்லாம், ஊன்றும் நிலை - (அறம்பொருள் [illegible] தாங்குந்தன்மை — எ-று. (கருத்து.) நட்பின் கா[illegible] எந்நாளுந் தாங்குந்தன்மையாம் - என்பதாம். * ஒ

இ-ள். (குணமுஞ்செய்கையும் நல்லனென்பதூஉம் அல்லனென்பதூஉம்) ஆய்ந்து - (பலகால்) ஆராய்ந்தும், ஆய்ந்து - (பலவழியால்) ஆராய்ந்தும், கேண்மை-(ஒருவனோடு) நட்பை, கொள்ளாதான் - கொள்ளாதவன், கடைமுறை- முடிவில், தான் - தான், சாம் - சாவதற்கு ஏதுவாகிய துயரம்- துன்பத்தை, தரும்.(தானே) விளைத்துக்கொள்ளுவான் — எ-று. (கருத்து.) ஆராய்ந்து கொள்ளாதவன் இறக்குஞ்சாவதற்கேதுவான துன்பந்தரும்-என்பதாம். * தீயகுணமுந்தீயசெயலு முடையவனோடு நட்புக்கொள்ளின் அவனுக்குவரும் பகைமையெல்லாம் தனக்கும்வந்து அவைகளால் இறந்து விடுவனென்பதாம். [இவைஇரண்டுபாட்டானும் ஆராயாதவிடத்துப்படும் இழுக்குச் சொல்லப்பட்டது.] (2)

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு

இ-ள் குணனும்- (ஒருவனது) குணத்தையும், குடிமையும் - குடிப்பிறப்பையும், குற்றமும் - குற்றத்தையும், குன்றாவினனும் - குறைவற்ற சுற்றத்தையும், அறிந்து- (ஆராய்ந்) தறிந்து நட்பு- சிநேகம், யாக்க - (அவனோடு) செய்யக்கடவன் — எ-று. (கருத்து.) குணத்தையுங் குடிப்பிறப்பையுங் குற்றத்தையுஞ் சுற்றத்தையுமறிந்து நட்புச்செய்யக்கடவன்-என்பதாம். * குற்றமில்லாதவர் உலகத்திலே இல்லாமையால் பொருக்கத்தக்க குற்றமுடையராயிருந்தால் அவர்நட்புவிடக் கூடாதென்பதற்கு குற்றமென்றும், சுற்றத்தாரோடு கட்டுண்டிருப்பவர் நட்பானரோடும் கட்டுண்டுவருதலால்- குன்றாவினனுமென்றும், விடப்பட்டால் தங்குறையாமென்பதற்கு அறிந்தியாக்கவென்றும், சொல்லினர், ()

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

உ-அ2

குற-பொ-அ—நட்பாராய்தல்,

இ-ள். குடிப்பிறந்து - உயர்ந்தகுடியிற்பிறந்து, தன்கண்-தன்னிடத்து, பழி- உலகர் சொல்லும்பழிக்கு, நாணுவானை - அஞ்சுவானை, கொடுத்தும்-சில கொடுக்கவேண்டியிருந்தாலும், நட்புக்கொளல்வேண்டும்- சிநேகஞ்செய்யவேண்டும்—எ-று. (கருத்து.) உயர்குலத்திற் பிறந்து பழிக்கஞ்சுவானைப் பொருள்கொடுத்துஞ் சிநேகங்கொள்ளக்கடவன் - என்பதாம். குடிப்பிறப்பால் தான்பிழைசெய்யாமையும், பழிக்கஞ்சலால் பிறர் பொருத்திலும் பொறுத்தல். இவை இரண்டுமுடையவனைப் பெறுதல் அருமையாதலால் அவனைப் பொருள் கொடுத்தும் கொள்கவென்பதாம்.

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

இ-ள். அல்லது- (தான்) உலகநடையல்லாததை (செய்யுமிடத்து)—அழச்சொல்லி - அழும்வகைசொல்லி (விலக்கியும்)(செய்தக்கது)—இடித்து- (மேன்மேலும் செய்யாவகை) நெருக்கியும், வழக்கு - அவ்வுலகநடையை (செய்யாவிடத்து) —அறியவல்லார்- செய்விக்கவும் வல்லவர், ஆய்ந்து- ஆராய்ந்து, நட்பு-சிநேகம், கொளல்-கொள்ளக்கடவன்—எ-று. (கருத்து.) ஒருவன் பாவங்களைச் செய்ய நினைத்தால் அழும்படி சொல்லி விலக்கியும் - பாவங்களைச் செய்தால் செய்யாதிருக்க நெருக்கியும் உலகநடை செய்விக்க வல்லாரைச் சிநேகிக்கக்கடவன் - என்பதாம் * அழச்சொல்லி இடித்து எனவந்த பரிகாரத்தொழில்களுக்கு ஏற்றகுற்றத்தொழில்கள் வருவிக்கப்பட்டன. வழக்கு - உலகத்தார் ஆதிதொடங்கிச் செய்துவந்தசெயல், தம்மோடு சிநேகித்தவரும் அதையுமவனை அறிதல் அரிதாகலால்- அறியவல்லாரென்றார். (௫)

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

இ-ள். (ஒருவனுக்குக்கேடென்பது) -கிளைஞரை - சுற்றத்தாராகிய (சிநேகரை) —நீட்டியளப்பது- குறையாமல் அளப்பதாகிய, ஓர்கோல்- ஓர்கோலாம், (ஆகலால்) கேட்டினும்- அக்கேட்டினிடத்தும், ஓருறுதி- (அவராலே பெறப்படும்) ஒருநல்லறிவு, உண்டு- உண்டாகும்—எ-று. (கருத்து.) கேட்டினிடத்துஞ் சிநேகரால் பெறப்படு நல்லறிவுண்டாம் - என்பதாம். * தமது சிநேகதரினெல்லாருக்கிருக்கவும் செல்வக்காலத்திலே புறத்துவெளிப்படாமல் வந்தவர் பின்கேடுவந்தவிடத்துச் செயல்வேறுபடுதலால் அக்கேட்டால்சிநேகத்தை அளவுசெய்தலாமென்பதுபற்றி- கேட்டினைக் கோலாகியும், அதனால் அளந்தறிதலால் ஆவாரையே கொள்ளுதலால் அவ்வறிவை உறுதியென்றும்,சொல்லினர் [இஃது வஞ்சேசவருவகம்] [இவை நான்குபாட்டாலும் ஆராயும் விதமும்- ஆராய்தல் சிநேகிக்கப்படுவார் இவரென்பதும்- சொல்லப்பட்டன.] (௬)

அ-ம்-ஆர்-அதி—நட்பாராய்தல். ௨௮௬

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

தலால் அதைவிலகொடுத்தாயினும் விடுகவென்றும், சொல்லினர். [இதனால் சிநேகிக்கப்படுவாரும் படாரும் ஆகிய அவ்விருமையும் தொகுத்துச் சொல்லப்பட்டது.] (ரு)

## அக-ஆம் - அதி- பழைமை.

அஃதாவது, நட்பினரது பழையராந் தன்மைபற்றி அவர்செய்த பிழைகளைப்பொறுத்தல், ஆராய்ந்து சிநேகிக்கப்பட்டாராயினும் பொறுக்கப்படுங் குற்றமுடையராதலாலும், ஊழ்வகையாலும் நட்புக்கொள்ளப்பட்டவிடத்துப் பிழையுளதாமென்பது அறிவித்தற்கு இது நட்பாராய்தலின் பின்வைக்கப்பட்டது.

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

இ-ள். பழைமையெனப்படுவது-பழைமையென்று சொல்லப்படுவது யாதெனின்-யாதென்றால் (அது)—கிழமையை-(பழைமையோர்)உரிமையாலே செய்தவைகளை, யாதும்-சிறிதாயினும், கீழ்ந்திடா - சிதைக்காமல் (அவைகளுக்கு உடன்படுவதாகிய), நட்பு-சிநேகம்—எ-று. (கருத்து.) பழைமையென்று சொல்லப்படுவ தியாதென்றால், பழைமையோர்செய்தவற்றைச் சிதையாமற் கொள்ளு நட்பாம்-என்பதாம். * கிழமை ஆகுபெயர் பின்கெழுதகைமையென வருவதுமது. உரிமையாற் செய்வையாவன - கருமஞ்செய்யும்போது கேளாது செய்தல் கெடும்வகை செய்தல், தமக்குவேண்டு மவைகளைத் தாமேகொள்ளுதல், பணிவில்லாமை, இவைமுதலானவை. [இதனாலே பழைமையாவது யாதென்றதன்று இப்படிப்பட்ட நட்பென்பது சொல்லப்பட்டது.](க)

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.



இ-ள். நட்பிற்கு-சிநேகத்திற்கு, உறுப்பு-அவயவமானது, கெழுதகைமை-(நட்பினர்) உரிமையாற்செய்பவைகளாம், (ஆதலால்) அதற்கு - அவ்வுரிமைக்கு, உப்பாதல்-இனியவராதல், சான்றோர்- நிறைந்தோர்க்கு, கடன்-முறைமை—எ-று. (கருத்து.) சிநேகத்திற்கவயவமாவன சிநேகருரிமையாற் செய்தவையாம்-என்பதாம். * மற்று-அசை. வேறல்லாமை தோன்ற உறுப்பென்றார். அவையவமாறுதலதிற்கே இனியவராவதொன்பது தோன்ற-சான்றோர்மேல்வைத்தார். (உ)

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

இ-ள். கெழுதகைமை-(நட்பினர்) உரிமையினாலே செய்தனவைகளுக்கு, செய்தாங்கு-(தாம்) செய்தவைபோல், அமையாக்கடை - உடன்படாராயின், பழகிய -(அவரோடு) பழகிப்போந்த, நட்பு-சிநேகமானது, எவன்-என்ன பயனை, செய்யும்-செய்யும்—எ-று. (கருத்து.) நட்பினர் செய்தவைகளுக்குத் தாஞ்செய்வதாயிடத்து நட்பென்ன பயன்செய்யும்-என்பதாம். * அப்படி உடன்படுதலாவது-தாமும் அவ்விடத்து உரிமையால் உடன்படுதல். [இவை இரண்டுபாட்டானும் பழைமையால்வரும் உரிமையது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்,

இ-ள். நட்டார்-நட்பினர், கெழுதகையால்-உரிமையால், கேளாது-தம்மைக்கேளாது, செயின்-(தமகருமத்தைச்) செய்தாராயின், விழைதகையான்-(அச்செயலது) விரும்பப்படுந் தன்மைபற்றி (அறிவுடையோர், வேண்டியிருப்பர்-(அதனை)விரும்புவர்—எ-று. (கருத்து.) நட்பாளர் உரிமையாற்கேளாது செய்தாலறிவுடையோரதனை விரும்புவரென்பதாம். ஒருவர்க்குத் தங்கருமந்தாம் அறியாமல் முடிந்திருக்கக்காட்டிலும நன்மையில்லாமையால் அச்செயல்விரும்பத்தகதாயிற்று. அதனை அப்படியறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கல்லது இல்லாமையால் அவர்மேல் வைத்துச் சொல்லப்பட்டது. [இதனுள்கேளாதுசெய்தவிடத்து அதனை விரும்புகவென்பதுசொல்லப்பட்டது](ச)

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

இ-ள். நோதக்க-(தாம்) வெறுக்கத்தக்கவைகளை, நட்டார்-சிநேகித்தவர், செயின்-செய்தால்(அதற்குக்காரணம்), பேதைமையொன்றோ-அறியாமையொன்றோ, பெருங்கிழமை-மிகுந்தவுரிமையுமாம், என்று-என்று, உணர்க-அறியக்கடவர்—எ-று.(கருத்து.)வெறுக்கத்தக்கவைகளைச்சிநேகர்செய்தாலது மிகுந்த உரிமையாம்-என்பதாம்.உரிமையினானே தம்மியல்பிலே செய்யாமைபெற்றாம்.இதுவருகின்றவைக்குள்ளும்



ஒக்கும். இழவுநாள்வரும் பேதைமையார்க்கும் உண்டாகலால் தமக்கு வந்தகொண்டவொன்றுவது வழ்வகையால் எம்மால்வரக்கடவது நம் றுமை மிகுதிபற்றி அவரால் வந்ததென்றுவது கொள்வதல்லது அவ் விலாமையென்று கொள்ளப்படாதென்பதாம். [கெடும் வகைசெய்யின் அதற்குக்காரணம் இதனால் சொல்லப்பட்டது.] (ரு)

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

இ-ள். எல்லைக்கணின்றார்-(நட்பின்) வரம்பிலே நின்றவர், தொல்லைக்கணின்றார்-(தம்மோடு) பழமையில் வேறுபடாது நின்றவரது, தொடர்பு-நட்பை, தொலைவிடத்தும்-(அவராலே) தொலைவுவந்தவிடத்தும், துறவார்-விடார்—எ-று. (கருத்து.) நட்பிலே நின்றவர் பழமையோர் சிநேகத்தைவிடார்-என்பதாம். * பழமையில் வேறுபடாமையாவது-உரிமை யொழியாமையாம், தொலைவு-பொருட்கேடு-போர்க்கேடு,

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

இ-ள். அன்பின்-அன்புடனே, வழிவந்த-பழையதாய்வந்த, கேண்மையவர்-நட்பினையுடையவர், (நட்பினர்) அழிவந்த-அழிவு வந்தவைகளை, செய்யினும்-செய்தாலும், அன்பறார்-(அவரிடத்தே) அன்புநீங்கார்—எ-று. (கருத்து.) பழமையான நட்பினையுடையவர் பிறர் அழிவானவற்றைச்செய்தாலு மன்பைவிட்டகலார்-என்பதாம். * அழிவு-முன் சொல்லிய கேடுகள். [இவை இரண்டுபாட்டாலும் கேடுசெய்தவிடத்தும் விடுந்தன்மையுடைத்தன்றென்பது சொல்லப்பட்டது.] (எ)

கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

இ-ள். கேள்-நட்பினாது, இழுக்கும்-பிழையை, கேளா-(பிறர்சொல்லினும்) கேளாத-கெழுதகைமை, வல்லார்க்கு-உரிமையறிய வல்லவர்க்கு, நட்டார்-அந்நட்பினர், இழுக்கம்-பிழையை, செயின் - செய்தால் (அது)—நாள்-(பயன் பட்ட) நாளாம்—எ-று. (கருத்து.) நட்பாளர்பிழையைக்கேளாதவர்க்கு நட்பாளர் பிழையைச்செய்தலது பயன்பட்ட நாளாம்-என்பதாம். * பிழையாவன-முன்சொல்லியபணியாமை-அஞ்சாமை-நற்பொருள்வௌவல் - முதலானவை, கேட்டல் உட்கொள்ளுதல், செய்தவிடத் தல்லாமல் அவ்வல்லமை வெளிப்படாமையால் செய்யாதவை நாளல்லவாயின. [இதனால் பிழைபொறுத்தற் சிறப்புச்சொல்லப்பட்டது.] (அ)

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.



இ-ள். கெடாஅ-(உரிமை) கெடாமல், வழிவந்த-பழைமையதாய்வந்த, கேண்மையார்-நட்புடையவரது, கேண்மை-நட்பை, விடாஅர்-(அவர்பிழைநோக்கி) விடாதவரை, உலகு-உலகமானது, விழையும்-(நட்புக்குறித்து) விரும்பும்—எ-று. (கருத்து.) பழையசிநேகர் நட்பைவிடாதவரை உலகமிச்சிக்கும்-என்பதாம். * விடாதாரையெல்லாவே விழைதற்குக்காரணம் சொல்லப்பட்டது நம்மிடத்தும் இவர் இப்படிப்பட்டவராவரென்று யாவரும் தாமேவந்து நட்பாவரென்பதாம். (கூ)

விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்.

இ-ள். பழையார்கண்-பழையநட்பினரிடத்து, (அவர்பிழைசெய்தாராயினும்)—பண்பிற்றலைப்பிரியாதார்-(தம்) பண்புநீங்காதவர், விழையார்-பகைவராலும், விழையப்படுப-விரும்பப்படுபவர்—எ-று. (கருத்து.) பழையசிநேகரிடத்துச் சிநேகம் நீங்காதவர் பகைவராலு மிச்சிக்கப்படுவர்-என்பதாம். * தம்பண்பாவது-செய்யாதமுன்போல் அன்புடையராதல் அக்குணநோக்கிப் பகைவரும் நட்பினராவரென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் பழைமையறிவார் அடையும்பயன் சொல்லப்பட்டது.] (ய)



## அஉ-ஆம்-அதி-தீநட்பு.

இனிப்பொறுக்கப்படாத குற்றமுடைமையால்விடத்தக்கதாகியநட்பு நட்பாராய்தலதிகாரத்திற் சுருக்கச்சொல்லி அவ்வளவில் அடங்காமையால் அதனை இருவகைப்படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முன்னே தீநட்பு சொல்லுகின்றார்.

அஃதாவது, தீக்குணத்தாரோடு உண்டாகிய நட்பாம், அதிகாரமுறைமை சொல்லாமலே விளங்கும்.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது.

உண்டாதலின், எய்தாமை - இல்லாதிருத்தல், நன்று - நல்லது—எ-று. (க
ருத்து.) சிறியவர்களுடைய நட்பானது ஒருவனுக்கு உண்டாதலினும் இ
ல்லாதிருக்கை நல்லது - என்பதாம். * சிறப்பும்மை வருவிக்கப்பட்டது. க
லவாகாமை - தொலைவிலிடத்து விட்டு - நீக்கல்செய்தலினை எய்தாமைகள்
தென்பதற்கு முன் உரைத்தபடி உரைக்க. [இவை இரண்டுபாட்டானும்
தொலைவிலே துணையாகாதவர் நட்பினது தீமை சொல்லப்பட்டது.] (டு)

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

இ-ள். பேதை - அறிவில்லாதவனது, பெருங்கெழீஇ நட்பின் - மிக
நெருங்கிய நட்பைப்பார்க்கினும், அறிவுடையார் - அறிவுடையாரது, ஏ
தின்மை - பகைமை, கோடியுறும் - கோடிப்பங்கு நல்லது—எ-று. (கருத்
து.) அறிவில்லார் நட்பைப்பார்க்கினும் அறிவுடையார் பகை நல்லது
என்பதாம். * அறிவுடையவனது பகைமை - ஒருதீங்குசெய்வானாயி
னும், பேதையானது நட்பு - பலதீங்கும் செய்தாலும், கோடியுறு
மென்றார். (சு)

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்.

இ-ள். நகைவகையராகிய - (தாம் அறிதல் வகையராதல் இல்லாம
ல்) நகுதல் வகையராதற்கு ஏதுவாகிய, நட்பின் - நட்பால், (வரும் நலங்களி
ன்—) பகைவரால் - பகைவரால், (வரும் நலம்) பத்தடுத்தகோடி - பத்துக்
கோடி மடங்கு, உறும் - நல்லனவையாம்—எ-று. (கருத்து.) நகைக்கேது
வாகிய நட்பைவிட பகைக்கேதுவாகிய நட்பு நல்லவையாம் - என்பதாம். *
அந்நட்பாவது - விடரும், தூர்த்தரும், கழைக்கூத்தரும், போன்று பலவ
கையால் நகுவித்துத் தாம் பயன்கொண்டொழிவாரோடு உண்டாகியது.
பத்தடுத்தகோடி பத்தாகத் தொகுத்த கோடி. அந்நட்பில் வரும் இன்பங்

களில் அப்பகைவரால் வரும் துன்பங்கள் மிகநல்லதென்பதாம். (எ)

ஒல்லும் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

இ-ள். ஒல்லுங்கருமம் - (தம்மாலே) முடியுந்தொழிலை, உடற்றுப
வர் - முடியாதாகச் செய்பவரோடு கொண்ட, கேண்மை - நட்பை, (அதி
கண்டால்) சொல்லாடார் - (அதை அவரறியச்) சொல்லாமல், சோரவி
டல் - தளரவிடக்கடவர்—எ-று. (கருத்து.) தம்மாலே முடியுந்தொழிலை மு
டியாதாகச் செய்பவருடன் கொண்ட நட்பை விடக்கடவர் - என்பதாம். *
சோரவிடல் - விடுகின்றவிதம் தோன்றாமல் ஒருகாலைக்கொருகால் ஓய்

விடுதல், அறியச்சொல்லினாலும், விடுகின்றவிதம் தெரிந்தாலும், அப்
போது பரிகரித்துப்பின்னும் நட்பாயிருக்க) நினைப்பாராகலால் சொல்

லாடாவென்றும் - சோரவிடலென்றும் சொல்லினார். [இவை மூன்றுபாட்டாலும் மூழையேபேதையர் - நகுப்பவர் - இயல்வது செய்யாதவர், இவர் நட்புத்தீமைகள் சொல்லப்பட்டன.] (௮)

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

இ-ள். வினைவேறு - தொழில்வேறு, சொல்வேறு - சொல்வேறாய், பட்டார் - பட்டவரது, தொடர்பு - நட்பு, கனவினும் - (நனவிலேமாத்திரமே யல்லாமல்) கனவிலும், இன்னாது - துன்பந்தருவதாகும் - எ-று. (கருத்து.) தொழில்வேறு, சொல்வேறு, பட்டவர்சிநேகமானது கனவிலுந் துன்பந்தரும் - என்பதாம். * தொழிலுஞ் சொல்லும் ஒவ்வாமல்வேறு வேறாயிருத்தல் - தொழிலிலே பகைவராயும், சொல்லிலே நட்பினராயும் இருக்கை. நிகழ்ச்சியிலே உண்டாயிருக்கையாலே - கனவிலுமின்னாதென்றார். மன் - ஓ - அசை நிலை. (௯)

எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

இ-ள். மனை - வீட்டிலே (தனித்திருந்தபோது) - கெழீஇ - நட்பாடி, மன்றில் - சபையிலே (பலருடனிருந்தபோது) - பழிப்பார் - பழிசொல்லுவோரது, தொடர்பு - நட்பு, எனைத்தும் - எவ்வளவுசிறிதாயினும், குறுகுதல் - தம்மைச்சேர்தலை, ஓம்பல் - பரிகரிக்கக்கடவர் - எ-று. (கருத்து.) வீட்டிலே தனித்திருக்கையிற் சிநேகித்துச் சபையிற்பழிப்பவர் நட்புக்கொள்ளாதிருக்கக்கடவர் - என்பதாம். * அவ்விருசெயலும் நோக்கின் அவர்நஞ்போதும்தம்மைச் சோர்தனிதம் குறிக்கொண்டு காக்கவேண்டுமென்பதற்கு அவர்நட்பின்மேல்வைத்துச்சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் வஞ்சர்நட்பின் தீமை சொல்லப்பட்டது.] (௰)

## ௮௩-ஆம்-அதி-கூடாநட்பு.

இனிமற்றைக் கூடாநட்புச்சொல்லுகின்றார்.

[அஃதாவது, பகைமையால் உள்ளே கூடாதிருந்தே சமயங்கிடைக்குமளவும் புறத்திலே கூடிநடப்பவர் நட்பு.

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

இ-ள். நேரா - கூடாதிருந்தே, நிரந்தவர் - (வாய்க்குமிடங்காணுமளவும்) புறத்திற் கூடிநடப்பவரது, நட்பு - சிநேகம், சீரிடம் - வாய்க்கு



த்தை, காணின் - கண்டால், எறிதற்குத் (அற) வெறிதற்குத் (துணையாகிய) பட்டடை - பட்டடையாகும் - எ-று. (கருத்து) வாய்க்குமிடங்கூடாதிருந்தவர்நட்பானது அந்த இடத்தைக்கண்டால் எறிதற்குப்பட்டடையாம் - என்பதாம். எறியுங்காலம்வாராமுன்னெல்லாந் தாங்குவதுபோலிருந்து வந்தவிடத்து அறவெறிவிப்பதாலே பட்டடைக்கும் அப்படிப்பட்டதாகிய நட்பிற்கும் தொழிலொப்புமையிருத்தலால் அதுபற்றி அந்த நட்பைப் பட்டடையாக உபசரித்தார். (௧)

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

இ-ள்- இனம்போன்று-(தமக்கு)உற்றவர்போன்று,இனமல்லார்-உறாதவரோடுண்டாகிய,கேண்மை-நட்பானது (இடம்பெற்றால்)மகளிர்-பெண்பாலார்,மனம்போல்-நெஞ்சம்போல,வேறுபடும்-வேறுபடும் எ-று- (கருத்து) உறவினர்போன்று உறவினராகாதவர் நட்பானது பெண்களிதயம்போல வேறுபடும்-என்பதாம்.நட்புவேறுபடுதலாவது-இடம்பெற்றால்பழையபகையேயாகுதல்:(இவை இரண்டுபாட்டாலும் கூடாநட்பினது குற்றம்சொல்லப்பட்டது)
(௨)

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன்மாணார்க்கரிது.

இ-ள்- நல்ல-நல்லவையாகிய,பல-பல நூல்களை,கற்றக்கடைத்தும் கற்றவிடத்தும், (அதனால்)மனநல்லராகுதல்-மனந்திருந்தி நட்பினராகுதல்,மாணார்க்கு-பகைவர்க்கு,அரிது-இல்லை-எ-று- (கருத்து)பலநூலை கற்றவிடத்தும் மனநலத்தராகுதல் பகைவர்க்கில்லை-என்பதாம்.நல்லநூல்-மனக்குற்றங்கெடுப்பன, நல்லராகுதல்சலம் விடுதல், உட்கலமுடையவரைக்கல்வியுடைமைபற்றிநட்பென்றுகொள்ளலாகாதென்பதாம்.

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

இ-ள் (கண்டபோது) முகத்தின்-முகத்தால், இனிய-இனிமையுள்ளவராக,நகாஅ-சிரித்து,அகத்து-மனத்தால்,இன்னா-(எப்பொழுதும்) இனியராகாத,வஞ்சரை-வஞ்சகரை,அஞ்சப்படும் - அஞ்சல்வேண்டும்-எ-று. (கருத்து)முகமலர்ந்து நகைத்து அகமலராதவஞ்சகருக்குப்பயப்படவேண்டும்-என்பதாம்.நகைபோதுவகைபற்றி இனியவென்றும்,மனத்திலேசலந்தோற்றுவிக்கவும் அதற்குவிரோதமாகிய நகையைப்புறத்திலேகாட்டலால்வஞ்சரென்றும் அச்சலங்குறிப்பறிதற்குச்சாதனமாகியமுகத்தாலும்தோன்றுமையால்-அஞ்சப்படுமென்றும், சொல்லினர். (இவையிரண்டுபாட்டாலும் கூறாததிற்கு ஏதுவாகிய அவர்கொடுமை சொல்லப்பட்டது.)
(௩)



மனத்தி னமையா தவரையெனைத்தொன்றும்
சொல்லினாற்றேறற்பாற் றன்று.

இ-ள். மனத்தின்-மனத்தால்,அமையாதவரை-(தம்மோடு)பொருந்தாதவரை,எனைத்தொன்றும் - யாதொருகருமத்திலும்,சொல்லினால்-சொல்லினால்,தேறற்பாற்று-தெளிதன்முறைமையது,அன்று-அல்ல(என்று-நீதிநூல்)சொல்லும்-எ-று.(கருத்து) மனமொவ்வாதவனையாதொருசொல்லாலும்-தெளிதல்கூடாது-என்பதாம்.பகைமைமறைத்தற்பொருட்டுச்சொல்லுகின்றவஞ்சனைசொல்லைநல்லசொல்லெனநினைத்து அவனைக்கருமங்களிலேதெளிதல்நீதிநூலின்முறைமையன்றென்பதாம்.

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ

லொல்லை யுணரப் படும்.

இ-ள். நட்டார்போல்-நட்பினர்போல், நல்லவை-நன்மையைத்தருஞ்சொற்களை, சொல்லினும்-சொன்னாலும்; ஒட்டார்சொல்-பகைவர்சொற்கள், (அதுதாராமை) ஒல்லை-விரைவிலே, (சொல்லியபொழுதேயென்றபடி) உணரப்படும்-அறியப்படும்-எ-று. (கருத்து) நட்பாளர்போல நல்லசொற்களைச்சொன்னாலும் பகைவர்சொற்கள் நலந்தாராமை யறியப்படும்-என்பதாம், உம்மை சொல்லினெனவே அவர் அவைசொல்லாமையேபெற்றும். பகைவராதலால்-தீமைதருதற்கு ஐயமில்லையென்பதற்கு ஒல்லையுணரப்படுமென்றார். (௬)

சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்

தீங்கு குறித்தமையான்,

இ-ள். வில்வணக்கம்-வில்லினதுவணக்கம், தீங்கு- (எற்றவர்க்குத்) தீமைசெய்தலை, குறித்தமையான்-குறித்ததனால், ஒன்னார்கண் - பகைவரிடத்தே(பிறக்கும்) சொல்வணக்கம் - சொல்லினதுவணக்கத்தையும், கொள்ளற்க(தமக்குநன்மைசெய்தலைக்குறித்ததென்று) வினையாதிருக்கக்கடவர்-எ-று- (கருத்து) வில்வணக்கந்தீங்கைத்தருதலால் பகைவரிடத்துச்சொல்வணக்கங்கொள்ளாதிருக்கக்கடவர்-என்பதாம், உதம்வணக்கம்அன்றென்பதுதோன்றச்சொல்வணக்கமென்றும், வில்வணக்கம்வேறுபிறும்-வணங்குதலொப்புவமப்பற்றி அதன்குறிப்பையே ஏதுவாக்கியுஞ் சொல்லினார், வில்லினங்குறிப்பு அவனினுடைய வில்வணக்கத்தின்மேல் நிற்றலால் பகைவரதுகுறிப்பும் அவரினுடைய சொல்வணக்கத்தின்மேலதாயிற்று. இதுவும் தீங்குகுறித்தவணக்கமென்றேகொண்டு அஞ்சிக்காக்கவேண்டுமென்பதாம். இவைமூன்றுபாட்டாலும் அவரைச்சொல்லாலேதெரியலாகாதென்பதுசொல்லப்பட்டது] (௭)

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா

ரழுத கண்ணீரு மனைத்து.



இ-ள், (பகைவர் குறிப்பை அறியவல்லார்க்கு) ஒன்னார் - பகைவர் தொழுதகையுள்ளும் -கும்பிட்ட கையுள்ளும், படை-ஆயுதமானது, ஒடுங்கும்-மறைந்திருக்கும், அழுதகண்ணீரும். (அவர்) அழுதகண்ணீரும அனைத்து - அப்படியே, அதுமறைந்திருத்தற்கு இடமாம்-எ-று, (கருத்து) பகைவர்கும்பிட்டகையோடு ஆயுதமறைந்திருக்கும்-அப்பகைவரழுதகண்ணீரும் அப்படியே-என்பதாம், தாம்கட்பெய்பதனைத் தன்கையாலும் கண்ணாலும்-மறைத்துப்பின்கொல்லுதற்கு எடுக்கவிருக்கின்ற ஆயுதம் ஆலோசித்தறியும்போது நம்புகின்றபொழுதே அவைகளுள்ளே தோன்றுமென்பதற்கு ஒடுங்குமென்றார். பகைவர்தமதுதாளைச்சிகைட்டித்தொழுதாலும், அழுதாலும் அவர்குறிப்பையே நோக்கிக்காத்துக்கொள்கவென்பதாம். (இதனால் அவரைச்செயலால் தெளியலாகாதென்பது சொல்லப்பட்டது. அ

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து

நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

இ-ள். (அரசநீதியானது) மிகச்செய்து-[புறத்திலே நட்பை] மிகச் செய்து, தம்மெள்ளுவாரை-(உள்ளே) தம்மை இகழும்பகைவரை, நட் பினுள்-(தாமும்) அந்நட்பினிடத்தேயின்று, நகச்செய்து-புறத்திலே(அவ ர்)மகிழும்படிசெய்து, சாப்புல்லற்பாற்று - (உள்ளே அது) சாம்படிக்குப் பொருந்துந் தன்மையுடைத்து-எ-று. [கருத்து. இராசநீதியானது புற த்துநட்பைமிகச்செய்து இகழ்பவரைநட்பில்மகிழும்படிசெய்து பொரு க்குந்தன்மையுடையது-என்பதாம்,ஒன்றெயபதும், அரசநீதியென்பு துங்,வருவிக்கப்பட்டன- உள்ளொன்றுபுறமொன்றாதல் ஒருவருக்குந் தகாதாயினும்பகைவரிடத்தாதலால்குற்றமெய்ப்பதின்றி ஞாலநூலுணர்வென் பதற்கு அதன்மேல்வைத்துச்சொல்லினர்,என்றுரைப்புலவனக் ட்டுக. ௯.

பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்

டகநட் பொரீஇ விடல்

இ-ள். பகை(தம்)பகைவர், நட்பாங்காலம்-நட்பாராய் நடக்குங்கா லம், வருங்கால்-வந்தால், முகம்(தாமும்)முகத்தால், நட்டு-(அவரோடு)நட் புச்செய்து, அகம்-மனத்தால், நட்பு-நட்பை, ஒரீஇ-நீக்கி, விடல்(பின் அ துவும்)விடக்கடவர்-எ-று. (கருத்து) பகைநட்பாகுங்காலத்தில் முகநட் பாய்ச்சிநேகித்து அகநட்பு விடல்வேண்டும்-என்பதாம்.௦அக்காலமாவ து-தம்மாறும்பகையென்று வெளிப்படநீக்கக்கூடாதவளவு,இதனாலே கூடுமளவெல்லாம் நீக்குகவென்பதுபெற்றும். (இவை இரண்டுபாட்டா னும் அரசநீதிக்குநடக்கும் விதஞ்சொல்லப்பட்டது.) ௰



# ௮௪-ஆம், அதி-பேதைமை,

அஃதாவது, யாதொன்றும் அறியாமை,

இனி அந்நட்பை எதிர்மறுத்துப்பகைமுகத்தாலே சொல்லத்தொ டங்கினர் அப்பகைதான் முழுவதும்விட்டொழிகாத குற்றமாகியகுரோதத் தாலும்,காமத்தாலும், வருவதாம் , அவைகளுள் குரோதத்தால்வருப வைஐந்ததிகாரத்தாலும், காமத்தால்வருபவை ஐந்ததிகாரத்தாலும்சொ ல்லுதற்கு அவ்விரண்டுக்கும்அடியாகியமயக்கத்தை இருவகைப்படுத்தி இரண்டதிகாரத்தாலேசொல்லத்தொடங்கிமுதலிலேபேதைமைசொல் லுகின்றார்.

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்

டூதியம் போக விடல்.

இ-ள். பேதைமையென்பது - அறியாமையென்றுசொல்லப்படுவ தான, ஒன்று(மற்றைக்குற்றங்களினெல்லாம்மிகுந்த)தொன்று, யாதெனி ன்(அது)யாதென்றுவினவினால், ஏதங்கொண்டு (தனக்குக்)கேடுதரும வைகளைக்கொண்டு,ஊதியம்-ஆக்கந்தருமவைகளை , போகவிடல் கைவிடுதல்-எ-று. (கருத்து) அறியாமையென்பதியாதென்றால்குற்றங் களைக்கொண்டுஇலாபத்தைவிடுதல்-என்பதாம்.௦கேடு-வறுமைபழிபாவ ங்கள்-ஆக்கம்-செல்வம்-புகழறங்கள்,பேதைமை-தானே தன்னிருமைப் பயனும்கெடுத்துக்கொள்ளுதலென்பதாம். ௧

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை

கையல்ல தன்கட் செயல்

இ-ள். (ஒருவனுக்கு) பேதைமையுளெல்லாம்- பேதைமையெல்லா வற்றுள்ளும், பேதைமை-மிகுந்தபேதமையாவது, கையல்லதன்கண்- (தனக்கு) ஆகாதசெய்கையில், காதன்மை-ஆசையை, செயல் - செய்தல் எ-று. (கருத்து) அறிவில்லாமை- எல்லாவற்றுள்ளுமறிவில்லாமையாவது ஆகாதசெய்கையைச்செய்தல்-என்பதாம், மறுமைக்கும்ஆகாவென்று நாலோர்கடிந்தசெயல்களைவிரும்பிச்செயதலென்பதாம். (இவை இரண்டுபாட்டாலும்பேதைமையதிலக்கணம்சொல்லப்பட்டது) ௨

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்

பேணாமை பேதை தொழில்

இ-ள்- நாணாமை(நாணவேண்டுமவைகளுக்கு) - நாணாமையும், நாடாமை (நாடவேண்டுமவைகளை) நாடாமையும், நாரின்மை-(யாவரிடத்தும்) மூதிர்ந்தசொற்செயலுடைமையும், யாதொன்றும்- (பேணவேண்டுமவைகளுள்) யாதொன்றையும், பேணாமை- பேணாமையும், பேதை



தொழில்-மூடனதுதொழில்களாம்-எ-று. (கருத்து) நாணாமையும் நாடாமையும் ஆசையின்மையும் யாதொன்றையும் பேணாமையும் அறிவீனனுடைய தொழில்களாம்-என்பதாம், நாணவேண்டுமவை- பழிபாவங்கள். நாடவேண்டுமவை, கருமங்களிலே விதிவிலக்குகள், மூதிதல் கன்னவுரல், பேணவேண்டுமவை, குடிப்பிறப்புக்கல்வியொழுக்கமுதலாயின, இவைபேதைக்கு எக்காலும் இயல்பாய் வருதலாலே தொழிலென்றார். (௩)

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்

பேதையிற் பேதையாரில்.

இ-ள், ஓதி- (மனமொழிமெய்கள் அடக்குதற்குரியவாகிய நூல்களை) ஓதியும், உணர்ந்தும் - (அவ்வடக்கத்தால்வரும்பயனை அறிந்தும், பிறர்க்கு-பிறருக்கு, உரைத்தும்- (அதனை அறியும்படி) சொல்லியும், தான்-தான், அடங்கா-(அவை) அடங்கிடாத, பேதையின்-மூடன்போல, பேதையார்-மூடர், இல்- (உலகில்) இல்லை-எ-று. (கருத்து) கற்றறிந்தும் பிறர்க்குக் கற்பித்துந்தானடங்காத அறிவீனன்போலறிவீனனில்லை - என்பதாம், இப்பேதைமை - தனக்குமருந்தாகிய இவைகளாலே தீராமையாலும், வேற்றுமருந்தில்லாமையாலும், பேதையிற் பேதையாரில்லென்றார் (இவை இரண்டுபாட்டாலும் பேதையதுதொழில்பொதுவகையால் சொல்லப்பட்டது) இனிச்சிறப்புவகையாற்கூறுவர்)

ஒருமைச் செயலாற்றும் பேதையெழுமையுந்

தான்புக் கழுந்து மளறு.

இ-ள். பேதை-மூடனானவன், எழுமையும்-வரும்பிறவிகளிலெல்லாம், தான்,தான், புக்கு-புகுந்து, அழுந்தும் - அழுந்துதற்கிடமாகிய அளறு-நரகத்தை, ஒருமை- இவ்வொரு பிறப்புள்ளே ,செயலாற்றும் செய்துகொள்ள வல்லவனாவான்-எ-று. (கருத்து) அறிவிலன் வரும்பிறவிகளிற்புகுந்து நரகத்தையேற்றுக் கொள்வான் -என்பதாம்; எல்லாப்பிறப்பும் ஏழாய் அடங்குதல் அறியப்பட்டமையின் எழுமையுமென-முற்றும்மைகொடுத்தார், இவ்வேழுப்பிறப்புகளிலும்கொடுவினைவசத்தால் அந்நரகத்துன்பமே அநுபவித்துவருதலால் - எழுமையுந்தான்புக்கழுந்துமளறென்றார், நெடுங்காலந்தான்நரகத்துன்பம் அநுபவித்தற்குரியவாம் கொடுவினைகளையேஅறிவிலகாலத்துள்ளேசெய்துகொள்ளுதல் பிறர்க்கு அரிதாதலின் ஆற்றுமென்றார் (இதனால் அவன்மறுமைச்செயல் சொல்லப்பட்டது.) (௫)

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்

பேதை வினைமேற் கொளின்.

இ-ள். கையறியா - செய்யுமுறைமையறியாத, பேதை-மூடனானவன், வினை - ஒருதொழிலை, மேற்கொளின்-மேற்கொள்ளுவானாயின்



பொய்படும் - (அதுவும்) பொய்படும், ஒன்றோ-(அது) ஒன்றுதானோ, புனைபூணும் (தானும்) தளைபூணும்-எ-று. (கருத்து) மூடனொருதொழிலை மேற்கொள்வானாயினத்தொழில் குற்றப்படுமன்றியுமவன் தளைபூணுவன்-என்பதாம், பொய்படுதல்-பின் ஆகாதபடியழிதல், அதனையுங்கெடுத்துத் தானுங் கெடுமென்பதாம், (இதனால் அவன் செல்வம்படைக்குமாறு சொல்லப்பட்டது.) (௬)

ஏதிலாரார்த் தமர்பசிப்பர் பேதை

பெருஞ்செல்வ முற்றக் கடை.

இ-ள், பேதை-மூடனானவன், பெருஞ்செல்வம்- பெரியசெல்வத்தை, உற்றக்கடை-(ஊழால்) அடைந்தவிடத்து, ஏதிலார்(தன்னோடு)ஒருசம்பந்தமுமில்லாதவர், ஆர-நிறைய, தமர்- (எல்லாச்சம்பந்தமுமுடைய) தம்மவர், பசிப்பர்-பசித்திருப்பர்-எ-று.(கருத்து) அறிவிலான்-செல்வமடைந்தவிடத்து அயலாரநுபவிக்கச் சுற்றத்தார்பசித்திருப்பர்- என்பதாம்; எல்லாநன்மைகளுஞ்செய்துகொள்ளற்குச்சாதனமென்பதுதோன்ற-பெருஞ்செல்வமென்றும், அதனைப்படைக்கும் வலிமையில்லாமை தோன்ற, உற்றக்கடையென்றும், எல்லாம்பெறுதல்தோன்ற, ஆரவென்றும், உணவும்பெறாமைதோன்றப்பசிப்பரென்றுஞ்சொல்லினார்.

மையலொருவன் களித்தற்றாற் பேதைதன்

கையொன் றுடைமை பெறின்.

இ-ள். பேதை-மூடனானவன், தன்கை-தன்கையில், ஒன்று-ஒரு பொருளை, உடைமைபெறின்-உடைமையாகப் பெற்றானாயின், மையலொருவன்-பித்தினையுடைய ஒருவன்-களித்தற்றால்-(அம்மயக்கத்தின்மேலே) மதுவுண்டு-மயங்கியதுபோலும்-எ-று. (கருத்து) அறிவில்லான் பொருளைப்பெற்றானாகில் வெறியினையுடையவொருவன் மதுவுண்டு மகிழ்தல்போலும்-என்பதாம், ஆல்-அசை, பெறினெனவே - அவன்வ(ரு)மாலல்லது தன்னாலே பெறுமை பெற்றும் பேதைமையும், செல்வக்களிப்பும், ஒருசேர உடைமையால் அவன் செய்காரியங்கள்- மையலும் மதுக்களிப்பும், ஒருசேர உடையவன் செய்காரியங்கள்போலேதகவு நடுமாறு மென்பதாம், (இவை இரண்டுபாட்டாலும் அவன் செல்வமடைந்தவிடத்து அப்பயன் கொள்ளும் விதம் சொல்லப்பட்டது.) (அ)

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

இ-ள். பிரிவின்கண்-(பின்) பிரிவுவந்தவிடத்து, (அப்பிரிவு) தருவது (இருவருக்கும்) தருவதாகிய, பீழையொன்று-துன்பமொன்று, இல்லை, (ஆதலால்) பேதையார் - மூடரது, கேண்மை (தம்முட்கொண்ட) நட்பு, பெரிதினிது-மிகவும்இனிது -எ-று. (கருத்து) பிரிவினிடத்தி



த்துன்பமில்லை அறிவில்லார் நட்புமிகவுமினிது என்பதாம், இனத்தோரும் தெய்வத்துலருதலால் துன்பத்தராதாயிற்று. புகழ்வார்போல் நயம்பூரித்தபடி. [இதனால் அவனது நட்பின் குற்றம் சொல்லப்பட்டது) (கூ)

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

இ-ள். சான்றோர் - பெரியோரது, குழாஅத்து-சபையினிடத்து, பேதை-மூடனானவன், புகல்- புகுதல், கழாஅக்கால் - கழுவாதகாலை, (அசுத்தமித்தகாலையென்றபடி) பள்ளியுள் (இன்பத்தருந்) சயனத்தின்மேல், வைத்தற்று-வைத்தல்போலும்-எ-று. (கருத்து) பெரியோர்சபையிலறிவில்லான்-புகுதல் கழுவாதகாலைச்சயனத்தில்வைத்தல்போலும்-என்பதாம், ஆல்-அசை, அதனால் அச்சயனமும இழிவுசெய்யப்படும்விதம்போல் இவனால் இச்சபையும் இழிவுசெய்யப்படும் - மென்பதாம், (இதனால்-அவன்சபையிடத்திருக்கும்விதம்-சொல்லப்பட்டது-) (ய)



# அரு-ஆம், அதி-புல்லறிவாண்மை.

இனிமற்றைப்புல்லறிவாண்மை சொல்லுகின்றார் அதுபுல்லியஅறிவை-ஆளுந்தன்மையெனவிரியும்.

அஃதாவது, தான்-சிற்றறிவினனாயிருந்தே தன்னைப்பேரறிவனாக மதித்து உயர்ந்தோராலே சொல்லப்படும் உறுதிச்சொல்லைக் கொள்ளாமை.

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு.

இ-ள். இன்மையுள்-(ஒருவனுக்கு) இல்லாமைபலவுள்ளும், இன்மை-மிகுத்தஇல்லாமையாவது, அறிவின்மை-அறிவில்லாமை, பிறிதின்மை-மற்றைப்பொருளில்லாமையோவெனில், (அதனை) உலகு-உலகத்தார், இன்மையா-(அப்படிப்பட்ட) இல்லாமையாக, வையாது-கொள்ளார்-எ-று. (கருத்து) இல்லாமையுள்ளே யில்லாமை யாவது அறிவில்லாமையாம் பொருளில்லாமையையுலகத்தாரில்லாமையாகவெண்ணார்-என்பதாம், புல்லறிவாளர் செல்வமடைந்தவிடத்தும் இம்மைமறுமைப் பயனடையாமையால்-அதனை - இன்மையுளின்மையென்றும், நல்லறிவாளர்வறுமையடைந்தவிடத்தும் அப்பயனை யிழவாமையால் அதனை-இன்மையாவையாதென்றும்சொல்லினர். (இதனாற்புல்லறிவின்குற்றஞ்சொல்லப்பட்டது.) ௧

௨௧௨ அ௫-ஆம்-அதி-புல்லறிவாண்மை

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம்.

இ-ள், அறிவிலான்-புல்லறிவுடையவன், நெஞ்சுவந்து- மனமகிழ்ந்து, ஈதல்-(ஒருவனுக்கொன்று) கொடுத்தல் கூடியதாயின் அதற்குக் காரணம்) பெறுவான்-பெறுகின்றவனது, தவம்-நல்வினையே, பிறிதியாதும்-வேறொன்றும், இல்லை-இல்லை -எ-று (கருத்து) அறிவில்லானொருவனுக்கொன்றைக்கொடுத்தல் பெற்றுக்கொள்பவனது தவமாம்-என்பதாம் புல்லறிவாளரும்-ஒரோவிடத்தே மனமகிழ்ந்து கொடுத்தலால் அவருக்கு நல்வினைசெய்வாரென்பார்க்கு பெறுவான் விழ்பொருள் அடைந்தவன் போல்வதல்லது இம்மைநோக்கியாவது மறுமைநோக்கியாவது ஈகின்றாரல்லரென்க் சொல்லப்படி (இதனாற்புல்லறிவாளர் தம்மிடத்துநல்லவைசெய்தலறியாமைசொல்லப்பட்டது) ௨

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

இ-ள். அறிவிலார்-புல்லறிவுடையவர், தாம்-தாமே, தம்மை-தன்னை பீழிக்கும்-வருத்தும், பீழை-வருத்தமானது, செறுவார்க்கும்-வருத்துதற்கு உரியபகைவர்க்கும், செய்தல்-செய்தல், அரிது-அரிதாம்-எ-று, (கருத்து) அறிவில்லார் தன்னை வருத்தும்வருத்தமானது வருத்தப்படுத்தும் பகைவர்க்குஞ்செய்தலரிது-என்பதாம், பகைவர்தாம் அறிந்தவொரு கிலைக்காலம்பார்த்திருந்து செய்வதல்லது வறுமை பழிபாவ முதலான பலவும் எக்காலமும்செய்யமாட்டாமையால்- அவர்க்கும் செய்த லரிதென்றார். இதனால் அவர்தம்மிடத்துத் தீயவைசெய்தலே அறிவென்பது சொல்லப்பட்டது.) ௩

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை

யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

இ-ள் வெண்மையெனப்படுவது- புல்லறிவுடைமையெனப்படுவது,யாதெனில்-யாதென்றால்,(அது) ஒண்மையுடையம்யாம், நல்லறிவுடையோம்யாம்,என்னும்-என்று, (தம்மைத்தாமே)நன்குமதிக்கும்-செருக்கு-மயக்கம்-எ-று.(கருத்து) அறிவில்லாமையென்று சொல்லப்படுவதியாதென்றால் நல்லறிவுடையோமென்னுமயக்கமாம்-என்பதாம்,௦வெண்மை-இளமை,அது அறிவுமுதிராமை- உலகத்தார்இகழ்தல்அறிந்திருந்தும்அப்படிமதித்தலால்மயக்கமென்றார். (ச)

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

இ-ள். (புல்லறிவாளர்) கல்லாத (தாம) கல்லாத நூல்களையும்,மேற்கொண்டு- (கற்றவராக) மேலிட்டுக்கொண்டு, ஒழுகல் - நடக்குதல்



கசடற-குற்றமற,வல்லதூஉம்-கற்றதொருநூல், (உண்டாயின்) அதனிடத்தும்,ஐயம்-ஐயத்தை,தரும்- (பிறருக்கு) விளைக்கும்-எ-று. (கருத்து) கல்லாதநூற்களைக்கற்றேமென்றுசொல்லுதல் கற்றநூற்களையுஞ் சந்தேகப்படுத்தும்-என்பதாம்,௦ உண்டாயினென்பதுவருவிக்கப்பட்டது ஐயம்-இவர்அந்நூலிலேவல்லவரென்பதும்-இப்படித் தானிருக்குமோவென்பது. (ரு)

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

இ-ள். (புல்லறிவாளர்)தம்வயின்-தம்மிடத்துண்டாகும்,குற்றம்-குற்றங்களை, மறையாவழி- (அறிந்து) கடியாராயின் அற்றம்- மறைக்கத்தக்க அவயவத்தை,மறைத்தலோ- (ஆடையால்)மறைத்தலாகத்தம்மைமதித்தலும்,புல்லறிவு-அற்பவறிவாகும்-எ-று. (கருத்து) அறிவில்லார்குற்றங்களைக்கடியாராயின் அதுவேயறிவில்லாமை-என்பதாம்.௦ குற்றமறைத்தலாவது-அவைகளை-இல்லாமற்-போகச்செய்தல். மறைக்கப்படுமவை-பலவுள்ளும்-உயர்ந்தவைகளையெல்லாம்-மறையாது-தாழ்ந்தவொன்றையே-மறைத்து-அவ்வளவிலே-தம்மையும் உலக நடையுள்ளவராக மதித்தாலும்புல்லறிவென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் அவர்தம்மைமதித்தற்குற்றம்சொல்லப்பட்டது.] (சா)

அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

இ-ள். அருமறை-பெறுதற்கரியவுபதேசப்பொருளை, சோரும்-(பெற்றும்)உட்கொள்ளாதுபோக்கும்,அறிவிலான்-புல்லறிவாளன்,(அவ்வுறுதி அறியாமையால்)தானே-தானே, தனக்கு-தனக்கு, பெருமிறை-மிகுந்தவருத்தத்தை,செய்யும்-செய்வான்-எ-று.(கருத்து)இரகசியப்பொருளைப்போக்குமறிவில்லான் தனக்குத்தானேவருத்தத்தைச்செய்வான்-என்பதாம்௦மிகுத்தவருத்தம்-பொறுத்தற்கரியதுன்பம். (எ)

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

இனி-அவைகளெல்லாவற்றுள்ளும் குரோதகாமங்களுள் அரசர்க்குக்குரோதம் அதிகமாயுள்ளதாகலால் அவனுல்வரும் அவைகளைச்சொல்லத்தொடங்கி முதலிலேஇகல்சொல்லுகின்றார்.

அஃதாவது: இருவர் தம்முள்ளேபோர்செய்து வலிமைதொலைதற்குக் காரணமாகிய மாறுபாடாம்.

இகலென்ப வெல்லாவுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்குநோய்.



இ-ள். எல்லாவுயிர்க்கும்-சகலவுயிர்களுக்கும், பகலென்னும்-(பிறவுயிரோடு) கூடாமையென்னும், பண்பின்மை-தீயகுணத்தை, பாரிக்கும் வளர்க்கும், நோய்-குற்றமாவது, இகல்-மாறுபாடாம், என்ப-என்றுநூலோர்சொல்லுவர் -எ-று. (கருத்து)எல்லாவுயிர்க்கும் தீயகுணத்தைவளர்க்குங்குற்றமாவது மாறுபாடாம்-என்பதாம். மக்களையும்விலங்குகளோடு ஒப்பர்க்குவதென்பதுதோன்ற எல்லாவுயிர்க்குமென்றும், கூடாததீக்குணத்தைவிரின்றுவினைத்தலால்-பகலென்றும் பண்பின்மையென்றும்சொல்லினார் (இதனால்மாறுபாட்டகுற்றம்சொல்லப்பட்டது.)

பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை.

இ-ள். பகல்-,(தம்மோடு)கூடாமையை,கருதி-நினைத்து,பற்றா-வெறுப்பவைகளை,செயினும்- ஒருவன்)செய்தானாயினும், இகல்கருதி (அவனோடு) மாறுபடுதலைக்குறித்து,இன்னா-துன்பந்தருமவைகளை, செய்யாமை-(தாம் அவனுக்குச்)செய்யாமை,தலை-உயர்ந்தது-எ-று.(கருத்து)ஒருவன்வெறுப்பானவற்றைச்செய்தானாயினுந்துன்பந்தருமவைகளைச் செய்யாமைதலைமை-என்பதாம். துன்பந்தருமவைகளைச்செய்யில்பகைமைவளர்த்தாம்தாழ்ந்துவருதலாலும்ஒழியில் அவ்வெறுப்பவைகள் ஒய்ந்துபோகத்தாம்ஓங்கிவருதலாலும்,செய்யாமைதலையென்றார். (௨)

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

இ-ள். (ஒருவன்)இகலென்னும்-மாறுபாடென்னப்படுகின்ற,எவ்வம் துன்பத்தைச்செய்யும், நோய்-நோயை,நீக்கின்- (தன்மனத்தினின்று) நீக்குவானாயின், (அந்நீக்குதல்)தவலில்லா (எக்காலும்) அழிவில்லாமைக்குஏதுவாகியதாவில்கெடாத,விளக்கம்-புகழை,தரும் - (அவனுக்குக்) கொடுக்கும்-எ-று.(கருத்து)ஒருவன்மாறுபாட்டைநீக்குவானாயின்,புகழைத்தரும்-என்பதாம். யாவருங்கூட்டுதலால் எல்லாச்செல்வமும்பெற்றுக்கொடைமுதலானகாரணங்களால்புகழ்பெறுமென்பதாம். (௩)

இன்பத்து ளின்பம் பயக்குமிகலென்னும்

உண்டாவது காணப்படும்பிரயோசனத்தையுடையதாதலால்மெய்ந்நூலெனப்பட்டது, மாறுபாட்டினாலே அறிவுகலங்குதலால் காணுனென்றார். (இவையிரண்டுபாட்டாலும்மாறுபட்டவர்க்குவரும் தீங்குசொல்லப்பட்டது.) (எ)

இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

இ-ள். இகலிற்கு-(தன்னுள்ளத்து)மாறுபாடுதோன்றிய விடத்து, எதிர்சாய்தல்-(அதற்கு) எதிரிடுதலையொழிதல், ஆக்கம்-(ஒருவனுக்கு) ஆக்கமாம், அதனை - அம்மாறு பாட்டிலே, மிகல் - மிகுதலை,ஊக்கின்-மேற்கொள்ளுவானாயின், கேடு-கேடும், ஊக்குமாம்-(தன்னிடத்துவருதலை) மேற்கொள்ளும்-எ-று. (கருத்து) மாறுபாட்டிற்கெதிர்சாய்தலே செல்வம் அதைமேற்கொள்ளிற்கேடாம்-என்பதாம், எதிர்தல்மாறுக்கொள்ளுதல்-சாய்தபொழுதேவருதலால்சாய்தலாக்கமென்றார்.(அ)

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு

இ-ள். (ஒருவன்) ஆக்கம்வருங்கால்- (தன்னிடத்து) ஆக்கம்வரும்போது, (காரணமுண்டாயினும்) இகல்-மாறுபாட்டை, காணான்-நினையான், கேடுதரற்கு-(தனக்குக்) கேடுசெய்துகொள்ளுமிடத்து,(காரணமில்லாதிருந்தும்) அதனை-அதனிடத்தே, மிகல் - மிகுதலை, காணும் நினைப்பான்-எ-று. (கருத்து) ஒருவன்செல்வம்வரும்போது மாறுபாட்டைக்காணான் கேடுவரும்போ ததனைநினைப்பான்-எனபதாம், மாறுபாட்டால் வருங்கேடு பிறரால் அன்றென்பதுதோன்ற-தரற்கென்றார் ஆக்கக்கேடுகட்குமுன் மாறுபாடாமையும் படுதலும்உண்டா மென்பதாம். (கூ)

இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு.

இ-ள். இகலான்-மாறுபாடொன்றினாலே, இன்னாதவெல்லாம்-துன்பஞ்செய்பவையெல்லாம், ஆம்-உண்டாகும், நகலான்-நட்பொன்றினாலே, நன்னயமென்னும்,நல்லநீதியென்னும், செருக்கு - பெருஞ்செல்வம், ஆம் - உண்டாகும்-எ-று. (கருத்து) மாறுபாட்டாற்றுன்பமெல்லாமுண்டாம் நட்பால் செல்வமுண்டாம்-என்பதாம், இன்னாதன்-வறுமை பழிபாவங்கள்முதலானவை, நகல்-மகிழ்தல்- அதுவும்செருக்கென்பதும்தன்றன்காரணங்களுக்காயின்,நயமென்னுஞ் செருக்கெனக்காரியத்தைக்காரணமாகஉபசரித்தார். (இவைமூன்றுபாட்டாலும் அவ்விருமையுஞ் சொல்லப்பட்டது.) (௰)



# அசஎ-ஆம் அதி-பகைமாட்சி.



அஃதாவது: அறிவில்லாமை முதலாகிய குற்றங்களுடைமையாற் பகையை மாட்சிமைப்படுத்தல். அரசர்க்கு எவ்வழியானும் பகையில்லாமை கூடாமையால் மேலே பொதுவகையால் விலக்கப்பட்டிருக்கவு மிடத்தே சிறப்புவகையால் விதிக்கின்றாராதலால் இது அதன்பின் வைக்கப்பட்டது.)

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார் மேன் மேக பகை.

இ-ள். வலியார்க்கு-(தம்மின்) வலியவர்க்கு; மாறேற்றல்-பகையெதிர்தலை, ஓம்புக-ஒழியக்கடவர், மெலியார்மேல்-மற்றைமெலியர்க்கு, பகை-பகையாகுதலை, ஓம்பா-ஒழியாமல், மேக-விரும்பக்கடவர்-எ-று. (கருத்து) வலியவர்க்கெதிர்தலை நீக்கக்கடவர் மெலியவர்க்குப் பகையாதலை விரும்பக்கடவர்-என்பதாம். (வலியாரென்றவிடத்துத் தனைவலியும் அடங்கலால் மெலியாரென்றவிடத்துத் துணைவலியில்லாமையும் கொள்ளப்படும், அத்துணைதான் படைபொருள் முதலாயவேற்றுமைத் துணையும் கல்வியறிவுடைமைநீதிவழியொழுகல் முதலாகியஒற்றுமைத் துணையும், எனவிரண்டாம். அவ்விரண்டுமில்லாரை வெல்வார்க்கு வலிமைகுறைவில்லாமையான் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது (சிங்கநோக்காகிய இதனுள் பகைமாட்சி பொதுவகையாலேசொல்லப்பட்டது.) (௧)

அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

இ-ள். (ஒருவன்) அன்பிலன்-(சுற்றத்தார்மேல்) அன்பிலன், ஆன்ற துணையிலன்-(அதுவேயன்றி) வலிய துணையிலன், தான்றுவ்வான்-(அதன்மேல்) தான் வலியிலன் (அப்படிப்பட்டவன்,) ஏதிலான்-(தன்மேல்வந்த) பகைவனது, துப்பு-வலிமையை, என்பரியும்-எப்படிதொலைப்பான்-எ-று. (கருத்து) அன்பும் துணையும் வலிமையுமில்லாதவன் பகைவனது வலிமையை எப்படிநீக்குவான்-என்பதாம். (சுற்றமும் முன்சொல்லப்பட்ட இருவகைத்துணையும் தன்வலியும்இலனாதலால் அவன்மேலே செல்வார்க்கு வலிவளர்வதல்லாமற் குறைவிலாதென்பதாம்.

அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு

இ-ள். (ஒருவன்) அஞ்சும்-(அஞ்சவேண்டாதவர்களுக்கு) அஞ்சுவான், அறியான்-(அறியவேண்டுமவைகளை) அறியான், அமைவிலன்-(பிறரோடு) பொருந்துதலிலன், ஈகலான்-(இவைகளின்மேலும்) யாவரி



டத்தும்) உலோபகுணமுடையவன், (இப்படிப்பட்டவன்) பகைக்கு-பகைவர்க்கு; தஞ்சமெளியன்-மிகவெளியனுவான்-எ-று. (கருத்து) அஞ்சுபவனும் அறியாதவனும் நட்பில்லாதவனும் உலோபனுமானவன் பகைவர்க் கெளியனுவான்-என்பதாம். (தஞ்சமெளியனென்பவை-ஒருபொருளைக்குறித்துவந்த பலசொல். இந்நான்கு குற்றமுடையான் பகைவலிமையும் அறியுமாகலால் தஞ்சமெளியனென்றார்.) (௩)

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

இ-ள். (ஒருவன்) வெகுளி-கோபத்தினின்றும், நீங்கான்-நீங்கா

தலன், நிறையிலன் - (அதுவேயன்றித்தா)னிறையுடைமையில்லன் அவன், (மேலேசெல்லுதல்) எஞ்ஞான்றும் - எக்காலும், யாங்கணும் - எவ்விடத்து ம், யார்க்கும் - யாவருக்கும், எளிது - எளிமை - எ-று. (கருத்து) கோபத்தை யு நிறையில்லாமையு முடையவன் பகைவர்க்கெளியனாவான் - என்பதா ம். நிறைமறைபிறரறியாமை. இவன் கோபமுடையவனாதலாலு ம், இரகசியத்தை வெளிப்படுத்தலாலும் இவன்மேலேபோகச் செல் வார்க்குக் காலமும் இடமும் அறிந்து சொல்லுதல் வேண்டுவதி ல்லையாயிற்று. (௪)

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்

பண்பிலன் பற்றார்க் கினிது.

இ-ள். (ஒருவன்) வழிநோக்கான் - நீதிநூலைக்கல்லான், வாய்ப்பன செய்யான் - (அது) விதித்ததொழில்களைச்செய்யான், பழிநோக்கான் - (தனக்குவரும்) பழியைப்பாரான், பண்பிலன் - குணமுடையனல் லன், (அவன்பங்கமை) பற்றார்க்கு - பகைவர்க்கு, இனிது - இன்பம் - எ-று. (கருத்து) நீதிநூல்கல்லாதவன் விதித்தன செய்யாதவன் பழிநோக்கா வன் குணமில்லாதவன், பகைவர்க்கெளியனாவான் - என்பதாம். வழிமுறை போராதியாக வழங்கிவருதலால்வழியென்றும், தப்பாது பிரயோசனப் படுதலால் - வாய்ப்பனவென்றும், இக்குற்றங்களுடையவன் தீமையை அறி தலால் பற்றார்க்கினிதென்றும், சொல்லினார். (௫)

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்

பேணாமை பேணப் படும்.

இ-ள். காணாச்சினத்தான் - (தன்னையும் பிறரையும்) அறியாமைக்கு ஏதுவாகியகோபத்தையுடையவன் (யாவன்) - கழிபெருங் காமத்தான் - மேல்மேலும் வளராநின்ற மிகுந்தகாமத்தையுடையவன், (யாவன்) பே ணாமை (அவனது) பகைமை, பேணப்படும் - விரும்பிக்கொள்ளப்படு ம் - எ-று. (கருத்து) கோபத்தையுங் காமத்தையுமுடையவன் பகைவர்க் கெளியன் - என்பதாம். முன்சொல்லப்பட்டவனுக்கு யாவரும்பகை



யாக்லாலும், பின்சொல்லப்பட்டவனுக்குக்காரியம்தோன்றாமையாலும் தாமே அழிவ ரென்பது பற்றி பேணாமைபேணப்படுமென்றார். (௬)

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற அடுத்திருந்து

மாணாத செய்வான் பகை.

இ-ள். அடுத்திருந்து - தொழிலைத்தொடங்கியிருந்து, மாணாத(து தற்கு) ஏற்காதவைகளை, செய்வான் - செய்பவனது, பகை - பகைமை யை, கொடுத்தும் - சிலபொருள் (அழியக்) கொடுத்தாயினும், மனநி ச்சயமாக, கொளல்வேண்டும் - கொள்ளுதல்வேண்டும்-எ-று. (கருத் து) இல்லாதவற்றைச்செய் பவன் பகைமையைப்பொருள்கொடுத்தாயினுங்கொ ள்ளல்வேண்டுமென்பதாம். ஏற்காதவைமெலியவனாயிருந்து தணித லும், வலியவனாயிருந்து தணிதலும், முதலாயின. அப்பொழுது அதனா லே சிலபொருள்அழியினும் பின்னேபலபொருள்களைப்பெறுதற்குச்ச ந்தேகம் இல்லாமையால் கொடுத்துங்கொளல் வேண்டுமென்றவென்று [இவை ஆறுபாட்டாலும் அதுசிறப்புவகை[illegible]லசொல்லப்பட்டது. (எ)

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து.

இ-ள். (ஒருவன்) குணனிலனாய் - குணமொன்றுமிலனாய், குற்றம் பலவாயின் - (உடைய) குற்றம்பலவாகியவிடத்து, இனனிலனாம் - (அவ னு)துணையில்லாதவனாகும், (அவ்விலனாகுகையே) மாற்றார்க்கு - (அவன்)ப கைவர்க்கு, ஏமாப்புடைத்து - துணையாகுகையையுடைத்து-எ-று. (கரு த்து) குணமில்லாதவனாய்ப் பலகுற்றமுடையவனாகில் துணையில்லாத வனாவான் அவனைபகைவர்க்கெளியனென்பதாம். குணம் - இறைமாட் சியுள்ளே சொல்லப்பட்டவை, குற்றம் - இவ்வதிகாரத்துள்ளேசொல் லப்பட்டவையும், மற்றுமிப்படிப்பட்டவையும். ஆம். துணை-சுற்றமட் புப்பொருள் படைமுதலானவை, பகைவர்க்கும் இவ்வழியால்உண்டா கும்பயன்தானேஉண்டாமாகலால்-ஏமாப்புடைத்தென்றார். (அ)

செறுவார்க்குச் சேணிகவா வின்பமறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

இ-ள். அறிவிலா - (நீதியை)அறிதலில்லாத, அஞ்சும் - அஞ்சுகின் ற, பகைவர் - பகைவரை, பெறின் - பெற்றானாகில், செறுவார்க்கு - (அவ ரை) வெல்வார்க்கு, சேண் - உயர்வுள்ள, இன்பம் - இன்பங்கள், இகவா - நீ ங்கா-எ-று (கருத்து) நீதியையறியாத பகைவரைப் பெற்றால்வெல்பவர் க்கின்பம்-என்பதாம். உபாயமறிதலும், அறிந்தால் செய்துமுடிக்குந்தி டமும், இல்லாதவரே பகைவராதல்கூடாமையால்பெறினென்றமையா லவரை அறிந்துமேற்சென்றபொழுதே பகையில்லாமையும் செல்வமும் ஒருசேர அடைதலாலே. சேணுடையின்ப மிகவாவென்றும், சொல் லினார். (கூ)



கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி.

இ-ள். கல்லான் - (நீதிநூல்களைக்)கல்லாதவனோடு, வெகுளும் - பகைத் தலால்வரும், சிறுபொருள் - எளியபொருளை, ஒல்லானை - அடையாதவனை எஞ்ஞான்றும் - எக்காலும், ஒளி - புகழ், ஒல்லாது - அடையாது-எ-று(கருத் து)கல்லாதவனுடன்பகைத்தலால்வரும் பொருளையடையாதவனைப்புக ழடையாது.என்பதாம். சிறுபொருள்முயற்சிசிறிதாகியபொருள். நீதிய றியாதவனைவெல்லுதல் எளிதாயிருக்கவும் அதுமாட்டாதவனைவெற்றி யால்வரும்புகழ்கூடாதென்பதாம். ஆகவே இச்சிறியமுயற்சியாலேபெ ரியபயனடைகவென்றபடியாயிற்று. (இவைமூன்றுபாட்டாலும் அதனு லாகியபயன்சொல்லப்பட்டது) (ய)



# ௮௮-ஆம், அதி-பகைத்திறந்தெரிதல்.

அஃதாவது, மாட்சிமைப்படாதபகையை ஆக்குதற்குற்றமும், முன்னுள்ளபகையுள்-கட்பாக்குந்தன்மையதும், அவ்வாக்குந்தன்மையதும், அவைகளிலேசெய்வதும், மற்றைக்களையுந்தன்மையதும், அதவிடத்தேசெய்வனவும், களையும்வருவதும், களையாமற்போனால்படுமிழுக்கமும் என்றிவ்விதங்களை ஆராய்தல். இவையெல்லாம்மாட்சிமைப்படாதபகையின்வாகலால் இதுபகைமாட்சியின்பின்வைக்கப்பட்டது,

பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று.

இ-ள். ஒருவன்-ஒருவன், பகையென்னும்-பகையென்றுசொல்லப்படும், பண்பிலதனை-தீமையுண்டாக்குவதனை, நகையேயும்- விளையாட்டிடத்தேயாயினும், வேண்டற்பாற்றன்று-விரும்புதற்றன்மையையுடையதன்று, (நீதிநூல்)-எ-று. (கருத்து) ஒருவன்பகையாகிய தீமைக்குணத்தை விளையாட்டினும்விரும்பாதிருக்கக்கடவன்-என்பதாம். மாட்சிமைப்படாதபகையை ஆக்கிக்கொள்ளுதல்எவ்விதத்தாலும் தீமையேதருதலால்பண்பிலதென்றும், அதனைவிளையாட்டிடத்துவேண்டினும் அதுமேல்விளைந்துமெய்யாமாகலால்-நகையேயுமென்றும், வேண்டாமை பழமையோர்துணிவென்றதற்கு-நீதிநூல்மேல்வைத்தும், சொல்லினர். நீதிநூல்வருவிக்கப்பட்டது. (௧)

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.
௮௭௧

௮௭௨ ௮௮-ஆம்-அதி-பகைத்திறந்தெரிதல்.

இ-ள். (ஒருவன்) வில்லேர்-வில்லேராகவுடைய, உழவர்- உழவரோடு, பகைகொளினும்-பகைகொண்டாலும், சொல்லேர்-சொல்லேராகவுடைய, உழவர்-உழவரோடு, பகை-பகையை, கொள்ளற்க-கொள்ளாதொழியக்கடவன்-எ-று. (கருத்து) வீரர்பகையைக்கொண்டாலும் மந்திரிகள் பகையைக்கொள்ளாதிருக்கக்கடவன், சொல்லேருழவர்மந்திரிகள்-என்பதாம். சொல் ஆகுபெயராய்நீதிநூலின்மேல்நின்றது - வீரம் ஆலோசனையென்கிற ஆற்றல்களுள் வீரமேயுடையவரோடுபகைகொண்டால் வெல்லுவது நிச்சயமென்றுவந்தாலும்தனக்கேயாம். மற்றை ஆலோசனையுடையவரோடானால்தன்வமிசத்தோர்க்கும் தப்பாதுவருதலால். - அது கொள்ளினும்இதுகொள்ளற்கவென்றார். கொளினும்என்கிற உம்மையால்வில்லேருழவர்பகையும் ஆகாமைபெறப்படும். இரண்டுமுடையவரோடுகொள்ள லாகாமைசொல்லவேண்டாவாயிற்று. (௨)

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

இ-ள். தமியனாய்(தான்)தனியனாயிருந்துகொண்டு, பல்லார்-பலரோடும், பகைகொள்பவன்-பகைமையைக்கொள்வோன், ஏமுற்றவரினும்-பித்தங்கொண்டவரினும், ஏழை-அறிவிலன்-எ-று. (கருத்து) தனித்திருந்துபலர்பகையைக்கொள்பவன்பித்தரிலுமறிவில்லான்-என்பதாம், தனிமை சுற்றநட்புப்படைமுதலானவையில்லாமை, மயக்கத்தால் அவ்விருவரும் ஒப்பாராயினும்பித்தங்கொண்டவர் அதனுலேதீங்கடையாமையால்தீங்கடைதலுமுடையவிவனை அவரினுமேழையென்றார், இங்காவது-துணையுள்ளவிடத்தும்வெல்லுதலசந்தேகமாயிருக்க அத்துணையில்லாமலும் பலரோடும்பகைகொண்டு அவரால்வேறுவேறுபோர்செய்யிடத்தும் அழிந்தேவிடுதல். (இவைமூன்றுபாட்டாலும் பகைகொள்ளுதற்குற்றம் பொதுவினும்சிறப்பினுஞ்சொல்லப்பட்டது.) (௩)

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

இ-ள். பகை-பகையை, நட்பாக்கொண்டொழுகும்-(வேண்டியபோது வேறுபடுத்தித்தனக்கு) நட்பாகச்செய்துகொண்டொடுக்கும், பண்புடையாளன்-இயல்புடையவரசனது, தகைமைக்கண்-பெருமையுள்ளே, உலகு-உலகம், தங்கிற்று-தங்கியது-எ-று. (கருத்து) பகையைநட்பாகக் கொண்டொடுக்குமரசன்பெருமைக்குள்ளேயுலகந்தங்கியது-என்பதாம். வேறுபடுத்தல்-பகைநினைவொழிக்குதல், ஒழுகல்-நீதிவழிநடத்தல், பெருமை பொருள்படைஎன்றிவிருவகைஆற்றல். அதன்வழியதாதற்குஎன்றும் வேறுபாடில்லாமையால் அத்துணிவுபற்றித்தங்கிற்றென்றார். (௪)

அஅ-ஆம்-அதி-பகைத்திறந்தெரிதல். கூாஎ

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

இ-ள். தன்றுணை-தனக்குதவுந்துணையோவெனில், இன்று-இல்லை, பகை-(நலிவுசெய்யும்)பகையோவெனில், இரண்டு-இரண்டு, (இப்படியிருக்கின்றபோது)-தானொருவன்-ஒருவனாகியதான், அவற்றின்- அப்பகையிரண்டினுள், ஒன்று(பொருந்தியதாகிய)ஒன்றை, இன்றுணையா-(அப்போதைக்கு)இனியதுணையாக, கொள்க-(செய்து)கொள்ளக்கடவன்-எ-று, (கருத்து)தனக்குதவுந்துணையில்லவருத்தும்பகையிரண்டு- இவ்விரண்டிற்பொருந்தியதொன்றைக்கொள்ளக்கடவன்-என்பதாம். பொருந்தியதாவது, மற்றதைவெல்லுதற்குஏற்றது, அப்பொழுது- அவ்வெல்லும்பொழுது, வேறுபாடில்லாமல்செய்துகொள்கவென்றதற்கு - இன்றுணையாகவென்றார். ஆல்-இரண்டும்-அசை. (இவைஇரண்டுபாட்டாலும்நட்பாக்கற்றன்மையது சொல்லப்பட்டது.) (௫)

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

இ-ள். (பகைவன்)-தேறினும்(முன்)தெளிந்தானாயினும், தேறாவிடினும்-தெளிந்திலனாயினும், அழிவின்கண், (தனக்குப்புறத்தொருதொழிலால்)தாழ்வுவந்தவிடத்து, தேறான்-கூடானாகியும், பகாஅன்-நீக்கானாகியும், விடல்-(நடுவே)விட்டுவைக்கக்கடவன்-எ-று. (கருத்து) பகைவன் தெளிந்தானாயினுந் தெளிந்திலனாயினுந்தாழ்விடத்துக் கூடானாகியுநீக்

காணுகியுமிருக்கக்கடவன்) - என்பதாம்முன்தெளிந்தானுயினும் அப்போதுகூடாதொழிகவென்றது-உள்ளாய்நின்றுகெடுத்தனேக்கி,தெளிந்திலனுயினும்அப்போதுங்கூடாதொழிகவென்றது- அல்வழிவிற்குத்துணையாதனேக்கி.(இதனல் அப்[illegible]கருக்தன்மையது சொல்லப்பட்டது.).

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

இ-ள். நொந்தது-நொந்ததனை,அறியார்க்கு-(தாமாக)அறியாதவட்டோர்க்கு,நோவற்க-(தன்)னோவுசொல்லாதிருக்கக்கடவன். மென்மை-வலியில்லாமையை,பகைவரகத்து-(அதைப்பார்த்திருக்கும்) பகைவரிடத்து,மேவற்க-மேலிட்டுக்கொள்ளாதிருக்கக்கடவன்-எ-று.(கருத்து) நொந்ததையறியார்க்குத்தன்னோவைச்சொல்லாதிருக்கக்கடவன் - வலியில்லாமைப்பகைவரிடத்தமேலிட்டுக்கொள்ளாதிருக்கக்கடவனென்பதாம். பகைவரிடத்தேசெய்யலாகாததுசொல்லவந்தவர்-நட்பினரிடத்தே செய்யலாகாததும்உடன்சொல்லினர். (இதனல்அவ்விருவகை யிடத்துஞ் செய்வது சொல்லப்பட்டது.) (எ)

௩௱அ அஅ-ஆம்-அதி-பகைத்திறந்தெரிதல்.

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

இ-ள். வகையறிந்து-(தான்தொழில்செய்யும்)வகையை அறிந்து,தற்செய்து) அதுமுடித்தற்கேற்பத்)தன்னைப்பெருக்கி,தற்காப்ப- (மறதி அடையாமல்)தன்னைக்காக்கவே,பகைவர்கண்(தன்)பகைவரிடத்து பட்ட-உண்டாகிய,செருக்கு-களிப்புமாயும்-கெடும்,எ-று.(கருத்து) தொழில்வகையறிந்துதன்னைக்காக்கப்பகைவர்செருக்குங்கெடுமென்பதாம். வகைவலியவனுய்தான்கேடேபோர்செய் விதமும், மெலியவனுய்வலியிலேபோர்விலக்கும்விதமும்,முதலானவை,பெருக்கல்- பொருள்படைகளாலேபெருகச்செய்தல்களிப்புஇவ்வழியால்வெல்வோமென்றெண்ணிமகிழ்ந்திருத்தல்.இவ்விரண்டுமறிந்தாமே அடங்குவரென்பதாம்.(இதனற்களையுந்தன்மையதனிடத்துச்செய்வன சொல்லப்பட்டன.) (அ)

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

இ-ள். முண்மரம்-(களையவேண்டுவதாகிய) முள்ளுமரத்தை,இளைதாக-இளையதாகியநிலையிலே,கொல்க-களை[illegible]டவர், அல்லாமல்) காழ்த்தவிடத்து-முதிர்ந்தநிலையில்,(களையத்தொடங்கினல்) களையுநர்-களைபவரது-கை-கையை,கொல்லும்-(அதுதானே)களையும்-எ-று.(கருத்து)முள்ளாகியமரத்தையிளமையிற்களையக்கடவர் அதுமுதிர்ந்தால் களைபவர் கையைக்களையும்-என்பதாம்,(களையப்படுவதாகிய)தம்பகையை அது மெலிதாகியகாலத்தேகளைக அப்படிசெய்யாமல்வலிதாகியகாலத்திலேகளையத்தொடங்கினல்தம்மைஅப்பகைதானேகளையுமென்பது தோன்றநின்றமையால்இதுபிறிதுமொழிதலணி.(இதனற்களையும்பருவஞ்சொல்லப்பட்டது) (௯)

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்

செம்மல் சிதைக்கலா தார்.

இ-ள்- செயிர்ப்பவர்-(தம்மோடு)பகைப்பவரது, செம்மல்- தருக்கை, (கெடுக்கலாயிருக்க)சிதைக்கலாதார்(இகழ்ச்சியால்) கெடுக்காதவரசர், உயிர்ப்ப-(பின்)மூச்சுவிடுமாததிரத்திற்கும், மன்ற-நிச்சயமாக, உளரல்லர் இறந்தவரல்லர்-எ-று.(கருத்து)பகைப்பவர்செருக்கைக் கெடுக்காதவரிறப்பவர்-என்பதாம். அவர்வலியவராய்த்தம்மைக்கொல்லுதல் நிச்சயமாகலால்இறந்தாரேயாவரென்பதாம்,(இதனுல்கொல்லுமவழிப்படும் இழுக்கு ச்சொல்லப்பட்டது.) (ல)



## அகூ-ஆம், அதி-உட்பகை.

அஃதாவது, புறப்பகைக்கு இடமாக்கிக்கொடுத்து அதுவெல்லுமளவும் உள்ளாய் நிற்கும்பகை - இதுவும் கொல்லப்படுவதிலே சேர்ந்ததாகலால் பகைதிறம் தெரிதலின்பின் வைக்கப்பட்டது.

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்

இ-ள். (ஒருவனுக்கு) நிழனீரும் - (அநுபவிக்கப்படுவனவாகிய) நிழலும் நீரும், இன்னாத - (முன் இன்பஞ்செய்வனவாயினும்பின்)நோய்செய்யுமவை, இன்னா - இனியனவல்லவாம், (அதுபோல்(தமர்நீரும்-(முன்வேண்டுவனவாகிய) தம்மவரியல்புகளும், இன்னாசெயின் - (முன் இன்பஞ்செய்வன வாயினும்பின்) துன்பஞ்செய்யுமாயின், இன்னாவாம் - இனியனவல்லவாம் -எ-று(கருத்து) ஒருவனுக்குநிழலுநீருநோய் செய்யுமதுபோலத்தம்மினத்தாரியல்புகளுந் துன்பஞ்செய்யும்-என்பதாம். நோய் - பெருங்கால்-பெருஞ்சிதமுதலானவை, தமரென்றதனுல் - உட்பகையாதற்குரிய ஞாதிகளெனவருக. இன்னசெயல் - முன்வெளிப்படாதிருந்து துணைபெற்றவழிகெடுத்தல். (க)

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு,

இ-ள். வாள்போல் - வாள்போலே, (வெட்டுவோமென்று வெளிப்பட்டுநிற்கும்)-பகைவரை - சத்துருக்களை, அஞ்சற்க - அஞ்சாதிருக்கக்கடவர். (அப்படியில்லாமல்), கேள்போல்-உறவினர்போல (மறைத்துநிற்கும்), பகைவர்-பகைவரது, தொடர்பு-நட்பை, அஞ்சுக-அஞ்சக்கடவர்.எ-று.(கருத்து) வெட்டுவோமென்னும் பகைவர்க்கஞ்சாதிருக்கக்கடவர். உறவினர்போலிருக்கும் பகைவர்க்கஞ்சக்கடவர்-என்பதாம், முன்னே அறிந்துகாக்கப்படுதலால் - அஞ்சற்கவென்றும், அப்படி அறியவும் காக்கவுங்கூடாமையால்கெடுதல் நிச்சயமென்பதுபற்றி அஞ்சுகவென்றும், சொல்லினர்-பின்செய்யும்பகையினும் கொடிதாகலானும், காக்குங்காலம் அதுவாகலானும், அஞ்சப்படுவது முன்செய்த அவர்நட்பாயிற்று (இவ்விரண்டுபாட்டினும் உட்பகையாகா தென்பது சொல்லப்பட்டது.) (உ)

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

இ-ள். உட்பகை - உட்பகையாயினோரை, அஞ்சி-பயந்து, தற்காக்க - தன்னைக்காத்துக்கொண்டு நடக்கக்கடவர், (அப்படி நடவாதபோது) உலைவிடத்து - (தனக்கு) தளர்ச்சிவந்தவிடத்து, மட்பகையின்



(குயவன்) மட்கலத்தை அறுக்கும் ஆயுதம்போல், மாண - தப்பாமல், தெறும் - (அவர்) கெடுப்பர்-எ-று. (கருத்து) உட்பகைக்கஞ்சித் தன்னைக்காக்கக்கடவர், காவாவிடிற்பகைவர்கெடுப்பர்-என்பதாம், காத்தல்-அவரை நம்பாமலும் அவருக்கு உடம்படாமலும், பரிகரித்தல். பகையை தோன்றாமல் உள்ளாயிருந்தே கிழறுத்தலால் கெடுதல்தப்பாதென்பதாம். (௩)

மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
ஏதம் பலவுந் தரும்.

இ-ள். மனமாணா - (புறத்திருந்தது போன்று) அகத்திருந்தாத, உட்பகை-உள்ளுட்பகை, தோன்றின் - (அரசனுக்கு) உண்டாமாயின் (அது), இனமாணா சுற்றம், (வசப்படாமைக்கு ஏதுவாகிய) ஏதம்பலவும்-குற்றம்பலவும், தரும்-(அவனுக்குத்) தரும-எ-று, (கருத்து) அரசனுக்குட்பகையுண்டாயின், பலகுற்றமுந்தரும்-என்பதாம். ௦ அவை-சுற்றத்தாரை உள்ளாயின்று வேறுபடுதலும் அதனால், அவர்வேறுபட்டவிடத்தே தான்தேறுமையும், பின் அவைகளால் வினை வனவும், ஆம்,

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையான்
ஏதம் பலவுந் தரும்.

இ-ள், உறன்முறையான்-(புறத்தில்) உறவுமுறைத் தன்மையோடு கூடிய, உட்பகை-உட்பகையானது, தோன்றின் (அரசனுக்கு) உண்டாயின் (அது), இறன்முறையான் - இறத்தன்முறைமையோடு கூடிய; ஏதம்பலவும் - குற்றம் பலவற்றையும், தரும்-(அவனுக்குக்) கொடுக்கும்-எ-று(கருத்து) உறவின்முறை யுட்பகை யரசனுக்குத்தோன்றினத பலகுற்றத்தையுந் தரும்-என்பதாம், ௦ அவை புறப்பகைக்குத் துணையாய் நின்றே அது தோன்றாமல் கொல்லுவிக்கமுதலாகிய வஞ்சனை செய்தலும், மந்திரிகள்முதலாகிய அங்கங்களைதேய்த்தலும், முதலானவை. ௫

ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது.

இ-ள். ஒன்றாமை - பகைமை, ஒன்றியார்கண் - (தனக்கு) உள்ளாயினோரிடத்து, படின் - உண்டாகுமாயின், பொன்றாமை-இறவாமை ஒன்றல் - (அரசனுக்குக்) கூடுதல், எஞ்ஞான்றும்-எக்காலும், அரிது-அருமை-எ-று.(கருத்து) தனக்குள்ளாயினோரிடத்துப் பகையுண்டாயின் அரசனுக்கிறத்தலைத்தரும்-என்பதாம். ௦ பொருள்படைமுதலாகிய உறுப்புக்களாலே பெரியனாகியகாலத்து மெய்யுற்று-எஞ்ஞான்றும் மென்றார், (இவை எனகுபாட்டாலும் அதனால்தனக்குவரும் இறுகு சொல்லப்பட்டது.



செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே

யுட்பகை யுற்ற குடி.

இ-ள். செப்பின் - செப்பினது. புணர்ச்சிபோல்-புணர்ச்சிபோல கூடினும் -(புறத்தே வேற்றுமைதெரியாமற்) கூடினராயினும், உட்பகை-உள்ளிட்டதுப்பகை, உற்ற-உண்டாகிய, குடி-குடியிலுள்ளார், கூடாதே-(அகத்தேதம்முட்) கூடார்-எ-று. (கருத்து) உள்ளிற்பகைபொருந்திய குடியிலுள்ளார் செப்பின் மூடிபோற்கூடினராயினு மனவொற்றுமையிற் கூடாரென்பதாம்.௦ செப்பினபுணர்ச்சிசெப்புமேல் மின் மூடியோடு புணர்ந்தபுணர்ச்சி; அவர்உட்பகையால் மனம்வேறுபட்டமையால் அப்பகைபெற்றவிடத்தே வேறுவேறுவரென்பதாம். (௭)

அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

இ-ள். (முன்வளர்ந்துவந்ததாழினும்)உட்பகையுற்றகுடி-உட்பகையுண்டாகியகுடியானது. அரம்பொருத - அரத்தினாலேதேய்க்கப்பட்ட பொன்போல - இரும்புபோல, பொருது-(அதனாலே) தேய்க்கப்பட்டு உரம்-வலிமை, தேயும்-தேய்ந்துபோம்-எ-று. (கருத்து)உட்பகைபொருந்திய குடியானது அரத்தினாலே தேய்க்கப்பட்ட இரும்புபோலக்கெடும்-என்பதாம்௦ காரியஞ்செயவதுபோன்று பொருதி மெல்லமெல்லப் பரிசயித்தலால் வலிமைதேய்த்துவிடு மென்பதாம்-இவை இரண்பொட்டாலும் அவன்குடிக்குவரும் தீங்குசொல்லப்பட்டது.) (௮)

எட்பகவன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

இ-ள். உட்பகை-(அரசனது) உட்பகை, (அவன்பெருமையை நோக்க)-எட்பகவன்ன - எள்ளின்பிளவையொத்த, சிறுமைத்தேயாயினும்-சிறுமையுடையதேயாயினும், கேடு -(அப்பெருமையெல்லாம் அழியவரும்)கேடு, உள்ளதாம்-(அதி) கந்ததாம்-எ-று. (கருத்து)உட்பகையெட்பிளப்பிற் கொப்பான சிறிதாயினுங் கேடுண்டாம் -என்பதாம்.௦ மிகவும்பெரியகேட்டுக்கு எல்லவருமளவும் மிகவுஞ்சிறிய உட்பகையுள்ளே அடங்கியிருந்துவந்தால் வெளிப்பட்டுநிற்குமென்பதாம்.(இதனால்சிறிதென்று இகழப்படாதென்பதுசொல்லப்பட்டது. ௯

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

இ-ள். உடம்பாடிலாதவர்-மனப்பொருத்த மில்லாதவரோடு, வாழ்க்கை (ஒருவன்) கூடிவாழும்வாழ்வு. குடங்கருள்-ஒருகுடிசையினுள்ளே, பாம்போடு-நாகப்பாம்போடு. உடனுறைந்தற்று - கூடிவாழ்ந்தாற்போலும்.-எ-று.(கருத்து) மனவொத்துமையில்லாருடன் கூடி வாழு



ம் வாழ்க்கையானது ஒருகுடிசையுள்ளே பாம்புடன் கூடி வாழ்ந்தாற்போலாம்-என்பதாம்.௦ இடச்சிறுமையாலும்பழக்கத்தாலும் பாம்பினாலே கடிக்கப்படுதல் நிச்சயமாம்.ஆகவே அவ்வுமையால் அவ்வாயிரு மூடிவுவருதல் நிச்சயமென்பதுபெற்றும்.(இதனாலே கண்ணோட்டஞ்செய்யாதவரைக் கடியக்கடவனென்பதுசொல்லப்பட்டது.) ௰

# ௯௰-ஆம், அதி-பெரியாரைப்பிழையாமை.

இ-ள்- நெஞ்சின் - நெஞ்சினால், பிற-வேறுபொருள்களை, பேணிப்
ஆசைப்பட்டு, (அவைகொடுப்பவரை) புணர்பவர் - (அவைகாரணமா
க மெய்யினாலே) புணருமகளிரது, தோள்-தோள்களை, நிறைநெஞ்சமி
ல்லவர் - திடக்செய்தலினாலே (நிறுத்திய) நெஞ்சமில்லாதவர், தோ
ய்வர்-சேர்வர்—எ-று. (கருத்து) நன்மனமில்லாதவர் வேசையர்தோள்
களைச்சேர்வார் - என்பதாம். ரு பொருளும் அதனால் படைக்கப்படுவன
வும் - விரும்பிநெஞ்சு அவை மேலிருத்தலால் புணர்வது அவருட
ம்புமாத்திர மென்பதறிந்து அதன்வழி ஓடாது நிற்குநெஞ்சையுடையார்
தோயாமையால்- அஃதில்லாதார்தோய்வரென்றார். (எ)

ஆயுமறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

இ-ள்- மாயமகளிர் (உருவுசொற்செயல்களால்) வஞ்சித்தலில்வ
ல்லமகளிரது, முயக்கு - புணர்ச்சியை, ஆயும் -(அல்லவற்றை) ஆ
ராய்ந்தறியும், அறிவினரல்லார்க்கு - அறிவுடையவரல்லாதவர்க்கு, அ
ணங்கு-அணங்குதாக்கு, என்ப-என்று (நூலோர்) சொல்வர்—எ-று.
(கருத்து) அறிவில்லார்க்கு வேசையர் புணர்ச்சியை நூலோரணங்கெ
ன்பவர்-என்பதாம். ரு அணங்குகாமவழியால் உயிர்கொள்ளும் தெய்வ
மகளிர். தாக்கு- தீண்டல்-இவ்வுருவகத்தால்- அப்புணர்ச்சி முன்னே
சுக

௯௨-ஆம்.—வரைவின்மகளிர்,

இனிதுபோலேதோன்றிப் பின்பு உயிர்கொள்ளுதல்பெற்றும். இதனு
லோர்அணங்கென்பதுதேர்ந்த அவர் மேல்வைத்துச்சொல்லினர். (அ)

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

இ-ள். வரைவிலா-(உயர்ந்தோர் இழிந்தோரென்றுவரைவின்றிக்கொடுப்
பவர் யாவரையும்) கூடும், மாணிழையார் - மாட்சிமைப்பட்ட ஆபரண
ந்தையுடையவராகிய, மென்றோள் - மெல்லியதோள்கள், புரையிலா (அ
க்குற்றத்தையறியும் அறிவில்லாத, பூரியர்கள்- கீழ்மக்கள், ஆழும் (பு
குந்து) அழுந்தும், அளறு - நரகமாம்—எ-று. (கருத்து.) வேசையர்
தோள்கள் கீழ்மக்களழுந்தும் நரகமாம் - என்பதாம். ரு சாதிவரைவிறந்து
ரை நீக்குதற்கு - புரையிலாம் பூரியர்களென்றும், அவராழ்தற்கேது
உருவுமுதலாகிய மூன்றுமேயென்பதுதோன்ற - மாணிழையார் மெ
ன்றோளென்றும், அவர்க்குமாகத்தைத் தடையில்லாமல் தருமென்பது
தோன்ற உருவகமாக்கியும், சொல்லினார். (௯)

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

இ-ள். களித்தானை- (கள்ளுண்டு) களித்த ஒருவனை, காரணங்காட்டுதல் - (இது ஆகாதென்று மற்றொருவன்) காரணங்காட்டித் தெளிவித்தல், கீழ்நீர்க்குளித்தானை - நீருள்ளே மூழ்கிய ஒருவனை, தீ- விளக்கினால், துரீஇயற்று - (மற்றொருவன்) தேடுதலையொக்கும்—எ-று. (கருத்து.) கட்குடித்தவனைத் தெளிவித்த லெதுபோலெனில் நீருள்ளே மூழ்கினவனை விளக்கினாற்றேடுதலொக்கும்-என்பதாம். உ நீருள் விளக்கு செல்லாமைபோல் அவன்மனத்துள் காரணம் செல்லாதென்பதாம். இதனுலவனைத் தெளிவித்தல் முடியாமைசொல்லப்பட்டது.] (௯)

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

இ-ள். (கள்ளுண்பவனொருவன்)-கள்ளுண்ணாப்போழ்தில், கள்ளுண்ணாமல் தெளிந்திருந்தபொழுதில், களித்தானை- (கள்ளுண்டு) களித்தவனை, காணுங்கால்-காணும்போது, உண்டதன்சோர்வு -(தான்) உண்டபொழுது உண்டான்தன்சோர்வை, உள்ளான்கொல் - (அவன்சோர்வால் அறிவில் இப்படிப்பட்டதென்று) நினையான்போலும்—எ-று. (கருத்து.) கள்ளுண்பவன் தான்குடியாதபோது குடித்தவனைக்கண்டு தன் சோர்வை நினையான்போலும்-என்பதாம். உ சோர்வு மனமொழி மெய்கள் தன்வசப்படாமை. [கருத்தாவையால்- அதனிழுக்கத்தை ஆலோசித்து அறிந்தால்-ஒழியுமென இதனால் அது ஒழிதற்காரணம் சொல்லப்பட்டது.] (௰)

௯௩ - ஆம் அதி - ஸூ.

இ-ள். காலை - (அறம்பொருளின்பங்களுக்கு விதித்த) காலம், கழகத்து - சூதாடுமிடத்து, புகின் - (அரசனுக்குக்) கழியுமாயின், (அக்கழிவு) பழகிய - பழமையாய்வந்த, செல்வமும் - (அவன்) செல்வத்தைப், பண்பும் - நற்குணங்களையும், கெடுக்கும் - அழிக்கும் — எ-று. (கருத்து) அரசன் சூதாடில் அவ்வாட்டமவன் செல்வத்தையுங் குணத்தையும் அழிக்கும் - என்பதாம். * தான் செய்துகொள்ளும் அறமுதலானவையாத் திரமல்லாமல் முன்னோரைத் தொடங்கிவருகின்ற செல்வமும், முன்செய்த நல்வினையினாலாகிய நற்குணங்களும் இல்லாமற்போமென்பதாம்.(எ)

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

இ-ள். சூது - சூதாட்டமானது, பொருள்கெடுத்து - (தன்னைப்பற்றினவனது) பொருளைக்கெடுத்து, பொய் - பொய்யை, மேற்கொளீஇ - மேற்கொள்ளப்பண்ணி, அருள்கெடுத்து - (மனதில் எழுகிற) அருளைக்கெடுத்து, (இவ்வழியால்,—) அல்லலுழப்பிக்கும் - அவனை (இருமையிலும்) துன்பமுறுவிக்கும் — எ-று. (கருத்து.) சூதாட்டமானது பொருளைக்கெடுத்துப் பொய்யைமேற் கொள்ளச்செய்து அருளையுங்கெடுத்துத் துன்பத்தை விளைவிக்கும் - என்பதாம். * பொருள்கெடுத்தல் முதலாகிய மூன்றும் சூதினுடைய தொழில்களாகவும், அவைகளுக்கு - நேரப்பற்றி கோபம் என்பன முறையே சாதனங்களாகவும், கொள்க, முன்வருதல் - இம்மையிலும், பின்னவைகளால் மறுமையிலும், ஆம்.(அ)

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையவா மாயங் கொளின்.

இ-ள். (அரசன்) ஆயம் - சூதினை, கொளின் - (தனக்குவினைத் தொழிலாக) விரும்புவானாயின், ஒளி - ஒளியும், கல்வி - கல்வியும், செல்வம் - செல்வமும், ஊண் - ஊணும், உடை - உடையும், என்றைந்தும் - என்கிறவைந்தும், அடையாவாம் - (அவனைச்) சேராவாம் — எ-று. (கருத்து) அரசன் சூதாட்டத்தை விரும்புவானாகில் கீர்த்தியும் கல்வியும் செல்வமுமூணுமுடையுமவனைச் சேராவாம் - என்பதாம். * ஆயம் சூதுக்கு ஆகுபெயர், இம்முறை செய்யுளுக்கியையப் பிறழ்ந்தது. செ ம - அதுவகை உறுப்புக்கள். ஊணுடையென்பவைகளால் அநுபவிப்பவனெல்லாம் கொள்ளப்படும். காலமும் கருத்தும், பெறுவ

இவை உண்டாகாவென்பதாம். [இவை நான்குபாட்டானும் சிறுமைப லசெய்து. அவைகளால் இருமையுங்கெடுத்தல் சொல்லப்பட்டது.] (௯)

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

இ-ள். இழத்தொறூஉம் - (சூதாடலால் இருமைப்பயன்களையும்) இழக்குந்தோறும், காதலிக்கும் - (அதன்மேலே) ஆசைசெய்யும், சூதே போல் - சூதனைபோல், உயிர் - உயிரானது, துன்பமுழத்தொறூஉம் - (உடம்பால்) நோவகைத் துன்பங்களையும் அனுபவிக்குந்தோறும், காதற்று - (அதன்மேலே) ஆசையையுடைத்து — எ-று. (கருத்து.) இருமைப்பயன்களை யிழக்குந்தோறுஞ் சூதினையிச்சிக்குஞ் சூதன்போல் உயிரானது துன்பங்களை யனுபவிக்குந்தோறு மதன்மேலாசையுடையது - என்பதாம். * சூது ஆகுபெயர். உயிரினது அறியாமை சொல்லுவார்போன்று சூதனது அறியாமை சொல்லுதல் கருத்தாகலின் அதனைஉறுதிப்படுத்தற்பொருட்டு உவமானமாக்கினர். [இதனெதிர் மறைமுகத்தால் சூதைவெறுத்து நடப்பவனையொக்கும் உடம்பினைவெறுத்து நடக்கின்ற உயிரெனவுங்கொள்க.] இதனால் அதைவிடுதற் கருமையும் விட்டவரது பெருமையும் சொல்லப்பட்டன. (௰)

## ௯௫ - ஆம், அதி - மருந்து.

பழவினையாலும் காரணங்களாலும் மனிதர்க்கு வாதமுதலாகிய பிணிக வரும் அவைகளுள் பழவினையால் வருவன அவ்வினை கழியும்போதல்லாமல் தீராமையால் அவையொழித்து மற்றைக்காரணங்களால்வரு மவைகளைத் தீர்க்குமருந்தின் திறம்சொல்லுகின்றார். காரணங்களாவன - உணவு தொழில்களது ஒவ்வாமையாதலால் பிணிகளும்காரணங்களால் வருவனவாயின.

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

இ-ள். (உணவும் செயல்களும் ஒருவன் சரீரசுபாவத்துக்கு ஒத்தளவினவன்றி) மிகினும் - (அதனின்) மிகுமாயினும், குறையினும் - குறையுமாயினும், நூலோர் - ஆயுள்வேதமுடையோரால், வளிமுதலா - வாதமுதலாக, எண்ணிய - எண்ணப்பட்ட, மூன்று - மூன்றுநோயும், நோய் - துன்பத்தை, செய்யும் - (அவனுக்குச்) செய்யும் — எ-று. (கருத்து.) உணவுத்தொழிலு மிகுந்தாலுங் குறைந்தாலும் பிணிமூன்றுந் துன்பஞ்செய்யும் - என்பதாம். * நூலோரெண்ணியவெனவே அவர் அவைகளால் வருத்தலாதப்பகுதி - பித்தப்பகுதி - சிலேஷ்மப்பகுதி - என்கிற

௪௨

கொள்ளாமையும்,
சுவைவீரியங்களால்
தம்முள்ளே மாறுகொள்
ளாமையும், ஆம்.
அவையாவன முறையே
உணவு வாத பித்த
சிலேஷ்மங்களாகிய
சரீரசுபாவங்களுக்கு
அடைபடாதவைகளைச்
செய்வனவாதலும். *
பெரும்பொழுது o

சிறுபொழுது என்கிற
காலவேறுபாடே தான்
ஒன்றற்கு ஆவன
பிறிதொன்றற்கு
ஆகாமையும், தேறுவம்
பொய் யும் தம்முள் ஒத்து
வந்தாதல் போலவனவும்,
ஆம் அவைகளைக் குறிக்
கொள்ளாது
மனம்பட்டவழியால்
உண்டால் அதனால்

சோயும் மாணாரும்

வருத்தலால்-கண்டப்

பிடித்தென்றார்.

(௫)

மாறுபா

டில்லாது வண்டி

மருந்துண்ணி

ஊறுபா டில்லை யுயிர்க்கு.

இ-ள். மாறுபாடில்லாத - அம்மூவகை மாறுகோளும் இல்லாத, உண்டி - உணவை, மறுத்து-(தன்னுள்ளம் வேண்டியவளவை) மறுத்து, (பிணிவாராதவளவில்) (உண்ணின்-ஒருவன்) உண்டால், உயிர்க்கு (அவ) னுயிர்க்கு, ஊறுபாடு- (பிணிகளாலே) துன்பம்விளைதல், இல்லை-உண்டாகாது—எ-று. (கருத்து) நல்லுணவையுண்டாற் பிணிகளாற் றுன்பமில்லை-என்பதாம். * துன்பமுறுவது உயிரே யாதலால் அதன்மேல் வைத்துச் சொல்லினர். மாறுபாடில்லாத விடத்தும் குறைதல் நன்றென்பதாம். [இவைநான்குபாட்டாலும் உண்ணப்படுவனவும், அவை வினைவும், காலமும், பயனும் சொல்லப்பட்டன.] (௬)

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்

கழிபே

ரிரையான்க ணோய்.

இ-ள். இழிவறிந்து-அக்குறைதலை (நல்லதென்று) அறிந்து, உண்பான்கண் - (அவ்வாறே) உண்பவனிடத்து, இன்பம்போல் - இன்பத்தைப்போல், கழிபேரிரையான்கண் - மிகப்பெரிய இரையை விழுங்குவோனிடத்து, நோய்- நோயானது, நிற்கும் - நீங்காதிருக்கும்—எ-று.

* பெரும்பொழுது- கார்-கூதிர்-முன்பனி-பின்பனி-இளவேனில்-முதுவேனில்.

0 சிறுபொழுது-மாலை-யாமம்-வைகறை-காலை-நண்பகல்-எற்பாடு.

(கருத்து.) குறைவாக வுண்பவனிடத் தின்பம்போல் நிறைவாக வுண்பவனிடத்துத் துன்பமிருக்கும்-என்பதாம். ✱ அவ்வாறே யுண்டல்-உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது- வாதமுதலாகிய மூன்றும் தன் தன்னிலையில் வேறுபடாமையால் - மனமொழிமெய்கள் அவன் வசப்படலும், அதனால் அறமுதலாகிய நான்கும் அடைதலும், ஆம் இரையை அருந்துமளவன்றி எடுத்து அதனால் வருந்தும் மிகுத்தோடொத்தலால்-இரையானென்றார். (௬)

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

இ-ள். தெரியான்- (தன்சரீரசுபாவமும் அதற்கேற்றவுணவும் காலமும் ஆராயானாகி, (வேண்டியவுணவை வேண்டியகாலத்து)—தீயளவன்றி - (வயிற்றுத்) தீயளவல்லாமல், பெரிதுண்ணின் - (ஒருவன்)மிகவுண்ணுவானாயின், நோய்-நோயானது, அளவின்றி- அளவில்லாமல், படும் - (அவனிடத்தே) வளரும்—எ-று. (கருத்து.) சீரணித்த தறியாதவனாய் மிகவுண்பானுயில் நோயவனிடத்துண்டாம் - என்பதாம். ✱ [இவை இரண்டுபாட்டாலும் அப்படி உண்ணுதலிடத்தேயும் இருக்குஞ் சொல்லப்பட்டது.] (௭)

நோய்நாடிநோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

இ-ள். (மருத்துவன்)நோய் - நோயாளியிடத்து (நிகழ்கின்ற) நோயை, நாடி - (அதன் குறிகளால் இன்னதென்று) துணிந்து; நோய்முதல் - (பின்பு) அந்நோய்வருதற் காரணத்தை, நாடி - ஆராய்ந்து, அது தணிக்கும்வாய்-(பின்) அதுநீர்க்கும் உபாயத்தினை, நாடி- அறிந்து, வாய்ப்பச்செயல் - (அதனைப்) பிழைபடாமற் செய்யக்கடவன்—எ- று. (கருத்து.) வைத்தியன் வியாதியையு மதன்காரணத்தையு மதுநீக்கு முபாயத்தையு மாராய்ந்து மருத்துவஞ்செய்யக்கடவன் - என்பதாம். ✱ காரணம் - உணவுசெயலென மூன்சொல்லப்பட்டவை. அவ்விரண்டையும் நாடிதற்குப்பயன்- நோயையும், உபாயத்தையும், ஐயமறத்துணிதல்— மருந்துசெய்தல் - உதிரங்களைதல்- அறுத்தல் - சுடுதல் முதலாகிய செயல்களெல்லாம் அடக்குதற்கு அதுதணிக்கும் வாயென்றார். பிழைபடாமை பழையமருத்துவர் செய்துவருகின்ற முறையிலேதப்பாமை. (௮)

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

இ-ள். கற்றான் - (ஆயுர்வேதத்தைக்) கற்றமருத்துவன், (அவ்வுபாயத்தைச் செய்யுங்கால்)—உற்றானளவும் - நோயாளியளவையும், பிணியளவும் - (அவனிடத்து நிகழ்கின்ற) நோயினளவையும், காலமும்

(தன்செயற்கேற்ற) காலத்தினையும், கருதி- (அந்நூல்வழியால்) நோக்கி, செயல்- (அவைகளோடு பொருந்தச்) செய்யக்கடவன்—எ-று. (கருத்து.) மருத்துவன் பிணியாளியளவையும் பிணியளவையுங் காலத்தினளவையுமறிந்து பொருந்தச்செய்யக்கடவன் - என்பதாம் * நோயாளியளவு-சரீரசுபாவம் - பருவம் வேதனைகளினளவு; பிணியளவு ० சாத்தியம்- அசாத்தியம் - யாப்பியம் -எனகிற- சாதிவேறுபாடும், தொடக்கமுதலியவற்றானும்- அதன்-பருவவேறுபாடும், வன்மைமென்மைகளும், முதலாயின, காலம் முன்சொல்லியது - இம்மூன்றும் தப்பாமல் நூல்வழியாலும், அறிவு மிகுதியாலும், ஆராய்ந்துசெய்க வென்பதற்கு, கற்றான்கருதிச்செயலென்றார். [இவை இரண்டுபாட்டானும் அவ்விழுக்கம் வந்தவிடத்துத் தீர்க்கும்வழி சொல்லப்பட்டது] (௯)

உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

இ-ள். மருந்து- (பிணிக்கு) மருந்தாவது, உற்றவன்- (அதனை) யுற்றவன்; தீர்ப்பான்- (அதனைத்) தீர்க்குமருத்துவன், மருந்து- (அவனுக்குச்சாதனமாகிய) மருந்து, உழைச்செல்வான் - (அதனைத்தப்பாமல்) செய்பவன், என்று- என்றுசொல்லப்பட்ட, அப்பால் - அந்நான்கு பகுதியையுடைய, நாற்கூற்றே- நான்குநிறைந்தது—எ-று. (கருத்து) பிணிக்கு மருந்தாவது நோயாளி வைத்தியன் மருந்து பெறுபவன் இந்நான்கும்- என்பதாம் * அவைகளுள் உற்றவன்-வகை நான்காவன, பொருளுடைமை- மருத்துவன் வழிநிற்றல், நோய்நிலையுணர்த்தல் வன்மை- மருந்துத்துன்பம் பொறுத்தல் எனவிவை தீர்ப்பான்வகை நான்காவன நோய்ப்பார்த்தற்கஞ்சாமை - ஆசிரியனைவழிப்பட்டு அடைந்தகல்வி நன்னறிவுடைமை- பலகாலும் தீர்த்துவருதல் மனமொழிமெய்கள் பரிசுத்தமாதல்- எனவிவை, மருந்தின்வகை நான்காவன, பலபிணிகளும் ஏற்றல்- சுவைவீரியம்- விளைவாற்றல்களால் மேம்படுதல்- எளிதிலே பெறப்படுதல்- சரீரசுபாவத்தோடு பொருந்தல் எனவிவை, இயற்றுவான் வகை நான்காவன, நோயாளியிடத்தே அன்புடைமை-மனமொழிமெய்கள் பரிசுத்தமாதல்- சொல்லிய படியே செய்தல் வல்லமை - அறிவுடைமை- எனவிவை, இவையெல்லாம் கூடியவிடத்தல்லது பிணி தீராமையால் இக்கூட்டத்தை மருந்தென்றார். [இதனால் அவன் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாம் தொகுத்துச் சொல்லப்பட்டது.] (௰)

---

० சாத்தியம்- தீர்க்கத்தக்கது, அசாத்தியம்- தீர்க்கத்தகாதது, யாப்பியம்-இட்டத்தக்கது.



# ஒழிபியல்.

இனி அவ்வரசியல் முதலானவைகளிலே அடங்காதொழிந்தவைகளை யொழிபென்னப் பதிமூன்றதிகாரத்தினாலே சொல்லத் தொடங்கி முதலிலே குடிமை சொல்லுகிறார்.

# ௯௬-ஆம், அதி-குடிமை.

அஃதாவது, உயர்ந்த குடியிலிடத்தும் பிறந்தவரது தன்மை. உயர் குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் அவசியம் வேண்டுவதாகலின் அச்சிறப்புப்பற்றி முன்வைக்கப்பட்டது.

இற்பிறந்தார்கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

இ-ள். செப்பமும்- செம்மையும், நாணும்-நாணமும, ஒருங்கு-ஒன்றுசேர- இற்பிறந்தார்கண்ணல்லது - உயர்ந்த குடியிலே பிறந்தவரிடத்தல்லாமல் (பிறரிடத்தே—இயல்பாக) சுபாவமாக, இல்லை - உண்டாகா—எ-று. (கருத்து.) செம்மையும், நாணமும் - நற்குடியிற்பிறந்தவர்க்கல்லது மற்றவர்க்கில்லை.என்பதாம், * செம்மை, கருத்தும் - சொல்லும்- செயலும், தம்முள்ளே மாறுபடாமை. நாணம் பழிபாவங்களின்ம டங்குதல், இவ்வ இற்பிறந்தார்க்கானல் ஒருவர் கற்பிக்கவேண்டாமல் தாமே உண்டாகும், பிறர்க்கானல் கற்பித்தவிடத்தும் கெடிதாகில்லா வென்பதாம். (௧)

ஒழுக்கமும்வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

இ-ள். குடிப்பிறந்தார்- உயர்ந்தகுடியிலே பிறந்தவர், (தமக்குரிய) ஒழுக்கமும்-நன்னடக்கையும், வாய்மையும்- மெய்ம்மையும், நாணும்-நாணமுமஆகிய, இம்மூன்றும்- இம்மூன்றிடத்தும், இழுக்கார- தாமறிவதல்லாமல் தாமாகவே வழுவார்—எ-று. (கருத்து.) உயர்ந்த குடியிற்பிறந்தவர் நன்னடக்கை- சத்தியம்- வெட்கம் இம்மூன்றிலுந்தவறார்- என்பதாம், * ஒழுக்கமுதலாகிய மூன்றும மெய்மொழி மனங்களுக்கு உரியனவாதலால்- அம்முறை வைக்கப்பட்டன. இழுக்கல் - தாமறியாது வருதலால்- இழுக்காரென்றார். (௨)

நகையீகையின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

இ-ள். வாய்மை- (எக்காலத்தும்) வேறுபடாத, குடிக்கு - குடியிற் பிறந்தவர்க்கு, (வறியவர் சென்றவிடத்து)—நகை - முகமலர்ச்சியும்



ஈகை- (உள்ளவை) கொடுத்தலும், இன்சொல்- இன்சொற் (சொல்லுதலும்)—இகழாமை- இகழாமையும் ஆகிய, நான்கும்- இந்நான்கும், வகை-(உரிய)வகையாகும், என்ப- என்று(நூலோர்)சொல்லுவர் -எ-று. (கருத்து.) நற்குடியிற் பிறந்தவர்க்குமுகமலர்ச்சி கொடுத்தல் இன்சொல இகழாமை இந்நான்குமுரித்தாம் -என்பதாம். * பொய்ம்மைவேறுபடுதலுடைமையால் வேறுபடாமையை வாய்மையென்றும், இல்லாரையெல்லாரும் இகழ்வாராகலால் இகழாமையை அவர் கூறுக்கியுள் சொல்லினர். குடி- ஆகுபெயர், [இவைமூன்றுபாட்டாலும் குடிப்பிறந்தாரியல்பு சொல்லப்பட்டது.] (௩)

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

இ-ள். அடுக்கிய- (பலவாக) அடுக்கிய, கோடி- கோடியளவினதாகியபொருளை, பெறினும்- பெற்றாலும், குடிப்பிறந்தார் - உயர்ந்தகுடியிலே பிறந்தவர், குன்றுவ- (தமதொழுக்கம்) குன்றுந்தொழில்களை, செய்தலிலர் - செய்யார்—எ-று. (கருத்து.) உயர்குடியிற்பிறந்தவர் கோடிபொருளைப்பெற்றாலுங் குன்றுந்தொழிலைச்செய்யார்கள் - என்பதாம். * கோடியென்பது இங்கே எண்ணைப்பற்றிப் பெருமைமேல் நின்றது. குன்றுந்தொழில்கள் குன்றுதற்கு ஏதுவாகிய தொழில்கள் (௪)

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும்பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

இ-ள். பழங்குடி - பழமைதொட்டு வருகிற குடியிலேபிறந்தவர், வழங்குவது- (தாம்) கொடுக்கும்பொருள், உள்வீழ்ந்தக்கண்ணும்-முன்னையளவிலேசுருங்கியவிடத்தும், பண்பின்- (தமது) குணமுடைமையில், தலைப்பிரிதலின்று-நீங்கார்—எ-று. (கருத்து) நற்குடியிற்பிறந்தவர் கொடுக்கும் பொருள் சுருங்கியவிடத்துங்குண முடைமையிற்குறையார் என்பதாம். * பழமைதொட்டுவருதல் - சேர - சோழ - பாண்டியரென்பதுபோல் ஆதிகாலந் தொடங்கி மேம்பட்டுவருதல் அவர்க்கு வறுமையாவது தாம்கொடுக்கும் பொருள்முன்னையளவிலே சுருங்குவதாகலால் அதனையே சொல்லினர். (௫)

சலம்பற்றிச்சால்பில செய்யார்மாசற்ற
குலம்பற்றிவாழ்துமென் பார்.

இ-ள். மாசற்ற- வசையற்றுவருகின்ற, குலம்பற்றி- (மது) குடிமையினோடொத்து, வாழ்துமென்பார்- வாழக்கடவோமென்று, நினைத்து- அப்படியே, வாழ்வோர் - (வறுமையுற்றவிடத்தும்—சலம்பற்றி- வஞ்சனையைப்பொருந்தி, சால்பில - அமைவில்லாத தொழில்களை, செய்யார்-செய்யார்—எ-று.(கருத்து.) நற்குடிப்பிறப்பில்-வாழ்பவர்வஞ்சனை



பொருந்தியமைவில்லாத தொழில்களைச் செய்யார் - என்பதாம். * அமைவில்லாமை-தக்குடிமைபிறக்குத்தகாமையாம். [இவைமூன்றுபாட்டாலும் அவர் வறுமையுற்ற விடத்தும் அவ்வியல்பின் வேறுபடாரென்பதுசொல்லப்பட்டது.] (௬)

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

இ-ள். குடிப்பிறந்தார்கண்- உயர்ந்தகுடியிற் பிறந்தவரிடத்தே (உண்டாகிற) குற்றம்-குற்றமானது, (தான் சிறிதேயாயினும்)—விசும்பின்- ஆகாயத்தில், மதிக்கண்- சந்திரனிடத்து, மறுப்போல-களங்கம்போல, உயர்ந்து-ஓங்கி, விளங்கும் - தோன்றும்—எ-று. (கருத்து) உயர்குடிப்பிறந்தவரிடத் துண்டான குற்றஞ் சிறிதாயினுஞ் சந்திரனிற்களங்கம்போலோங்கி விளங்கும்-என்பதாம். * உயர்ந்தகுடிக்கு விசும்பும், அதிற்பிறந்தோருக்கு - மதியும், அவர் குற்றத்துக்கு - களங்கமும், உவமைகள். குடியினது உயர்ச்சியினாலும், சந்திரன்போன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலாலும், அக்குற்றமானது உலகெங்கும் பரந்து வெளிப்படுமென்பதாம். (௭)

நலத்தின்க ணாரின்மை தோன்றினவனைக்
குலத்தின்க ணையப் படும்,

குன்ற வருப விடல்.

இ-ள்: இன்றியமையா - செய்யாதவிடத்தே தாம் (அமையாத) சிறப்பினவாயினும் - சிறப்புடையவையாயினும்; குன்ற (தங்குடிப்பிறப்பமைந்த) தாழ; வருப - வருஞ்செயல்களை; விடல் - விடக்கடவன் — எ-று. (கருத்து.) மிகவுஞ் சிறப்புடையவையாயினும் தங்குடி தாழவருஞ்செயல்களை விடக்கடவன் - என்பதாம். ✻ அமையாமை - இறத்தல் குடிப்பிறப்பென்பது அதிகாரமுறைமையால் வந்தது. தாம் இறக்கவருமிடத்தே இழிதொழில்களைச்செய்தாயினும் பிழையென்னும் வடநூலின் முறைமையை மறுத்து உடம்பின்து நிலையில்லாமையும், மானத்தின் நிலையுடைமையும் ஆராய்ந்து அவை செய்யலாகாதென்றபடி. (௧)

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

இ-ள். சீரொடு - புகழுடனே; பேராண்மை - மானத்தை நிறுத்தல்; வேண்டுபவர் - விரும்புபவர், சீரினும் - புகழ்சம்பாதிக்கு மிடத்தும்;

௬௧



சீரல்ல - தங்குடிக்கு ஒவ்வாத இழிதொழில்களை, செய்யார் - செய்யார் - எ-று. (கருத்து.) மானத்தை விரும்பினோர் தங்குடிக்கொவ்வாத தொழில்களைச்செய்யார் - என்பதாம். ✻ எவ்விடத்தும் நிலைகுலையாத திடத்தாலுண்டாதல்பற்றி - பேராண்மையெனப்பட்டது. நிலையுடைய புகழின் பொருட்டாகவும் செய்யாரென்பதாம். ஏ - அசைநிலை. (௨)

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

இ-ள். (குடிப்பிறந்தவர்க்கு) பெருக்கத்து - நிறைந்த செல்வமுண்டானவிடத்து, பணிதல் - (யாவரிடத்தும்) பணிவு, வேண்டும் - வேண்டும், சிறிய - குன்றைந்த, சுருக்கத்து - வறுமையுண்டானவிடத்து, உயர்வு - பணியாமை, வேண்டும் - வேண்டும் — எ-று. (கருத்து.) நற்குடிப் பிறந்தவர்க்குச் செல்வத்தில் வணக்கமும் வறுமையில் வணங்காமையும் வேண்டும் - என்பதாம். ✻ பணியாமை - தாழ்வு வாராமல் பழையுயர்ச்சியிலே நிற்றல். செல்வமுடையபோது அது உயர்ச்சி செய்தலாலே தாம் தாழ்தலும், வறுமையுடையதபோது அது தாழ்வுசெய்தலாலே தாம் உயர்தலும், வேண்டுமென்பதாம். ✻ [இவை மூன்றுபாட்டாலும் தாம் தாழ்தற்கு ஏதுவானவைகளை செய்யாமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

இ-ள். மாந்தர் - (குடிப்பிறந்த) மனிதர், நிலையின் - (தம்முயர்ந்த) நிலையிலிருந்து, இழிந்தக்கடை - தாழ்ந்தவிடத்து, தலையினிழிந்த - தலையிலிருந்துவிழ்ந்த, மயிரனையர் - மயிர்போல்வர் — எ-று. (கருத்து.) நற்குடியிற்பிறந்தவர் நிலைகெட்டவிடத்துத் தலையிலிருந்து நீங்கியமயிர்க்கொப்பாவர் என்பதாம். ✻ அந்நிலையை விடாது நின்றவிடத்தே விரும்பி சிரமாதை செய்யப்படுதலும். விட்டுத் தாழ்ந்தவிடத்தே இழிவு செய்யப்படுதலும், உவமானத்தாற் பெற்றும். (௪)

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

இ-ள். குன்றினனையாரும் - (குடிப்பிறப்பால்) மலைபோ லுயர்ந்தவரும், குன்றுவ - தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களை, குன்றியனைய - ரு குன்றியளவாயினும், செயின் - செய்தலால், குன்றுவர் - தாழ்வார் - ள - று. (கருத்து.) மலையை நிகர்த்த குடிப்பிறப்பாளரும் தாழ்தற்கு ஏதுவான செயல்களைச்செய்தால் தாழ்வார்கள் - என்பதாம். * குன்றினையவும் என்கிற இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களாவன - பழிக்கப்படுஞ் செயல்கள்.



புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

இ-ள். இகழ்வார்பின் - (தம்மை) அவமதிப்பவர்பின்னே, சென்று நிலை - (ஒருவன் மானம்விட்டுச்) சென்று நிற்கின்றநிலை, புகழின்று - (இவ்வுலகத்துப்) புகழுண்டாக்காது, புத்தேணாட்டு - மற்றைத்தெய்வலோ-

கத்திலே, உய்யாது - செலுத்தாது, மற்று - இவி, என் - (அவனுக்குச்செய்வது)—யாது—எ-று. (கருத்து.) இகழ்பவர் பின்செல்லுவோர் நிலை புகழுண்டாக்காது தேவருலகத்துஞ்செலுத்தாது - என்பதாம். * ஆயினும் - அரசர்கள் புகழுண்டாகுமெ புகழுவன்றார். பயனுமிய இவ்விரண்டும் இல்லாமல் விழுக மானங்கெடுமென்றுளன்னவென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் அவைசெய்தரும்பம் சொல்லப்பட்டன.] (௬)

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

இ-ள். ஒட்டார்பின் - (தன்னை) இகழ்வார்பின்னே, சென்று - போய் - (பொருள்பெற்று) ஒருவன் வாழ்தலின் - (அதனால்) ஒருவன் உயிர்வாழ்தலைக்காட்டிலும், அந்நிலையே - முன்னைநிலையிலேநின்று, கெட்டானெனப்படுதல் - இறந்தானென்று சொல்லப்படுதல், நன்று - (அவனுக்கு) நன்று—எ-று. (கருத்து.) ஒருவனிகழ்பவர் பின்சென்று வாழ்தலினும் முன்னிலையிலிருந் திறந்தானென்று சொல்லப்படுதலே நல்லது என்பதாம். * புகழும்வானுலகமும் உண்டாக்காதேனும் பொருள்பெற்று உயிர்வாழ்வமென்பாரை நோக்கிச்சொல்லியது. (எ)

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

இ-ள். பெருந்தகைமை - உயர்குடிப்பிறப்பானது, பீடு - (தன்) வலியாகியமானம், அழியவந்தவிடத்து - கெடவந்தபோது, ஊனோம்பு - (இறந்துபோகாமல் பயனில்லாத) உடம்பைக்காப்பாற்றும், வாழ்க்கை - வாழ்வானது, மற்று மருந்தோ (பின்னு மிறவாமைக்கு) மருந்தாமோ— எ - று. (கருத்து.) மானமழியவந்தபோது உடலைக்காப்பாற்றும்வாழ்வானது இறவாமைக்குமருந்தாமோ - என்பதாம். * அக்குடிப்பிறப்பு - ஏனைத்துணைகளுக்கெல்லாம இடனாதற்சிறப்புப்பற்றி - பெருந்தகைமையென்றும், அக்குணம்பாலவிறு மானமானது அக்குடிப்பிறப்புக்கு வலியாதற் சிறப்புபற்றி பீடென்றும். அம்மானம் அழிந்தாலின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலால் - அதனை ஊனென்றும். பின்னுமிறத்தலைச் செய்யமென்றதற்கு மருந்தோவென்றும், சொல்லினர். (அ)

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

இ-ள். மயிர்நீப்பின் - (தன்மயிர்த்திரளில்) ஒருமயிர்நீங்கினும், வாழா - உயிர்வாழாத, கவரிமாவன்னார் - கவரிமாவையொப்பவர், மானம் வரின் - (உயிர்நீங்குதற்கான) மானம் பெருமளவுவரின், உயிர் - அவ்வுயிரை, நீப்பர் - விடுவர்—எ-று. (கருத்து.) கவரிமானுக்கொப்பானவர் மானங்கெடவரின் அவ்வுயிரைவிட்டுவிடுவர் - என்பதாம். ஈ நீப்பினுமென்னு மும்மை தொக்குநின்றது உயிருமானமும் உடலில்லாதவிடத்துப் பின்னும் போவதாகிய அவ்வுயிரைநீக்கி என்றாலுமிருப்பதாகிய மானமுடைமை யென்பதாம். உவமானம் அவர்க்கு அது இயல்பென்பது விளக்கியது. (௯)

இளிவரின் வாழாத மான முடையார்
ஒளிதொழு தேத்து முலகு.

இ-ள். இளிவரின் - (தமக்கு) அவமானம் வந்தவிடத்து, வாழாத - (பொறுமல்) உயிர்வாழாத, மானமுடையார் - மானமுடையவரது ஒளி - புகழ்வடிவை, உலகு - உலகத்தார், தொழுதேத்தும் - (எக்காலும்) தொழுது துதியாநிற்பர்—எ-று. (கருத்து.) அவமானம்வந்தபோது உயிர்பெற்றுவாழாத மானமுடையவர் புகழ்வடிவை யுலகத்தார் துதிப்பர் - என்பதாம். ஈ புலவர்பாடும் புகழுடையோர் விசும்பின் வலவனேவா வானவூர்தி யெய்துவ ராதலால் - சுவர்க்கம்பெறுதல் சொல்லவேண்டாவாயிற்று [இவையிரண்டு பாட்டாலும் மானப்பொருட்டிறந்த இறப்பின்சிறப்புச் சொல்லப்பட்டது.] (௰)

# ௯௮ - ஆம் அதி - பெருமை.

அஃதாவது - செய்தற் கரியசெய்தல் - செருக்கில்லாமை பிறர்க்குற்றஞ் சொல்லாமை - என்றிவை முதலாகிய நற்குணங்களாலே பெரியராயினோரது தன்மையாம் நிலையிலிருந்து மேலுமேலும் உயர்த்துவதாகலின் இக்குணங்கள் உண்டாவது நிலையிலிருந்து தாழாமை உள்ளவிடத்தேயாகலான் இது மானத்தின் பின்வைக்கப்பட்டது.

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்.

இ-ள். ஒருவற்கு - ஒருவனுக்கு, ஒளி - ஒளியாவது, உள்ள வெறுக்கை - (பிறராலே செய்தற்கரியவைகளைச் செய்வோமென்று நினைக்கும்) மனவெழுச்சியின் மிகுதி, ஒருவற்கு - ஒருவனுக்கு, இளி - மாசாவது, அஃதிறந்து - அச்செயலை யொழிந்து, வாழ்துமெனல் - உயிர்வாழ்வோமென்று நினைத்தல்—எ-று. (கருத்து.) ஒருவனுக்கொளியாவது மனவெழுச்சியாம், இளியாவது மனவெழுச்சியில்லாமையாம் - என்பதாம்.

ஒளி - தான் உளனாயகாலத்து மிகுந்து தோன்றுதலுடைமை, மற்றும்செய்தற்கரிய செய்வார் பெரியரென்றாராயினும் இங்கே அவை அளவிறந்த உபகாரம் ஈகை முதலானவையாம். அவைகளிலுண்டாகும் முனைப்பை அதன் காரணத்தின்மேலிட்டு உள்ளவெறுக்கையென்றார், அதனையே அதன் காரியமாகிய ஒளியாக்கியும், சொல்லினார். [இதனுற் பெருமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (க)

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

இ-ள். எல்லாவுயிர்க்கும் - எல்லாமக்களுயிர்க்கும், பிறப்பு- (பொதுவாகிய) பிறப்பியல்பு, ஒக்கும்-ஒத்திருக்கும் (ஆயினும்) சிறப்பு-(பெருமைசிறுமை எனப்பட்ட) சிறப்பியல்புகள், ஒவ்வா - ஒத்திடாவாம், செய்தொழில் - செய்யுந்தொழில்களது, வேற்றுமையான் - வேறுபாட்டால்—எ-று. (கருத்து.) மக்களுக்குப் பிறப்பியல்பொத்திருக்கும், தொழில் வேற்றுமையாற்சிறப்பியல்பொவ்வாவாம்-என்பதாம். ௦ வேறுபாடு-கல்லவையுந் தீயவையும், இரண்டோனவையும், இரண்டுமல்லாதவையும், ஆகியபலபிரிவுகள், வினைவசத்தால் பஞ்சபூதகாரியமாகிய உடம்பைப்பொருந்திநின்று அதன் பயனனுபவித்தல் எல்லாருக்கும் ஒத்திருத்தலால் பிறப்பொக்குமென்றும், பெருமைசிறுமைகளுக்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பிரிவுதன் உடம்புதோறும் வேறுபடுதலால் சிறப்பொவ்வாவென்றும், சொல்லினர். (உ)

மேலிருந்து மேலல்லர் மேலல்லார் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

இ-ன். மேலல்லார் - (செய்தற்கரியவைகளைச் செய்யாமல்) சிறியராயினோர், மேலிருந்தும் - உயர்ந்த ஆசனங்களில் இருந்தாராயினும், மேலல்லர் - பெரியராகார், கீழல்லார் - (அவைசெய்து) பெரியராயினோர், கீழிருந்தும் - தாழ்ந்தவெறுநிலத்தில் இருந்தாராயினும், கீழல்லார் - சிறியராகார்—எ-று. (கருத்து.) சிறியவர்மேலிருந்தாலும் பெரியவராகார், பெரியவர் கீழிருந்தாலுஞ் சிறியவராகார் என்பதாம். ௦ மேலிருத்தல் கீழிருத்தல்களாலே செல்வவறுமைகளும், மேல்கீழ்களாலே பெருமைசிறுமைகளும், கருதப்பட்டன. [இவை இரண்டுபாட்டானும் முறையேகுடிப்பிறப்பு மாத்திரத்தாலும், செல்வமாத்திரத்தாலும், பெருமையுண்டாகாமை சொல்லப்பட்டது.] (௩)

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

இ-ள். ஒருமை - பிளவுபடாதமனத்தையுடைய, மகளிரேபோல - கற்புள்ளமாதரைப்போல, பெருமையும்-பெருமைக்குணமும், தன்னைத்



தான் - தன்னைத்தானே, கொண்டொழுகின் - (ஒருவன் நிறையின் வழுவாமல்) காத்துக்கொண்டு நடக்கவல்லவனாயின், உண்டு - (அவனிடத்து) உண்டாம்—எ-று. (கருத்து.) பெருமைக்குணமும் கற்புள்ளாரைப்போலத் தன்னைக்காத்துக்கொண்டவனுக்குண்டு- என்பதாம். ௦ ஒழுகுதல் - மனமொழிமெய்களை அடக்கி உபகாரமுதலானவை செய்துவருதல். [இதனுல்பெருமையுண்டாமாறுசொல்லப்பட்டது.] (௪)

பெருமை யுடைய ராற்றுவா ராற்றி

அருமை யுடைய செயல்.

இ-ள். பெருமையுடையவர் - (அவ்வறியாலே) பெருமையுடையவராயினார் (தாம்வறியராகியவழியும்)—அருமையுடைய - (பிறராலே செய்தற்கு) அருமையுடையவையாகிய, செயல் - (நல்) செயல்களை ஆற்றின் - (அவைசெய்யும்) வழியால், ஆற்றுவார் - (முடிவுபெறச்) செய்யவல்லவராவர்— எ-று. (கருத்து.) பெருமையுடையோர் அருமையுடையசெயல்களைச் செய்வர் - என்பதாம். * அரியசெயல்களை முன்செய்துவந்தமைதோன்ற - பெருமையுடையவ ரென்றதனாலும், ஆற்றவென்றதனாலும், வறியராகிய வழியுமென்பது பெற்றாம். [இதனுள் அருமையுடையார் செய்தி சொல்லப்பட்டது.] (௫)

சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

இ-ள். பெரியாரை - (அப்படிப்பட்ட) பெரியாரை, பேணி - வழிபட்டு, கொள்வேமென்னும் - (அவரியல்பைக்) கொள்வேமென்னும், நோக்கு - கருத்து, சிறியார் - பசிறச்சிறியாரானோரது, உணர்ச்சியுள் - மனத்திவிடத்து இல்லை - உண்டாகாது—எ-று. (கருத்து.) பெரியோரை வழிபட்டு கொள்வோமென்னும் கருத்துச்சிறியோர் மனத்திடத்தில்லை என்பதாம். * குடிமைசெல்வம் கல்வியென்றிவை யுடையவராயிருந்தை மாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு அவைசமக்கியல்பென்று அடங்கியிருப்பாரை வழிபட்டு அவ்வியல்புடையராதல் கூடாதென்பதாம். (௬)

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

இ-ள். சிறப்பும் - (தனக்குத் தரும்பெரியோரிடத்து அடங்கியிருத்தலைச் செய்வதாகிய) சிறப்பும், தான் - தான், சீரல்லவர்கட்படின் - (தனக்குத்தகாத) சிறியவரிடத்து உண்டாமாயின், இறப்பேபுரிந்த - (அடங்கியிருத்தலொழிந்து செருக்கினிடத்திலே) மிகுந்த, தொழிற்றாம் - செயலையுடைத்தாம்—எ-று. (கருத்து.) சிறப்புஞ்சிறியவரிடத்துண்டாயின் செருக்கிலே மிகுந்த தொழிலையுடையதாம் - என்பதாம். * செருக்கின்



மிகச்செய்யுமென்பதாயிற்று. சிறப்பு-குடிமைசெல்வம் கல்விகளினுலாகியமிகுதி. [இவை இரண்டுபாட்டாலும் அஃதில்லார்செய்தி சொல்லப்பட்டது.] (எ)

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து.

இ-ள். பெருமை - பெருமையுடையவர், என்றும் - சிறப்புண்டாயபோதிலும், பணியும் - அடங்கிநடப்பார், சிறுமை - (மற்றைச்) சிறுமையுடையவர், (என்றும்)—அதுஇல்லாதகாலிலும் - தன்னைவியந்து - தம்மைமெச்சி - அணியும், சிப்பிப்பார்—எ-று (கருத்து.) பெருமையுடையவர் சிறப்புண்டாகிய காலத்து மடங்கிநடப்பர் சிறுமையுடையவர் சிறப்பில்லாகாலத்தும் தம்மை சிறப்பித்துநடப்பார் - என்பதாம். * [பல்லோர்படர்க்கை முன்னிலைதன்மையிற் செல்லாதாகுஞ் செய்யுமென்முற்றே]—என்றவிலக்கணத்திற்கு மாறுபினு மதற்குக்காரணம், ஈ பண்புடையவர் தொழில்கள் பண்பின்மேல் ஏற்றப்பட்டன-இதுபின் அற்றமறைக்குமென்னுமிடத்தும் நோக்கும் ஆமிரண்டும்- அசை- சிறப்பித்தல்- பிறரிலுத்தமக்கு ஒருயர்வை ஏற்றிக்கொள்ளல் (அ)

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

இ-ள். பெருமை-பெருமைக்குணமாவது, பெருமிதமின்மை- (காரணமுண்டாகிய விடத்தும் அது இயல்பாதலேநோக்கிச்) செருக்கில்லாதிருத்தல், சிறுமை - சிறுமைக்குணமாவது, பெருமித மூர்ந்துவிடல்- (காரணம்இல்லாவிடத்தும்) அதனை ஏற்றிக்கொண்டு செருக்கின் முடிவிலே நின்றுவிடுதல்—எ-று. (கருத்து.) பெருமைக்குணமாவது செருக்கில்லாதிருத்தல் - சிறுமைக்குணமாவது செருக்குடைத்தாயிருத்தல் என்பதாம். * அளவறச்செருக்கலென்பதாயிற்று. (௯)

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

இ-ள். பெருமை பெருமையுடையவர், அற்றமறைக்கும் - (பிறர் மானத்தையே சொல்லி) அவமானத்தை மறைப்பார், சிறுமை - மற்றைச்சிறுமையுடையவர், குற்றமேகூறிவிடும் (பிறர்குணத்தை மறைத்துக்) குற்றத்தையே சொல்லிவிடுவர்—எ-று. (கருத்து.) பெரியோர் பிறரவமானத்தைமறைப்பர்- சிறியோர் பிறர் குற்றத்தைச் சொல்லுவர் என்பதாம். * மறைத்தலும் சொல்லலும் மறையிடத்தும் கூட்டப்பட்டன. தான்-அசை. [இவை மூன்றுபாட்டாலும் இருவர்செயலும் சேர்த்துச் சொல்லப்பட்டன.] (௰)

---

௨ நன்னூல் சூத்திரம்.

# ௯௰௯ - ஆம் அதி - சான்றாண்மை.

அஃதாவது, பலகுணங்களாலும் நிறைந்து அவைகளை ஆளுந்தன்மை. பெருமையுள் அடங்காத பலகுணங்களையும் தொகுத்துக்கொண்டு நிற்கையால் இது அதன் பின் வைக்கப்பட்டது.

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

இ-ள். கடனறிந்து- (தமக்கு இது) தகுவதென்று அறிந்து, சான்று (பலகுணங்களாலும்) நிறைந்து, ஆண்மை- (அவைகளை) ஆளுந்தன்மையை, மேற்கொள்பவர்க்கு - மேற்கொண்டு நடப்பவர்க்கு, நல்லவையெல்லாம்- நல்லகுணங்களெல்லாம், கடன் - இயல்பாயிருக்கும், என்ப-என்று (நூலோர்) சொல்லுவர்—எ-று. (கருத்து.) பெரியவர்களுக்கு நற்குணங்களை மேற்கொள்ளுதல் கடமையாயிருக்கும்- என்பதாம். * சிலகுணங்களில்லாவிடத்தும், உள்ளவை இயல்பாயிராத விடத்தும் சான்றாண்மை யென்னுஞ் சொற்பொருள் கூடாமையால் இவ்வாட் பெயர் பற்றி அவசிலக்கணம் இப்படிச்சொல்லினரென்பதாம். (க)

குணநலஞ் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉ மன்று.

இ-ள். சான்றோர் நலன்- சான்றோர் நலமாவது, குணநலம்- குணங்களாகிய நலமே, பிறநலம்- அது நீங்கலான உறுப்புக்களாலாகிய நலம், எந்நலத்துள்ளதூஉம் - எந்த நலத்திலுமுள்ளதும், அன்று- அ

டை—எ-று.(கருத்து.) சான்றோர்க்குகுணநன்மையேபெரியநன்மையா மற்றநன்மை நன்மையல்ல-என்பதாம். ✽ அங்கவத்தைமுன்னே பிற தமையால் மற்றைப் புறநலத்தை பிறக்கலமென்றும் - அதுகுடிப்பிறப் கல்விமுதலாகநூலோரெடுத்த நலங்களனே செல்லாமையால் - ந நலத்துள்ளது உமன்றென்றும் சொல்லினர். [இவை இரண்டோட் னும் சால்புக்கு ஏற்றகுணங்களை பொதுவகையாற் சொல்லப்பட்டன.)

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ
டைந்துசால் பூன்றிய தூண்.

இ-ள். அன்பு - (சுற்றத்தார்மேலேயல்லாமற் பிறர்மேலும் உட் டாகிய) அன்பும், நாண் - பழிபாவங்களி னாணுதலும், ஒப்புரவு- (யாவர் டத்தும்) உபகாரஞ்செய்தலும், கண்ணோட்டம்- (பழையவர்மேல்) க ண்ணோடுதலும், வாய்மையொடு - (எவ்விடத்தும்) மெய்மை சொல் தலோடும், சால்பு-சால்பென்னும் (பாரத்தை; ஊன்றிய- தாங்கிய; தூ ண்- தூண்கள்,ஐந்து-அந்தக—எ-று. (கருத்து.) அன்பு-லஜ்ஜை-உபகா ரம்- தாட்சணியம்- சத்தியம்- இவ்வைந்துஞ் சால்பென்னும் பாரத்தை;



தாங்குந் தூண்கள்-என்பதாம். ✽ இக்குணங்கள் இல்லாவிடத்தே சால் பு நில்பெறாமையால் இவைகளைத் தூணென்றார். (௩)

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

இ-ள். நோன்மை - தவமாவது, கொல்லா நலத்தது - (பிறவறங்க ளூம் வேண்டுமாயினும்) ஒருயிரையுங்கொல்லாத அறத்தினிடத்ததாம், (அதுபோல)—சால்பு-சால்பாவது, பிறர்தீமை சொல்லாநலத்தது- (பி றர்குணங்களும் வேண்டுமாயினும்) பிறர்தீமையைச் சொல்லாத குண த்தினிடத்ததாம்—எ - று. (கருத்து.) நோன்பாவது யாதொன்றையுங் கொல்லாமையாம், சால்பாவது, பிறர்குற்றத்தைச் சொல்லாமையாம் என்பதாம். ✽ தவத்திற்குக் கொல்லாவறம்போல் சால்பிற்குப் பிறர்கு ற்றம் சொல்லாக்கும் சிறந்ததென்பதாம். (௪)

ஆற்றுவா ராற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

இ-ள். ஆற்றுவார்-ஒரு (கருமத்தைச்) செய்துமுடிப்பவரது, ஆற் றல்-வலிமையாவது, பணிதல் - (அதற்குத் துணையாவாரைத்) தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல், சான்றோர்- இனிச்சால்புடையவர், மாற்றாரை-ப கைவரை, மாற்றும்படை - பகைமையொழிக்குஞ் சாதனமும், அது- அப்பணிதல்—எ-று. (கருத்து.) காரியமுடிப்பவர் வல்லமையாவது ப ணிதல் அது சத்துருக்களை வெல்லும் படையாம்-என்பதாம். ✽ ஆற்ற ல் - செயவல்லசாந்தன்மை, சால்பிற்கு ஏற்ற பணிதற்குணத்துச் சிறப் புச்சொல்லுவார் மற்றது முடன்சொல்லினர். (௫)

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

இ-ள். சால்பிற்கு-சால்பாகிய (பொன்னினை) அறிதற்கு, கட்டளை-உரைகல்லாகிய (செயல்)—யாதெனில்-யாதென்றால், தோல்வி-(தம்மினுயர்ந்தவ ரிடத்தூக்கொள்ளுந்) தோற்பை, துலையல்லார் கண்ணும்-இழிந்தவரிடத்தும், கொளல்-கொள்ளுதல்—எ-று. (கருத்து.) சால்பிற்குரைகல் லெனவெனில் இருந்தவரிடத்துந் தோல்வி கொள்ளுதல்-என்பதாம். உ எச்சவும்மையால் இருநிறத்தாரிடத்தும் வெல்லுதல் பெற்றும். கொள்ளுதல்வெல்லும் வலிமையுடையராயிருந்தே ஏற்றுக்கொள்ளுதல், இழிந்தாரைவெல்ல நினைத்துத் தமக்குச் சமானமாக்கிக்கொள்ளாமல் தோற்பால் அவரின் உயர்வாராயின அதனாலே சால்பளவு அறியப்படு மென்பதாம். (௬)

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

௯௮௭ ௯௯-ஆம்-அதி—சான்றாண்மை.

இ-ள். (சால்புடையவர்) இன்னா-(தமக்குத்) துன்பந் தருமவைகளை, செய்தார்க்கும்-செய்தவர்களுக்கும், இனியவே-இன்பந்தருமவைகளையே, செய்யாக்கால்-செய்யாவிட்டால், சால்பு-சான்றாண்மை, என்னபயத்தது-(வேறே) என்னபயனுடைத்து—எ-று. (கருத்து.) துன்பஞ்செய்தவர்களுக்கு மின்பஞ்செய்யாவிடில் சான்றாண்மை யென்னும்பயனைத்தரும்-என்பதாம். உ ஓ- அசை. சிறப்பும்மை சால்புடையவர் இன்னாசெய்தற்கு இடமாதல் விளக்கிநின்றது. தாமும் அவர்க்கு இன்னாசெய்வாராயின் தம்முடைய சால்பால் ஒருபயனும் இல்லையென்பதாம். [இவை ஐந்துபாட்டாலும் சிறப்புவகையாற் சொல்லப்பட்டது.]

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

இ-ள். சால்பென்னும் - சால்பென்றுசொல்லப்படும், திண்மை-வலிமை, உண்டாகப்பெறின் - தன்னிடத் துண்டாகப்பெற்றால், ஒருவற்கு-ஒருவனுக்கு, இன்மை-வறுமையால் (வருவது)—இளிவன்று - இகழ்வாகாது—எ-று. (கருத்து.) சால்பின்வலிமை யுண்டாகப்பெற்றால் வறுமை இகழ்வாகாது-என்பதாம். உ தளராமல் காட்டுதலால் வலியாயிற்று. சால்புடையவர் வறுமையிலும் மேம்படுவரென்பதாம். (அ)

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

இ-ள். சான்றாண்மைக்கு - சால்புடைமையாகிய (கடலுக்கு)—ஆழியெனப்படுவார் - கரையென்று சொல்லப்படுவார், ஊழிபெயரினும் - (மற்றறைக்கடலும் கரையுள் நில்லாமல்) காலம் வேறுபட்டாலும், தாம் பெயரார்- தாம்வேறுபடார்—எ-று. (கருத்து.) சான்றோர் காலம்வேறுபடினும் தாங்கள் வேறுபடார்-என்பதாம். உ சான்றாண்மையின் பெருமைதோன்ற அதனை கடலாக்கியும்-அதனைத் தாங்கிக்கொண்டு நிற்கையால் அதனையுடையாரை கரையாக்கியும் சொல்லினர். [ஏகதேசவுருவகம்.]

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை.

இ-ள். சான்றவர்- (பலகுணங்களாலும்) நிறைந்தவர், சான்றாண்மை- (தமது) தன்மை, குன்றின்-குன்றுவாராயின், இருநிலந்தான்-மிக்கப் பெரியபூமிதானும், பொறை- (தன்) பாரத்தை, தாங்காது-தாங்காதாய்முடியும்—எ-று. (கருத்து.) சான்றோர்-சான்றாண்மைகுன்றுவாராகில் பூமிபாரந்தாங்காது- என்பதாம். * தானுமென்னும் எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. அவர்க்கு அது குன்றாமையும் அதற்கு அது தாங்கலும் இயல்பாகலால் அவை எஞ்ஞான்றும் உண்டாகாதென்பது தோன்ற நின்றமையால்-மன்னென்பது ○ ஒழியிசையில் வந்து. ஓகாரம்- அசை. [இவை மூன்றுபாட்டாலும் பலகுணங்களாலும் நிறைந்தவரது சிறப்புச் சொல்லப்பட்டது] (௰)

○ ஒழியிசை - ஒழிந்தசொற்பொருளைத்தருவது.

# ௱ - ஆம். அதி - பண்புடைமை.

அஃதாவது-பெருமை சான்றாண்மைகளில் தாம்வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து நடத்தலுடையராதல். அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

இ-ள். யார்மாட்டும்-யாவரிடத்தும், எண்பதத்தால்-எளியசமயத்தராயிருத்தால், பண்புடைமையென்னும்-பண்புடைமையெனப் படுகின்ற, வழக்கு - (அரிதாகிய) நல்வழியை, எய்தல்-அடைதல், எளிது-எளிது என்ப-என்று (நூலோர்சொல்லுவர்)—எ-று. (கருத்து.) யாவரிடத்துமெளிய சமயத்தராக விருக்கிற பண்புடைமையென்று நல்வழியடைத லெளிது- என்பதாம். * குணங்களால் நிறைந்து எளியசமயத்துமாகியபோது பண்புடைமைதானே உண்டாமாகலால் எண்பதத்தா லெய்த லெளிதென்றும், அது உலகத்தையெல்லாம் வசியமாக்கலால் அதனை பழையோர்சென்ற நல்வழியாக்கியும், அதனை எளிதிற்பெற இதுவேயோதிய உபாயமென்றற்கு அவர்மேல்வைத்தும் சொல்லினர்.

அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

இ-ள். அன்புடைமை - (பிறர்மேல்) அன்புடையனாகுதலும், ஆன்ற-குடிப்பிறத்தல் - (உலகத்தோடு) அமைந்த குடியிற்பிறத்தலும், இவ்விரண்டும்- (ஆகிய) இவ்விரண்டும், பண்புடைமையென்னும் - (ஒருவனுக்குப்) பண்புடைமையென்று (உலகத்தார்) சொல்லும், வழக்கு-நல்வழி—எ-று. (கருத்து.) ஒருவனுக்கு அன்புடைமையும் நற்குடியிற்பிறத்தலுமே நல்வழியாம்-என்பதாம். * அமைதல்- ஒத்துவருதல், குடிப்பிறத்தலென்றது - குடிப்பிறந்தவர்செயலை. இரண்டுங்கூடியவழியே பண்புடைமையாவதென்பது தோன்ற முற்றும்மை கொடுத்தார். [இவை

இரண்டுபொட்டாலும் பண்புடையராதற்குக்காரணம் சொல்லப்பட்டது.]

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

இ-ள். உறுப்பொத்தல் - (செறுக்கத்தகாத) உடம்பாலொத்தல், மக்களொப்பன்று - (ஒருவனுக்கு) நல்லமக்களோடு - (ஒப்பாகாமையா ல்) பொருந்துவதன்று, ஒப்பதாம் - (இவரிப்) பொருந்துவதாகிய, ஒப்பு-ஒப்பாவது, வெறுத்தக்க - செறுக்கத்தக்க, பண்பொத்தல் - பண்பா லொத்தல்—எ-று. (கருத்து.) அவயவத்தாலொப்பாத லொப்பல்ல, கு ணத்தா லொப்பாதலே யொப்பாம்-என்பதாம். * ஒருவனுக்குநன்மக்க



ளோடு பிறப்பொத்தலாவது உயிரில்வேறாய் நிலைபெறாத உடம்பொத் தலாகாது வேறல்லாமல் நிலைபெறுதலுடைய பண்பொத்தலாகலேய் த ப்படிப்பட்ட அவர்பண்பினையுடையனாக வென்பதாம். ஆல்-அசை. (௩)

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

இ-ள். நயன்-நீதியையும், ஒடு-அதனுடன் நன்றி-அறத்தையும், புரிந்த விரும்பிய, பயனுடையார்- (பிறர்க்குந்தமக்கும்) பயன்படுத லுடைய ரது, பண்பு-பண்பை, உலகு - உலகத்தார், பாராட்டும்- கொண்டா டிற்பர்—எ-று. (கருத்து.) நீதியையுந் தருமத்தையும் விரும்பிப பயனு டையவர் குணத்தை யுலகத்தார் புகழ்வர்-என்பதாம், * நயனொடு நன் றிபுரிதலும், பயனுடைமையும், பண்புகாரணமாக வந்தமையால் அத னைப் பாராட்டுமென்றார். (௪)

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

இ-ள். இகழ்ச்சி - (தன்னை) யிகழ்தல், நகையுள்ளும்- ஒருவனுக்கு விளையாட்டினிடத்தும், இன்னாது- துன்பந்தருவதாம் (ஆகலால்)—பா டறிவார்மாட்டு- (பிற) ரியல்பறிந்து நடப்பவரிடத்து, பகையுள்ளும் - ப கையுள்ளவிடத்தும், பண்பு - (அப்பகை உண்டாகாமல் இனிமையாகி ய) பண்புகளே, உள - உண்டாவனவாம்—எ-று. (கருத்து.) விளையாட்டி லு மிகழ்தலானது துன்பந்தரும்- நல்லவரிடத்துப் பகையிலு நற்குண முண்டாம்-என்பதாம். * பாடறிவாரெனவே அவ்வின்னாமை யறிதலும் பெற்றாம். அதனை அறிந்தவர் பின் அதுசெய்யார் இனியவே செய்வா ரென்பது கருத்து. (௫)

பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

இ-ள். பண்புடையார்-பண்புடையவரிடத்தே, பட்டு- படுதலால் உலகம்-உலகியல், உண்டு- (என்றாலும்) உளதாய் வாராநின்றது; இல் தேல்- (அங்கேபடுதல்) இல்லையாயின், அது - அவ்வுலகியல், மண்புக்கு - மண்ணின்கீழ்புகுந்து, மாய்வது-மாய்ந்துபோவதாம்—எ-று. (கருத்து.) பெரியவரிடத்து நற்குணமுண்டாதலால் உலகிய லெல்லாமுண்டாகின்றது அது இல்லாவிடி லுலகியல்கெடும் - என்பதாம். * மற்றைப் பண்பிலார் சார்பல்லாமையால் ஒருசார்புமில்லாமல் மண்ணிற் புகுந்து மாயுமது வேண்டாவாயிற்றென்பது படநின்றமையால் மன்னென்பது ஒழியிசைபில்வந்தது. [இவை நான்குபாட்டாலும் அதினையுடையவரது உயர்ச்சிசொல்லப்பட்டது. (௬)

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.



இ-ள். மக்கள் - நன்மக்களுக்கேயுரிய, பண்பில்லாதவர் - நற்குணமில்லாதவர், அரம்போலும் - அரத்தைப்போலும், கூர்மையரேனு ம் - கூர்மையையுடையரேயாயினும், மரம்போல்வர் - (ஓரறிவினதாகிய) மரம்போல்வர்—எ-று. (கருத்து.) நன்மக்களுக்குரிய குணமில்லாதவர் கூரிய புத்தியுடையராயினுமரத்தையொப்பார்- என்பதாம். * ஓரறிவு பரிசத்தை அறிதல். தான் மடியில்லாமல் தன்னை யுற்றபொருள் தன்னை மடித்தலாகிய தொழில்பற்றிவந்தது, பின்னது விசேட அறிவிலாமையாகிய குணம்பற்றிவந்தது. அவ்விசேடவறிவிற்குப் பயனுமி ம்மக்கட்பண்பில்லாமையால் அவ்வறிவுதானு மில்லையென்பதாயிற்று.

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

இ-ள். நண்பு ஆற்றாராகி - (தம்மோடு) செய்யாதவராகி, நயமில - பகைமையை, செய்வார்க்கும் - செய்து நடப்பவரிடத்து ம், பண்பாற்றாராதல்- (தாம்) பண்புடையவராய் நடவாமை, கடை(அறிவுடையவர்க்கு) இழுக்காம்—எ-று. (கருத்து.) நட்பைக் கொள்ளாமை யிப் பகைமைக்கொள்ளுவார்க்கும் குணமுடையவரா நடவாமையே கடை-என்பதாம். * நயம் - ஈரம். சிறப்பும்மை அவர் பண்பாற்றாமைக்கு இழுதல் தோன்றநின்றது. அதனைச்செய்யின் தாமும் அவர்தன்மையராவரென்றற்கு கடையென்றார். (௮)

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

இ-ள். நகல்வல்லரல்லார்க்கு - (பண்பில்லாமையால் ஒருவரோடு கலந்து) உண்மகிழ்தல் மாட்டாதவர்க்கு, மாயிருஞாலம்- மிகவும்பெரிய பூமியானது, பகலும்- (இருளில்லாத) பகற்பொழுதிலும், இருள்-இருளினிடத்தே, பாற்பட்டன்று - கிடந்ததாம்—எ-று. (கருத்து.) நட்புச்செய்து மகிழாதார்க்குப்பூமியானது இருளுடையதாகும்-என்பதாம். * எல்லாரோடும் கலந்து அறியப்பெறாமையால் பண்பில்லாதவர்க்கு உலகியல் தெரியாதென்றற்கு உலகம் இருளினிடத்துப்பட்டதென்றார். (௯)

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

இ-ள். பண்பிலான் - பண்பில்லாதவன், பெற்ற - (முன்னை நல்வி னையினால்) அடைந்த, பெருஞ்செல்வம் - பெரியசெல்வம், (அக்குற்ற த்தால் ஒருவர்க்கும்பயன்படாது கெடுதல்)—நன்பால் - நல்ல (பாகவி ன்) பால், கலம் - (ஏற்ற) கலத்தினது, தீமையால் - குற்றத்தால், திரிந் தற்று - கெட்டாற்போலும்—எ-று. (கருத்து.) குணமில்லாதவன் முன் னல் வினையாலடைந்த செல்வமானது பயன்படாது (கெடுதல்), கலத்தின்



குற்றத்தால் பாத்திரக் குற்றத்தாற் கெட்டாற்போலும் - என்பதாம். * கல தீமையென்பது - கலந்தீமையென விகாரப்பட்டது. தொழிலுவம கலால் உவமேயத்திலும் ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. படைத்த வலிமையிலனாகல் தோன்ற - பெற்றவென்றும், எல்லாப்பயனும் செ ய்தற்கு ஏற்ற இடமுடைமைதோன்ற - பெருஞ்செல்வமென்றும், கூ றினார். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனால் வருகிற அதோ பகுதி தன்மையும் தோற்றுவாய்செய்யப்பட்டது. [இவை நான்கு பா ட்டானும் அஃதில்லாதது இழிவுசொல்லப்பட்டது.] (க)

## ௱௧- ஆம், அதி - நன்றியில்செல்வம்.

அஃதாவது - சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாதசெ ல்வத்தினியல்பு. -செல்வமுடையானது குற்றம் செல்வத்தின்மேலேற் றப்பட்டது அதிகாரமுறைமை முன்முன் தோற்றுவாய் செய்தாகு பெற்றும்.

> வைத்தான் வாய்சான்ற பெரும்பொருளஃதுண்ணான்
> செத்தான் செயக்கிடந்த தில்.

இ-ள். வாய் சான்ற - (தன்) மனையிடமெல்லாம் நிறைதற்கு ஏ துவாகிய, பெரும்பொருள் - பெரியபொருளை, வைத்தான் - (சம்பாதி த்து) வைத்தவனாகி, அஃது - அதனை, உண்ணான் - (உலோபத்தால்) அ னுபவியாதவன்—(உள்ளானாயினும்) செத்தான் - செத்தானும் - செயக்கிட ந்தது - (அதனிடத்து அவனாலே) செயக்கிடந்ததோ ருரிமையானது, இல் - இல்லை, (ஆதலால்)—எ-று. (கருத்து.) பெரும் பொருளைத்தேடி வைத்தவனாகி யப்பொருளை யனுபவியாதவ னிருந்தாலு மிறந்தவரோ டொப்பாவன் - என்பதாம். * [இதனாலே சம்பாதித்தவனுக்கு அச்செல் வம் பயன்படலில்லாமைசொல்லப்பட்டது.] (க)

> பொருளானா மெல்லாமென் றீயா திவறு
> மருளானா மாணாப் பிறப்பு.

இ-ள். பொருளான் - பொருளொன்றினால், எல்லாம் - யாவும் ஆம் - உண்டாகும், என்று - என்று, அறிந்து—(அதனைச்சம்பாதித்து) ஈயாது (பின்பிறர்க்கு) கொடாது, இவறும் - உலோபத்துவஞ்செய்யு ம், மருளான் - மயக்கத்தினாலே, மாணா - நிறைதலில்லாத, பிறப்பு - (பே ய்ப்) பிறப்பு, ஆம் - (ஒருவனுக்கு) உண்டாம்—எ-று. (கருத்து.) பொ ருளைச்சம்பாதித்துக்கொடாமையாற்பிறப்புண்டாம் - என்பதாம். * இரு மையிலும் அடையும் இன்பங்கள் பலவும் அடங்க எல்லாமென்றும்

சம்பாதித்தற்கு முன்னே உண்டாகிய அறிவான் றுபின்னேமயங்குதலா ன் மருளென்றும், பொருள் உண்டாயிருக்கப்பிறருடைய பசிகண்டிரு த்த பாவத்தால் உணவுகள் உண்டாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப் பு உண்டாமென்றும் சொல்லினர். (௨)

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

இ-ள். ஈட்டம் - (பொருளீட்டச்) சம்பாதிப்போமென்று, இவறி - (பொருள் சம்பாதிக்கைமாத்திரத்தையே) விரும்பி, இசை - (அதன்ப யனாகிய) புகழை, வேண்டாவாடவர் - விரும்பாதமக்களது, தோற்றம் - பிறப்பு, நிலக்கு - பூமிக்கு, பொறை - பாரம் (அவ்வளவே)—எ-று. (கருத்து.) பொருளை விரும்பிப்புகழைவிரும்பாதவர் பிறப்புப் பூமிக்குப் பாரம் என்பதாம். * புகழ் - இருமைக்கும் உறுதியாகிய அறமாகலால் அ தையல் அதனைவேண்டாமல் சம்பாதிக்கைத்துன்பத்தையும், காப்பா ற்றற்றுன்பத்தையும், வேண்டிய அறிவில்லாமைபற்றி - நிலக்குப்பொ றையென்றார். பிறப்பென்றது அதற்குரிய உடம்பினை. (௩)

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன்.

இ-ள். ஒருவரான் - (ஒருபொருளுங்கொடுத்து அறியாமையால்) ஒருவராலும், நச்சப்படாஅதவன் - இச்சிக்கப்படாதவன்—(தான் இ றந்தவிடத்து)—எச்சமென்று - (இங்கே) ஒழிந்துநிற்பதாக, என் - எதை, எண்ணுங்கொல் - நினைப்பானோ—எ-று. (கருத்து.) ஒருவராலு மிச்சி க்கப்படாதவனிறந்தபின் எதைநினைப்பானோ என்பதாம். * இங்கே ஒழிந்துநிற்கும் புகழ் - ஈவார்மேலல்லாமல் இல்லாமையால் இவனுக்கு அதனோடு எவ்வளவும் சம்பந்தம் இல்லையென்றதற்கு என்னெண்ணுங் கொல்லென்றார். ஓ - அசை. [இவைமூன்றுபாட்டாலும் அச்செல்வம் பிறர்க்குப்பயன் படலில்லாமை சொல்லப்பட்டது.] (௪)

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

இ-ள். கொடுப்பதூஉம் - (பிறர்க்கு) ஈவதும், துய்ப்பதூஉம் - (தா ன்) அனுபவிப்பதுமாகிய (இரண்டுசெய்கையும்)—இல்லார்க்கு - உடை யால்லாதவர்க்கு, அடுக்கிய - (பலவாக) அடுக்கிய, கோடியுண்டாயினு ம் - கோடிப்பொருள் உண்டாயினும், இல் - (ஒன்றும்) இல்லை—எ-று. (கருத்து.) கொடுத்தலு முண்ணுதலு மில்லாதவர்க்குக் கோடிபொரு ளிருந்தும், பயனில்லை - என்பதாம். * இன்பத்தினும் அறம் சிறந்தமை யால் - கொடுத்தல் - முன்சொல்லப்பட்டது ஒன்றுமில்லார்போற் பய னிரண்டும் இழத்தலால் இல்லென்றார். (௫)



ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் தக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.

இ-ள். தான் துவ்வான் - தான் அநுபவியாதவனாகி—(அதன்மேலு-
ம்) தக்கார்க்கு - தகுதியையுடையவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டு
தொன்றை, ஈதல் இயல்பிலாதான் - கொடுத்தற் றன்மையில்லாதவ
பெருஞ்செல்வம் - (அவ்விரண்டுஞ்செய்தற்கு இடமுடையதாகிய) செ
ல்வத்திற்கு, ஏதம் - ஒருநோய்—எ-று. (கருத்து.) தானுண்ணாமலும் பி
டாமலுமிருப்பவன் செல்வம் வியாதிக்கொப்பாம் - என்பதாம். * தக்கா
ர் - தானம்வாங்குதற்கு உற்றவர். அநுபவிக்கப்படுதலும் ஈயப்படுதலு
மாகிய தொழில்களுக்கு உரியதை அல்லதாக்கினமையால் - நோயெ
ன்றார் [இவை இரண்டுபாட்டாலும் அவ்விருமையும் உடன்சொல்ல
பட்டது.]

(௬)

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று.

இ-ள். அற்றார்க்கு - (ஒருபொருளு)மிலாதவர்களுக்கு, ஒன்று - (அ
வர்வேண்டிய) தொன்றை, ஆற்றாதான் - கொடாதவனது, செல்வம் -
செல்வமானது, மிகநலம் - (பெண்டிரின்) மிகுந்த ந
லத்தினை, பெற்றாள் - பெற்றவொருத்தி (கொடுப்பாரில்லாமையினால்
தமியள் - (கணவனில்லாமல்) தனியளாய், மூத்தற்று - மூத்ததன்மை
த்து—எ-று. (கருத்து.) கொடாதவன் செல்வமானது அழகுள்ளவொ
ருத்தி தன்னைக் கொடுப்பாரில்லாமையாற் கணவனில்லாது கிழவியாகு
ம்போலும்-என்பதாம். * நலம்வடிவினன்மையும், குணத்தினன்மையு
ம், இவ்விரண்டும் ஒருசேரப்பெறுதல் அரிதாகலால் - பெற்றாளென்
றார், கொடுப்பாரும் கணவனுமேயல்லாமல் தானும் பயனிழந்து சி
றந்தகுமரியோடு உவமைசொன்னமையால் தானும் ஏற்பானுமேயல்லா
மல் செல்வமும் பயனிழந் தழியுமென்பதாம்.

(௭)

நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

இ-ள். (வறியவர்க்குச் சமீபனாயிருந்தும் ஒன்றும் கொடாமையா
ல்) நச்சப்படாதவன் - (அவரால்) இச்சிக்கப்படாதவன், செல்வம் - செ
ல்வம்—(பெறுதல்) நடுவூருள் - ஊர்நடுவுள்ள, நச்சுமரம் - எட்டிமரம்
பழுத்தற்று - பழுத்தல்போலும்—எ-று. (கருத்து.) பிறரால் இச்சிக்கப்ப
டாதவன் செல்வமானது ஊர்நடுவே எட்டிமரம் பழுத்தல்போலாம் - எ
ன்பதாம். * சமீபத்திருக்கைகளாற் பயனில்லையென்பதாம்.

(௮)

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

இ-ள். (ஒருவன்) அன்பொரீஇ - (கொடாதிருத்தற் பொருட்டுச் சுற்றத்தாரிடத்தும் நட்டோரிடத்தும்) அன்புசெய்தலை யொழித்து, தற் செற்று (வேண்டுவன அநுபவியாமல்) தன்னைவருத்தி, அறன் - வறிய வர்க்கும் (கொடுத்தலாகிய) அறத்தை, நோக்காது-நினையாமல், ஈட் டிய - சம்பாதித்த, ஒண்பொருள்-ஒள்ளியபொருளை, கொள்வர் - (கை விட்டுப்போயப்பவன்) கொள்ளுவார், பிறர்-பிறர்—எ-று. (கருத்து.) அன் பற்றுத் தன்னைவருத்திச் சம்பாதித்தபொருளைப் பிறர்கொள்ளுவர் - எ ன்பதாம். ஈ பயனுடைய அறமும் இன்பமும்செய்து கொள்ளாதவனுக்குப் பொருளால் உள்ளது சம்பாதித்தற் றுன்பமேயென்பதுதோன்ற-ஈட் டியவென்றும், அவன்சந்ததி வழியிலுள்ளவர்க்கும் உதவாதென்பது தோன்ற பிறரென்றும் சொல்லினர். (௯)

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

இ-ள். சீருடைய-புகழுடைத்தாகிய, செல்வர்-செல்வத்தினையுடை யவரது, சிறுதுனி - (சிற்சுக்காலம்) சிறியவறுமை, மாரி - (உலகத்தை யெல்லா விளைவித்துவருகிற) மேகம், வறங்கூர்ந்தனையது-வறுமைமிகுந்த துபோல்வதோரியல்பினை, உடைத்து - உடையது-எ-று. (கருத்து.) மி குந்தசெல்வமுடையவர் வறுமையானது மழை வறுமைகொண்ட தன் மையுடையது-என்பதாம். * துனி-வெறுப்பு, அதனைச்செய்தலால் வ றுமை துனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டவர் அதனால் வறி யராகியவிடத்தும் அவ்வறுமை கழிந்தவளவில் - பின்னும்செல்வரா ய்ப் பயன்படுவரென்பது உவமானத்தாற் பெறப்பட்டது. பட்டவே நன் றியில்லாதசெல்வம் எக்காலும் பயன்படாதென்பதாயிற்று. [இவையிர ண்டுபாட்டாலும் அச்செல்வத்தின் குற்றம்சொல்லப்பட்டது.] (௰)

## ௱௨ - ஆம், அதி - நாணுடைமை.

அஃதாவது-மூன்சொல்லப்பட்ட சால்புபண்பு முதலாகிய குணங்களா ல் உயர்ந்தோர்தமக்குத் தகாதகருமங்களில் நாணுதலுடையராந் தன் மை. அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும்.

கருமத்தா னாணுத னாணுந் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

இ-ள். நாணு-(நன்மக்களது) நாணாவது, கருமத்தால் (இழிந்த)க ருமக்காரணமாக, நாணுதல்-நாணுதலாம், பிற- அதல்லாமல் மனமொ ழிமெய்களது ஒடுக்கத்தால் வருகிற நாணங்கள், திருநுதல் - அழகிய

௪௯

வும், எனவிரண்டிற்கு-என்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய, நீள் வினையான் - ஓய்வில்லாத முயற்சிசெயலால், குடி - (ஒருவனது) குடி நீளும் - உயரும்—எ-று. (கருத்து.) முயற்சியும் அறிவுமாகிய விரண்டி னால் தொழிலாலொருவன் குடியுயரும் - என்பதாம். ஈ விளைதல் இயற்கை யறிவு - செயற்கையறிவோடு கூடியிரம்புகள். ஆள்வினை - சோர்பல் அ டையாமற்பொருட்டு. ஆன்றவறிவு உயர்தற்கு ஏற்றசெயல்களும் அ வைமுடிக்கும்விதமும் கூடிப்பிழைபடாமல் என்றுதற்பொருட்டு. [இ வை இரண்டுபாட்டாலும் அச்செயற்குக்காரணம் சொல்லப்பட்டது.]

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

இ-ள். குடிசெய்வலென்னும் - (என்) குடியினை உயரச்செய்யக்கட வேனென்றுகொண்டு (அதற்கு ஏற்றகருமங்களில் முயலுகிற) ஒருவற் கு - ஒருவனுக்கு, தெய்வம் - தெய்வமானது, மடி - உடையை, தற்று - இறுகவுடுத்திக்கொண்டு, தான் - தான், முந்துறும் - முன்னேயுற்று நி ற்கும்—எ-று. (கருத்து.) குடியையுயரச் செய்வேனென்றுமொருவனு க்குத் தெய்வமுன்னிற்கும் - என்பதாம். ஈ முன்னிடப்பார்செயல் ஊழ் மேல் ஏற்றப்பட்டது. (௩)

சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

இ-ள். தங்குடியை - தங்குடிக்கான்தொழிலை, தாழாது - விரைந்து உஞற்றுபவர்க்கு - முயல்பவர்க்கு— (அத்தொழில் முடிக்கும்விதம்) சூ ழாமல் - ஆலோசிக்கவேண்டாமல், தானே முடிவெய்தும் - தானே மு டிவுபெறும்—எ-று. (கருத்து.) தங்குடிக்கானதொழிலைச்செய்வோர்க்கு அதுதானே முடிவுபெறும் - என்பதாம். ஈ குடி அதற்கான் தொழிலுக்கு



ஆதலால், ஆகுபெயர்வழும்மூன்று முதலாம் பயன்சொல்லியபடி. [இவை இரண்டுபாட்டாலும் அதற்குவழும் துணையாதல்சொல்லப்பட்டது.] (௪)

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

இ-ள். குற்றமிலனாய் - குற்றமானவைசெய்திலனாகி, குடிசெய்து - (தன்) குடியையுயரச்செய்து, வாழ்வானை - வாழ்பவனை, சுற்றமா - (அவ னுக்குச்) சுற்றமாகவேண்டி, உலகு - உலகத்தார் - சுற்றும் - (தாமேசெ ன்று) சூழ்வர்—எ-று. (கருத்து.) குற்றமற்றவனாய்க் குடியையுயரச்செய் து வாழ்பவனை யுலகத்தார் சூழ்வர் - என்பதாம். ஈ குற்றமாவன - அரசி களுக்கு விரோதமானசெயல்கள். தாமும்பயனடைதலைக்கருதி யாவரு ம்சென்று சார்வரென்பதாம். (௫)

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

த்துன்பங்களும் அடையாமற் காக்க முயல்பவனது, உடம்பு - உடலம், இடும்பைக்கே- (முயற்சிக்)துன்பத்திற்கே, கொள்கலங்கொல்-கொள்கலமா மல்லவவோ, [இன்பத்திற்காகுதலில்லையோ]—எ-று. (கருத்து.) தன்குடியைக்காக்க முயற்சிசெய்பவனுடலம் துன்பத்திற்குக்கொள்கலமாம்- என்பதாம். ஈ என்குடிமுழுதும் இன்பமுற்று உயரவேண்டி இருமையும் பெறுதலால் இம்மெய் வருத்தமாத்திரம் எனக்கு நல்லதென்று முயலும் அறிவுடையவன் அஃதினை எக்காலும் விடாமை நோக்கி இதிர்மைக்கே கொள்கலங்கொல்லென்றார். இதுகுறிப்புமொழி- ஓஅசை. [இவை இரண்டுபாட்டாலும் அவர் அதுசெய்யுமிடல்புசொல்லப்பட்டது.] (௯)

> இடுக்கண்கால் கொன்றிட வீழுமடுத்தூன்று
> நல்லா ளிலாத குடி.

இ-ள். அடுத்து-(தான்விழும்போது) முட்டுக்கொடுத்து, ஊன்றும்- தாங்கவல்ல, நல்லாள்- நல்லவாண்மகன், இலாத - பிறவாத, குடி- குடியாகிய—(மரம்) இடுக்கண்- துன்பமாகிய (கோடரியானது)—கால்- (தன்) முதலை, கொன்றிட - வெட்டிச்சாய்க்க, வீழும் - (ஒருபற்றில்லாமல்) வீழாநிற்கும்—எ-று. (கருத்து-) தாங்குவாரில்லாத குடியாகியமரம் துன்பக்கோடரியானது வெட்டக்கெடும்- என்பதாம். ஈ முதல் அதன்வழிக்கு உரியார். வளர்ப்பாரைப்பெற்றவழி வளர்ந்து பயன்படுதலும் அல்லாவழி - கெடுதலும், உடைமையால் மரமாக்கினார். (இதுகுறிப்புருவகம்.) [இதனால் அவரில்லாத- குடிக்குள்ளதாங்குற்றம் சொல்லப்பட்டது.] (௰)

---

# ௱௪ - ஆம், அதி - உழவு.

அஃதாவது: சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாகிய உழுதற்றொழில். இதுசெய்விக்கும்போது மற்றவர்க்கும் உரித்தாகும்; இது. முன்னே குடி உயர்தற்கு ஏதுவென்றுமுயற்சியாதலால்- குடிசெயல்வகையின் பின்வைக்கப்பட்டது.

> சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
> லுழந்து முழவே தலை.

இ-ள். உலகம்- உலகமானது. சுழன்றும் - (உழுதலால் வருமெய்வருத்தநோக்கிப் பிறதொழில்களைச்செய்து) திரிந்தும், ஏர்ப்பின்னது- (முடிவிலே) ஏருடையார் வழியதாயிற்று, அதனால் - ஆதலால், உழந்தும் - எல்லாவருத்தமுற்றும், தலை - தலைமையாகியதொழில் - உழவே- உழுதலேயாம்—எ-று. (கருத்து.) உலகமேருடையார் வழியதாயிற்றுத் தலைமையான தொழிலுழவேயாம்-என்பதாம். ஈ ஏருடையார்க்த

ஆதலால் - ஏர் - ஆகுபெயர். பிறதொழில்களாலே பொருள் பெற்றவிடத்தும் உணவினைப்பொருட்டு உழுவாரிடத்துச் சொல்லல்வேண்டுதலாற் சுழன்று மேற்பின்னைதுலகமெனவும், வருத்தம் இல்லையாயினும் பிறதொழில்கள் கடையென்பதுதோன்ற - உழந்துமுழவேதலையென்றுஞ் சொல்லினர். [இதனால் உழவினதுசிறப்புச்சொல்லப்பட்டது.] (௧)

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

இ-ள். உழுவார் - உழுதல்வல்லவர், அஃதாற்றாது - அவ்வுழுதற்செய்யமாட்டாமல், எழுவாரையெல்லாம் - (பிறதொழில்களின்மேற்செல்வோர் யாவரையும், பொறுத்து - தாங்குதலால், உலகத்தார்க்கு - உலகத்தாராகிய—(தேர்க்கு) ஆணி - அச்சாணியாவர்—எ-று. (கருத்து.) உழுபவருலகத்தாராகிய தேர்க்கச்சாணியாவர்-என்பதாம். உழுவாரென்பது - உழவிப்பாருக்கும் - ஆம். உலகத்தாரென்றது - இங்கே அவ்வுழவர் நீங்கலானவரை கலக்காமல் நிறுத்தலில் உழுவார் ஆணிபோலுதலால் ஆணியென்றார் (ஏகதேச உருவகம்.) (௨)

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.

இ-ள் உழுது - (எல்லாரும் உண்ணும்படி) உழுதலைச்செய்து, உண்டு - (அதனால் தாமும்) உண்டு, வாழ்வாரே - வாழ்கின்றவரே, வாழ்வார் - (புகழ்க்குரியராய்) வாழ்கின்றவர், மற்றெல்லாம் - மற்றவரெல்லாரும், தொழுது - (பிறரைத்) தொழுது, உண்டு - (அதனால்தாமும்) உண்டு, பி



செல்பவர் - (அவரைப்) பின்செல்லுகின்றவர்—எ-று. (கருத்து.) உழுதுண்டு வாழ்பவரே வாழ்பவர். மற்றவர் தொழுதுண்டு வாழ்பவர் - என்பதாம். * தாழும்மலிதலாய்ப் பிறந்திருந்தும் பிறரைத்தொழுது அவர் இலகொடுக்கத் தம்முயிர்காத்து அவர்பின்செல்வார் தமக்குரியரல்லரென்பது கருத்து. (௩)

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

இ-ள். அலகுடை - (உழுதற்றொழிலால்) செல்வமுடையராகிய, நீழலவர் - தண்ணளியுடையோர், பல குடைநீழலும் - பலவேந்தர்குடை நீழலதாகிய (பூமி முழுவதையு—தங்குடைக்கீழ் - தம் (வேந்தர்) குடைக்கீழ், காண்பர் - பார்ப்பார்கள்—எ-று. (கருத்து.) உழவுழுவார்ச் செய்வோர்பலவேந்தர் பூமியையும் தம்வேந்தர் குடைகீழவித் காண்பர்-என்பதாம். * அலகுகதிர் - அது இங்கே செல்வுக்காயிற்று. நீழல் போலுதலால் நீழலெனப்பட்டது: நீழலவரென்றது - இரப்போர்க்கெல்லாம் ஈதலைநோக்கி ஒற்றுமைபற்றி - தங்குடையென்றார். குடைநீழலென்பதும் ஆகுபெயர் தம்மரசனுக்கு வெற்றிபெருக்கி மண்முழுதும் அவனதாகக் கண்டிருப்பரென்பதாம். (௪)

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

இ-ள். நற்பொருள்-மெய்ந்நூற்பொருளை, நன்குணர்ந்து - தெளிவறிந்து, சொல்லினும் - சொன்னாயினும், நல்கூர்ந்தார் - வறுமைப்பட்டவரது, சொல் - சொல்லானது, பொருள் சோர்வு - பொருளின்மையை, படும் - கூறும்—எ-று. (கருத்து.) வறியவர் மெய்ப்பொருள்



சொல்லினு மச்சொல் பொருளில்லாமையைத்தரும் - என்பதாம். ∗ பொருளில்லாமையைக் கூறிச்சலாவது யாரேனும் விரும்பி இவர்சொல்லைக்கேட்டோமாகின் முகங்கொடுத்து இவர்குறை முடிக்கவேண்டுமென்று அஞ்சி யாவரும் கேளாமையால் பயனில்சொல்லாய் முடிதல், கல்வியும் பயன்படாதென்பதாம். (௬)

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

இ-ள். அறஞ்சாரா - அறத்தோடுபொருந்தலில்லாத, நல்குரவு - வறுமையையுடையவன், ஈன்றதாயானும் - (தன்னைப்) பெற்றதாயினாலும் பிறன்போல - அன்னியன்போல, நோக்கப்படும் - (நினைத்துப்) பார்க்கப்படுவன்—எ-று. (கருத்து.) வறியவன் தன்தாயாலு மன்னியன்போலப் பார்க்கப்படுவான்-என்பதாம். ∗ அறத்தோடுபொருந்தலில்லாமை காரணகாரியங்களுள் ஒன்றோடு மியையாமை, நல்குரவு ஆகுபெயர். சிறப்புமாம் அவளது இயற்கையன்புடைமை விளங்கிநின்றது அவளிடத்தே கொள்வதில்லாமையேயன்றிக் கொடுப்பதன்றாதலும் உடைமையால் அதுநோக்கிச் சுற்றத்தார்யாவரும் கைவிடுவரென்பதாம். (௭)

இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலு நிரப்பு.

இ-ள். நெருநலும்-நேற்றும், கொன்றதுபோலும்-கொன்றது போன்ற (எனக்குத்துன் பங்களைச்செய்த)—நிரப்பு-வறுமையானது, இன்றும்-இன்றைக்கும், வருவதுகொல்-(என்னிடத்து) வரக்கடவதோ (வந்தால் இனியாதுசெய்வேன்)—எ-று (கருத்து.) ஓ-அசைநிலை. நேற்றுக்கொன்ற வறுமையானது இன்றும்வருமோ -என்பதாம். ∗ அத்துன்பங்கள் முன்சொல்லப்பட்டன, நேற்றுமிகவும்வருத்தி வறியன். நிறைந்த ஒருவன் சொல்லு. (௮)

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

இ-ள். நெருப்பினுள் - தீயிற்கிடந்து, துஞ்சலும் - தூங்கலும், ஆகும் - (மந்திரமருந்துகளால் ஒருவனுக்கு) கூடும், நிரப்பினுள் - வறுமைக்கிடத்து, யாதொன்றும் - யாதொன்றாலும், கண்பாடு - தூங்குதல், அரிது - இல்லை—எ-று. (கருத்து.) தீயிலும் நித்திரைசெய்யலாம் வறுமையிலே நித்திரைசெய்யக்கூடாது-என்பதாம். ∗ நெருப்பினும்வறுமைகொடிதென்றபடியாயிற்று. இதுவும் அவன்சொல்லு. [இவை நான்கு பட்டாலும் வறுமைப்பட்டவருக்கு உண்டாம் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௯)

துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

இ-ள். ஒருவற்கு- ஒருவனுக்கு, இரத்தல் - இரத்தலும், இன்பம்- இன்பத்திற்கு ஏதுவாம், இரந்தவை - இரந்தபொருள்கள் ஈவாரது அறிவுடைமையால்—துன்பமுறுஉ - (தான்) துன்பமுறுதல், வரின் - வந்தால்—எ-று. (கருத்து.) ஒருவனுக்கு யாசித்த பொருள்கள் துன்பமடையாமல் வந்தால் யாசித்தலும் இன்பமாம்-என்பதாம். ஏ இன்பம் - ஆகுபெயர். உறுமவென்பது - உடைமையைக் குறைத்தது, துன்பமாவன - ஈவாரிடத்தும் காலமும் இடமும் அறிந்து செல்லுதலும் - அவர்குறிப்பறிதலும் - அவரைத்தன்வசப்படுத்தலும், அவர் மனமிரங்கத்தக்கவை காட்டிச் சொல்லலும் - முதலானவைகளால் வருவனவும், மறுத்தவிடத்து வருவனவும் - ஆம், அவையுறாமல் வருதலாவது - அவர்முன்னே அறிந்து கொடுக்கக்கொள்ளுதல். [இவை இரண்டுபாட்டாலும் வறுமையால் உயிர் நீக்குமளவில் அவமானமில்லாவிரவு விலக்கப்படாதென்பது சொல்லப்பட்டது.] (௨)

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

இ-ள். கரப்பிலா - ஒளித்தலில்லாத, நெஞ்சின் - நெஞ்சினையுடைய, கடனறிவார்முன் - மானமறிவார்முன், நின்று - நின்று, இரப்பும் - (அவரிடத்தேயொன்றை) இரத்தலும், ஓர் ஏஎர் - ஓரழகை, உடைத்து - (வருமைப்பட்டவர்க்கு) உடைத்து—எ-று. (கருத்து.) எளியாது கொடுப்பரிடத்து யாசித்தலும் - ஓரழகுடையது - என்பதாம். ஏ சிறியசருக்கத்துவேண்டுமெயவென்றதனால் அவர்க்கு அழகுடையதெனப்பட்டது. மானமறிதல் - சொல்லத்தொடங்கிச் சொல்லமாட்டாமைக்கு - ஏதுவாகிய அச்சவியல்பை அறிதல். அவ்வறிவுடையவர்க்கு முன்னே நிற்கை மாத்திரமே போதுமாகையால் - முன்னின்றென்றும், சொல்லுதலால் வருஞ்சிறுமை அடையாமல் ஓரழகுடைத்தென்றும், சொல்லினர். உம்மை - அவ்விரவினிழிவு விளக்கிநின்றது. (௩)

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

இ-ள். கரத்தல் - (தமக்குஉள்ளது) மறைத்தலை, கனவிலும் - சொப்பனத்திலும், தேற்றாதார்மாட்டு - அறியாதவரிடத்து, இரத்தலும் - யாசித்தலும், ஈதலேபோலும் - (வறியவர்க்குக்) கொடுத்தலேபோலும்—எ-று (கருத்து.) சொப்பனத்திலும் உலோபகுணமில்லாதவரிடத்தும் யாசித்தலும் கொடுத்தலேபோலாம் - என்பதாம். ஏ தான் - புழ்தாமராயினும் முன்னுண்டாகிய புகழ்கெடவாராமையால் - ஈதலேபோலுமென்றார் ஏ-அசை. (௪)

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

ஈவார்க ணென்னுண்டாந் தோற்றமிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை.

இ-ள். இரந்துகோள் - (அவரிடத்துச்சென்று ஒன்றனை) இரந்து கொள்ளுதலை; மேவாரிலா அக்கடை - விரும்புவா ரில்லாதவழி, ஈவார்கண் - கொடுப்பவரிடத்து, என் - என்ன, தோற்றம் - புகழ், உண்டா (யாதுமில்லை)—எ-று. (கருத்து.) யாசிப்பவரில்லாவிடிற் கொடுப்பவர்க்கென்ன புகழுண்டாம்-என்பதாம். * தோற்றம்-ஆகுபெயர். மேவு என்பது - விகாரமாயிற்று; கொடுத்தல்வல்லமை வெளிப்படாமையால் அதனாலே புகழடையாரென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் இதற்கு இரப்பார்வேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (௯)

இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

இ-ள். (ஈவானுக்குப்பொருள் உதவாதவிடத்தே) இரப்பான் - இரப்பவன், வெகுளாமைவேண்டும் (இவன்) எனக்குக் கொடுக்கின்றில னென்று அவனைக் கோபியாதொழிதல் வேண்டும்—(அதுவேண்டிய பொழுது உதவாதென்பதற்கு வேறுசாட்சிவேண்டா)—நிரப்பிடும்பை தானேயும்-வறுமையாகிய நோய்தானேயும், கரி - சாட்சியாதல், சாலும்-அமையும்—எ-று. (கருத்து.) யாசிப்பவன் கோபியாமலிருக்கவேண்டும்-என்பதாம். * யாவர்க்குந் தேடவேண்டுதலும் நில்லாமையும் முதலாகிய பிறசாட்சிகளும் உண்டென்பது படநின்றமையால் உம்மை எச்சவும்மை, தனக்கேயல்லாமல் தன்னைப்பிரசந்தவர்க்கும் அன்னைதன்றுபொருள் சம்பாதித்தற்கு அவன்படுந்துன்பத்தைத் தனக்கேயாவைத்துத் தான்படுகிற துன்பம்தானறிந்துகோபியாதிருக்கக்கடவனென்பதாம்.[இதனால் அவர்க்கு அவசியமான ஓரியல்பு சொல்லப்பட்டது.]

## ௱எ - ஆம் அதி - இரவச்சம்.

அஃதாவது-மானங்கெடவரும் இரத்தலுக்கு அஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.
சஎ

இ-ள். (ஒருவன்) கரவாது- (தமக்குள்ளதை) ஒளிக்கமாட்டா து - (இவர் வரப்பெற்றேமென்று) உள்ளமகிழ்ந்து, ஈயும் - கொ ம், கண்ணன்னார்கண்ணும் - கண்போற்சிறந்தவரிடத்தும், இர ராமல் வறுமைப்படுதல், கோடிபுறும் (இரந்து பெறலைவிட) கோடி மடங்கு நன்றாம்—எ-று. (கருத்து.) ஒளியாது கொடுக் வித்தகோப்பாரை யிடத்தும் யாசியாதிருத்தல் கோடிமடங்கு ந யாம்-என்பதாம். ✻ வறுமைமறைக்கப்படாத கட்டினையிடத்தும் லாகாதென்பது படர்க்கையால் உம்மை யுயர்வு சிறப்பு அ ல் மாணக்கெடாதென்ப தொன்றே யல்லாமல் அதற்கு மிகுதி மையால் செய்யவல்லதோர் முயற்சிசெய்து ஜீவனஞ்செய்தலே தென்பது கருத்து.

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

இ-ள். உலகியற்றியான்- இவ்வுலகத்தைப்படைத்தவன் (இ ந்துவாழ்வார்க்கு முயன்று ஜீவனஞ்செய்தலை யல்லாமல்—இர யாசித்தும், உயிர்வாழ்தல்வேண்டின் - ஜீவனஞ்செய்தலைவேண் த்தானாயின், (அக்கொடியோன்) பரந்து - (தானும் அவர்போல்) ந்தழன்று, கெடுக-கெட்டொழிவன்—எ-று. (கருத்து.) பிரமன் ப தோரை யாசகஞ்செய்யப் படைத்தானாகில் அவன் கெட்டொழிவன் - எ தாம். ✻ மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டு உண்டியும், அதற்கு ஏதுவாகிய செய்தொழிலும், பழவினை வ கருவோடுகலந்த அப்போதே அவன்கற்பிப்பா னன்றே அவனு சிலவுயிர்க்கு இரத்தலையும் ஒருசெய்தொழிலாகக் கற்பித்தானாயி த்தீவினையால் தானும் அத்துன்ப மடையவேண்டுமென்பதாம். [இ ரண்டுபாட்டாலும் அவ்விரவின்கொடுமை சொல்லப்பட்டது.]

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட் டதில்.

இ-ள். இன்மை-வறுமையால்வரும், இடும்பை- துன்பத்தை யத்தினைசெய்து நீக்கக்கடவோமென்று நினையாமல்)—இரந்துதீர்வா னும்-இரந்து நீக்கக்கடவோமென்று நினைக்கும், வன்மையின் - வ மைபோல், வன்பாட்டது-வலிமைப்பாடுடையது, இல்-இல்லை—எ (கருத்து.) வறுமைத்துன்பத்தை நீக்குவோமென்னும் வலிமை வலிமையுடையதில்லை-என்பதாம். ✻ அது நீக்கதற்குவழியாகிய மு இருக்க வழியல்லாத இரவால் நீக்கநினைத்தலால் வன்மையாயிற் வினைப்பாடு முரட்டுத்தன்மை அது ஆவதை யாலோசியாது செ நிற்றல். [இதனால் இரவு வறுமை தீர்தற்கு வழியன்றென்பது சொ ப்பட்டது.]

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

இ-ள். இடமில்லாக்காலும் - அனுபவிக்கவேண்டுவதில்லாமல் வ றுமைப்பட்டவிடத்தும், இரவு - (பிறரிடத்துச்சென்று) இரத்தலுக்கு டன்பாடாத, சால்பு - நிறைவு, இடமெல்லாம் - உலகமெல்லா (ம்) ஒருசேர இவர்தாலும்)—கொள்ளாத்தகைத்தே - கொள்ளாதபெ ருமையுடைத்தே—எ-று. (கருத்து.) தரித்திரத்திடத்தும் யாசியாமை ப் பெருமை- என்பதாம். * அவ்விரத்தலைச் சால்புவிலக்கலால் இர வொல்லாமை அதன்மேல் ஏற்றப்பட்டது. [இதனால் அவ்வழியல்லா தைச் சால்புடையார் செய்யாரென்பது சொல்லப்பட்டது.] (௪)

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
  துண்ணலி னூங்கினிய தில்.

இ-ள். தாள் - (வழிபாகிய) முயற்சி, தந்தது - (கொண்டுவந்து) த ந்தது, தெண்ணீர்-தெளிந்தநீர்போலும், அடுபுற்கையாயினும் - சமைத் த கூழேயாயினும், உண்ணலினூங்கு- (அதனை) உண்ணுதற்குமேல், இ னியது-இன்பந்தருவது, இல்-இல்லை—எ-று. (கருத்து.) முயற்சியால்வ ந்த கூழாயினும் அதைப்புண்ணுதல்போலின்பமுடையதில்லை - என் பதாம். * முயற்சிதந்தகூழ் அழுத்தமில்லாமல் தெளிந்தநீர்போன்றதா யினும் அவமானமாகிய இரவால் வந்ததல்லாமல் தம்முடைய தாகலா ல் அமிழ்தத்தோடொக்குமென்பதாம். [இதனால் வழியாலாகியது சிறி தெனினும் அதுசெய்யுமின்பம் பெரிதென்பதுசொல்லப்பட்டது.] ()

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
  கிரவி னிளிவந்த தில்.

இ-ள். ஆவிற்கு - (தண்ணீர்பெறுதற்கு நிலைமையதாகிய) பசுவு க்கு நீரென்று - (தருமநோக்கி) இதற்குத் தண்ணீர்தரவேண்டுமென்று இரப்பினும் - இரந்துசொல்லும்போதும், இரவின் - அவ்விரவுபோ ல் நாவிற்கு - (ஒருவ) னாவிற்கு, இளிவந்தது - அவமானம்வந்தது, இல்- லதில்லை—எ-று. (கருத்து.) பசுவிற்கு நீர்தவிடென்றும் யாசகம்போல இழிந்ததில்லை- என்பதாம். * ஆவைக்காப்பாற்றல் பெரியவற மாக ல் ஆவிற்கென்றும், பொருள் கொடுத்தும் கொள்ளவேண்டாத எளி

மையதாகலால் நீரென்றும், இரக்கின்றோனுக்கு அவமானமாவது அ சொல்லளவேயாகலால் நாவிற்கென்றும், அதுதான் எல்லா அவமான

ங்களிலும், மேற்படுதலால் இளிவந்ததில்லென்றும், சொல்லினர். [இ தனால் அறத்தையும் முயன்று செய்வதல்லது இரந்துசெய்ய லாகாதெ

ன்பதுசொல்லப்பட்டது.] (௬)

இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
  கரப்பா ரிரவன்மி னென்று.

இ-ள். இரப்பாரையெல்லாம் - யாசிப்பவரையெல்லாம், இரப்ப (நான்) இரவாநின்றேன், இரப்பின் - (உமக்கு) இரக்கவேண்டுமா கரப்பார் - (தமக்கு உள்ளதை) ஒளிப்பவரை, யிரவற்கமின் - இரவா தீர்கள்—எ-று. (கருத்து.) யாசிப்பாரையெல்லாம் யாசித்தேன் நீ ஒளிப்பவரிடத்தில் யாசியாதிருங்கள்- என்பதாம். * இவ்வமைமை யவால் வெட்டிவளர்த்தவிடத்தும் உடம்புமில்லாதாகலின் இது டாமென்பது தோன்ற இரப்பினென்றார். [இதனால் மானங்கெட ரிரவுவிலக்கப்பட்டது.] என்று இடைச்சொல்.

இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

இ-ள். (இவ்வாறுமையென்னுங் கடலை இதனாற் கடப்போமெ நினைத்து ஏருவனேறிய)—இரவென்னும் - யாசகமென்னும், ஏமா ல்-காவலற்ற, தோணி- மரக்கலம் (அதனிடத்தே ஒடுங்கால்) கரவெ னும்- ஒளித்தலென்னும், பார்- வன்னிலத்தோடு, தாக்க - தாக்குத ன், பக்குவிடும்-பிளந்துபோம்—எ-று.(கருத்து.) யாசகமென்னுந் ணி ஒளித்தலென்னும் வலியநிலந்தாக்கக்கெடும்-என்பதாம். * வறு யாற் கடப்பதனை இரவால் கடக்கலுற்றவன் அதன் துன்பகாலத்தா ல் ஏமாப்பிறோணியென்றார். ஏமாப்பின்மைதோணிமேல் ஏற்ற டது அதுகடத்தற்கு ஏற்றதல்லாமையாலும், நிலமறியாது செலு யவழி உடைதலாலும், அதனிடத்தே ஏறலாகாதென்பதாம். (இர ருவகம்.)

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

இ-ள். இரவு-(உடையார் முன் இல்லார்சென்று) இரந்துநிற்றக் கொடுமையை, உள்ள-நினைத்தால், உள்ளம்- (எம்) உள்ளம், உரு கரைந்துருகாநிற்கும், கரவு - (இது அறிந்திலையைக் கண்டிருந்தவர்) நி லையென்றவின்கொடுமையை, உள்ள-நினைத்தால், உள்ளதூஉம்-உ ருகுமளவுதானும், இன்றி-இல்லாமல், கெடும்- அழிந்துபோம்—எ-று. (கருத்து.) யாசிப்பவர் கொடுமையைநினைத்தால் மனமுருகுமென்ற ல்லையென்னுங் கொடுமையைநினைத்தால் உருகுமளவுமில்லாமற் கெ ம்-என்பதாம். * இரவினும் கரவுமிகக்கொடிதென்றபடி.

கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

இ-ள். சொல்லாட - (ஒளிப்பவர் இல்லையென்று) சொல்லிய நிரத்தே, இரப்பவர்-இரப்பவர்க்கு, உயிர்-உயிரானது, போம் - போ கின்றது, கரப்பவர்க்கு - (இனிச்சொல்லுகின்ற) அவ்வொளிப்பவர்

(உயிர்பின்னிருத்தலால்) யாங்கு - எப்புறையுள், ஒளிக்குங்கொல் - (அப்பொழுது) புகுந்தொளிக்குமோ — எ-று. ஓ-அசை, (கருத்து.) யாசிப்பவர்க்கில்லையென்றால் உயிர்போகும் ஒளிப்பவர்க்குயிர் எங்கேயொளிக்கும் என்பதாம். ஈ உயிர்போதலாவது இளியாமையும் செய்கலாமையும் நின்று செயலற்றுநிற்றல். கேட்டாரைக் கொல்லவல்லதாகிய சொல்லைச் சொல்வாரைக் கொல்லுதல் சொல்லவேண்டாவாயினும் அது காணவின்றில் இது என்னென்றேயென்பதாம். [இவைமூன்று பாட்டாலும் அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் சேர்த்துச் சொல்லப்பட்டன.] (௰)

## ௱௮ - ஆம் அதி - கயமை.

அஃதாவது - முன்னே அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்புவகையாற்சொல்லப்பட்ட குணங்களுள் ஏற்புடையவைகளைக் குறிப்பினால் யாவர்க்கும் பொருந்துவத்தமையால் அங்கே குறிப்பாற்சொல்லியவையும், இங்கே ஒழிபியலுள் வெளிப்படச்சொல்லியவையும், ஆகியகுணங்களுள்யாதுமிலராகிய கீழோரதுதன்மை, அதனால் இதுஎல்லாவற்றிற்கும் பின்வைக்கப்பட்டது.

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

இ-ள். கயவர் - கீழோர், மக்களேபோல்வர் - (வடிவால்முழுதும்) மக்களேபோலிருப்பவர், அவரன்னவொப்பாரி - அவர் அம்மக்களையொத்தல் போன்றவொப்பு — யாம் - நாம் - கண்டதில் - (வேறெந்தச்சாதிகளிடத்தும்) கண்டதில்லை — எ-று. (கருத்து.) கீழ்மக்கள் வடிவாலே மக்களையொப்பாவர் - அவர்களையொப்பானவனையான் கண்டதில்லை என்பதாம். ஈ முழுதுமொத்தல் - தேற்றேகாரத்தாற் பெற்றாம். அவ்வொற்றுமை அவரிடத்தேயுள்ளவொப்புறுமையை மக்கட்சாதிக்கும் கயவச்சாதிக்கும் வடிவொத்தலால் குணங்களிலிருப்பினும், இல்லாமையாலும், அல்லது வேற்றுமை அறியப்படாதென்பதாம். [இதனாற் கயவரது குற்றமிகுதி சொல்லப்பட்டது] (க)

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்

இ-ள். நன்று - (தமக்கு) உறுதியாயினவைகளை, அறிவாரின் - அறிபவரின், கயவர் - (அவையறியாத) கீழ்மக்கள், திருவுடையர் - நன்மையுடையராவர் (அவர்போல) — நெஞ்சத்து - (தமது) நெஞ்சினிடத்து, அவலமிலர் - (அவைகாரணமாக) கவலையிலர் (ஆதலால்) — எ-று. (கருத்து.)

இ-ள். கீழ்-கீழாயினோன், உடுப்பதூஉம்- (பட்டுந்துகிலும்) உடுத்தலையும், உண்பதூஉம் - (பாலுஞ்சோறும்) உண்ணுதலையும், காணின் கண்டால் - (அவைபொறாமல்) பிறர்மேல் - அயலார்மேல் (குற்றமில்லையாகவும்) வடுக்காண- குற்றமுண்டாக்க, வற்றாகும்-வல்லவனாவன் -எ-று. (கருத்து.) கீழ்மகன் பிறருண்டாலும் உடுத்தாலும் கண்டாற் பொறாமைகொள்வான் - என்பதாம். ஈ உடுப்பது- உண்பது-என்பன அவ்வத்தொழிலின்மேல் நின்றன அவைகளால்- பூணுதல் வாசனையே ல் பூசலையெழிதொழில்களும் கொள்ளப்படும், அவைகளைக்கண்டாத்திரத்தே பொறாமைப்படுதலாலே காணினென்றும். கேட்டவர் இ குற்றம் அவரிடத்திருக்கலாமென்று உடன்படச்செய்தல் அரிதாகலால் வற்றாகுமென்றும், சொல்லினர். [இதனாற்பிறர்செல்வம் பொறாமை சொல்லப்பட்டது.] (௯)

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

இ-ள், கயவர் - கீழோர், ஒன்று-ஒருதுன்பம், உற்றக்கால்-(தம்மை) அடைந்தவிடத்து—(அதுவேசார்பாக) விரைந்து-விரைவுற்று, விற்றற்குரியர் - (தம்மைப்பிறர்க்கு) விலைசெய்தற்குஉரியவராவர்—(அதுகைவராமல்) எற்றிற்குரியர் - வேறே எத்தொழிலுக்கு உரியராவர் —எ-று. (கருத்து.) கீழோர் துன்பம் வந்தவிடத்துத் தங்களைவிற்க வுரியராவர் - என்பதாம். ஈ உணவில்லாமைபோலவாவதுவேறொன்றாகவாவதுநேர் துன்பம்வந்து உற்றமாத்திரத்தென்பதுதோன்ற ஒன்றுற்றக்காலென்றும். கொள்கின்றார் தங்கீழ்மையை அறிந்துவேண்டாவென்றற்குமுன்னே விற்றுவிடுதலால் - விரைந்தென்றும், சொல்லினர். ஒருதொழிற்கும் உரியரல்லரென்பது குறிப்பெச்சம். [இதனால் தாமும் பிறர்க்கு அடிமையாய் விற்பரென்பது சொல்லப்பட்டது.] (௰)

இரண்டாவது.
பொருட்பால் - முற்றிற்று.

---

இனி அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய் இம்மைபேறு பயப்பதாகிய இன்பத்தைச் சொல்லும்படி எடுத்துக்கொண்டார்.

# காமத்துப்பால்.

இவ்விடத்தே காமமென்றது, ஒரோகாலத்திலே ஒருபொருளாற் சுவை-ஒளி-ஊறு-ஓசை-நாற்றம் என்கிற ஐம்புலன்களையும் அநுபவிக்கப் பெறப்படாததாகிய காமவின்பத்தினை. இதுபுணர்ச்சி பிரிவென விருவகைப்படும் ௦ மற்றை இருத்தல்-இரங்கல்-ஊடல் என்பனவோவெனின், இவர் பொருட்பாகுபாட்டினை அறம்பொருளின்பமென வடநூல் வழக்குப்பற்றிச் சொல்லுதலால் அப்படியே அவைகளை இருபிரிவினிடத்து அடக்கினாரென்றறிக. இனி அவைகளையே தமிழ்நூலார் ஒழுக்கம்பொருந்த புணர்ச்சியைக் களவென்றும், பிரிவைக் கற்பென்றும், பெரும்பான்மை பற்றிவகுத்து அவைகளைக் கவைபிரித்து வண்டாக்க உலகநடையோடு ஒத்ததும் ஒவ்வாமையு முடையவைகளாகச் சொல்லுகின்றார். அக்கைக்கோளிரண்டனுள்ளும் - களவாவது பிணிமூப்பிறப்புகளில்லாமல் எக்காலும் ஒருதன்மையராய் உருவும், திருவும், பருவமும், குலமும், குணமும், அன்பும், முதலானவைகளாலே தம்முள் ஒப்புமையுடையராகிய தலைவனும் தலைவியும் பிறர்கொடுப்பவும் அடுப்பவும் இல்லாமல் ஊழ்வகையால் தாமேஎதிர்ப்பட்டுப் புணர்வது அதனை விழுமிகோசத்திலே சொல்லத்தொடங்கி முதலில் தகையணங்குறுத்தல் சொல்லுகின்றார்.

## ௱௯- ஆம், அதி - தகையணங்குறுத்தல்.

### களவியல்.

அஃதாவது, பொழில்விளையாட்டு விருப்பால் மகளிர் கூட்டம் நீங்க அவளிடத்துத் தனித்துநின்றவளை வேட்டைவிருப்பால் இளையர்நீங்கத்தனித்துவந்துழிக்கண்ட தலைவன் அவளழகு தனக்கு வருத்தமுண்டாக்குதலைச் சொல்லுதல், இதுகண்டபொழுதே தோன்றுவதாகலால் முதலிலே சொல்லப்பட்டது.

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு.

[தலைவிபுருவு முதலானவை முன்கண்டறிந்தவையல்லாமல் சிறந்திருக்கையால் அவளைத் தலைவன் ஐயுற்றது] இ-ள். கனங்குழை-இக்

---

௦ (தொல்காப்பியம்) இன்பமும்பொருளு மறனுமென்றாங் - கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்-காமக்கூட்டங் காணுங்காலை மறையோர்தேஎத்து மன்றலெட்டனுட்-டுறையமை நல்யாழ்த் துணைமையோரியல்பே.

* இறையனாரகப்பொருள் - ஒப்புமுருவும்வெறுப்புமென்றாக - கற்புமேம்படுமென்றாச் - சாயலுநாணு மடனுமென்றா - நோயும்வேட்கையு நுகர்வுமென்றாங் - காவயின்வருஉங்கிளவியெல்லா - நாட்டியமரபி னெஞ்சுகொளினல்லது - காட்டலாகாப் பொருளவென்ப.

௨௮

கனம்பொருந்திய குழையையுடையவள், அணங்குகொல் - (இச்சோலையி லிருப்பவளாகிய) ஒருதெய்வப்பெண்ணோ—(அல்லாமல்) ஆய்மயில்கொல் - ஒருமயில் விசேஷமோ—(அல்லாமல்) மாதர்கொல் - ஒரு மானிடமாதரோ, என்னெஞ்சு - மாலும் (இவளை இன்னவளென்று அறியமாட்டாமல்) மயங்குகின்றது—எ-று. (கருத்து.) இவள் தெய்வப்பெண்ணோ மயிலோ மானிடப்பெண்ணோ - இன்னதென்றறியாமல் மயங்குகின்றது-என்பதாம். * ஓ-அசை, ஆய்மயில்-உடலுறுப்பின் சேஷ்டைகள் ஆராய்ந்து படைத்தமயில் - கனங்குழை - ஆகுபெயர், "தெய்வப்பெண் போல் எழுதலாகாத வுருவம்தன்னை வருத்தலும்பற்றி - அணங்குகொலென்றும், மயில்போல் சாயலும் பொழிலிடத்து நிற்றலும்பற்றி - ஆய்மயில்கொலென்றும், தன்னெஞ்சு செல்லுதலையும் அவள் எதிர்நோக்கியவிதமும் பற்றி-மாதர்கொலென்றும் சொல்கிறான். (1)

நோக்கினா ணோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.

[மாறுபாட்டால் தெளிந்ததலைவன் அவள் பார்வையாலாகிய வருத்தஞ்சொல்லியது] இ-ள். நோக்கினாள் (இப்படிப்பட்ட) அழகையுடையவள், நோக்கெதிர் - (என்) பார்வைக்கெதிரே நோக்குதல், தாக்கணங்கு - (தானே) தாக்கிவருத்துகிற ஒரு தெய்வப்பெண், தானைக்கொண்டன்னது - (தாக்குதற்குச்) சேனையைக் கொண்டுவந்ததுபோலுந் தன்மையை, உடைத்து - உடையது—எ-று. (கருத்து.) இவளென்பார்வைக்கெதிரே பார்க்குதல் ஒருதெய்வப்பெண் போர்செய்யச் சேனையைக்கொண்டுவந்ததுபோலுந் தன்மையையுடையது-என்பதாம். முன்பாட்டில் அணங்குகொலாய் மயில்கொலென்றமையால் இதற்கு வருவிக்கப்பட்டது எதிர்நோக்குதலென்றமையால் இது குறிப்பு நோக்காயிற்று தன்னை அழகால் வருத்துதலோடு பின்னும் குறிப்புப் பார்வையால் வருத்துதல் சொல்லியபடி. (2)

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

[இதுவுமது] இ-ள். கூற்றென்பதனை - கூற்றுவனென்று (நூலோர்) சொல்லுவதை, பண்டறியேன் - முன் (கேட்டறிந்ததல்லது) கண்டறிந்திலேன், இனியறிந்தேன் - இப்பொழுது கண்டறிந்தேன் (அது)—பெண்டகையால் - பெண்குணங்களுடனே, பேரமர் - பெரியவாய்ப்போர்செய்கின்ற, கட்டு - கண்களையுடைத்து—எ-று. (கருத்து.) தலைவன் தலைவியினுடைய கண்களையே யமனென்று கூறினான்-என்பதாம். * பெண்டகை - நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு-என்கிற குணங்கள் - அவை அந்தந்தக் குறிகளால் அறியப்பட்டன அப்பெண்மைக் குணங்களால் இன்பந்தருதலும் உண்டாயினும் அதிக துன்பந்தருதல் பற்றிக் கூற்றுவனாக்கிச் சொல்கிறார். (3)

---

* (அகப்பொருள்விளக்கம்) மடமானோக்கி வடிவுகண்டே-விடமுற்றெழுந்து வியந்துவதையும்.



கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.

[இ-வுமது] இ-ள். பெண்டகை - பெண்குணங்களுடைய, பேதைக்கு - இப்பேதைக்கு, கண் - கண்கள், கண்டார் - (தம்மைக்) கண்டவரது, உயிருண்ணுந்தோற்றத்தால் - உயிரையுண்ணுந் தோற்றத்துடனே கூடி அமர்த்தன - மாறுபட்டிருந்தன — எ-று. (கருத்து) இப்பெண்ணின் கண்கள் கண்டவர்களுயிரை யுண்ணுங் காட்சியாக மாறுகொண்டிருந்தன - என்பதாம். ∗ கண்கள் - குணங்களுக்கும் பேதைமைக்கும் நேர்மாற்கொடியவாயிருந்தன வென்பதாம். (௪)

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து.

[இ-வுமது] இ-ள். கூற்றமோ - என்னை (வருத்துதலாலே) கூற்றமோ, கண்ணோ - (என்மேலோடுதலாலே) கண்ணோ, பிணையோ - இயல்பாக (அஞ்சுதலாலே) பெண்மானோ (அறிகின்றிலேன்) — மடவரனோக்கம் — இம்மாதின் (கண்களின் பார்வையானது — இம்மூன்றும் — இம்மூன்றனுடைய தன்மைகளையும், உடைத்து - உடைத்தாயிருக்கின்றது - எ-று. (கருத்து) இவள்பார்வை யமனோ கண்ணோ மானோ அறியேன் - என்பதாம். ∗ இன்பமும் துன்பமுமொருசேரச் செய்யாநின்ற தென்பதாம். [வருத்தலாதித் தொழில்பற்றிவந்த ஐயவுவமம்] (௫)

கொடும்புருவங் கோடா மறைப்பி னடுக்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

[இ-வுமது] இ-ள். கொடும்புருவம் - (பெரியகட்பாகிய) கொடிய புருவங்கள், கோடாமறைப்பின் - (தாம்) செவ்வையாயிருந்து விலக்கினால் (அவைகளைக்கடந்து) — இவள்கண் - இவளதுகண்கள், நடுக்கஞர் - நடுக்குதற்கு ஏதுவாகிய துயரை, செய்யல - (எனக்குச்) செய்யமாட்டா — எ-று. (கருத்து.) இவளுடையகண்கள் புருவங்களால் மறைக்கப்படாவெனக்குத் துன்பத்தைச்செய்யாவாம் - என்பதாம். ∗ கட்பினைக் கண்டித்துப் புத்திசொல்வோர் தாம் செம்மையுடையரா யிருக்க வேண்டுதலால் - கோடாவென்றும், துயர்செய்கின்ற அவைகளுக்கும் உறுகின்ற தனக்கும் நடுவேநின்று விலக்கும்போதும் சிறிதுசந்து கிடைக்கப்பெற்றால் அதுவழியாகவந்து துன்பஞ்செய்யுமாகலால் - மறைப்பினென்றும் சொல்லினார், தாம் இயல்பாகக் காணுதலுடைமையால்

அவைகளை மிருகக்கண்மேல் சென்றிடிக்கமாட்டாவாயின வென்பது படநின்றமையால் மன்னொன்றந்த ஒழிபிசையில் வந்தது. (௬)

கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் துகில்.

[அவளது முலைகளினாலாகிய வருத்தஞ்சொல்லியது] இ-ள். ம
ர்-இம்மாதருடைய, படாஅ முலைமேற்றுகில் - சாய்தலில்லாத முலைக
ள்மேலிட்ட ஆடையானது (அவை கொல்லாமற்காத்தலால்) —கடா
க் களிற்றின்மேல்-(கொல்லுவதாகிய) மதயானைமேலிட்ட, கட்படா
முகபடாத்தினையொக்கும்—எ-று.(கருத்து.) இவள்முலைகளின்மேலே
தரித்த வஸ்திரமானது யானைமுகத்தின்மேலே தரித்த வஸ்த்திரத்தை
யொக்கும் - என்பதாம். * கண்ணைமறைத்தல்பற்றி கட்படாமென்று
ஆடையால் மறைத்தல் நாணுடையமகளிர்க்கு இயல்பாகலால் அஃ
தடையோடே அவைகளின் வெம்மையும் பெருமையுங்கண்டு இவ்
வலிமை யுடையவை இனி என்னுஞ் சாயாவென்று நினைத்துப்
படாஅ முலையென்றார்-உவமானம் சிறிது மறையாவழியும் கொல்லுமெ
ன்பது தோன்றநின்றது. (எ

ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

[இது அவளது நெற்றியாலாயவருத்தஞ்சொல்லியது] இ-ள். ஞாட்
பினுள்-போர்க்களத்து, நண்ணாரும் - எதிர்த்தில்லாதபகைவரும், உட்
கும் - (எதிர்த்தவர் வாய்ச்சொற்கேட்டு) அஞ்சுதற்கு ஏதுவாகிய, என்
பீடு-என் வலி, ஒண்ணுதற்கு - (இம்மாதருடைய) ஒளிபொருந்தியநெ
ற்றியொன்றற்குமே, உடைந்ததே-அழிந்துவிட்டது—எ-று. (கருத்து.
என்னுடைய வலிமையானது இவளுடைய நெற்றிக்கழிந்தது-என்பதா
ம். * மாதர்கொண்பது அதிகாரத்தாலவந்தது ஞாட்பினுளென்பதனால் ம
கைவாராதல்பெற்றும், பீடென்றபொதுமையால் மனவலியும் காயவலி
யுங்கொள்க, ஓ ஓ வென்னும் வியப்பிடைச்சொற்குறிப்பு அவ்வலியி
ன் பெருமையும், நெற்றியின் சிறுமையும், தோன்றநின்றது, கழிந்தஇ
ரக்கலால்-தற்புகழ்ச்சி அன்றாயிற்று. (அ

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

[இது அவளது அணிகலத்திலனுபவவருத்தஞ்சொல்லியது] இ-ள்.
பிணையேர்மடநோக்கும்-(புறத்திலே)பெண்மான்போன்ற அஞ்சுதலுடை
யபார்வையையும், நாணும - (அகத்தில்) நாணினையும், உடையாட்கு-உ
டைய இவளுக்கு (தன்றுமையுடைய இப்பார்வையும் நாணமும் ஆகிய
அணிகளே போதுமானவையா யிருக்க) ஏதிலதந்து-வேற்றுமையுடை
ய அணிகளையுண்டாக்கி, அணி-அணிதல், எவன் - என்னபயனுடைத்
து—எ-று. (கருத்து.) இவட்குப்பார்வையு நாணமு மாபரணங்களாயி
ருக்க வேறுபாரணங்களை யணிதலென்னபயன் - என்பதாம். * ஏ-அசை.
இவ்வேற்றுமையுடைய அணிகள் இவளுக்குப்பாரமும் எனக்குவருத்
தமும் ஆமென்று எண்ணமையால் அணிந்தார் அறிவிலா ரென்பதாம்.

உண்டார் கணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

[இது தலைவிகுறிப்பறியலுற்ற தலைவன் சொல்லியது] இ-ள். அடுநறா - காய்ச்சப்பட்ட மதுவானது, உண்டார்கணல்லது - (தன்னை) உண்டாரிடத்தேயல்லாமல், காமம்போல் - காமத்தைப்போல், கண்டார் - கண்டவரிடத்தே, மகிழ்ச்செய்தல் - மகிழ்ச்சிசெய்தலை, இன்று - உடைத்தன்று — எ-று. (கருத்து) மது உண்டால் மகிழ்ச்சி, காமங்கண்டால் மகிழ்ச்சிதரும் என்பதாம். * காமமென்றது அதை அநுபவிப்பதற்கு இடமாகிய மகளினை, மகிழ்ச்சிசெய்தலிலே காமமானது மதுவினும் சிறந்ததேயெனினும் இவள் குறிப்பை ஆராய்ந்தறியாமையால் யான் அது பெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க. (௰)

## ௱௰ - ஆம், அதி - குறிப்பறிதல்.

அஃதாவது - தலைவன் தலைவிகுறிப்பை அறிதலும், தோழிகுறிப்பை அறிதலும், அத்தோழி அவ்விருவர் குறிப்பையும் அறிதலும், ஆம். இது தலைவியழகைக்கண்டு வருந்தின தலைவன் தலைவியைக் கூடும்போது, இது வேண்டுமாதலால் தகையணங்குறுத்தலின் பின்வைக்கப்பட்டது. உ-ம். ௧

இருநோக்கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

[இது தலைவன் தலைவியுள்ளத்துக் குறிப்பை அவள்பார்வையாலறிந்தது] இ-ள். இவளுண்கண் - இவளுடைய (மை) யுண்ட கண்களில், உள்ளது - இருக்கின்றபார்வையானது, இருநோக்கு - (இப்பொழுது என்மேல்) இரண்டுபார்வையாயிற்று, (அவற்றுள்) ஒருநோக்கு - ஒருபார்வையானது, நோய்நோக்கு - (என்னிடத்து) நோய்செய்யும்பார்வையாம், ஒன்று - மற்றொருபார்வையானது, அந்நோய்மருந்து - அந்நோய்க்குமருந்தான பார்வையாம் — எ-று. (கருத்து.) இவள்பார்வையானது இரண்டு, ஒன்று நோய்செய்யும்பார்வை, மற்றொன்று அந்நோய்க்குமருந்தான பார்வை என்பதாம். நோய்செய்யுநோக்கு அவளதுமனத்தில் உண்டாகிய காமக்குறிப்பின் வெளிப்படுகின்ற பார்வை, மருந்தாய்நோக்கு - தன்னிடத்து உண்டாகின்ற அன்பினாலாகியபார்வை, எனக்கு இவ்வருத்தம் நீருமவழியும் உண்டாயிற்றென்பதாம்.

---

* (தொல்காப்பியம்) காட்டலாகாப் பொருளுடன்படுத்தற்குக் கூட்டியுரைக்கும் குறிப்புரையாகும் - குறிப்பே குறித்ததுக்கொள்ளுமாயின் - ஞ்செவு கிளைமென் மனார் புலவர்.

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

[இதுவுமது] இ-ள். கண்- (இவளது) கண்கள், களவுகொள்ளுஞ் சிறுநோக்கம்- கள்ளத்தனமாய் என்னைப்பார்க்கின்ற சிறியபார்வை, காமத்தில்- ௦ மெய்யுறுபுணர்ச்சியில், செம்பாகமன்று- சரிபாதியளவன்று பெரிது -( அதனினும்) மிகும் — எ-று. (கருத்து.) இவள் குறும்பார்வை காமத்தினுமதிகம் - என்பதாம். * நான் பார்த்தபோது கவனியாததுபோலும் பாராவிடத்தே உற்றுப்பார்த்தும் வருதலாலே, கண்களவுகொள்ளுமென்றும், அது உண்டாங்காலம் சிறிதாகலால்- சிறுநோக்கமென்றும் அப்பார்வை உட்கருத்து உள்ளவிடத்தே உண்டாவதாகலால் இனி இவளைக்கூடுதல் நிச்சயமென்றற்கு செம்பாகமன்று பெரிதென்றும் சொல்லினான். (௨)

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

[இது தலைவன் தலைவிகுறிப்பைப் பார்வையாலும், நாணினாலும், அறிந்தது] இ-ள். அவள்- அம்மாது, நோக்கினாள்- (நான்பாராதவளவிலே தான் என்னை அன்போடு) பார்த்தாள், நோக்கி-பார்த்து, இறைஞ்சினாள்- நன்றாய் (உட்கொண்டு நாணித்) தலைகுனிந்தாள் — அஃது அச் செய்கைக்கு அதுவாகியகுறிப்பானது — யாப்பினுள் (எம்மிருவரிடத்துந் தோன்றிய) அன்பாகியபயிருள், அட்டியநீர்- (அதுவளரும்படி) வார்த்தநீராயிற்று — எ-று. (கருத்து.) அவள்பார்த்தாள் பார்த்துத்தலைகுனிந்தாள் அவள்குறிப்பு இருவரன்பும் வளரும் தண்ணீராம் என்பதாம். * யாப்பு- கட்டு- யாப்பினுளாகிய அன்பையாப்பென்றார் [ஏகதேசவுருவகவணி] (௩)

யானோக்குங்காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

[இது தலைவன் தலைவிகுறிப்பை நாணினாலும், மகிழ்ச்சியாலும், அறிந்தது] இ-ள். யானோக்குங்காலை (தன்னை) நான் பார்க்கும்போது நிலனோக்கும் (எதிர்பாராமல் நாணித்தலைகுனிந்து) நிலத்தைப்பார்க்கின்றாள், நோக்காக்கால் (அதையறிந்து நான்) பாராதபோது, தானோக்கி-தான் (என்னைப்) பார்த்து, மெல்லநகும்-(தன்னுள்ளே) மகிழாநிற்பள் எ-று. (கருத்து.) யான்பார்க்கும்போது பூமியைப்பார்க்கிறாள் நான்பாராதபோது தான்பார்த்து நகைக்கின்றாள் என்பதாம். * மெல்லநகுதல் வெளிப்படாமல் மகிழ்தல் அதனாலே புணர்தற்குறிப்பு இவளது விளங்குதலறிந்தது. (௪)

---

௦ மெய்யுறுபுணர்ச்சி- மெய்தொட்டுப்புணரும் புணர்ச்சி - உள்ளப்புணர்ச்சி யொன்று வேறேயிருக்கையால் இப்படி சொல்லப்பட்டது

௱௯-ஆம்-அதி—குறிப்பறிதல். [illegible]

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

[இதுவுமது] இ-ள். குறிக்கொண்டு(கோபமாய்)குறிக்கொண்டு,நோக்காமையல்லால் - பார்வைமாத்திரமேயல்லது, ஒருகண் - ஒருகண்ணை சிறக்கணித்தாள்போல - சுருக்கினவள்போல, நகும் (என்னைப்பார்த்து தன்னுள்ளே) மகிழாநின்றாள்—எ-று.(கருத்து.) கோபாவேசமில் ஒருகண்ணைச்சுருக்கினவள்போலபார்த்து நகைக்கின்றாளென்பதாம். சிறக்கணித்தல் சிறக்கணித்தாளெனச் செய்யுள்விகாரமாயிற்று— சிறக்கணித்தல் சுருக்குதல்—அதுவும் வெளிப்படத்தோன்றாமையால்போலுமென்றார்—பார்த்தென்பது வருவிக்கப்படுதலால் சொல்லெச்சம்—இனியிவளை அடைவது நிச்சயமென்பது குறிப்பெச்சம், (௫)

> உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
> லொல்லை யுணரப் படும்.

[இதுதோழியாற்குறைமுடிக்கப்பட்டு அவளதுகுறிப்பையறிந்ததலைமகன் தன்னுள்ளேசொல்லியது] இ-ள். உறாஅதவர்போல்(புறத்திலே)அயலார்போல், சொல்லினும் (கடுஞ்சொல்) சொல்லினும், செறாஅர்சொல் (உள்ளே) பகையாதவர்சொல் பின்பிரயோசனப்படுத்தல்) ஒல்லை யுணரப்படும், (குறைமுடிக்கத்தவராலே) கடிதில் அறியப்படும்—எ-று. (கருத்து.) புறம்பாகக் கடுஞ்சொல்சொல்லினும் உள்ளே பகையாதவர் சொல் சீக்கிரமறியப்படுமென்பதாம். கடுஞ்சொல் இவ்விடம் மிகுந்தால் வினையுடையது வாராதேயுமென்று சொல்லுவது முதலானவை செறுவாளேவே அருளுடைமைபெறப்பட்டது— தன் குறைமுடிக்கவினைத்தே னாப்படுத்தலைக் குறிப்பாலறிந்து உலகியல்மேலவைத்துச்சொல்லியபடி இது. வருகின்றபாட்டிற்குமொக்கும். (௬)

> செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
> முறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

[இதுவுமது] இ-ள். செறாஅச்சிறுசொல்லும்- பின்பிணிதராவதாயுள்ளதொஇன்னாதாகிய சொல்லும், செற்றார்போனோக்கும்- (உள்ளே பகையாதிருந்தே புறத்தே) பகைத்தவர்போன்ற கோபப்பார்வையும், உறாஅர்போன் றுற்றார்-அயலோர்போலிருந்து நட்பாயினவர்க்குக் குறிப்பு - ஒருகுறிப்புப்பற்றிவருவனவாம்—எ-று (கருத்து.) உள்ளம்பகைச் சொல்லுங் கடுஞ்சொல்லும்- பகையாது பார்க்குங் கோபப்பார்வையும் ஆசைக்குறிப்பால்வரும் - என்பதாம். குறிப்பு ஆகுபெயர். இவை உள்ளேஒருபயன் குறித்துச்செய்கின்றவை இயல்பலல்லாகலால் இவைகளுக்கு அஞ்சவேண்டாமென்பதாம். (௭)

> அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
> பசையினள் பைய நகும்.

[இதுவுமது.] இ-ள். யானோக்க-(என்னை நீக்குகின்ற சொல்லுக்கு பொருமல்) நான் இரங்குநோக்கியவிடத்து, பசையினள் (அதினால்) இரங்கினவளாகி, பையநகும் - உள்ளேநகாநின்றாள் — அசையியற்கு - அசைசாயலுடையவளுக்கு, ஆண்டு அவ்வகையிலிடத்து, ஓரேஎர் - ஒருநல்லகுறிப்பு, உண்டு-உண்டு—எ-று (கருத்து.) நான்பார்த்தவிடத்திலிரங்கிப்பார்த்து, நகைக்கிறபடியால் நலமுண்டு - என்பதாம். ஏஎர் - ஆகுபெயர். அக்குறிப்பு - இன்பமுடையதென்பதாம்.

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

[இது தோழிமதியுடன்பாடெய்தித் தன்னுள்ளே சொல்லியது. இ-ள். ஏதிலார்போல - முன்னறியாதவர்போல, பொதுநோக்கு நோக்குதல் - (ஒருவரை ஒருவர்) பொதுப்பார்வையாகப் பார்த்தல், காதலார்கண்ணே - ஆசையையுடைய இவ்விருவரிடத்தும், உள - உண்டாகின்றன — எ-று. (கருத்து.) அயலார்போலப் பொதுப்பார்வை பார்த்தலை யுள்ளவரிடத்துண்டு - என்பதாம். * பொதுநோக்கு - யாவரிடத்தும் ஒருதன்மையாகியபார்வை, பார்த்தற்றொழிலொன்றேயாயினும் இருவரிடத்தும் உண்டாதலாலும், ஒருவரிடத்திலேயும் குறிப்பு வேறுபட்டால் பலவாமாகலாலும், உளவெனப் பன்மையாலே சொல்லப்பட்டது இருவரும் மறுமறைத் துண்டோர் மகிழ்ச்சிபோல் உள்ளத்துள்ளே மகிழ்தலால் - அதுபற்றிக் காதலாரென்றும், அதுபுறத்துவெளிப்படாமையால் ஏதிலாரென்றும் சொல்லினார் (௯)

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில.

[இதுவுமது.] இ-ள். (காமத்திற்குரியவிருவருள்) கண்ணொடு - [ஒருவரது, கண்களோடு, கண்ணிணை - ஒருவர்) கண்கள், நோக்கொக்கின் - பார்வையால் ஒக்குமாயின், வாய்ச்சொற்கள் - (உண்மைதோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள், என்னபயனும் - ஒருபயனும், இல - உடையனவல்ல — எ-று. (கருத்து.) இருவர்பார்வையு மொக்குமாயின் வாய்ச்சொற்கள் பயனில்லன - என்பதாம். * பார்வையாலொத்தல். ஒரேப்பார்வை யுடையனவாதல். வாய்ச்சொற்கள் - மனதில்லாமல் வாயளவிலே தோன்றுகின்றசொற்கள். இருவர்சொல்லும்கேட்டு உசிதமாயின்மேல் வைத்துச்சொல்லியபடி. இருவர்சொல்லும் விதமாவன - அவன் புனங்காவலேன்மேலும். ஆயவெட்டத்திலமேலும். சொல்லுவன. பயனில்சொற்களாவையெல் இச்சொற்கள் கொள்ளப்படாவென்பதாம். (௰)

## ௱௰௧-ஆம் அதி - புணர்ச்சிமகிழ்தல்.

அஃதாவது, அப்படிக்குறிப்பறிந்து புணர்ந்த தலைவன் அப்புணர்ச்சியை மகிழ்ந்துசொல்லுதல் அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும். உதாரணம்.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

பொழுதும் நெகிழாமையால்) காற்றால் இடையறுக்கப்படாத, முயக்கு
புணர்ச்சியானது, வீழுமிருவருக்கு - (ஒருவரை ஒருவர் விரும்புகிற இரு
வர்க்கும், இனிதே - இனியதாகும்—எ-று. (கருத்து.) காற்றாலிடை
யறுக்கப்படாத புணர்ச்சியானது இருவருக்கும் இன்பமாகும்-என்பதாம்.
மூன்றும்மை விகாரத்தாற் றொக்கது, ஏகாரம்- தேற்றம் - இங்கே இரு
வரில்லாமையால் அது ஒவ்வாதென்பது கருத்து. களவுப்புணர்ச்சியையு
மிழ்ந்து விவாகத்துக்கு உடன்படாதவள் சொல்லியபடி. (அ)

ஊடலுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

[இது மறைக்கவேண்டாமையால் ருசிக்கவில்லாத புணர்ச்சியே
இன்பப்பயனுடையதாகலால் விவாகஞ்செய்துகொள்ளென்ற தோழிக்
குச் சொல்லியது.] இ-ள். ஊடல் - (புணர்ச்சி இனிதாதற் பொருட்டே
லாடு) கூடலும், உணர்தல் - (அதனை அளவறிந்து) நீங்குதலும், புணர்
தல் - (அதன்பின் உண்டாகின்ற) அப்புணர்ச்சியும் என்கிற இவைமூ
வையல்லவா, காமங்கூடியார் - (விவாகஞ்செய்துகொண்டு) காமத்தாற்
இடைவிடாதடைந்தவர், பெற்றபயன் - பெற்றபயன்கள்—எ-று. (கருத்
து.) ஊடலும் அதனைநீக்கலும் புணர்ச்சியும் விவாகஞ்செய்து கொண்
டவர் பெற்றபலன் - என்பதாம். உ ஆடவர்க்குப் பிரிவென்பதொன்று
உண்டாவதல்லவாம் அதற்காகப் பரத்தையரிடத்தாதும், அதனை அறி
ந்தமகளிர் ஊடியிருத்தலும், அவ்வூடலைத் தவறுசெய்த ஆடவராமே தந்
வறில்லாமைசொல்லி நீக்கலும், பின்னும் அவ்விருவரும் ஒத்த வன்பி
னராய்க்கூடலும், அல்லவா, முன்விவாகஞ்செய்துகொண்டு அடைந்
தவர்பெற்றபயன். அப்பயன் இருதலைப்புள்ளினோருயிராகிய மாறு
ளப்படைய எமக்குவேண்டாவென அவ்விவாகஞ்செய்து அடைதலை இ
கழ்ந்து சொல்லியபடி. (௯)

எடுக்கப்பட்ட, அனிச்சமும் - அனிச்சமலரும் — அன்னத்தின்தூவியும் - அன்னப்பறவையினிறகும்; மாதரடிக்கு - பெண்களினடிக்கு, நெருஞ்சிப்பழம் - நெருஞ்சிப்பழம்போல் வருத்தஞ்செய்யும் — எ-று. (கருத்து.) அனிச்சமலரும் - அன்னப்பறவையினிறகும் மாதர்களடிக்கு நெருஞ்சிப்பழம்போல் வருத்தஞ்செய்யும் - என்பதாம். * முள்ளுடைத்தாதலால் பழமென்றார் இப்படிப்பட்ட அடிகள் கூர்ங்கல்லும் வெப்பமுள்ள பாலைநிலை எப்படி கடப்பாளென்பது குறிப்பாலே பெறப்பட்டது செம்பொருளேயன்றிக் குறிப்புப்பொருளும் அடிநலமழியாமையாகலின் இதுவும் இவ்வதிகாரத் தாயது. (௰)

## ௱௰௩ - ஆம் அதி - காதற்சிறப்புரைத்தல்.

அஃதாவது - தலைவன் தன்னாசைமிகுதியைச்சொல்லலும், தலைவிதன் னாசைமிகுதியைச் சொல்லலும், ஆம். இதுபுணர்ச்சியும் நலனும் பற்றி நிகழ்கின்றதாகலால் அவற்றினதிகாரங்களின் பின்வைக்கப் பட்டது.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

[இது தலைவன் இயற்கைப்புணர்ச்சி முடிவிலே தன்னயப்பை அறிவித்தது] இ-ள்; பணிமொழி - இம்மெல்லிய சொல்லையுடையவளது, வாலெயிறூறியநீர் - வெண்பல்லிலூறிய நீரானது, பாலொடுதேன் கலந்தற்றே - பாலுடனே தேனைக்கலந்த கலவைபோலும் — எ-று. (கருத்து.) இம்மெல்லிய மொழியினையுடையாளது வாயெயிற்றிலூறிய நீரானது பாலுடனே தேனைக்கலந்தகலவை போலும் - என்பதாம். * பாலொடுதேனேன்றதனால் - அதன் சுவைபோலுஞ் சுவையுடைத் தென்பதாயிற்று — வேறு வேறறியப்பட்ட சுவையையுடைய பாலும் தேனும் கலந்தவிடத்து அச்சுவை இன்னதென்று அறியக்கூடாத இனியசுவையை யுடையதாமாகலால் அச்சுவையினீர்க்கும் அடைவிக்க. (௧)

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

[இது தலைவன் பிரிவினுண்டாகிய அச்சத்தைச் சொல்லியது.] இ-ள். மடந்தையொடெம்மிடை - இம்மாதோடு எம்மிடத்து உண்டாகிய, நட்பு - நட்புகள், உடம்பொடுயிரிடை - உடம்போடு உயிரிடத்து என்ன - எப்படிப்பட்டவை; அன்ன - அப்படிப்பட்டவையாகும் — எ-று. (கருத்து.) உடம்போடு உயிரிடையுளவாகிய நட்புகளெத்தன்மையவோ அத்தன்மையவே இம்மடந்தையோடு எம்மிடையுளவாகிய நட்புக்கள் என்பதாம். * எப்படிப்பட்டவை யெனப்பன்மையாற் சொல்லியது.

ல்லுதலாம், இது காதல்மிகுந்த விடத்து நிகழ்வு தாகலான் காதற்சி றப்புரைத்தலின் பின்வைக்கப்பட்டது.

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

[காமப் படுத்தப்பட்டுப் பொறுக்கலாற்றாத தலைவன் சொல்லியது] இ-ள். காமமுழந்து - (அரியமகளிரோடு) காமத்தை அனுபவித்து—(பி ன் அதுபெறாமல்) வருந்தினார்க்கு - துன்பமடைந்த ஆடவர்க்கு, ஏமம டலல்லது—(முன்னும்) காப்பாய்வருகின்ற * மடன்மாவல்லது, வலி- வலியது, இல்லை - (இனிஎனக்கு) இல்லை—எ-று. (கருத்து.) அரியமக ளிரோடு காமத்தை அநுபவித்தும் பின்னது பெறாது துன்பமடைந்த ஆடவர்க்கு - முன்னுங்காப்பாய் வருகின்ற மடலல்லது இனி வலியதி ல்லை-என்பதாம். * ஏமமாதல், அத்துன்பம் நீக்கும்வகை அவ்வாறுபாயத் தைக் கொடுத்தல் வலி- ஆகுபெயர், முன்னும் ஆடவராயினோர். இன்ப மடைந்து வருகிறவழி இருக்கவும் உன்னை அதற்குத் துணையென்று நி னைத்து விணுகமுயன்ற நான் இப்போது துணையல்லாமை அறிந்தேனாக லால் இனியாயினும் அவ்வழியால் அதனை அடைவேனென்பது கருத்து.

நோனா வுடம்பு முயிரு மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து.

[இது நாணமுடைய உமக்கு மடன்மா வேறுகை முடியாதென்று அதனைவிலக்கலுற்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.] இ-ள். நோனா - (அவ்வருத்தத்தைப்) பொறாத, உடம்பும் உயிரும் - உடலும் உயிரு ம்—மடலேறும் - (அதற்குக்காப்பாகிய மடன்மாவை) ஏறினவாகின் றன—நாணினை - (அதனை விலக்குவதாகிய) நாணத்தை—நீக்கிநிறுத்து - ஒழித்துவிட்டு—எ-று. (கருத்து.) அவ்வருத்தத்தினைப்பொறாத உடம்பு முயிரும் அதற்குக்காவலாகிய மடன்மாவினேறாக் கருதாநின்றன அத னைவிலக்குவதாய நாணினைபற்றி - என்பதாம். * அறிவுமுதலானவை முன்னே நீங்கவும் நாண் நீங்காது நின்றது, அதுவும் இப்பொழுது நீக் கிற்றென்றற்கு உடம்பு முயிருமென்றான். ஆணைநாம் தம்முன்னீக்க

---

* அறத்தோடு நிற்பித்தல் - இங்கே தலைவி தன்காமத்தைப் பாங்கி முதலானவரால் வெளிப்படுத்தல்.

* மடன்மா - பனைமடலாலே செய்யப்பட்ட குதிரை.



மைப்பொருட்டு மடலேறுமென்றது அவன் தன் பொறுமையழிந்து வ திலே உடன்படுதல் குறித்து.

(உ

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

[இது நாணமேயன்றி நல்லாண்மையும் உடைமையால் மடலே றுகைமுடியாதென்ற தோழிக்குச்சொல்லியது.] இ-ள். நாணொடு நல்லா ண்மை—நாணத்தையும் மிகுந்த ஆண்மையையும், பண்டு-முன்னே—உ டையேன் - உடையேன்—(அவைகாமத்தால் நீங்குதலால்) காமுற்று ஏறுமடல் - காமமிகுந்தவரேறுமடலை, இன்று - இப்போது, உடைடே

னதுகாமமானது, மறுகில் - (இவ்வூர்) வீதியில், மருண்டு - மயங்கி, மறுகும் - சுழல்கின்றது—எ-று. (கருத்து.) யான் முன்னடக்கியிருந்தலால் எல்லாரும் என்னையறிந்திலர் - இனியவ்வாறு நில்லாது தானே வெளியிட்டு அறிவிப்பேனென்று நினைத்து என்காமம் இவ்வூர் வீதியில் மயங்கிச்சுழல்கின்றது - என்பதாம். * மயங்குதல் = அம்பலாதல் - மறுகுதல் = அலராதல் இவ்விரண்டுமாயிற்று இனி ○ அறத்தொடு நிற்றல் வேண்டுமென்பதாம். (௯)

யாக்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

[இது ※ செவிலிக்கு அறத்தொடு நின்றுவைத்து நான் நிற்கும்படியாம் என்றென்று நகைசெய்த தோழியோடு புலந்து தலைவி தன்னுள்ளே சொல்லியது] இ-ள். யாம் - நாம், கண்ணிற்காண - (கேட்கும்படியன்றிக்) கண்ணாற்காணும்படி—அறிவில்லார்—அறிவில்லாதவர்கள், நகுப (எம்மைச்) சிரிக்கின்றார்—(அவர் அப்படிச்செய்கின்றது) யாம்பட்ட - யாம் அடைந்த நோய்களை—தாம்படாவாறு - தாம் அடையாமையால்—எ-று. (கருத்து.) நாம் கேட்கும்படியல்லாமல் கண்ணாற் காணும்படி எம்மை அறிவில்லார் சிரிக்கின்றார்—அவரங்ஙனஞ்செய்கிறது நாமடைந்த நோயைத் தாமடையாமையால் என்பதாம். ※ கண்ணிற்காணவென்றது முன் கண்டறியாமை யுணர்கின்றது—அறத்தொடு நின்றமை யறியாமல் நகைசெய்யுமாட்சிமைப் படுமென்றிலனென்று பிணங்குகின்றாளாகவல் அயலாளாக்கிச் சொல்லினாள். (௰)

---

* அம்பல் - சிலரறிந்து தம்முட்பேசல் ○ அலர் பலரறிந்து தூற்றல்
○ அறத்தொடுநிற்றல் - காமத்தை வெளிப்படுத்தல்.
※ செவிலி - வளர்த்ததாய்.

# ௱௰௫ - ஆம், அதி - அலரறிவுறுத்தல்.

அஃதாவது - களவொழுக்கம் வேண்டியதலைவன் பிறர் சொல்லுகின்ற அலர்தனக்கு ஆமென்றவிதத்தை தோழிக்கு அறிவித்தலும், மணமாக உடன்போக்காக ஒன்று வேண்டிய தலைவியும் தோழியும் அவ்வலரை அவனுக்கு அறிவுறுத்தலும், ஆம். இது நாணுத்துறந்தவழி நிகழ்வதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது.

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்

[இது மணஞ்செய்தற்குப் பொருள்சம்பாதிக்கத் தலைவன் பிரி
போது பொறாதவளாகிய தலைவி அவன் வந்து சிறைப்புறத்தானாக
ந்து அலரஞ்சிப் பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லி
து] இ-ள். (தம்மைக்கண்ட நாளில்) அஞ்சலோம் என்றும் - (உன்னைவி
ட்டுநீங்கேன்) அஞ்சுதலொழியென்றவரே, பலர்காண - (இன்றுகண்
டவர்) பலரும் காணும்வகை, நீத்தக்கடை - (நம்மைவிட்டு) நீங்கியபின் -
அலர் - (அயலவர் தூற்றுகிற) அலருக்கு, நாணவேண்டுதோ - (நாம்) நா
ணக்கூடுமோ — எ-று. (கருத்து.) தம்மைக்கண்ட நாளில் உன்னைவிட்டுநீ
ங்கேன் அஞ்சுதலொழியென்றவரே இன்றுகண்டார்பலரும் காணும்வ
கை நம்மைத்துறந்தபின்னாமேதிலார்கூறும்அலருக்கும் நாணக்கூடுமோ
கூடாது - என்பதாம். * கண்டார் நாணுகிற நிலைமையே மாறிய நம்மா
லுதல் எவ்விடத்தென்பதாம். (4)

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர்.

[இது தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குச் சொல்லி
னாள் அலரறிவித்து அவனுடன்போதற்கு ஆசைகொள்ளச் செய்கி
து] இ-ள். யாம் - நாம், வேண்டுங்கௌவை - (உடன்போதற்குக் காரண
மாதல் பற்றி முன்னமே) இச்சிப்பதாகிய அலரை, இவ்வூர் - இவ்வூ
ர், எடுக்கும் - (நீர்சொன்ன) எடுக்கின்றது, காதலர் - (இனித்) தலைவர்,
வேண்டின் - (நாம்) வேண்டினால். தாம் - தாமும், நல்குவர் - அதற்கு உடன்
படுவர் (ஆகலால் இவ்வலர் நமக்கு நன்றாய்வந்தது) — எ-று. (கருத்து.)
உடன்செல்லுதற்குக் காரணமாகநோக்கி நாமுன்விரும்புவதாகிய அ
லரை இவ்வூர்தானே எடுக்கின்றது இனிக்காதலர் தாமும் யாம்வேண்டி
யக்காலத்தினே இனிது சேர்வாராதலின் இவ்வலர் நமக்கு நன்றாய்வந்த
து - என்பதாம். ஏ உம்மைவருவிக்கப்பட்டது நம்மிடத்து ஆசையுடை
மையால் மாறுசொல்லாதென்ற காதலனென்றான். (5)



கற்பியல்.

இனிக்கற்புப்பற்றிப்பதினெட் டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலிலே
பிரிவாற்றாமை சொல்லுகின்றார். (உ-ம்.) *

## ௱௰௬ - ஆம், அதி - பிரிவாற்றாமை.



அஃதாவது, மணஞ்செய்துகொண்டபின் தலைவன் அறம்பொருளின்ப
ங்களின்பொருட்டுத் தலைவியைப்பிரிந்து நாட்டிலும் அயலிடத்திலு
ம், செல்லுவானின், அப்பிரிவை அவன்பொறுக்க மாட்டாதவளாகுத
ல் ஆவதாம். அதுயிங்கே பிரிவை அறிவித்த தலைவனுக்குத் தோழி
சொல்லலும், தோழிக்குத் தலைவி அவன் குறிப்பால் அறிந்துசொல்
லலும், பிரிவை அறிவித்தவிடத்துத் தலைவன் பிரிந்தவிடத்து ஆற்
றுவிக்கும் இடத்துத் தோழிக்குச் சொல்லலும், என்னவகையாலே
சொல்லப்பட்டது.

[இது காமம் தீயைப்போல நின்ற இடத்தைச் சுடுமாதலால் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது] இ-ள். தீ-நெருப்பானது, தொடின்-(தன்னைத்) தொட்டால், சுடிற் (சுட) லல்லது - தொட்டாற் சுடலல்லது, காமநோய்போல-காமமாகிய நோயைப்போல, விடின் - (தன்னை) விட்டு நீங்கினால், சுடலாற்றுமோ - (தப்பாது) சுடவல்லதோ—எ-று. (கருத்து.) தீ தன்னைத் தொட்டாற் சுடுமாயிற் சுடுமேயல்லது காமமாகிய நோய்போலத் தன்னை யகன்றுறத்தப்பாது சுடுந்திறமுடைத்தன்றோ - என்பதாம். தொடினென்றது-மந்திரமருந்துகளாலே தம்பிக்கப்படாதாயினென்றபடி. காமத்திற்கு அதுவும் இல்லையென்றது - சும்மா சுடவென்றான், நீங்கள் அநுபவியாமை சுடல்மூன்றும் சுட்டப்பட்டது தீயினும் கொடியதனை, நான் பொறுக்கும்விதம் எங்ஙனே யென்பதாம். (௯)

௱௰௬-ஆம், அதி—பிரிவாற்றாமை. ௲௱௬௰.

> அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
> பின்இருந்து வாழ்வார் பலர்.

[இது தலைவியர் பலரும் பிரிவைப் பொறுக்கிருப்பர் நீ அதுசெய்திலை யென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது] இ-ள். (நீ சொல்லுகின்றது ஒக்கும்) அரிதாற்றி - பிரிவை அறிவித்தவிடத்து அதற்கு உடன்பட்டு, அல்லல்நோய் - (பிரியும்போது உண்டாகிற) துன்பநோயையும், நீக்கி-ஒழித்து, பிரிவாற்றி - (பிரிந்தால்) அப்பிரிவையும் பொறுத்து, பின்னிருந்து-பின்னும் இருந்து, வாழ்வார் - உயிர்வாழுமகளிர், பலர் - (உலகத்தில்) பலர்—எ-று. (கருத்து.) நீ சொல்லுகின்ற தோர்க்கும் பிரிவுணர்த்திய வழியதற்குடன்பட்டுப் பிரியக்காணிகழு மல்லல்நோயினையு நீக்கிப் பிரிந்தாற் பிரிவு தன்னையுமாற்றிப் பின்னுமிருந்து வாழுமகளிர் உலகத்துப் பலரென்பதாம், ஈண்டு விலுஞ்சிறக்கத் தலைவியனிபெற்று இன்பத்தை அநுபவிக்கிறசமயத்தில் அதனையிழந்து துன்பத்தை அநுபவித்தற்கு உடன்படுதல் அரியதோன்றுகலால் அரிதாற்றியென்றும் செல்லுந்தேசத்திலே அவருக்கு யாதுசமயமேசேருமோவென்றும், அவர்வருமளவும் நாம்பொறுத்திருக்கும்விதம் எவ்வெனன்றும், அவர்வரவு தான்மருபடி என்றைக்குவந்து கிடைக்குமோவென்றும், இவ்விதங்களாலே தோன்றுகிற கலக்கமனத்தைவிட்டு நீங்காதாதலால் அல்லல்நோய் நீக்கியென்றும், பிரிந்தால்வருமளவும் உள்ளேதோன்றுகிற காமவேதனையும் புறத்தில் வீணை, மிசை, சந்திரன், தென்றல், இவைமுதலாயவற்று அதனைவளர்ப்பனவையும் பொறுத்தல் அருமையாகலால் பிரிவாற்றியென்றும், தாம் காதலனைவிட்டிருக்கமாட்டாத மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னும் இருந்து உயிர்வாழவல்லவர் ஒருவரும் இல்லையென்பது குறிப்பினாலேதோன்ற பின்னிருந்துவாழ்வார் பலரென்றும், சொல்லினாள். பிரிவிலே நிகழ்ப்பலவகைப்பிரிவென்றான் ஆற்றாமை, புணர்வுரி நீக்கி ஆற்றியென்பவை நசைவகையால் அவைகளினருமைபுணர்வுரிவரை இன்றனை. பிரிவையுமென்னு மும்மைவிகாரத்தாற்றொக்கது. நியாறும் இறந்து படுவேனென்பது கருத்து. (௰)

௱௰௭-ஆம், அதி-படர்மெலிந்திரங்கல்.

காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
நோனா வுடம்பி னகத்து.

[இதுவுமது] இ-ள். காமமும் - காமநோயும், நாணும் - (அதுசெய்தவர்க்குச்) சொல்லவொட்டாத நாணும், என்னோனாவுடம்பினகத்து - (அவ்விரண்டனையும்) பொறாத என்னுடம்பினிடத்து, உயிர், உயிர், காவாக் காவடிதண்டாக, தூங்கும் - (அவ்விருதலையிலும்) தொங்குகின்றன—எ-று. (கருத்து.) காமநோயுமதனைச் செய்தவர்க்கறிவித்த சொல்லவொட்டாத நாணுந் தம்மைப் பொறாத வென்னுடம்பின்கண்ணே யுயிர்காத்த தண்டாக வவ்விருதலையினுந் தூங்குகின்றன - வென்பதாம். * பொறாமை - மெலிவுடையதாகிய தூங்குமென்றது : ஒன்றிலொன்று மிகாமல் இரண்டும்



ஒத்த சீரவென்பது தோன்றநின்றது. அதனையிடப் பண்ணுகிற காமமும் ஒழிவப்பண்ணுகிற நாணும் தமமுள் ஒத்து உயிரை இறக்கச் செய்தன; தலை - யாகிய அவைகளுள் ஒன்றிலொன்றிற்கமாட்டாமையாற் இது இறந்தேவிடுமென்பதாம். (௩)

காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில்.

[இது தலைவியர் காமக்கடலில் வீழ்ந்தார் விழினும் அதற்குரைத்தபுணையால் நீந்திக் கடப்பரென்ற தோழிக்குச் சொல்லியது] இ-ள். (யாவர்க்கும் உண்டாய்வருகின்ற இரண்டினுள்ளும்) காமக்கடல் - காமக்கடலே, உண்டு - (எனக்கு) உண்டாகின்றது, அதுநீந்தும் - அக்கடலைக்கடக்கும், ஏமப்புணை - காப்பாகியபுணை, இல் - (எனக்கு) இல்லை—எ-று. (கருத்து.) யாவர்க்குமுளவாய்நின்ற விவ்விரண்டினுள்ளு மெனக்குண்டாகின்றது காமக்கடலே யதனை நீந்துமாறுரிய புணையில்லை யென்பதாம். மன்னிரண்டும் உம்மிரண்டும் அசைநிலைகள். தாழுமிட்டு இதற்குப் புணையாதற்குரிய நீயும் ஆவையில்லையென்பது கருத்து. (௪)

துப்பினெவ னாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

[இது தூதுவிடாமைநோக்கி தோழியொடு தலைவி பிணங்கிச்சொல்லியது.] இ-ள். நட்பினுள் - (இன்பஞ்செய்தற்கு உரிய) நட்பினிடத்து, துயர்வரவு - துன்பத்தின்வரவினை, ஆற்றுபவர் - செய்பவரானவர், துப்பில் - (துன்பஞ்செய்தற்கு உரிய) பகைமையிடத்து, எவனாவர்கொல் - என்ன செய்வரோ—எ-று. (கருத்து.) இன்பஞ்செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்பவரவினைச் செய்பவரவர் துன்பஞ்செய்தற்குரிய பகைமைக்கண்ணென் செய்வர்கொல்லோ - என்பதாம். * அப்பகை இக்கொடுமையால் அவர்செய்வதும் அறியப்பெற்றிலேனென்பது பட நின்றமையான் மற்றொழியிசை. துயர்வருதலை விலக்கலாயிருக்க அது செய்கின்றிலை யென்று பிணங்குகின்றமையால் தோழியைத் துயர்வரவு செய்தவளாக்கியும் பிறனாக்கியும் சொல்லினான். (௫)

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
துன்ப மதனிற் பெரிது.

டார் (சொல்லுமாத்திரத்தால்) விரும்பியவர், உளர்மன் - (இங்கே) இரு க்கின்றார் அவ்விருத்தலாலேபயன்யாது, கண்-கண்கள், மற்று - அவ் காணாது அவரைக் காணாமல், அமைவில - பொறுக்கின்றில—எ-று. (கருத்து.) நெஞ்சால் விழையா துவைத்துச் சொன்னமாத்திரத்தால் கைவிடாது ழைந்தவரிவ்விடத்தேயுள ரவ்வுண்மையாற் பயன்யாதவரைக் கண்க காணாதமைகின்றனவில்லையாயி - னென்பதாம். ● செயலாற்பிரிந்துசெ றமையால், பேணாரென்றுமுன்னே கலம்பாராட்டி ○ பிரிவச்சமும் வன்புறையும் சொல்லினாரகளால், பெட்டாரென்றும், சொல்லுக்கு ன் ஒழியிசை - மற்று -வினைமாற்று-ஓ-அசைநிலையான் பொறுக்கவும்கண் கள் அவரைக்காணுதற்குவிரும்புகின்றன வென்பதாம். (அ)

வாராக்கால் அஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்

[இது நீயும்பொறுத்து உன்கண்களும் தூங்கல்வேண்டுமென்ற தோழிக்குச்சொல்லியது.] இ-ள். வாராக்கால் - (காதர்) வாராதகால் ளிலே, அஞ்சா - (அவர்வரவுபார்த்துத்) தூங்காவாம், வரின் - வந்தகா ள்களிலே, துஞ்சா - (அவர்பிரிவரென்று அஞ்சித் தூங்காவாம் (ஆத லால்)—ஆயிடை - அவ்விருவழியும், கண் - எனதுகண்கள், ஆரஞர் றன - பொறுத்தற்கரியதுன்பத்தை யுடையனவாம்—எ-று. (கருத்து) காதலர் வாராதநாளன்றவர் வரவுபார்த்துத் துயிலாதுவந்த நாளன்றவர்பி

ரிவுநி னைத்துயிலாவாகலா னவ்விருவழியு மென்கண்கள் பொறுத்தற் கரிய துன்பத்தினை யுடையவென்பதாம். ● இனி அக்கண்களுக்குத்து கம் ஒருநாளும் இல்லையென்பதாம். (௯)

மறைபெற லூரார்க் கரிதன்றாலெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

[இது காதலை இவ்வூரார் அறியாமல் அவர் கொடுமை மறைத்தல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது] இ-ள். எம்போ ல் எம்மைப் போலும், அறைபறைகண்ணார் அறைபறையாகிய கண்

○ பிரிவச்சம் - பிரிதற்கு அஞ்சுதல்
● வன்புறைகைவிடேனென்று பலவித உறுதிசொல்லல்.

[இது ... இப்பழிப்பசப்புநீ மறைவது [illegible] தோழியொ
டு பிணங்கிச்சொல்லியது] இ-ள். இவள் - இவள், [illegible] என்பதல்- (பொறுத்திராமல்) பசலைநிறமடைந்தாளென்று (என்னைப்) பழித்
தலுவதல்லது, இவளை - இம்மாதை, அவர் - அவர், துறந்தாரென்பா
துறந்துபோனாரென்று சொல்லுவார், இல் - இல்லை—எ-று. (கருத்
து) இவளாற்றியிராது பசந்தாளென்றென்னைப் பழிகூறுதலல்லதிவ
ளவர் துறந்து போயினாரென்றவரைக் கூறுவா ரொருவருமில்லை யெ
ன்றாம், * தன்னையேநெருங்குதல் பற்றிப்பிணங்குகின்றமையால் ஈங்
ஙன வேறுபடுத்திச் சொல்லினள். (௮)

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்.
நன்னிலைய ராவ ரெனின்,

[இதுவுமது] இ-ள். நயப்பித்தார்- (இப்பிரிவையானே) உடன்ப
டும் வகைசொல்லியவர், நன்னிலையராவரெனின் - (இன்று உங்கருத
ல்) நல்லநிலையினராவராயின், என்மேனி - என்னுடம்பு, பட்டாங் (கு
க) - பட்டதுபட, பசக்க - பசலைநிறமடையக் கடவது—எ-று. (கரு
த்து) இப்பிரிவை யானேயுடன்படும்வகைசொல்லியவரின்று மேன்கரு
தானல்ல நிலையினராவராயி னென்மேனிப்பட்டதுபடப் பசப்பதா
வென்பதாம். * நன்னிலையராதல் - நன்மைக்கண்ணே நிற்றலையுடையரா
தல் பட்டாங்காகவென ஆக்கம் வருவித்துச்சொல்லப்பட்டது. முன்
ப்பிரிவின்கொடுமை யறியாத என்னை இதற்கு உடன்படுத்தி பிரிந்த
தலைவிலராகவே வேண்டுவது என்மேனியும் பசப்பும்யாதுசெய்யில் எ
னவென்பது படலிற்கைடால் மன் ஞறியிசையில்வந்தது, (௯)

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்,

[இது தலைவிபொறுத்தற் பொருட்டுத் தோழிதலைவனை இயற்பழி
த்தவிடத்து அவள் இயற்படச்சொல்லியது] இ-ள். நயப்பித்தார் - (அ
ன்று) குறையயப்பித்துக்கூடினவர்க்கு, நல்காமை - (இன்று) அரு
ளாமையை, தூற்றாரெனின் - (கட்டுற்றோர்) தூற்றாராயின், பசப்பென
பசப்புத்தாளாயினளென்று (ஒற்றுமையால்தாம்) சொல்ல, பேர்பெ
றுதல் - பேரைப்பெறுதல், நன்றே - (எனக்கு) நன்றாம்—எ-று. (கரு
த்து) அன்றுதாங்குறையயப்பித்துக் கூடினவர்க்கின்று நல்காமையை
யுட்டோர் தூற்றாராயிற் பசப்புனாயினளென வேற்றுமையிலென்றிப்
பசப்புற்றாளாயினளெனவொற்றுமையாற்றுஞ் சொல்ல வப்பெயரை
பெறுதலெனக்கு நன்றென்பதாம். * கட்டுற்றாரென்பது வருவிக்கப்
பட்டது பரக்கப்பழித்தற்குப் பொறாமற் பிணங்குகின்றாளாதலால் இ
ம்மெச்சக்குறிப்பால் சொல்லினள். அவரை அருளிலரென்னாது இன்னும்
[illegible] அடைந்தாள் இவளென்பதே நான் பொறுக்கும் வழியென்பதாம்

## ௱௨௰- ஆம், அதி - தனிப்படர்மிகுதி.

அஃதாவது - தனியாகிய துன்பமிகுதியாம் அதுபசப்புற்று வருந்தினவ
ளுக்கு உரியதாகலால் பசப்புறுபருவரலின் பின் வைக்கப்பட்டது.

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே

[இது காதலரை இயல்பழித்தற்கு அஞ்சி அவரது அருளின்மையை மறைத்தால் நீ தெய்வத்தன்மை பொருந்திய கற்புடையையா லாக் கற்புடை மகளிரால் நன்கு மதிக்கப்படுவா யென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது] இ-ள். வீழப்படுவார் - (கற்புடைமகளிராலே) நன்கு மதிக்கப்படுவாரும், தாம்வீழ்வார் - தம்மால் விரும்பப்பட்ட கணவரால், வீழப்படாஅரெனின் - விரும்பப்படாராயின் கெழீஇயிலர் - தீவினையுடையரேயாவர்—எ-று (கருத்து.) கற்புடையமகளிரால் நன்குமதிக்கப்படுவாருந் தாம்விரும்புங் கணவரால் விரும்பப்படாராயிற் தீவினையுடைய ரென்பதாம். * உம்மை விகாரத்தால் தொக்கது. கெழீஇயின்மை நல்வினையில்லாமை தீவினையுடையேனுக்கு அந்நன்குமதிப்பாற் பயனில்லையென்பதாம். (௪)

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

[இது அவர்மேலே காதலுடைமையால் அவர் கருத்தறிந்துபோ த்தாயென்ற தோழிக்குச்சொல்லியது] இ-ள். நாங்காதல் கொண்டார் - நம்மாலே காதல்கொள்ளப்பட்டவர், நமக்கு-நமக்கு, எவன் - என்னவின்பத்தை, செய்ப - செய்வார்—(அப்படியே) தாங் காதல்கொள்ளாக்கடை - தாமும் (நம்மிடத்துக்) காதல்செய்யாதவிடத்து—எ-று (கருத்து.) நம்மாற்காதல் செய்யப்பட்டவர் நமக்கென்ன வின்பத்தைச் செய்வாரோ தாமுநமக்குக்காதல் செய்யாவழி-என்பதாம். * அக்காதலுடைமையாற் காம்பெற்றது துன்பமேயென்பதாம். ஓ-அசைநிலை. (௫)

ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

[இதுவுமது] இ-ள். (மகளிர் ஆடவரெனப்படுகிற இரண்டிடங்களிலும்) காமம் - ஆசையானது, ஒருதலையான் - ஓரிடத்தில்,(உண்டாயின்)—இன்னாது - துன்பஞ்செயலதாம், காப்போல - காவடிப் பாரம்



போல, இருதலையானும் இரண்டிடங்களிலும் (ஒத்திருக்குமாயின்) (அது)—இனிது - இன்பஞ்செய்வதாம் எ-று. (கருத்து) மகளிராடவ ரென்னு மிருதலையினும் வேட்கை யொருதலைக்கண்ணேயாயின் இன்னாது காவினதுபாரம்போல் இருதலைக்கண்ணு மொப்பினதினிதென் பதாம். * ஆகுபெயர்கள் கண்ணுதமிழைப் பொருளில்வந்தன கா - அதன்பா ரத்துக்கு ஆகுபெயர் எவ்விடத்து உண்டாகியவாசை அவரிடத்தும் உண்டாயின் நான் இப்படித்துன்பமனுபவித்தல் கூடுமோவென்பதாம். (௬)

பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
னொருவர்க ணின்றொழுகு வான்.

[இதுவுமது.] இ-ள். காமத்தை அனுபவித்தற்குரிய இருவரிடத்தும் ஒத்தல்லாமல் ஒருவர்கணின்று - ஒருவரிடத்தேநின்று, ஒழுகுவான் - போர்செய்கின்றவனாகிய, காமன் - (அவ்விடத்துப் பக்ஷபாதமாகிய)—பருவரலும்-நோயையும், பைதலும் - துன்பமிகுதியையும், காணான்கொல் - அறியானோ—எ-று. (கருத்து.) காமநுகர்தற்குரிய விருவரிடத்து மொப்பநிற்றலை யொழிந்தொருவரிடத்தேநின்று போர்செய்கின்ற காமக்கடவு ளவ்விடத்துப் பக்ஷபாதனாய் பருவரலும் படர்மிகுதியுமறி

[இ-ரை] இ-ள், எந்நெஞ்சத்து - எமது நெஞ்சத்தில், அவர்-அவர், ஓஒ உளரே - (எப்பொழுதும்) உள்ளவராயேயிருக்கின்றார் (அப்படியே) — அவர்நெஞ்சத்து - அவரது நெஞ்சிலும், யாமும்-நாமும் உளேங்கொல் - உள்ளோமாயிருக்கிறோமோ (ஆகேமோ) — எ-று. (கருத்து.) எம்முடைய நெஞ்சத்தவரெப்பொழுது முளரேயாயிருக்கின்ற நல்வகையே யாவருடைய நெஞ்சத்தியாமுமுளமாகுமோ வாகாமோவென்பதாம். ஓ ஓகாரம் இங்கே இடைவிடாமையை உணர்த்திநின்றது. யாம் இருந்தும்

௪

௪௨௯ ## ௱௨௰௧-ஆம் அதி — நினைந்தவர் புலம்பல்.

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல்.

[இ-ரை] இ-ள். தந்நெஞ்சத்து - தமது நெஞ்சிடத்து (யாஞ்செல்லாமல்) எம்மை-எங்களை, கடிகொண்டார் - காவல்கொண்டவர் — எந்நெஞ்சத்து - எமது நெஞ்சிலிடத்து ஓவா வரல் - ஒழியாமல் (தாம்) வருதலுக்கு - நாணார்கொல் - நாணாரோ — எ-று. (கருத்து) தம்முடைய நெஞ்சில் நாம் யாந்து செல்லாமலே காவல்கொண்ட காதலர் நாமெம்முடைய நெஞ்சில் எந்நேரமும் ஒழியாது வருதற்கு நாணார்கொல்லோவென்பதாம். * ஒருவரைத் தம்மிடத்து வர ஒருபோதும் உடன்படாமல் தாம் அவரிடத்துப் பலகாலும் செல்லுதல் நாணுடையார் செயலல்லாமையால் நாணார்கொலென்றாள். (௫)

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன்.

[இது அவரோடு கூடியநாளை யின்பத்தை நினைந்து வருந்துகின்
ருய் அதுமறத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது]
இ-ள். யான்-நான், அவரோடு- அவரோடு, உற்றநாள்-புணர்ந்தநாளி
இன்பத்தை, உள்ள-நினைத்தலால், உளேன்-(இத்துன்பவெள்ளத்தில்
உயிர்வாழ்கின்றேன், மற்று-அது இல்லையாயின், யான்- நான், என்னு
ளேன்-வேறே எதனால்உயிர்வாழ்வேன்—எ-று. (கருத்து.) யானவரோ
டுபுணர்ந்த நாளை யின்பத்தைநினைதலா லித்துன்பவெள்ளத்து மு
யிர்வாழ்கின்றேனது மின்றாயின் வேறெற்று லுயிர்வாழ்வேனென்பதா
ம். * நாள் ஆகுபெயர் உயிர்வாழ்தற்கு வேறுமுண்டு அவைபெற்றிலே
னென்பது படநின்றமையால் மன்- ஒழியிசை அவை அவனது காதல
ருதல் தணந்துசெல்லுதல் முதலானவை, அவையாவும் இல்லாமை
யால் அதுவல்லாமல் எனக்குப் பற்றுக்கோடு இல்லையென்பதுகருத்து.

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும்.

[இதுவுமது] இ-ள். மறப்பறியேன்-(இவ்வின்பத்தை) மறத்தலறி
யேனாகி, உள்ளினும்- இன்றுநினையாநிற்கவும்- பிரிவானது)— உள்ளம்-
(என்) னுள்ளத்தை, சுடும்- சுடுகின்றது (அப்படிபிரிவுபொறுதகாள)—
மறப்பின் - மறந்தால், எவனாவன் எதனால் இறவாதிருப்பேன்—எ-று.
(கருத்து) அவ்வின்பத்தை மறத்தலறியேனு யின்றுநினையாநிற்கவும் பிரி
வென்னுள்ளத்தைச் சுடாநின்ற தங்ஙனம் பிரிவாற்ருத யான்மறந்தா
லிறந்துபடாதுள்ளேனவ தெற்றுலென்பதாம். * மன்னென்பது இங்கே
யும் அவ்வொழியிசை. கொல்- அசை. (எ)

[இது தலைவன் தூதுவரக் காணாது வருந்துகின்றவள் இடந்தோழிக்குச் சொல்லியது] இ-ள். வேறல்லமென்பார் - (நாங்களிருவரும்) வேறல்லமென்று சொல்லுபவராகிய அவரின், அளியின்மை - அருளில்லாமையை, ஆற்ற நினைந்து - மிகவும் நினைந்து, என்னின்னுயிர் - எனது இனிதாகியவுயிர், விளியும் - கழிகின்றது — எ-று. (கருத்து) முன்பெல்லா நாமிருவரும் வேறல்லவென்று சொல்லுபவர் தமதளியின்மையை மிகவுநினைக்கின்றதனால் இனியவுயிர் கழிகின்றதென்பதாம். அளியின்மை - பின்வருவனாகாதலைப் பிரிதலும் பிரிந்து நீடாமையும், அங்கே நின்றவிடத்துத் தூதுவிடாமையும், முதலியவை. பிரிவைப் பொறுத்தல் வேண்டுமென்று இடந்தொன்னவருக்கு என்னுயிர் பிரிவைக்குறித்தல்ல அவரன்பில்லாமையைக் குறித்துக் கழிகின்றதென்று எதிரழித்துச் சொல்லியபடி. (௯)

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

[இது அத்திடஞ்சொல்லியவளுக்கு எதிரழித்தல் காமமிக்க அதிகதுக்கத்தினாலே சொல்லியது] இ-ள். மதி - சந்திரனே, விடாஅது - (என்னெஞ்சை) விடாதிருந்தே, சென்றாரை - (விட்டுப்) போயினாரை, கண்ணினால் - கண்ணளவாலாயினும், காண - காணப்படும்வகை, படாஅதி - (நீ) மறையாதிருப்பாயாக (அப்படிச்செய்தால்) — வாழி - நீ வாழ்வாயாக — எ-று. (கருத்து.) மதியே யென்னெஞ்சை விடாதிருந்தே விட்டுப்போயினாரை யானென் கண்ணளவாயினு மெதிர்ப்படும்வகை நீ படாதொழிவாயாக. அப்படிச் செய்தால் நீ வாழ்வாயாகவென்பதாம். கண்ணளவாலெதிர் படுதலாவது மதியிருவராலுமே பார்க்கப்படுதலால் இருவர் கண்களும் அதனிடத்தே சேர்தல் குறையுறுகின்றாளாகலின் வாழியென்றாள். (௰)

---

## ௱௨௰௨-ஆம்-அதி-கனவுநிலையுரைத்தல்.

அஃதாவது, தலைமகள் தான் கண்ட கனவின்றன்மையைத் தோழிக்குச் சொல்லியது. அக்கனவு உறக்கமின்றி நினைவுமிகுதியாலே கண்டதாகலான் இது நினைந்தவர் புலம்பலின் பின் வைக்கப்பட்டது.

காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

[இது தலைவன் தூதுவரக்கண்ட தலைவி சொல்லியது] இ-ள். (யான் வருந்துகின்றதை அறிந்து அது தீர விடுத்த) காதலர் - தலைவரது, தூதொடு - தூதைக்கொண்டு, வந்த - (என்னிடத்து) வந்த, கனவினுக்கு - கனவினுக்கு, விருந்து - விருந்தாக, யாதுசெய்வேன் - யாதுசெய்வேன் — எ-று. (கருத்து.) யான் வருந்துகின்றது அறிந்து தீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு வந்த கனவினுக்கு யான் விருந்தாக யாதினைச் செய்வேனென்பதாம். * கொல் - அசை, விருந்தென்றது - விருந்திற்குச் செய்யும் உபசாரத்தை அந்நனவிலே காணாமையால் யாதுசெய்வேனென்றாள். (க)

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

[இது தூதுவிடநினைந்ததலைவி சொல்லியது] இ-ள். கயலுண்கண் - (தூங்காதழிகின்ற) என்கயல்போலும் மையுண்கண்கள், யான்-நான், இரப்ப - இரந்தால், துஞ்சின் - தூங்குமாயின், கலந்தார்க்கு - (கனவிலே காணப்பட்ட)தலைவர்க்கு, உயலுண்மை-பொறுத்திருக்கிற தன்மையை, சாற்றுவேன் - (யானே) விரியச்சொல்லுவேன்—எ-று. (கருத்து.) தஞ்சாது வருந்துகின்றவென்கயலேபோலு மையுண்கண்கள் யானிரந்தாற் றுஞ்சுமாயிற் கனவிடைக்காதலரைக் கண்டேன்கண்டாலவர்க்கியா னுற்றியுளேனுய்தன்மையானேவிரியச்சொல்லுவேனென்பதாம். * கயலுண்கணென்றாள் - கழிந்தகாலத்திற் சிறப்பித்தூதர்க்குயாம் சொல்லாயல் அடக்கப்படுவனவும், சொல்லுமவைகளுள்ளும் சுருக்கப்படுவனவும், ஆகிய இவைகளின் பரப்பெல்லாம் தோன்றச்சொல்லுவே னென்னுங் கருத்தால் சாற்றுவேனென்றாள் இனி அவையுந் துஞ்சுவனவல்ல சாற்றுவதும் கூடாதென்பது படநின்றமையால்மன் - ஒழியிசை, மூன்றுங் கண்டவள் சொல்லியதாகலால் கனவுநிலையுரைத்தலாயிற்று. (௨).

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர்.

[இது பொறுக்கமாட்டாளென்று கவலையுற்ற தோழிக்குப் பொறுப்பேனென்பது தோன்றத்தலைவி சொல்லியது] இ-ள். நனவினான் - நன

0. நனவு - சாக்கிரம் - அறிவுவிழித்திருக்குங் காலம்.

# ௱௨௨. ஆம்

# அதி — கனவுநிலையுரைத்தல்.

[இ-ரை.] இன் செற்றவர்பின் - (என்னை நீங்கிச் சென்றவர்பின்னே) — சேறல்வேண்டி - போகச் செல்லல் வேண்டுதலால், என்னையுற்றதுயர் - என்னையடைந்த துன்பமானது, எற்று - எத்தன்மையது, அளித்து - [illegible] — எ-று. (கருத்து.) என்னையகன்று சென்றார்பின் போனவச்சேறலை வேண்டுதலாலென்னையுற்றதுயர் எத்தன்மை சாலதென்பதாம். * அரோ - அசை. அளித்தென்பது - இகழ்ச்சிக்குறிப்பு. இக்காமநோயானது நான்சொல்லவும் கேட்கவும் ஆவதொன்றன்று மிகக்கொடியதென்பதாம். (௬)

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

[இது பரத்தையிடத்தினின்றும் பிரிந்துவந்த தலைவனோடு நிறையழிவினாலே கூடியதலைவி நீ பிணங்காமைக்குக் காரணம் யாதென்றதோழிக்குச் சொல்லியது] இ-ள். பேணியார் - (எம்மால்) விரும்பப்பட்டதலைவர் (வந்து) — காமத்தால் - காமத்தினாலே, பெட்ப - (யாம்) விரும்பியவைகளை, செயின் - செய்யுமளவிலே, நாணென வொன்றோ - நாணென்றுசொல்லப்பட்ட ஒன்றையுமோ, அறியலம் - அறியமாட்டேமாயிருந்தனம் — எ-று. (கருத்து.) எம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தாலும் விரும்பியவற்றைச் செய்யுமளவில் நாணொன்றுமறியமாட்டேமா யிருந்தேமென்பதாம். * விரும்பியவை வேட்கைமிகுதியினாலே நினைத்தனக் கல

ன்னும்வழி மிகவுண்ணலுமாய் இன்சுவையதுமாம் அதுபோல ... லகன் றுகூடும்வழி ஆராதலுமாய்ப் பேரின்பத்ததுமாமென்று ... ம்பற்றிச் சொல்லியபடி.

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும்.

[இதுவுமது.] இ-ள். (காமம் அநுபவித்தற்குரிய இருவருள்) ஊடலிற்றோற்றவர்-பிணக்கிலேதோற்றவர், வென்றார்-வென்றாராவார், அது-(அப்பொழுது) அறியப்படாதாயினும், கூடலிற் காணப்படும்-



(பின்னை) புணர்ச்சியிலே(அவரால்)அறியப்படும்—எ-று. (கருத்து.) காமநுகர்தற்குரிய இருவருள்ளும் ஊடலின்கட் டோற்றவர் வென்றாவர்; அஃதப்பொழு தறியப்படாதாயினும் பின்னர்புணர்ச்சியின் கணவராலறியப்படுமென்பதாம். * தோற்றவர் எதிரிடமாட்டாமல் சாய்தலின், அவர் புணர்ச்சியிடத்தே பேரின்பத்தை அடைதலால் வென்றாராயினர். மன்னும் - அசைநிலைகள் யான் அதுபொழுதுசாய்தலால்இதுபொழுது பேரின்பம் பெற்றேனென்பதாம். (எ)

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

[இதுவுமது.] இ-ள். நுதல்வியர்ப்ப - (இப்போது இவளது) நெற்றி வெயர்வரும்படியாக, கூடலிற்றோன்றிய - புணர்ச்சியிடத்து உளதாகிய, உப்பு - இனிமையை (இன்னுமொருகால்)—ஊடி-(இவள்) பிணக்கி, பெறுகுவங்கொல் - (யாம்) பெறவல்லமோ—எ-று. (கருத்து.) இது பொழுதிவளுநுதல் வியர்க்கும்வகை கலவியின்கணுளதாய இனிமையை யின்னுமொருகா லிவளூடியாம் பெறவல்லமோ வென்பதாம். * புணர்ச்சியினது விசேஷம்பற்றி நுதல்வியர்ப்பவென்றான். இனிமை கண்டு கேட்டுண் டுயிர்த்துற்றறிய ஆகியஇன்பம். இனி அப்பேறுகிடைப்பது அரிதென்று பெற்றதன் சிறப்புச்சொல்லியபடி. (அ)

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

திருவள்ளுவரென்கிற திருக்குறண்மூலமும்.

தெளிபொருள் விளக்கம் என்கிற அ[illegible]ரையும்,

கருத்துரையும் நிறைவேறின.

ஆக-பால்-௩-க்கு, அதிகாரம்-௱௩௰-க்கு, திருக்குறள்-௲௩௱௩௰

இக்காமத்துப்பாலுக்குக் காமத்தைக் குறித்துச் செம்பொருளாகச் சொல்லப்பட்ட இச்சிற்றின்பப் பொருளன்றி, மோக்ஷத்தைக் குறித்துக் குறிப்புப்பொருளாகச் சொல்லப்பட்ட பேரின்பப்பொருளுமுண்டு.

திருவள்ளுவநாயனார் திருவடிவாழ்

துறைசை-சிவப்பிரகாசதேசிகர் திரு



